# பொருளடக்கம்.


| விஷயங்கள். | பக்கம். |
|---|---|
| முன்னுரை ... ... ... | i—ii |
| ஜட்ஜ்மெண்ட் ... ... ... ... | 1-80 |
| டிக்ரீ ... ... ... ... | 81-82 |
| வாதி விசாரணை ... ... ... | 1 |
| பிரதிவாதி விசாரணை ... ... ... | 6 |
| ஸ ஆத்மா தத்வமஸி ... ... ... | 8 |
| ஸன்மூலாஸ்ஸோம்யேமா: ... ... ... | 30 |
| உததமாதேஶமப்ராக்ஷ: யேனாஶ்ருதம் ... ... | 32 |
| ஸதேவ.........ஏகமேவாத்விதீயம் ... ... | 38 |
| அனேன ஜீவேனாத்மனா ... ... ... | 45 |
| அஹம் ப்ரஹ்மாஸ்மி ... ... ... | 66 |
| ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம ... ... ... | 93 |
| ய:ப்ருதிவ்யாம் திஷ்டன் ... ... ... | 105 |
| ஸ யஶ்சாயம் புருஷே ... ... ... | 117 |
| நான்யோதோஸ்தி த்ரஷ்ட்ரு ... ... ... | 123 |
| யத்ர ஹி த்வைதமிவ பவதி ... ... ... | 134 |
| யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் ... ... | 135 |
| ததஸ்து தம் பஶ்யதே ... ... ... | 148 |
| பராத்பரம் புருஷமுபைதி ... ... ... | 149 |
| பரமம் ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி ... ... | 150 |
| பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ... ... ... | 153 |
| ஸோன்வேஷ்டவ்ய: ... ... ... | 155 |
| ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய: ... ... ... | 156 |
| ப்ரஹ்ம விதாப்னோதி பரம் ... ... ... | 157 |
| ஏதமேவவிதித்வா ... ... ... | 157 |
| அயம் ஶாரீர ஆத்மா ... ... ... | 158 |

| விஷயங்கள். | பக்கம். |
|---|---|
| ஸோஶ்நுதே ஸர்வான் காமான் ... ... | 159 |
| ஸதா ஸோம்ய ததா ஸம்பன்னோ பவதி ... ... | 161 |
| த்வா ஸுபர்ணா ... ... ... | 167 |
| ஜுஷ்டம் யதா பஶ்யதி ... ... ... | 175 |
| ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம்... ... ... | 178 |
| பீஷாஸ்மாத்வாத: பவதே ... ... ... | 182 |
| அஜோஹ்யேக: ... ... ... | 183 |
| ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்த: ... ... | 186 |
| நித்யோ நித்யானாம் ... ... ... | 190 |
| ஞா ஞௌ ... ... ... | 193 |
| அதயோன்யாம் தேவதாமுபாஸ்தே ... ... | 195 |
| ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி ... ... | 206 |
| அயமாத்மா ப்ரஹ்ம ... ... ... | 213 |
| ஏதஸ்மின்னுதரமந்தரம் குருதே ... ... | 217 |
| த்விதீயாத்வை பயம் பவதி ... ... ... | 222 |
| யோஸாவஸௌ புருஷ: ... ... ... | 228 |
| யஸ்மின் ஸர்வாணி பூதானி ... ... ... | 236 |
| ஶுகரஹஸ்ய ஶ்ருதி ... ... ... | 249 |

## இரண்டாவது பாகம்

## ஸூத்ர விசாரணை.

| | |
|---|---|
| ஶாஸ்த்ர த்ருஷ்ட்யா .. ... ... | 256 |
| ஆத்மேதி தூபகச்சந்தி ... ... ... | 268 |
| அவிபாகேன ... ... ... | 274 |
| வாதி விசாரணை ... ... ... | 282 |

## மூன்ருவது பாகம்

## கீதா விசாரணை.

| | |
|---|---|
| க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி... ... ... | 286 |
| மமைவாம்ஶ: ... ... ... | 294 |
| பஹூனாம் ஜன்மனாமந்தே ... ... ... | 298 |
| வித்யா விநய ஸம்பன்னே ... ... ... | 303 |
| வாதி விசாரணை ... ... ... | 305 |

श्रीः

श्रीमद्दिग्विजयरामोविजयते ॥

# முன்னுரை.

---

"सुखमेव मेस्याद्दुःखं मनागपि माभूत्"

'ஸுகமே ஸர்வகாலத்திலும் நமக்கு இருக்கவேண்டும். துக்கம் எப்பொழுதும் - வரக்கூடாது' என்று எல்லா ப்ராணிகளாலும் அபேக்ஷிக்கப்படும் துக்கமற்ற ஸுகம் மோக்ஷத்திலேயே கிடைக்கக்கூடியது. அந்த மோக்ஷத்திற்கு ஸ்ரீபரமாத்மாவின் ப்ரஸாதமே முக்ய காரணம். அந்த ப்ரஸாதத்திற்கு தன்னிடத்திலும் தன்னைச் சேர்ந்தவர்களிடத்திலும் தான் செய்துவரும் சினேகத்தைவிட பலமடங்கு அதிகமானதும், எவ்வளவு தடைகள் வந்தபோதிலும் தடுக்கப்படாததாயும், நிஷ்காமமானதாயு மிருக்கும் சினேக ரூபமான பக்தியே காரணம். அத்தகைய பக்தி உண்டாவதற்கு பரமாத்மாவின் ஸர்வஞ்ஞத்வம், ஸத்ய ஜகத்கர்த்ருத்வம், பாலகத்வம், ஜீவ ஜடாத்மக ப்ரபஞ்ச பின்னத்வம் முதலிய அநேக குணங்களின் அபரோக்ஷ ஞானம் காரணம். அத்தகைய அபரோக்ஷ ஞானம் வேதாதி ஶாஸ்த்ரங்களை ஶ்ரவணம் செய்து, நாநாவித துர்மதங்களைக் கேழ்ப்பதினால் உண்டாயிருக்கும் ஸம்ஶயங்களை ப்ரஹ்மமீமாம்ஸா ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கும் யுக்திகளினால் போக்கடித்துக்கொண்டு, வேதங்களினால் அந்த தத்வங்களின் நிச்சய ஞானத்தை யடைந்தபிறகு, அச்சாஸ்த்ரங்களினால் நிர்ணயிக்கப்பட்ட பகவானிட குணங்களின் த்யானத்தினாலுண்டாகிறது. அத்தகைய த்யானத்திற்கு காரணமான ஶாஸ்த்ர ஶ்ரவணாதிகள்—ப்ராஹ்மணாதிவர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள் இவைகளுக்கு வேதங்களினால் விஹிதமான ஸ்நான ஸந்த்யா வேதாத்யயன யஞ்ஞ ஜப தேவதார்ச்சன கங்காதி தீர்த்த ஸ்நானம் முதலியவைகளைச்செய்து, அவைகளால் அந்த:கரணசுத்தியைச் சம்பாதித்துக்கொண்டிருக்கும் மனிதனுக்கு உண்டாகிறதென்று வேதம், ஸூத்ரம், கீதை இவைகளில் கூறப்பட்டிருக்கிறது.

இப்படியிருந்தபோதிலும்—கௌடபாதாசார்யர், சங்கராசார்யர் முதலிய அத்வைதிகள்—வேதம், ஸூத்ரம் கீதை இவைகளுக்கு வேறு அர்த்தங்களைக் கல்பித்து, ப்ராஹ்மணாதிவர்ணம் முதலிய ஜகத்து மித்யை, (பொய்), ஜீவன் ப்ரஹ்மமே, ப்ரஹ்மம் ஸர்வஞ்ஞத்வாதி குணங்களுடன் கூடினதல்ல. ப்ரஹ்மம் (பௌத்தர்களின் சூன்யத்தைப்போலவும், விஞ்ஞானத்தைப்போலவும்) நிர்விசேஷமானது (ஸகலதர்ம ரஹிதமானது). வேதம் அப்ரமாணமென்று சொல்லும் பௌத்த மதத்திற்கே அத்வைதமதமென்று பெயரிட்டு, வைதிகமதத்தைப்போல் தோன்றச்செய்து, ஸஜ்ஜனர்களுக்கு ப்ரமையுண்டாக்கி அதோகதிக்கு அழைத்துச் சென்றுக்கொண்டிருக்க—**'मध्वो वो नाम मारुतं यजत्राः' (ऋ.)** இது முதலிய வேதங்களினால் வாயு பகவானின் அவதாரமென்று ப்ரசித்தரான ஸ்ரீமான் மத்வாசார்யர், மற்றும்

ஸ்ரீ பத்மநாபதீர்த்தர், ஸ்ரீமத் ஜயதீர்த்தர், ஸ்ரீ வ்யாஸராஜர், ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர், விஜயீந்த்ர தீர்த்தர், ராகவேந்திர தீர்த்தர், ஸ்ரீமத் வித்யாதீஸதீர்த்தர், ஸ்ரீ ஸத்ய நாததீர்த்தர், பாண்டுரங்கி, ஆனந்தாசார்யர், கேசவாசார்யர், யாதவாசார்யர், வ்யாஸராமாசார்யர் முதலிய மஹான்கள் அநேக நூல்களை இயற்றி அவைகளால் அந்த அத்வைதமதத்தைக்கண்டித்து, த்வைதமதத்தை ஸ்தாபித்திருக்கின்றனர். அந்த நூல்கள் ஸம்ஸ்க்ருத பாஷையில் மிகவும் ப்ரௌடமாகவும் விஷயங்கள் ஆங்காங்கு விக்ஷிப்தமாயுள்ளதாயும் இருக்கின்றன. அந்த நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்கள் ஸஜ்ஜனர்களுக்கு ஸுலபமாய்த் தெரிவதற்காக, ஸ்ரீமதுத்தராதிமடாதிபதிகளான ஸ்ரீமத் ஸத்யத்யான தீர்த்த ஸ்ரீபாதங்களவர்கள் எளிய ஸம்ஸ்க்ருதபாஷையில் ஆங்காங்கு சொல்லப்பட்டுள்ள எல்லாவிஷயங்களையும் ஒன்றுகூட்டி அநேக நூல்களை இயற்றியிருப்பதேயன்றி, இக்காலத்தில் நடக்கும் கோர்ட் விசாரணை ரீதியில் வாதிதாவாமனு, பிரதிவாதி ஸ்டேட்மெண்டு, இஷ்யூ, வாதிப்ரதிவாதிகளின் விசாரணை, க்ராஸ், ரீக்ராஸ், வாதிப்ரதிவாதி வக்கில்களின் ஆர்க்யுமெண்ட், ஜட்ஜ்மெண்ட் இவைகளுடன் கூடிய ஓர் நூலையும் இயற்றி அத்வைதமதத்தைக் கண்டித்திருக்கிறார்.

அந்த நூலில் முதல் பாகத்தில்—தாவா ரெஸ்ஜுடிகேடா (மின் விசாரம் நடந்திருப்பதால் மறுபடியும் கோர்ட்டாருக்கு விசாரிக்க அதிகாரமில்லாதது,) அல்லவென்றும், இரண்டாவதுபாகத்தில்-ப்ராஹ்மணவர்ணம் முதலிய ஜகத்து ஸத்யமானது, மித்யை (முக்காலத்திலுமில்லாதது) அல்லவென்றும்; மூன்றாவது பாகத்தில்—ப்ரஹ்மம் ஜீவனைவிட வேறானது (பின்னம்) ஜீவரூபமல்ல என்றும்; நாலாவது பாகத்தில்—ப்ரஹ்மம் ஸர்வஜ்ஞத்வாதி அநேக குணங்களினால் பூர்ணமானது, நிர்குணமானதல்ல வென்றும்; ஐந்தாவது பாகத்தில்—அத்வைதமதம் பௌத்த மதமே என்றும் பிரதிவாதிகளின் ஆதாரங்களினாலேயே தெளிவாய் விவரிக்கப்பட்டிருக்கிறது. அத்தகைய நூலை இக்காலத்தில் எல்லா லௌகிக வைதிக ஸஜ்ஜனர்களுக்கும் ஸுலபமாய்த் தெரிவதற்காக கர்னாடக, ஆந்த்ர, திராவிட, மகாராஷ்ட்ர, ஹிந்தி முதலிய பாஷைகளில் மொழிபெயர்ப்பித்து, ஸ்ரீமன் மத்வசித்தாந்தாபிவ்ருத்திகாரிணீ ஸபையோரால் ப்ரசுரிக்கப்பட்டிருக்கிறது. இந்நூலில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்கள் ஶாஸ்த்ர விசாரரூபமானதால் கடினமாயிருப்பதின் பொருட்டு "**वक्तव्यं ब्रह्म गुरुणा चतुर्वारमथापिवा**" வேதார்த்தங்களை உபாத்யாயர்கள் பலதடவைகள் சொல்லவேண்டும் என்கிற ஆசார்யரின் உத்திரவின்படிக்கு ஸஜ்ஜனர்களுக்கு ஸுலபமாய்த்தெரிவதற்காக அநேக இடங்களில் அநேக தடவைகள் அநேகப்பிரகாரமாய் எழுதப்பட்டிருக்கிறது. இத்தகைய க்ரந்தத்தை ஸஜ்ஜனர்கள் நன்றாய் விசாரம் செய்து, ப்ரஹ்மத்தின் ஸர்வஜ்ஞத்வம், ஸத்யமானஜகத் ஸ்ரஷ்ட்ருத்வம், ஜீவஜடாத்மக ப்ரபஞ்ச விலக்ஷணத்வம் முதலிய மஹாமாஹாத்ம்யங்களை அறிந்துகொண்டு, பரமாத்மாவின் அனுக்ரஹத்தினால் ப்ரக்ருதி பந்தத்தினின்றும் முக்தர்களாய் நித்ய ஸுகானுபவ ரூபமோக்ஷத்தை யடையத்தகுந்தது.

பத்மஸரோவரம்,<br>ஸ்ரீ பாவஸம்.<br>சித்திரைமீ 1உ

கௌரவ கார்யதர்சி,<br>ஸ்ரீமன் மத்வசித்தாந்தாபிவ்ருத்திகாரிணீ ஸபா.

ஸ்ரீ

ஸம்யமனீபுரம் ஹைகோர்ட்

28-வது கலியுகம், சாலிவாஹனசகம் 1849-ல்

சீப் ஜஸ்டிஸ்

S. தர்மராஜ் H. B. அவர்கள் சமூகத்தில் நடந்த

வேதாந்த விசாரணை

## ஸிவில் ஸூட்

O. S. No. 564 of 1921.

3-வது இஷ்யூவின்

ஜட்ஜ்மெண்ட்.

| வாதி | பிரதிவாதி. |
| --- | --- |
| விஷ்ணுதாஸாசார்யர். | கங்காதரசாஸ்திரிகள். |
| வாதி வக்கீல். | பிரதிவாதி வக்கீல். |
| மாதவதாஸ். P. B. D. | ஹரிஹரசர்மா. P. B. S. |

வாதியின் தாவா என்னவென்றால்:—

(1) வாதியினால் வைதிக ஆஸ்திகர்களான எல்லா ஜனங்களிட பிரதிநிதியாக கோர்ட்டார் உத்திரவைப்பெற்று இந்த தாவா செய்யப்பட்டது.

(2) மேற் சொல்லப்பட்ட கங்காதரசாஸ்திரிகளை அத்வைதிகளெல்லோரிட பிரதிநிதியாக கோர்ட்டார் உத்திரவைப்பெற்று இந்த தாவாவில் பிரதிவாதியாக சேர்க்கப்பட்டிருக்கிறது.

(3) வாதிகள் ஆஸ்திகமான வைதிகமதத்தில்சேர்ந்தவர்கள்.

(4) இவ்வைதிகமத தத்வங்கள்:—

(a) ப்ராஹ்மண்யாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத் யாச்ரமங்கள், யஞ்ஞாதிக்ரியைகள், தேவதைகள், வேதங்கள், கங்காதி தீர்த்தங்கள், ஸ்வர்க்காதி பரலோகங்கள், இப்பூலோகம் முதலான எல்லா ஜகத்தும் ஸத்யமானவைகள்.

(d) "பரமாத்மா ஜீவனைக்காட்டிலும் பின்னன், ஸர்வோத்தமன்" என்கிற ஞானம் மோக்ஷ ஸாதனமல்ல. "அஹம் ப்ரஹ்மாஸ்மி (நானே ப்ரஹ்மம்)" என்கிற ஞானமே மோக்ஷஸாதனம்.

(9) பிரதிவாதி—வேதம் கீதை ஸூத்ரம் இவைகளில் கூறப்பட்டுள்ள தத்வங்களை அதற்கு விருத்தமாக தெரிந்துகொண்டு, "நஷ்டாத்மானோல்பபுத்தய:; ப்ரபவந்த்யுக்ர கர்மாண: க்ஷயாய ஜகதோஹிதா:" (கீதை 16-9)ல் சொல்லியவாறு தாங்கள் அதோகதியை அடைவதல்லாமல் இதரஸஜ்ஜனர்களையும் ஆஸ்திகமதத்தினின்றும் விடுவித்து, அவைதிக மதத்தை ஆஶ்ரயிக்கச் செய்து அதோகதியை யடைவிக்கிறார்கள்.

ஆகையால் கோர்ட்டார் ஸஜ்ஜனங்களின் நன்மைக்காக கீழ்க் கண்டவாறு தீர்மானம் செய்யவேணுமாய்க் கோருகிறோம்.

(a) பரப்ரஹ்மம் ஜீவனைக்காட்டிலும் வேறானது, ஸர்வோத்தமமானது, ப்ராஹ்மண்யாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், வேதம், யஞ்ஞம், தேவதைகள், கங்காதி தீர்த்தங்கள் முதலிய ஜகத்து நிஜமானவைகள், மித்யை அல்ல. இவைகளே வைதிக மதத்தின் தத்வங்கள்.

பிரதிவாதியால் சொல்லப்பட்ட "ப்ரஹ்மம் நிற்குணம், மற்றும் அது ஜீவனுடன் அபின்னமானது. ப்ராஹ்மணவர்ணாதி ஜகத்து பொய் (மித்யை)" என்கிற இவைகள் வைதிகமதத்தின் தத்வங்கள் அல்ல.

(b) வேதம், ப்ரஹ்மஸூத்ரம், கீதை இவைகளுக்கு விருத்தமான அர்த்தங்களைக் கல்பித்து "ஜகத்து மித்யை, ப்ரஹ்மம் நிற்குணம்" இது முதலிய பிரதிவாதிகளின் உபதேசம் ஶாஸ்த்ரங்களுக்கு விருத்தமானவைகள் என்று தீர்மானிக்கவேணும்.

(c) மற்றும் கோர்ட்டாருக்கு ஏதேது யுக்தமென்று தோன்றுகிறதோ அதுகளையும் தீர்மானிக்கக் கோருகிறோம்.

(10) கோர்ட்டார் இவ்விதமாகச் செய்யாவிடில் ஜனங்கள் மிகவும் கஷ்டங்களை அடைவார்கள்.

இவ்விதமாக வாதியினல் 25-3-1921ல் மாதவதாஸ் வக்கீல் இவர்கள் முகாந்தரமாய் தாவா தாகல் செய்யப்பட்டு, ப்ரமாண பத்திரிகையும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

பிறகு ப்ரதிவாதிக்கு கோர்ட்டாரால் ஸம்மன் ஜாரி செய்யப் பட்டு, ப்ரதிவாதியால் 30-3-1921ல் கீழ்க்கண்டவாறு ஸ்டேட் மெண்டும் தாக்கல் செய்யப்பட்டது.

---

## பிரதிவாதி ஸ்டேட்மெண்டு.

---

(1) இந்த வாதியினல் கொடுக்கப்பட்ட தாவாவில் சொல்லப் பட்ட விஷயங்கள் பொய்.

(2) வாதிமனு 4-வது பாராவில் சொல்லிய தத்வங்கள் வேதங்களிலும், ஸூத்ரங்களிலும், கீதையிலும் சொல்லப்பட் டிருப்பினும், வேதங்களுக்காவது, கீதைக்காவது, ப்ரஹ்மஸூத் ரங்களுக்காவது அத்தத்வங்களை அறிவிப்பதில் தாத்பர்யமில்லை. ஆகையால் அத்தத்வங்கள் வைதிகங்களல்ல, மற்றும் பொய்யா னவை.

(3) வாதியின் மதம் அனாதிகாலத்திநின்றும் வருவதல்ல.

(4) வாதி 4-வது பாராவில் சொல்லிய விஷயங்கள் வெரும் பொய்.

(a) எங்களிட அத்வைத மதமே வைதிகமதம்.

(b) அத்வைதமதம் பௌத்தமதமென்று சொல்லுவது சரி யல்ல.

(c) நாங்கள் சொல்லுவதே வேதார்த்தம்.

(5) அத்வைதமத தத்வங்கள்:—

(a) ப்ரஹ்மத்தை விட வேறான ப்ராஹ்மண்யாதி வர்ணங் கள், தேவதைகள், ஸந்தியாவந்தனதி கர்மங்கள் முதலான ஜகத்து ஸ்வப்னத்தைப் போல் பொய்.

(b) ப்ரஹ்மம் நிற்குணம் (ஸகலதர்மரஹிதம்)

(c) ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே.

(d) 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற ஞானமே மோக்ஷஸாதனம்.

(6) இவ்விஷயம் முதலே தீர்மானிக்கப்பட்டிருப்பதால், மறுபடியும் விசாரிப்பதற்கு கோர்ட்டாருக்கு அதிகாரமில்லை (Res-judicata.)

(7) வாதியினால் 9-வது பாராவில் சொல்லப்பட்ட விஷயங்கள் பொய். எங்களிட அத்வைத மதத்தை ஆஸ்ரயித்து நாங்களும் நஷ்டப்படவில்லை. மற்றும், இதை ஆஸ்ரயித்து வேறுயாரும் நஷ்டமடையவில்லை.

இக்காரணங்களினால் கோர்ட்டார் வாதிக்கு எவ்வித அனுகூலத்தையும் செய்யாமல் அவரிட மனுவை தள்ளிவிட வேணுமாக ப்ரார்த்திக்கிறோம்.

பிரதிவாதி இவ்விதமான ஸ்டேட்மெண்டை வக்கீல் ஹரிஹர சர்மா மூலமாக தாகல் செய்வித்து, ப்ரமாணமும் செய்திருக்கிறார். அதற்குமேல் கோர்ட்டார் வாதி பிரதிவாதி வக்கீல்களின் முன்னிலையில் கீழ்கண்ட இஷ்யூகளை எடுத்திருக்கிறார்கள்.

---

## இஷ்யூ ISSUE.

---

(1) ரெஸ்ஜுடிகேடா (Resjudicata) ஆகிறதா இல்லையா? [இவ் விஷயம் முன் தீர்மானிக்கப்பட்டிருப்பதினால் மறுபடியும் விசாரணை செய்ய கோர்ட்டாருக்கு அதிகாரமுண்டா இல்லையா?]

(2) (a) ப்ராஹ்மணர்யாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஸ்ரமங்கள் முதலிய பிரபஞ்சம் நிஜமா, பொய்யா?

(b) ஸ்வப்னம் ஸத்யமா, மித்யையா?

(3) பரப்ரஹ்மம் ஜீவனைவிட வேறானதா, அல்லவா?

(4) பரப்ரஹ்மம்-ஸர்வஞ்ஞத்வம், ஸர்வகர்த்ருத்வம் முதலான ஸகல கல்யாண குணபூர்ணமா அல்லவா?

(5) (a) அத்வைத மதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் பேத மூண்டா இல்லையா?

(b) அத்வைதமதம் வைதிகமதமா அல்லவா?

---

முதல் இஷ்யூ (ரெஸ்ஜுடிகேடா) விசாரணை 3-7-1921ல் வாதி பிரதிவாதி வக்கீல்களின் ஆர்க்யுமெண்ட் நடந்து, **இந்த தாவா ரெஸ்ஜுடிகேடா அல்ல,** என்று கோர்ட்டாரால் தீர்மானிக் கப்பட்டிருக்கிறது.

---

(a) ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங் கள் முதலிய எல்லா ஜகத்து ஸத்யமா (நிஜமானதா) அல்லது மித்யையா (பொய்யா)?

(b) ஸ்வப்னத்தில் காணப்படும் பதார்த்தங்கள் நிஜமானவை களா, பொய்யானவைகளா் என்கிற இரண்டாவது இஷ்யூ விசா ரணை செய்து—

ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், யஞ்ஞாதி க்ரியைகள், தேவதைகள், வேதம், கங்காதி தீர்த்தங்கள், ஸ்வர்க்காதி லோகங்கள், இந்த லோகம் முதலிய **எல்லா ஜகத்தும் ஸத்யமானது** (நிஜமானது). **மித்யை அல்ல** (பொய் = முக்காலத்திலு மில்லாதது அல்ல,) மற்றும் ஸ்வாப்ன பதார்த்தங்களும் நிஜமான வைகள் பொய்யல்ல என்று கோர்ட்டாரால் 28-8-1928ல் தீர்மானிக் கப்பட்டிருக்கிறது.

---

பரப்ரஹ்மம் ஜீவனைவிட பின்னமா? அல்லது அபின்னமா? (ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதமா அல்லது ஐக்கியமா) என்கிற மூன் றாவது இஷ்யூவை விசாரணை செய்து **"ப்ரஹ்மம் ஜீவனைக் காட் டிலும் வேறானது, ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதமுண்டு ஐக்யமில்லை"**

(4) பரப்ரஹ்மம்-ஸர்வஞ்ஞத்வம், ஸர்வகர்த்ருத்வம் முதலான ஸகல கல்யாண குணபூர்ணமா அல்லவா?

(5) (a) அத்வைத மதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் பேத முண்டா இல்லையா?

(b) அத்வைதமதம் வைதிகமதமா அல்லவா?

---

முதல் இஷ்யூ (ரெஸ்ஜுடிகேடா) விசாரணை 3-7-1921ல் வாதி பிரதிவாதி வக்கீல்களின் ஆர்க்யுமெண்ட் நடந்து, **இந்த தாவா ரேஸ்ஜுடிகேடா அல்ல,** என்று கோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

---

(a) ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள் முதலிய எல்லா ஜகத்து ஸத்யமா (நிஜமானதா) அல்லது மித்யையா (பொய்யா)?

(b) ஸ்வப்னத்தில் காணப்படும் பதார்த்தங்கள் நிஜமானவைகளா, பொய்யானவைகளா என்கிற இரண்டாவது இஷ்யூ விசாரணை செய்து—

ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், யஞ்ஞாதி க்ரியைகள், தேவதைகள், வேதம், கங்காதி தீர்த்தங்கள், ஸ்வர்க்காதி லோகங்கள், இந்த லோகம் முதலிய **எல்லா ஜகத்தும் ஸத்யமானது** (நிஜமானது). **மித்யை அல்ல** (பொய் = முக்காலத்திலுமில்லாதது அல்ல,) மற்றும் ஸ்வாப்ன பதார்த்தங்களும் நிஜமானவைகள் பொய்யல்ல என்று கோர்ட்டாரால் 28-8-1928ல் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

---

பரப்ரஹ்மம் ஜீவனைவிட பின்னமா? அல்லது அபின்னமா? (ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதமா அல்லது ஐக்கியமா) என்கிற மூன்றாவது இஷ்யூவை விசாரணை செய்து **"ப்ரஹ்மம் ஜீவனைக் காட்டிலும் வேறானது, ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதமுண்டு ஐக்யமில்லை"**

என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள். ஏனெனில்:—

1. ப்ரஹ்மம் ஜீவனைவிட வேறானது என்கிற விஷயத்தில் வாதியினால் தாக்கல் செய்யப்பட்ட ஶ்ருதிகள், ஸூத்ரங்கள், கீதா இவைகள் ப்ரமாணங்களாகவும், ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை அறிவிக்கின்றனவைகளாகவும் இருக்கின்றன.

2. ப்ரதிவாதிகளும் அப்படியே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

3. ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதென்கிற விஷயத்தில் ப்ரதிவாதியினால் தாகல் செய்யப்பட்ட **தத்வமஸி** முதலிய ஶ்ருதி, ஸூத்ர, கீதா வாக்யங்கள் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை போதிக்கிறதில்லை.

4. ஷை **தத்வமஸி** முதலிய வாக்யங்கள் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை முக்ய வ்ருத்தியினால் போதிக்கிறதில்லை என்று ப்ரதிவாதிகளே (அத்வைதிகளே) ஒப்புக்கொண்டுமிருக்கிறார்கள். அது எப்படி எனில்:—

வாதி எக்ஸிபிட் 1, ப்ரதிவாதி எக்ஸிபிட். 1.

1. 'ஸ ஆத்மா தத்வமஸி' என்கிற வாக்யத்தில் 'அதத்' என்று பதத்தைப் பிரிப்பதற்கு வந்துக்கொண்டிருப்பதினால், த்வம் = நீ, அதத் = அந்த பரமாத்மாவைக்காட்டிலும் பின்னாய் (வேறாக) அஸி = இருக்கிறாய் என்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறது.

2. ஷை வாக்யத்தில் 'தத்' என்று பதத்தைப் பிரித்துக் கொண்டாலும் அத்வைதிகள் 'ஸம்ஸர்கா ஸங்கி ஸம்யக்தீ ஹேதுதாயா கிராமியம்। உக்தாகண்டார்த்ததா ய்த்வா தத் ப்ராதி பதிகார்த்ததா' இது முதலிய வாக்யங்களினால் இந்த தத்வமஸி வாக்யம் 'சித்' என்கிற அறிவையே உண்டாக்குகிறது (அகண்டார்த்த போதகமானது) என்று ஒப்புக்கொண்டிருக்கிறபடியால் இவ் வாக்யம் ஜீவேஶ்வரர்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கிறதில்லை. 'த்வா ஸுபர்ணா' முதலிய வாக்யங்களினால் போதிதமான பேதத்திற்கு பாதகமும் ஆகிறதில்லை.

3. ஸகண்டார்த்த போதகமென்றே வைத்துக்கொண்டபோதி லும்—'த்த' என்கிற பதத்தினுல் போதிதமான ஸர்வேஶத்வாதி குணவிஶிஷ்டனுன பரமாத்மனுக்கு 'த்வம்' என்கிற பதத்தினுல் போதிதனுன அல்பஞ்ஞத்வாதி குணவிஶிஷ்டனுன ஜீவனுடன் ஐக்யம் பொருந்துகிறதில்லை என்று *'ஸர்வேஶத்வ' † 'ஐக்யம் தயோ:' முதலிய ஶ்லோகங்களினுல் சங்கராசார்யரே சொல்லி யிருப்பதினுலும், வஸ்துத:— அல்பஞ்ஞத்வ ஸர்வஞ்ஞத்வாதி விருத்த தர்மங்களுடன் கூடியிருக்கும் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் பொருந்தாததினுலும் இந்த 'தத்வமஸி' என்கிற வாக் யம் அல்பஞ்ஞத்வாதி குணவிஶிஷ்டனுன ஜீவனுக்கு ஸர்வஞ்ஞத் வாதி குணவிஶிஷ்டனுன பரமாத்மாவுடன் ஐக்யத்தை போதிக்க மாட்டாது.

4. முக்ய வ்ருத்தியினுல் 'தத்' என்கிற பதத்தினுல் ஸர்வேஶத் வாதி குணவிஶிஷ்டனுன சேதனன் (பரமாத்மா) போதிதமாயி னும், லக்ஷணுவ்ருத்தியினுல் ஸர்வேஶத்வாதி குணங்களைவிட்டு கேவலம் 'சித்' என்றும்; முக்யவிருத்தியினுல் 'த்வம்' என்கிற பதத்தினுல் அல்பஞ்ஞத்வாதி குணவிஶிஷ்டனுன 'சித்' (ஜீவன்) போதிதமாயினும், லக்ஷணுவ்ருத்தியினுல் அல்பஞ்ஞத்வாதி குணங்களைவிட்டு கேவலம் 'சித்' என்றும் போதிதமாய், அந்த ப்ராஹ்மசித்துக்கு ஜீவசித்துடன் ஐக்யத்தை 'சித்சிதஸி' என்று இந்த 'தத்வமஸி' வாக்யம் சொல்லுகிறதென்பது யுக்தமல்ல. ஏனெனில்:—

* ஸர்வேஶத்வ ஸ்வதந்த்ரத்வ ஸர்வஞ்ஞத்வாதிபிர்குணை:। ஸர்வோத் தம: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப ஈஶ்வர:॥ 721॥ தத்பதார்த்த: த்வமர்த்தஸ்து கிஞ்சிஜ்ஞோ து:க்க ஜீவன:। ஸம்ஸார்யயம் தத்கதிக: ஜீவ: ப்ராக்ருத லக்ஷண:॥ 722॥ கதமேகத்வ மனயோர்கடதே விபரீதயோ:। ப்ரத்யக்ஷண விரோதோய முபயோருபலப்யதே॥ 723॥ விருத்ததர்மா க்ராந்தத்வாத் பரஸ்பர விலக்ஷணௌ। ஜீவேஶௌ வஹ்னிதுஹினுவிவ ஶப்தார்த்ததோபி ச॥ 724॥ (ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹம்.)

† ஐக்யம் தயோ: லக்ஷிதயோ: ந வாச்யயோ: நிகத்யதேன்யோன்ய விருத்த தர்மிணோ:। கத்யோத பான்வோரிவ ராஜப்ருத்யோ: கூபாம்பு ராஶ்யோ: பரமாணுமேர்வோ:॥ 244॥ (விவேகசூடாமணி.)

(a) பூர்வத்தில் அந்த பதார்த்தத்தின் அறிவு இருந்தால்தான் லக்ஷணா வ்ருத்தியினால் பதம் அந்த அர்த்தத்தை போதிக்கும். ப்ரஹ்மம் (சித்) ப்ரத்யக்ஷத்தினாலும், அனுமானத்தினாலும் அறியப்படாததாகையால், ஶப்தத்தினால் லக்ஷணா வ்ருத்தியினாலேயே அறியப்படவேண்டும். லக்ஷணா வ்ருத்தியினால் அறியப்படவேண்டுமாயின் பூர்வத்தில் அப்பதார்த்தம் தெரிந்திருக்கவேண்டும். இவ்விதமாக பரம்பரையாக அனவஸ்தையுண்டாய், ப்ரஹ்மத்தின் = சித் பதார்த்தத்தின் ஞானமே உண்டாகாததினால் 'தத்' 'த்வம்' என்கிற பதங்களினால் லக்ஷணா வ்ருத்தியினால் சித்தின் போதம் உண்டாகிறதென்று சொல்லுவது பொருந்தாது. ஆகையால் 'சித் சிதஸி' என்று 'தத்வமஸி' என்கிற வாக்யம் சொல்லுகிறதென்பது பொருந்தாது.

(b) 'தத்' 'த்வம்' பதங்களினால் 'சித்' என்கிற அறிவு உண்டாகிறதென்று வைத்துக்கொண்டபோதிலும்—'யஸ்ஸர்வஞ்ஞ: ஸர்வவித், ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶான:' முதலிய ஶ்ருதிகளினால் ஸித்தமான ஸர்வஞ்ஞத்வாதி தர்மங்கள் பரமாத்மனிடத்தில் இருப்பதினாலும், ஜீவனிடத்தில் அல்பஞ்ஞத்வாதி குணங்கள் ஸாக்ஷியினால் ஸித்தமாயிருப்பதினாலும் 'தத்' 'த்வம்' என்கிற பதங்களினால் அந்த குணங்கள் போதிதமாகாமற் போனமாத்ரத்தினால், ஸர்வஞ்ஞத்வாதி குணங்களுடன் கூடிய ப்ரஹ்மசைதன்யத்திற்கு அல்பஞ்ஞத்வாதி குணங்களுடன் கூடின ஜீவசைதன்யத்துடன் ஐக்யம் பொருந்துகிறதில்லை.

(c) 'யஸ் ஸர்வஞ்ஞ:' முதலிய ஶ்ருதி, ஸாக்ஷி இவைகளால் ஸித்தமாயிருப்பதினாலும், அதற்கு பாதகம் (இல்லை என்று சொல்லும் ப்ரமாணம்) இல்லாததினாலும் அந்த ஸர்வஞ்ஞத்வாதி தர்மங்கள் மித்யை (முக்காலத்திலு மில்லாதது) யல்லாததினாலும் "அந்த ஸர்வஞ்ஞத்வால்பஞ்ஞத்வாதி தர்மங்கள் மித்யையானதால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யமுண்டாவதற்குப் பாதகம் உண்டாகிறதில்லை" என்று அத்வைதிகள் சொல்லுவது பொருந்தாது.

(d) சித் சித்தாக இருக்கிறது என்கிற நிர்தர்மிதாவச்சேதக ஶாப்தபோதம் அனுபவ விருத்தமானது. [ஒரு வஸ்துவைக் (தர்மி

யைக்)குறித்து ஒரு தர்மத்தை போதிக்க வேண்டுமாயின் அந்த வஸ்து மற்றொரு தர்மத்துடன் கூடியதாகவே இருக்கவேண்டும். எந்த தர்மமுமில்லாத வஸ்துவைக் குறித்து தர்மத்தைப் போதிப்பது அனுபவ விருத்தமாகிறது.] ப்ரக்ருதம் தர்மிதாவச் சேதகத்தை வைத்துக்கொண்டு (தர்மத்துடன்கூடிய சித்பதார்த்தத்தைக் குறித்து) சித்துடன் அபேதத்தை போதிப்பது—தர்மிதாவச்சேதக தர்மத்துடன் கூடிய சித் அத்வைத மதத்தின்படிக்கு மித்யையாகையால் அந்த மித்யா சித்துக்கு மற்றொரு சித்துடன் ஐக்யம் பொருந்துகிறதில்லை.

(e) இந்த வ்ருக்ஷம் ஶிம்ஶபாவ்ருக்ஷமோ அல்லவோ என்கிற ஸந்தேஹமாகிலும், ஶிம்ஶபாவ்ருக்ஷமல்ல என்கிற ப்ரமமாகிலும், அஞ்ஞானமாகிலும் வந்திருக்குமாயின் அந்த அஞ்ஞானம், ஸம்ஶயம், விபர்யயம் இவைகளைப் போக்கடிப்பதற்காக இந்த வ்ருக்ஷம் ஶிம்ஶபாவ்ருக்ஷம் என்று சொல்லவேண்டும். இந்த வ்ருக்ஷம் ஶிம்ஶபாவ்ருக்ஷமென்று தெரிந்திருக்க இது ஶிம்ஶபாவ்ருக்ஷமென்று சொல்லுவது எப்படி அனுவஶ்யகமோ அப்படியே 'சித் சித்' என்று எல்லோருக்கும் தெரிந்திருப்பதினால் சித் சித்தாக இருக்கிறதென்று சொல்லுவது அனுவஶ்யகம். மற்றும் ஞாதார்த்தத்தையே (தெரிந்திருக்கும் விஷயத்தையே) அறிவிக்கிறபடியால் அனதிகதார்த்த போதகத்வரூப (தெரியாத விஷயத்வத்தைத் தெரிவிப்பது) ப்ராமாண்யம் உண்டாகாமற் போக வேண்டியதாகும். ஆகையால் 'தத்வமஸி' என்கிற வாக்யம் சித் சித்திருக்கிறதென்று போதிக்கிறதென்று சொல்லுவது பொருந்தாது.

(f) 'தத்' என்கிற பதத்தினால் முக்யவ்ருத்தியினால் போதிதமான ஸர்வேஶத்வாதி குணவிஶிஷ்டமான ப்ரஹ்மசைதன்யத்திற்கும் 'த்வம்' என்கிற பதத்தினால் முக்யவ்ருத்தியினால் போத்யமான அல்பஞ்ஞத்வாதி குணவிஶிஷ்ட ஜீவசைதன்யத்திற்கும் ஐக்யம் பாதிதமாய் பொருந்தாமலிருக்கும்போது அங்கீகரிக்கவேண்டிய வேறு அர்த்தம் இதர ப்ரமாணங்களால் அபாதிதமாகவும், இதரப்ரமாணங்களுக்கு அனுகூலமாகவும் இருக்கவேண்டும்.

லக்ஷணாவ்ருத்தியினால் 'தத்' பதத்தினால் ஸர்வஜ்ஞத்வாதி தர்மங்கள் போதிக்கப்படாவிடினும், ஶ்ருதிகளினால் ப்ரஹ்மத்தினிடத்தில் சொல்லப்படும் ஸர்வேஶத்வாதி தர்மங்கள் ஸத்யமானவைகள் (மித்யையல்லாதவைகள்) ஆகையால் ஸர்வேஶத்வாதி தர்மங்களுடன்கூடின ப்ரஹ்மசைதன்யத்திற்கு அல்பஜ்ஞத்வாதி குணவிஶிஷ்டனான ஜீவசைதன்யத்துடன் அபேதம் ப்ரமாண பாதிதமாகிறதினாலும், அபேதபோதகமான வாக்யமே இல்லாததினால் ப்ரமாணங்களின் அனுகூலம் இல்லாததினாலும் லக்ஷணாவ்ருத்தியினாலும் (Secondary meaning) ஸர்வஜ்ஞத்வாதி தர்மங்களைவிட்டு இரண்டு சைதன்யங்களுக்கும் ஐக்யம் சொல்லுவது பொருந்தாது. லக்ஷணாவ்ருத்தியினால் எடுத்துக்கொள்ளும் அர்த்தம் இதர ப்ரமாணங்களினால் பாதிதமாய்க்கொண்டிருந்தபோதிலும், ப்ரமாணங்களின் அனுகூலம் இல்லாவிடினும் அங்கீகரிப்பதாய் இருந்தால்—'தத்' என்கிற பதத்தினால் லக்ஷணாவ்ருத்தியினால் ஸம்ஸாரிஷாணமென்கிற அர்த்தத்தை எடுத்துக்கொண்டு, த்வம் = நீ, தத் = ஸம்ஸாரிஷாணம், அஸி = இருக்கிறாய் என்கிற அர்த்தத்தை அங்கீகரிக்கவேண்டியதாகும். ஆகையால் 'தத்வமஸி' என்கிற வாக்யம் ஜீவசைதன்யத்திற்கும் ப்ரஹ்மசைதன்யத்திற்கும் ஐக்யம் சொல்லுகிறதில்லை.

"தத்வமஸி என்கிற வாக்யத்திற்கு ஆரம்பத்திலிருக்கும் பி. வா. எ. 3 'ஆகிய 'ஏனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி அமதம் மதம விஜ்ஞாதம் விஜ்ஞாதம் பவதி' (சாந். 6-1-3) என்கிறவாக்யம் பரமாத்மாவின் ஞானத்தினால் ஜீவஜடாத்மக ப்ரபஞ்சஞானமாகிறதென்று சொல்லுகிறது, ஜீவன் பரமாத்மாவைவிட வேறாகில் பரமாத்மாவின் ஞானமுண்டானதும் ஜீவஜடாத்மக ப்ரபசஞானமாகிறதென்பது பொருந்தாததினால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தை அறிவிக்கிறது, ஆகையால் இந்த ஆரம்பவாக்யத்தை அனுஸரித்து 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு ஜீவபரமாத்மாக்களின் அபேத விஷயத்திலேயே தாத்பர்யமுண்டு" என்று ப்ரதிவாதிகள் சொல்லுவது யுக்தமல்ல என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள். காரணங்கள்:—

எப்படி ஶுக்தியில் (முத்துச்சிப்பியில்) ஆரோபிக்கப்பட்டிருக்கும் வெள்ளி எதுவரைக்கும் இது முத்துச்சிப்பி என்று அறிவு உண்டாகிறதில்லையோ அதுவரைக்கும் தோன்றிக்கொண்டிருந்து, இது முத்துச்சிப்பி என்கிற ஞானம் உண்டானதும் முன் தோன்றியிருந்த வெள்ளி தோன்றாமற்போகிறதே யொழிய, தோன்றாமலிருப்பது தோன்றுவதில்லையோ; அப்படியே அத்வைதமதத்தின்படிக்கு ப்ரஹ்மத்தில் ஜகத்து அத்யஸ்தமாயிருப்பதினால் (ஆரோபிக்கப்பட்டிருப்பதினால்) ப்ரஹ்மத்தின் அஞ்ஞானம் இருக்கிறவரையில் தோன்றிக்கொண்டிருந்து ப்ரஹ்மஞானம் உண்டானதும் தோன்றாமற்போகவேணுமேயொழிய, தோன்றுவது மிகவும் அயுக்தமாகிறது. சங்கராசார்யரும் * கேநோபனிஷத்பாஷ்யத்திலும், ஆனந்தகிரி என்பவர் † அதின் டீகையிலும் "அத்யஸ்தமான (ஆரோபிக்கப்பட்ட) பதார்த்தம் அதிஷ்டானஞானமுண்டாகிறவரைக்கும் தோன்றிக்கொண்டிருந்து, அதிஷ்டான ஞானமுண்டானதும் தோன்றாமற்போகிறது" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் 'யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்கிற வாக்யம் அதிஷ்டானமான ப்ரஹ்மத்தின் ஞானமுண்டானதும் அதினிடத்தில் அத்யஸ்தமாயிருக்கும் ஜீவ ஜடாத்மக ப்ரபஞ்சஞானம் உண்டாகிறதென்று சொல்லுவது யுக்தமல்ல. தவிற—பரமாத்மாவின் ஞானமானபிறகு பூர்வத்திலிருந்தஜகத்தின் ஞானம் போகிறதென்றே அத்வைத மதத்தின் படிக்குச்சொல்லவேண்டும்.

"யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி" என்கிற 6-1-3வது சாந்தோக்ய வாக்யத்திற்கு வ்யாக்யானம் செய்யும்போது ஶங்கரா

---

* அத வா ஹேத்வர்த்த உத்தரார்த்தோ அவிஞ்ஞாதமித்யாதி (கேந. ஶாம். பா. 2-11.)

† 'அத வா ஹேத்வர்த்த இதி' லோகே ஶுக்த்யாதி தத்வம் விஜானதாம் யதோத்யஸ்தம் ரூப்யாத்யவிஞ்ஞாதம் பவதி அஜானதாமேவ த்வத்யஸ்தம் விஞ்ஞாதம் பவதீதி ஸுப்ரஸித்தம்| ததா ப்ரஹ்மணி ஞேயத்வஸ்யாத்யஸ்தத்வாதேவ தத்வவிதோ ந ஞாதம் ப்ரஹ்ம பஶ்யந்தீத்யர்த்த இதி (ஆனந்தகிரீயம்)

சார்யர் * தம்மிடபாஷ்யத்திலும், ஆனந்தகிரி என்பவர் அந்த பாஷ்யத்தின் † தம்மிட டீகையிலும்—'ஸமஸ்த வேதாத்யயனம் செய்து, அவ்வேதார்த்தங்களை யறிந்து க்ருதக்ருத்யனை தன்னிட குமாரனைக்குறித்து தந்தை நீ பரமாத்மனை தெறிந்துக் கொண்டாயா என்று ஏன் கேழ்க்கிறான் என்று ஶங்கையுண்டாகவே—எல்லா வேதங்களையும் அத்யயனம் செய்திருந்தாலும், பரமாத்மனைவிட வேறான, அறிந்துக்கொள்வதற்கு யோக்யமான ஸமஸ்த வேதார்த்தங்களையும் தெரிந்துக்கொண்டாலும், எதுவரைக்கும் பரமாத்மாவின் தத்வத்தை அறிந்துக்கொள்ள மாட்டார்களோ அதுவரையிலும் அக்ருதார்த்தர்களேயாகிறார்கள் (தம்மால் ஸம்பாதித்துக்கொள்வதற்கு யோக்யமான வஸ்துவை ஸம்பாதித்துக்கொள்ளாதவர்களேயாகிறார்கள்), பரமாத்மாவின் ஞானமுண்டாகில் வேதாத்யயனம் செய்ததும், வேதார்த்தத்தைத் தெறிந்துக்கொண்டதும் ஸார்த்தகங்களாகின்றன, பரமாத்மாவைவிட வேறான ஜகத்தின் ஞானத்திற்கு பரமாத்மாவின் ஞானம் பலன் என்று சொல்லியிருக்கிறார்களேயொழிய, பரமாத்மாவின் ஞானத்தினுல் ஜகத்தின் ஞானமாகிறபடியால் பரமாத்மனுக்கு ஜகத்துடன் ஐக்யமுண்டென்று சொல்லவில்லை. தவிர 'அஶ்ருதமபி அன்யத்' என்றும் 'அன்யத் வேத்யமதிகம்யாபி' என்றும் ஸ்பஷ்டமாக அறியவேண்டிய ஜகத்து 'அன்யத்' ப்ரஹ்மத்தை விட வேறானது என்று சொல்லியிருக்கிறார்கள்.

மற்றும், ‡'க்ருதக்ருத்யஶ்ச பாரத' என்கிற 15-20வது கீதாஶ்லோகத்தின் ஶாங்கரபாஷ்யத்தில்—பரமாத்மனின் தத்வஞா

---

* யேனுதேஶேன ஶ்ருதேனுஶ்ருதமபி அன்யத் ஶ்ருதம் பவதி......ஸர்வானபி வேதானதீத்ய ஸர்வம் சான்யத் வேத்யமதிகம்யாப்யக்ருதார்த்த ஏவ பவதி யாவதாத்மதத்வம் ந ஜானதீத்யாக்யாயிகாதோவகம்யதே॥ ( சாந். ஶாங். பா. 6-1-3)

† கிமித்யதீத்ய ஸர்வவேதமதிகத ததர்த்தம் ச புத்ரமாத்மவித்யா மதிக்ருத்ய பிதா ப்ருச்சதி,தஸ்ய ஸர்வவேதாத்யயனுதினைவ க்ருதார்த்தத்வாதித்யாஶங்க்யாஹ—ஸர்வானபீதி. (சாந். ஆன. 6.-1 3.)

‡ 'க்ருத க்ருத்யஶ்ச பாரத' க்ருதம் க்ருத்யம் கர்தவ்யம் யேன ஸ க்ருதக்ருத்யோ விஶிஷ்டஜன்ம ப்ரஸூதேன ப்ராஹ்மணேன யத்கர்தவ்யம் தத்

னத்தை அடைந்தால்தான் உத்தமகுலத்தில் பிறந்த ப்ராஹ்மணன் தன்னால் செய்யப்படவேண்டிய கார்யங்களேது உண்டோ அவைகளைச் செய்தவனாகிறான். பகவத்தத்வஞ்ஞானத்தை ஸம்பாதித்துக்கொள்ளாவிடின் எவ்வளவு வேதார்த்த ஞானம் ஸம்பாதித்துக்கொண்டபோதிலும், செய்யவேண்டிய இதர கர்மங்களைச் செய்தபோதிலும், தன்னால் செய்யப்படவேண்டிய கார்யங்களைச் செய்தவனாகிறதில்லை. நீ என்னால் பரமாத்மனை(என்னை) தெறிந்துக்கொண்டிருக்கிறபடியால் நீ க்ருதக்ருத்யன் என்று அர்ஜுனனைக்குறித்து ஸ்ரீ க்ருஷ்ணன் சொல்லியிருக்கிறானென்று சங்கராசார்யர் சொல்லியிருக்கிறபடியால், பரமாத்மாவின் ஞானம் ஸம்பாதித்துக்கொண்டால்தான் ஜகத்தின் ஞானம், இதர கர்மங்கள் இவை ஸபலமாகிறதென்று ஸித்தமாகிறது. அவ்வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லியதைப்போலவே—'யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்கிற வாக்யத்திற்கும் பரமாத்மாவின் ஞானத்தை ஸம்பாதித்துக் கொண்டால்தான், ஜகத்தின் ஞானம், இதரகர்மங்கள் இவைகள் ஸபலமாகின்றனவென்று சொல்லவேண்டுமே யொழிய பரமாத்மாவின் ஞானத்தினால் ஜீவஜடாத்மக ப்ரபஞ்ச ஞானமாகிறதென்று சொல்லக்கூடாது.

மற்றும் "யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி" என்கிற வாக்யத்தில் ப்ரஹ்மம் ஶ்ருதமாயினும், மதமாயினும், விஞ்ஞாதமாயினும் அஶ்ருதம், அமதம், அவிஞ்ஞாதமுமான ஜகத்து ஶ்ருதமாகிறது, மதமாகிறது, விஞ்ஞாதமாகிறது என்று சொல்லியிருப்பதினால் ஶ்ருதத்வம், அஶ்ருதத்வம், மதத்வம், அமதத்வம், விஞ்ஞாதத்வம் அவிஞ்ஞாதத்வம் என்கிற விருத்த தர்மங்களினால் ஜகத்துக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தைத்தெரிவிக்கிறது. மற்றும்-ம்ருத்பிண்டம் (மண்கட்டி) கடத்திற்கு உபாதான காரணமல்ல. நகநிக்

ஸர்வம் பகவத்தத்வே விதிதே க்ருதம் பவேதித்யர்த்த:। ந சான்யதா கர்தவ்யம் பரிஸமாப்யதே கஸ்யசிதித்யபிப்ராய:। 'ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே' இதி சோக்தம்। 'ஏதத்தி ஜன்மஸாமக்ர்யம் ப்ராஹ்மணஸ்ய விஶேஷத:। ப்ராப்யைதத் க்ருத க்ருத்யோஹி த்விஜோ பவதி நான்யதா' இதி ச மானவம் வசனம்। யத ஏதத் பரமார்த்த தத்வம் மத்த: ஶ்ருதவானஸி அத: க்ருதார்த்தஸ்த்வம் பாரதேதி (கீதா. ஶாங். பாஷ்யம் 15—20)

ருந்தனம்(நகம் எடுக்கும் ஆயுதம்) இரும்புக்கோடாலி முதலியவை களுக்கு உபாதான காரணமல்ல. ஆகையால் 'ம்ருத்பிண்ட ஞானத் தினால் கடஞானமாகிறது, நகநிக்ருந்தன ஞானத்தினால் இரும்புக் கோடாலி முதலியவைகளின் ஞானமாகிறது என்று சொல்லின் உபாதானகாரண ஞானத்தினால் உபாதேயமான கார்யஞானமா கிறதென்று சொல்லியதாக ஆகிறதில்லை. அப்படி ஆகாததினால் இந்த ம்ருத்பிண்டாதிகளின் த்ருஷ்டாந்தங்களைக் கொடுத்து ப்ரஹ்மத்தின் ஞானத்தினால் ஜகத்தின் ஞானமுண்டாகிறதென்று சொல்லுவதினால் ப்ரஹ்மம் உபாதானகாரணம் (விவர்தோபாதான காரணம்) ஜகத்து உபாதேயமான கார்யம் என்று ஸித்தித்து ப்ரஹ்மத்திற்கு ஜகத்துடன் ஐக்யம் ஸித்தமாகிறதில்லை.

சங்கராசார்யர் சொல்லியவாறே—ப்ரஹ்மஞானமாயின் ஜகத் தின் ஞானம் ஸார்த்தகமாகிறது ஜகத்தைத் தெரிந்துகொண்ட போதிலும், ப்ரஹ்மஞானமாகாவிடில் அந்த ஜகத்தின் ஞானம் நிஷ்பலமாகிறதென்றாகிலும், அல்லது—

"யாவானர்த்த உதபானே ஸர்வதஸ் ஸம்ப்லுதோதகே।
தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜானத:॥
(கீ. 2—46)

என்கிற ஶ்லோகத்தில் சொல்லியவாறு ஜகத்தின் ஞானத்தினால் எந்த பலன் ஆகவேணுமோ அந்த பலன், ஜகத்தை தெரியாம லிருந்தபோதிலும் ப்ரஹ்மஞானத்தினால் உண்டாகிறதென்றாகி லும் அர்த்தமாகிறது. ஆகையால் ப்ரஹ்மஞானத்தினால் ஜகத்தின் ஞானம் உண்டாகிறதென்று சொல்லிக்கொண்டிருப்பதினால் ஜீவ ஜடாத்மக ப்ரபஞ்சத்திற்கு ப்ரஹ்மத்துடன் அபேதத்தைத் தெரி விக்கிறது என்று சொல்லுவது யுக்தமல்ல, ஸ்வவ்யாஹதமுமாகி றது. ஆகையால் 'யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்கிற உபக்ரம வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதத்தைச் சொல்லிக்கொண் டிருப்பதினால் அந்த வாக்யானுஸாரமாக 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதத்தைச் சொல்லு வதில் தாத்பர்யமுண்டென்று சொல்லுவது யுக்தமல்ல,

பி. எ. 4. 'ஏகமேவாத்விதீயம்' என்கிற வாக்யம்—பரமாத்மா ஒருவனே உளன். பரமாத்மனைவிட வேறான வஸ்துவே இல்லை என்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறது. ஆகையால் இந்த ஆரம்பவாக்யத்தை அனுஸரித்து 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு ஜீவபரமாத்மாக்களின் அபேதவிஷயத்திலேயே தாத்பர்யமுண்டு என்று ப்ரதிவாதிகள் சொல்லுவது யுக்தமல்ல என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள் காரணங்கள்:—

'ஏகமேவாத்விதீயம்' என்கிற வாக்யத்திற்கு சங்கராசார்யரே 'ஸ்வகார்யபதிதம் அன்யன்னாஸ்தீதி ஏகமேவேத்யுச்யதே' என்று ஸ்ருஷ்டிக்கு ஆரம்பத்தில் பரமாத்மனால் பிறந்த பதார்த்தம் இல்லாததினால் பரமாத்மா 'ஏகமேவ' என்று சொல்லிக்கொள்ளப்படுகிறான். (ஏகம் = ஸ்ருஷ்டிக்கு ஆரம்பத்தில் தன்னால் பிறந்த பதார்த்தங்களால் ரஹிதன்) 'அத்விதீயம்' ஸஹகாரிகாரணரஹிதன் என்று அர்த்தம் செய்திருப்பதினாலும், 'த்விதீயம்' என்கிற பதத்திற்கு ஸஜாதிய த்விதீயவஸ்து என்று அர்த்தமிருப்பதினால், 'ந த்வத் ஸமஸ்சாப்யதிகஸ்ச த்ருஸ்யதே' (ஸ்வே. 6-8) இத்யாதி வேதங்களிலும், 'ந த்வத் ஸமோஸ்த்வப்யதிக:' (கீ. 11-43) என்று கீதையிலும் சொல்லியிருக்கிறவாறு, பரமாத்மா ஸம (ஸஜாதீய) வஸ்துரஹிதனென்று அர்த்தமாய்க்கொண்டிருப்பதினாலும், 'ஏகம்' என்கிற ஸப்தத்திற்கு — முக்யமென்றும், அன்யமென்றும், அஸஹாயமென்றும் அர்த்தமிருப்பதினாலும், 'ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யநாதீ உபாவபி' என்று கீதையிலும், 'தம ஆஸித்தமஸா கூள்ஹமக்ரே' என்று ஸ்ருதியிலும், 'ஜீவ ஈஸோ விஸுத்தா சித்' என்று அத்வைதிகளே ஆரு பதார்த்தங்கள் அநாதியானதென்று ஒப்புக்கொண்டிருப்பதினாலும், இரண்டாவது வஸ்துவே இல்லை என்று ஏகம் என்கிற பதத்திற்காகிலும், அத்விதீய மென்கிற பதத்திற்காகிலும் அர்த்தம் செய்வதற்கு ஸாத்யமில்லை. மேற்சொல்லியவாறு 'ஏகமேவாத்விதீயம்' என்கிற ஸ்ருதி இரண்டாவது வஸ்துவே இல்லை என்று சொல்லாததினால் 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு ஜீவபரமாத்மாக்களின் ஐக்ய விஷயத்தில் தாத்பர்யமுண்டென்கிற விஷயத்தை அறிவிக்கிறதில்லை.

பி. எ. 2 'ஸேயம் தேவதைக்ஷத ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அனேந ஜீவேனாத்மனானுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணீ' (சாந். 6-3-1) என்கிற வாக்யம் பரமாத்மாவே ஜீவரூபத்தினால் தேஜஸ்ஸு ஜலம் முதலியவைகளில் ப்ரவேஶித்திருக்கிறானென்று சொல்லிக்கொண்டிருப்பதினால் ஸமஸ்த பதார்த்தங்களிலும் காணப்படும் ஜீவன் பரமாத்மனே என்றுசொல்லுகிறது. ஆகையால் இந்த ஆரம்ப வாக்கியத்தை யனுஸரித்து 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு ஜீவபரமாத்மாக்களின் அபேதவிஷயத்திலேயே தாத்பர்யமுண்டென்று ப்ரதிவாதிகள் சொல்லுவது யுக்தமல்ல என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள். காரணங்கள்:—

"*காரணமாத்ராஶங்கா நிவ்ருத்தயே" இது முதலிய வாக்யங்களினால் தேவதாஶப்தம் சேதன வாசகமென்று சொல்லியிருப்பதினாலும் "த்ரயோவிம்ஶதி தத்வானாம் கணம் யுகபதாவிஶத்। ஸோனுப்ரவிஷ்டோ பகவான் சேஷ்டாரூபேண தம் கணம்। பின்னம் ஸம்யோஜயாமாஸ ஸுப்தம் கர்ம ப்ரபோதயன்" (ஸ்ரீமத்பாகவதம். ) இவை முதலிய க்ரந்தங்களினால் பரமாத்மா சேஷ்டகமான ரூபத்துடன் (ஜீவரூபத்துடன்) ப்ருதிவ்யாதி தத்வாபிமானி தேவதைகளில் ப்ரவேஶித்து, பதார்த்தங்களைப் படைத்தனனென்று சொல்லியிருப்பதினாலும் 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' இத்யாதி வாக்யங்களில் ப்ருதிவ்யாதி ஶப்தங்கள் ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளை அறிவிக்கின்றனவென்றே சங்கராசார்யர் சொல்லி, ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளில் நாராயணன் (பரமாத்மா) நியாமகனாக இருக்கிறானென்று சொல்லியிருப்பதினாலும், 'ஜீவ இதி அனிருத்தஸ்யாக்யா' என்கிற ப்ரமாணானுஸாரமாக ஜீவஶப்தம் அனிருத்தநாமக பரமாத்மனையே சொல்லுகிறதினாலும், 'ஜீவோ ஜீவமஜீஜனத்' ஜீவநாமக அனிருத்தரூப

---

* காரணமாத்ராஶங்கா நிவ்ருத்தயே அதிஷ்டான சேதன பரிக்ரஹாய தேவதாஶப்தேன விஶிஷந்தி ஏதாஹவை தேவதா அஹம் ஶ்ரேயஸே விவதமானா இதி தா வா ஏதா தேவதா ப்ராணே நிஶ்ரேயஸம் ஸம்விதித்வா (ப்ர. ஸு. ஶங். பா. 2-1-4) இதி ச சேதனவாசி தேவதாஶப்தேன 'ரத்னப்ரபா. 2—1—5)

ஞன பரமாத்மா ஜீவர்களை ஸ்ருஷ்டித்தான் என்று சொல்லியிருப்பதினாலும், 'யோ வாஸுதேவோ பகவான் க்ஷேத்ரஜ்ஞோ நிர்குணாத்மக:। ஜ்ஞேயஸ்ஸ ஏவ ராஜேந்த்ர ஜீவஸ்ஸங்கர்ஷண: ப்ரபு:॥ (மஹாபாரதம் ஶாந். 339-40) "அஹம் ஹி ஜீவஸம்ஜ்ஞோ வை" (ம. பார. ஶாந். 339-47) என்கிற பாரதவாக்யங்கள்—ஜீவஶப்தம் பரமாத்மபரமென்று சொல்லியிருப்பதினாலும், தேவதாஶப்தத்தினாலும் ஜீவஶப்தத்தினாலும் கூடியிருக்கும் 'இமாஸ்திஸ்ரோ தேவதா: அநுப்ரவிஶ்ய' என்கிற வாக்யம்—பரமாத்மா தேஜோ ஜல ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளிலேயே (சேதனங்களிலேயே) ப்ருதிவ்யாதி பதார்த்தங்களின் வ்யாபார ப்ரவர்த்தகமான ஜீவனென்கிற பெயரையுடைய அனிருத்த ரூபத்தினால் அவைகளில் ப்ரவேஶித்து, அவைகளை ப்ரேரணைசெய்து, ஸ்ருஷ்டிப்பவன் என்று சொல்லியிருப்பதினாலும் ப்ரவேஶிக்கும் பரமாத்மனுக்கு ப்ரவேஶ்யமான ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளுடன் (சேதனங்களுடன்) பேதத்தைச் சொல்லுகிறதேயொழிய, ப்ருதிவ்யாதி எல்லா பதார்த்தங்களிலும் காணப்படும் ஜீவன் பரமாத்மனே என்று சொல்லுவதில்லை.

சங்கராசார்யர், பாமதிகாரர் முதலிய அத்வைதிகள் 2-4-19 வது ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யானத்தில்—"*ஏதஸ்யைவ ஸர்வே

---

* 'யதுக்தம் ஏதஸ்யைவ ஸர்வே ரூபமபவன்' (ப்ரு. 1-5-21) இதி ஶ்ருதே: ப்ராணா ஏவேந்த்ரியாணீதி ததயுக்தம், தத்ராபி பௌர்வாபர்யாலோசனாத்பேதப்ரதீதே: ததா ஹி...'அயம் வை ந: ஶ்ரேஷ்ட:' (ப்ரு.1-5-21) இதி ச ஶ்ரேஷ்டதாமஸ்யாவதாரயதி தஸ்மாத் ததவிரோதேன வாகாதிஷு பரிஸ்பந்தலாபஸ்ய ப்ராணாயத்தத்வம் தத்ரூபபவனம் வாகாதீனாமிதி மந்தவ்யம். (ப்ரு. ஶாங். பா. 2-4-19.)

இந்த்ரியாணி முக்யாத் ப்ராணாத் தத்வாந்தராணி தத்ர தத்ர பேதேன வ்யபதேஶாத் ம்ருத்யு ப்ராப்தத்வாப்ராப்தத்வ லக்ஷண விருத்ததர்ம ஸம்ஸர்கஶ்ருதே: அர்த்தக்ரியாபேதாச்ச......யாபி ச ப்ராணரூபதாமிந்த்ரியாணாமபிததாதி ஶ்ருதி: தத்ராபி பௌர்வாபர்யாலோசனயாம் பேத ஏவ ப்ரதீயதே இத்யுக்தம் பாஷ்யக்ருதா (ஶங்கராசார்யேண) தஸ்மாத் பஹுஶ்ருதி விரோதாத் பூர்வாபர விரோதாச்ச ப்ராணரூபதாபிதானமிந்த்ரியாணாம் ப்ராணாயத்ததயா பாக்தம் கமயிதவ்யம்...... ந ச ப்ராணே பேதவ்யபதேஶ பாஹுல்யம் ததா நேதும் யுக்தம். (பாமதி.)

ரூபமபவன்" (ப்ரு. 1—5—21.) என்கிற வாக்யத்தினுல் ஸர்வே = எல்லா இந்த்ரியங்களும், ஏதஸ்யைவ ரூபம் = இந்த ப்ராணத்தின் ரூபங்களே ஆயின என்று இந்த்ரியங்களுக்கு ப்ராணத்துடன் அபேதம் தோன்றினும்—'அயம் வை ந: ஸ்ரேஷ்ட' இத்யாதி வாக்யங்களினுல் ப்ராணத்திற்கு இந்த்ரியங்களுடன் பேதம் தோன்றிக் கொண்டிருப்பதினுலும்; மற்றும் விருத்த தர்மங்கள் தோன்றிக் கொண்டிருப்பதினுலும்; இந்த்ரியங்களுக்கு ப்ராணத்துடன் அபேதத்தைச் சொல்லியதாயின் வெகு ஸ்ருதி விரோதமும், பூர்வாபர விரோதமும் வருகிறபடியால் இந்த்ரியங்களுக்கு ப்ராண ரூபத்வத்தைச் சொல்லுவதைப்போல் தோன்றும்வாக்யத்திற்கு இந்த்ரியங்கள் ப்ராணுதீனமானவைகள் என்கிற அர்த்தத்தையே சொல்லவேண்டும், ப்ராணத்துடன் அபேதத்தைச் சொல்லக்கூடாது என்று எப்படி சொல்லியிருக்கிருர்களோ—

'அஸன்னேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேத சேத்' என்கிற தைத்திரீய வாக்யத்தில்—யார் ப்ரஹ்மம் 'அஸத்' என்று தெரிந்துக்கொள்ளுகிருனே அவன் அஸத் ஆகிருன் என்று சொல்லியிருந்தபோதிலும் 'அஸத்' ஆகிறது பொருந்தாதினுல் 'அஸத் = அஸத்ஸம:' அஸத்துக்கு ஸமானமாகிருன் என்கிற அர்த்தத்தை சங்கராசார்யர் எப்படிச் செய்திருக்கிருரோ—

'அஹம் ப்ரஹ்ம, அஹம் யஞ்ஞ:, அஹம் லோக:, த்வம் ப்ரஹ்ம, த்வம் யஞ்ஞ:, த்வம் லோக:' இது முதலிய அபேதம் தோன்றும் வாக்யங்களுக்கு அபேதம் பொருந்தாதினுல்—த்வம் = த்வத்கர்த்ருகம், ப்ரஹ்ம = ப்ரஹ்மா (வேதா) த்யயனம்; த்வம் = த்வத்கர்த்ருகா: யஞ்ஞா:; த்வம் லோக: = த்வஜ்ஜய்யா லோகா: (த்வம் என்கிற பதத்திற்கு உன்னுல் செய்யப்படும் என்றும், ஜயிக்கப்படும் என்றும் அர்த்தம், 'அஹம்' என்கிற பதத்திற்கு என்னுல் செய்யப்படும் என்றும், ஜயிக்கப்படும் என்றும் அர்த்தம், 'ப்ரஹ்ம' என்கிற பதத்திற்கு வேதாத்யயனமென்று அர்த்தம்) என்று எப்படி அர்த்தம் செய்திருக்கிருரோ—

அப்படியே 'தத்வமஸி' முதலியவாக்யங்களிலிருக்கும்'த்வம்' தத்' என்கிற பதங்களால் போதிக்கப்படும் ஜீவேஶ்வரர்களுக்கு

ஸர்வஜ்ஞத்வாஸர்வஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களிருப்பதினால் அபேதம் பொருந்தாததினால் பேத ப்ரதிபாதகமான பூர்வோத்தர வாக்யங்களுக்கும், பேதப்ரதிபாதக மென்று அத்வைதிகளால் சொல்லப்படும் அனேக ஶ்ருதிகளுக்கு விரோதம் வருகிறபடியினாலும்—

(1) 'ஸ ஆத்மா தத்வமஸி' என்கிற வாக்யம் 'அதத்' என்கிற பதவிபாகத்தினால், த்வம் = நீ, அதத் = அந்த பரமாத்மனைவிட பின்னனாக (வேறாக) யிருக்கிறா யென்றாகிலும்—

'தத்' என்று பதத்தைப் பிரித்துக்கொண்டபோதிலும்— 'ப்ரஹ்மணே த்வா மஹஸே ஓமித்யாத்மானம் யுஞ்ஜீத' என்கிற ஶ்ருதியை யனுசரித்து 'தத்' என்கிற ப்ராதிபதிகத்தினால் வந்த சதுர்த்தி விபக்திக்கு 'ஸுபாம் ஸுலுக்' என்கிற ஸூத்ரத்தினால் ஸு என்கிற ஆதேஶத்தையாகிலும், லோபத்தையாகிலும் செய்துகொண்டால், 'தத்' தஸ்மை = ஜகத்காரணனான பரமாத்மனுக்காக நீ ஸமர்பிக்கப்பட்டவனாயிருக்கிறாய் என்கிற அர்த்தமாகிலும்

(2) 'யதோவா இமானிபூதானி ஜாயந்தே' என்கிற ஶ்ருத்யனுஸாரமாக—தத் = தஸ்மாத் = அந்த பரமாத்மனால் பிறந்தவனென்றாகிலும்—

(3)'ஸகாரணம் காரணாதிபோதிப:' ஸர்வஸ்யவஶீ பூதபால:' முதலிய ஶ்ருத்யனுஸாரமாக ஆறாவது வேற்றுமைக்கு ஸ்வாதேஶாதிகளினால், தத் = தஸ்ய = அவனை (அவனையே) ஸ்வாமியாக உள்ளவனாக (தத்ஸ்வாமிக:) த்வம் = நீ, அஸி = இருக்கிறாய் என்றாகிலும்—

(4) 'ப்ராணபந்தனம் ஹி ஸோம்யமன:' முதலிய ஶ்ருத்யனுஸாரமாக ஸப்தமீ விபக்திக்கு (ஏழாவது வேற்றுமைக்கு) ஸ்வாதேஶாதிகளால், தத் = தஸ்மின் = அந்த பரமாத்மனை ஆஶ்ரயித்து த்வம் = நீ, அஸி = இருக்கிறாய் என்றாகிலும்—

இப்படி பலவிதமான அர்த்தங்கள் முக்யவ்ருத்தியினால் செய்வதற்கு வந்துக்கொண்டிருக்க— 'ஶ்ருதிலக்ஷணாவிஶயே ச

ஶ்ருதிர்ந்யாய்யா ந லக்ஷணா' = லக்ஷணாவ்ருத்தியினால் அர்த்தம் செய்வதைவிட முக்யவ்ருத்தியினால் அர்த்தம் செய்வதே ந்யாய மானதென்று சங்கராசார்யர் 3-1-22, 4-2-1 வது ஸூத்ரங்களின் பாஷ்யங்களில் சொல்லியிருப்பதினால் லக்ஷணாவ்ருத்தியினால் அர்த்தம் செய்வது அயுக்தமானது.

லக்ஷணாவ்ருத்தியினால் அர்த்தம் செய்வதாக வைத்துக் கொண்டபோதிலும்—'தத்' 'த்வம்' என்கிற இரண்டு பதங்களுக்கும் லக்ஷணா செய்வதைவிட 'தத்' என்கிற ஒருபதத்திற்கு லக்ஷணா வ்ருத்தி செய்துகொண்டு மேற்சொல்லப்பட்ட ப்ரமாணங்களுக்கு அனுகூலமாகவும், பேதத்தைச் சொல்லும் ஒன்பது த்ருஷ்டாந்த வாக்கியங்களுக்கு அனுகூலமாகவும், தத் = அவனிட அதீனன், அவனால் பிறந்தவன், அவனை ஆஶ்ரயித்தவன் இது முதலிய அர்த்தங்கள் பொருந்திக்கொண்டிருப்பதினால் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதே யொழிய, ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் சொல்லுகிறதில்லை என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள்.

வா. எ 2; பி. வா. எ. 5 "அஹம் ப்ரஹ்மாஸ்மி.........யோ யோ தேவானாம் ப்ரத்யபுத்யத" என்கிற வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கிறதில்லை, பேதத்தையே போதிக்கிறதென்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள் காரணங்கள்:—

'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்தின் * பூர்வோத்தர வாக்யங்கள்—ப்ரஹ்ம ஞானத்தினால் ஸர்வபாவத்தை (பூர்ணத்வத்தை) அடைகிறோமென்று மனிதர்கள் என்ன தெரிந்துக் கொள்ளுகிறார்களோ அந்த விஷயத்தில் விசாரம் செய்கிறார்கள்:—ப்ரஹ்ம ஸர்வபாவத்தை (பூர்ணத்வத்தை) அடைந்துயிருக்கிறது. அது எதைத் தெறிந்துக்கொண்டது? என்று (ப்ரஹ்மம் ப்ரஹ்மத்தைத் தெறிந்துக்கொள்ளாமலே ஸர்வபாவத்தை

* ததாஹு—ர் ப்ரஹ்மவித்யயா ஸர்வம் பவிஷ்யந்தோ மனுஷ்யா மன்யந்தே கிமு தத் ப்ரஹ்மாவேத் யஸ்மாத் தத் ஸர்வமபவத் அஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத் தத் ஸர்வமபவத் யோ யோ தேவானாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ ததபவத். ததர்ஷீணாம் ததா மனுஷ்யாணாம். (ப்ரு. 1—4—9, 10)

யடைந்திருக்குமாயின், நாங்களும் ப்ரஹ்மஞானம் இல்லாமலே ஸர்வ பாவத்தை யடையலாமாகையால் நாங்கள் ப்ரஹ்ம ஞானார்த்தமாக ஏன் ப்ரயத்னப்படவேணும்? ப்ராஹ்மம் ப்ரஹ்மத்தைத் தெறிந்துக்கொண்டு ஸர்வபாவத்தை அடைந்திருக்குமாயின், ஸர்வபாவம் ஞானஜன்ய மாகையால் அனித்யமாக வேண்டியதாகும் என்கிற அபிப்ராயத்தினால்) ஶங்கையுள்ளவர்களாகவே, அதற்கு ஸமாதானார்த்தமாக ப்ரவ்ருத்தமான—'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத், ததாத்மான மேவாவேத், அஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத்தத் ஸர்வமபவத்' இத்யாதி வாக்யங்கள்—ப்ரஹ்மம் இந்த ஜகத்துக்கு பூர்வத்திலிருந்தது, அது தன்னையே ப்ரஹ்மமென்று அறிந்துக்கொண்டது. அதினால் அது பூர்ணமாயிற்று. தேவதைகளில் யார் யார் ப்ரஹ்மத்தைத் தெரிந்துக்கொண்டனரோ அவர்களும் ஸர்வபாவத்தை (தமக்கு யோக்யமான பூர்ணத்வத்தை) அடைந்தனர். ரிஷிகளில் யார் யார் ப்ரஹ்மத்தைத் தெரிந்துக்கொண்டனரோ அவர்களும் ஸர்வபாவத்தை அடைந்தனர். மனுஷ்யர்களில் யார் யார் ப்ரஹ்மத்தைத் தெரிந்துக்கொண்டனரோ அவர்களும் ஸர்வபாவத்தை யடைந்தனர் என்று சொல்லிக்கொண்டே, தேவதைகளுக்கும், ரிஷிகளுக்கும், மனுஷ்யர்களுக்கும் பேதத்தை அறிவிக்கிறது. 'தேவானாம், ரிஷீணாம், மனுஷ்யாணாம்' என்கிற பஹுவசனத்தினால்—தேவதைகளுக்கும், ருஷிகளுக்கும், மனிதர்களுக்கும் பரஸ்பர பேதத்தைத்தெரிவிக்கிறது. சங்கராசார்யரும்—இவ்வாக்யம் 'ப்ரஹ்ம' '*தேவானாம்' 'ருஷீணாம்' 'மனுஷ்யாணாம்' என்று ப்ரஹ்மத்திற்கும், தேவதைகளுக்கும், மனிதர்களுக்கும் பரஸ்பரபேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லி, 'புர: புருஷ ஆவிஶத்' என்கிற ஶ்ருதி—ப்ரஹ்மமே எல்லா ப்ராணிகளின் ஶரீரங்களில் ப்ரவேஶித்திருக்கிறதென்று சொல்லிக் கொண்டிருப்பதினால் ஜீவர்களுக்கு ப்ரஹ்

* தேவானாமித்யாதி லோகத்ருஷ்ட்யபேக்ஷயா ந ப்ரஹ்மபுத்யோச்யதே। புர: புருஷ ஆவிஶத் இதி ஸர்வத்ர ப்ரஹ்மை வானுப்ரவிஷ்ட மித்யவோசாம। அத: ஶரீராத்யுபாதிஜனித லோகத்ருஷ்ட்யபேக்ஷயா தேவானாமித்யாத்யுச்யதே। (ப்ரு. ஶா. பா. 1—4—10)

மத்துடன் ஐக்யம் ஸித்தமாய்க் கொண்டிருப்பதினால், தேவதை களுக்கும், ருஷிகளுக்கும், மனுஷ்யர்களுக்கும் ப்ரஹ்மத்துடன் தோன்றும் பேதம் அவித்யாகல்பிதமானது, நிஜமானதல்ல என்று பாதகத்தைக் காட்டியிருக்கிறார்.

ஆயினும் அதே சங்கராசார்யர் ஷை பாதகத்தை—'புர: புருஷ ஆவிஶத்' இத்யாதி ஶ்ருதிகளில் சொல்லப்பட்ட ப்ரவேஶம் மித்யை (பொய்) பரமாத்மாவுக்கு ப்ரவேஶமே பொருந்துகிறதில்லை. ஈஶ்வரன் ப்ரவேஶித்திருக்கிறானென்று சொல்லுவதில் ஶ்ருதிக்கு தாத்பர்யமில்லை என்று † தைத்திரீய பாஷ்யம், ‡ ப்ருஹதாரண்யக பாஷ்யம் இவைகளில் தானே கண்டித்திருக்கிறபடியால் அவரிட (அத்வைதிகளிட) மதப்ரகாரமே இந்த 'புர: புருஷ ஆவிஶத்' என்கிற வாக்யம் ஜீவப்ரஹ்ம ஐக்யத்தைச் சொல்லுவதில்லாததினால் 'யோயோ தேவானாம் ப்ரத்யபுத்யத' என்கிற வாக்யம் எவ்வித பாதகமுமின்றி ஜீவப்ரஹ்ம பேதத்தையே சொல்லுகிறதென்பது நிர்விவாதமானது.

'ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் பரமாத்மாவின் வாக்யமாகையால் இராஜா தான் 'நான் இராஜன்' என்று சொன்னமாத்திரத்தினால் பிறர் (ப்ரஜைகள்) எப்படி இராஜர்களாவதில்லையோ, அப்படியே ப்ரஹ்மம் 'நான் ப்ரஹ்மம்' என்று சொல்லிய மாத்திரத்தில் ஜீவன் ப்ரஹ்மமாகிறதில்லை. ஆகையால் இவ்வாக்யத்தினால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யம் ஸித்திக்கமாட்டாது.

---

† ஏவம் தர்ஹி நைவாஸ்தி ப்ரவேஶோ ந ச கத்யந்தரமுபலபாமஹே ததேவானுப்ராவிஶத் இதி ச ஶ்ருதே:। ...... அன்யார்த்தத்வாத்...... தத்ப்ரவேஶ: ப்ரகல்ப்யதே। (தை. சாங். பா. 2—6.)

தஸ்மாதந்தோ மணிமவிந்ததிதிவதர்த்தவாதன்யமேவேதம் வாக்யமிதி நிகமயதி—ஹந்தேதி. (ஆனந்தகிரீயம்.)

‡ ந து ஸர்வகதஸ்ய நிரவயவஸ்ய திக்தேஶ காலாந்தராபக்ரமண ப்ராப்திலக்ஷண: ப்ரவேஶ: கதாசிதப்யுபபத்யதே। (ப்ரு. ஶாங் பா. 1—4—7.)

ஆத்மஜ்ஞானார்த்தத்வேன ப்ரவேஶாதீனாம் கல்பிதத்வாத் தத்வாக்யானாம் ந ஸ்வார்த்தே பர்யவஸான மித்யர்த்த: (ஆனந்தகிரீயம்)

தஸ்மாத்கார்யஸ்தஸ்யோபலப்யத்வமேவ ப்ரவேஶ இத்யுபசர்யதே (ப்ரு. ஶா. பா. 1—4—7.)

அத்வைதிகள் சொல்லுவதைப்போல் 'ததாத்மானமேவா வேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் ஜீவனிட வாக்ய மென்று வைத்துக்கொண்டு, ஜீவப்ரஹ்மங்களுக்கு அபேதத்தைப் போதிக்கிறதென்று சொல்லின்:—'தத்வமஸி' என்கிற வாக்யம் ஜீவப்ரஹ்மங்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கிறதென்று சொன்னதற்கு, எந்தெந்த தோஷங்கள் சொல்லப்பட்டனவோ அந்த தோஷங்களெல்லாம் இவ்வாக்யத்திற்கு வருகிறது. எப்படி எனின்:—

அத்வைத மதப்ரகாரம் இவ்வாக்யம் அகண்டார்த்தபோதகம் (சித் என்று மாத்ரம் போதிப்பது) ஆகையால் இவ்வாக்யம் ஜீவப்ரஹ்மங்களுக்கு அபேதத்தைப் போதிப்பதில்லை. 'த்வா ஸுபர்ணா' முதலிய வாக்யங்களினால் போதிதமான பேதத்திற்கு பாதகமுமாகிறதில்லை.

ஸகண்டார்த்தமென்று வைத்துக்கொண்ட போதிலும்—'அஹம்' என்கிற பதத்தினால் போத்யமான அந்த:கரணாவச்சின்ன (விசிஷ்ட) சைதன்யத்திற்கு ப்ரஹ்ம பதத்தினால்போத்யமான பூர்ணத்வாதி விசிஷ்டசைதன்யத்துடன் ஐக்யம்பொருந்துகிறதில்லை. லக்ஷணாவ்ருத்தியினால் சைதன்யவிஷயகமான அறிவு உண்டாகிறதில்லை என்கிற இதுமுதலிய அநேக தோஷங்கள் வருகிறபடியால் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தை அறிவிக்கிறதில்லை.

'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திலிருக்கும் 'அஹம்' 'ப்ரஹ்ம' என்கிற பதங்களின் முக்யார்த்தத்திற்கு ஐக்யம் பாதிதமாகிறபடியால் அமுக்யார்த்தமே செய்யவேணும். அப்படி அமுக்யார்த்தத்தை அங்கீகரிக்கும் பக்ஷத்தில் "த்வம் ப்ரஹ்ம, அஹம் ப்ரஹ்ம, த்வம் யஜ்ஞ:, அஹம் யஜ்ஞ:, த்வம் லோக:, அஹம் லோக:" (ப்ரு. 1-5-17) இது முதலிய வாக்யங்களிலிருக்கும் 'த்வம்' 'ப்ரஹ்ம' இது முதலிய பதங்களினால் தோன்றும் ஜீவ வேதாதிகளுக்கு ஐக்யத்தைப் போதிப்பதுபோல் தோன்றிக் கொண்டிருந்தபோதிலும், அந்த அர்த்தம் பாதிதமாகிறபடியால், 'த்வம்' த்வத்கர்த்ருகம், 'ப்ரஹ்ம' ப்ரஹ்மாத்யயனம் (வேதாத்ய

யனம்) = உன்னால் வேதாத்யயனம் செய்யப்படவேண்டியது. 'அஹம்' மத்கர்த்ருகம், 'ப்ரஹ்ம' ப்ரஹ்மாத்யயனம் (வேதாத்ய யனம்) = என்னால் வேதாத்யயனம் செய்யப்பட வேண்டியது. 'த்வம்யஜ்ஞ:' த்வத்கர்த்ருகோ யஜ்ஞ: = உன்னால் யஜ்ஞம் செய்யப் படவேண்டியது. 'அஹம் யஜ்ஞ: மத்கர்த்ருகோ யஜ்ஞ:' என்னால் யஜ்ஞம் செய்யப்படவேண்டியது. 'த்வம் லோக: த்வஜ்ஜய்யா லோகா:' உன்னால் லோகங்கள் ஜயிக்கப்பட வேண்டியது. 'அஹம் லோக: மயா ஜய்யாலோகா:' என்னால் லோகங்கள் ஜயிக்கப்படவேண்டியது என்று சங்கராசார்யர் அர்த்தம் செய்திருப்பதைப்போல் 'ப்ரஹ்ம = ப்ரஹ்மோபாஸன கர்த்தா அல்லது 'ப்ரஹ்மத்ரஷ்டா' அல்லது 'ப்ரஹ்மப்ராப்தி கர்த்தா' 'ப்ரஹ்மதாஸ:' 'ப்ரஹ்ம நியம்ய:' நான் ப்ரஹ்மோபாஸ னையைச் செய்கிறவனாயிருக்கிறேன், ப்ரஹ்மத்தைக்காணுகிறவன், ப்ரஹ்மத்தை அடைபவன், ப்ரஹ்மத்தின் தாஸன் இவை முதலிய அநேக இதர ப்ரமாணங்களுக்கு அவிருத்தமான, மற்றும் 'ஸர் வஸ்ய வசீ' 'ஆத்மா வாரே த்ரஷ்டவ்ய:' இது முதலிய வாக்யங் களுக்கு அனுகூலமான அர்த்தத்தை அங்கீகரிப்பதே யோக்ய மாகிறது. ஆகையால் 'ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ் மாஸ்மி... ..யோயோ தேவானாம் ப்ரத்யபுத்யத' என்கிற வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே சொல்லுகிறது, ஐக்யத் தைப் போதிக்கிறதில்லை என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள்.

வா. எ. 3; பி. எ. 6:—சங்கராசார்யரே 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம என்கிற வாக்யத்திற்கு, ப்ரஜ்ஞானம் = பரமாத்மா, ப்ரஹ்ம = நித்ய ஶுத்தபுத்த ஸ்வபாவன் என்று அர்த்தம் செய்திருக் கிறாரேயொழிய; ப்ரஜ்ஞானம் = ஜீவன், ப்ரஹ்ம = பரமாத்மா என்று அர்த்தம் செய்யவில்லை.

தத்ஸர்வம் = இந்த சதுர்முகாதி ஸமஸ்த சேதனர்களும், ஆகாயம் முதலிய எல்லா ஜடப்ரபஞ்சமும், ப்ரஜ்ஞாநேத்ரம் = ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவினால் நியம்யமானது. ப்ரஜ்ஞானே ப்ரதிஷ்டிதம் = ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவை ஆஶ்ரயித்துக் கொண்டிருப்பது. ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவிடத்தில் நின்றிருப் பது என்று பூர்வவாக்யத்தில் ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவுக்கும்

சதுர்முகாதி சேதனர்களுக்கும், ஆகாயாதி ஸமஸ்த ஜடங்களுக்கும் ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவுடன் பேதத்தைச் சொல்லியிருப்பதினால் 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யம், ப்ரஜ்ஞானம்= ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, ப்ரஹ்ம= பூர்ணன் என்று பரமாத்மாவுக்கு பூர்ணத்வத்தைச் சொல்லுகிறதேயொழிய, ப்ரஜ்ஞானம்= ஜீவன், ப்ரஹ்ம= ப்ரஹ்மம் என்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதில்லை என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள்.

அத்வைத மதத்தின்படிக்கு 'ஏஷ:' என்கிற பதத்தினால் போதிதமாகும் ப்ரஜ்ஞான ரூபமான ப்ரஹ்மம் ஶுத்தமானது. சதுர்முகன், இந்திரன், ப்ரஜாபதி முதலியவர்கள் உபாதியுடன் கூடினவர்கள். ஆகையால் சதுர்முகாதிகளுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யம் பொருந்தாததினாலும்—

ஜடமான பஞ்சபூதாதிகளுக்கு சேதனனான ஆத்மாவுடன் அபேதம் பொருந்தாததினாலும்—

'இமானி பூதானி' இத்யாதி வாக்யங்களில்—'ஏஷ:, ஏஷ:' என்கிற பதங்களைத் தானாகச் சேர்த்துக்கொள்ளுவதும்; 'ஏஷ: ஏஷ:' என்கிற பதங்களுக்கு ஆத்மாவிடத்தில் கல்பிதமென்கிற இல்லாத இந்த அர்த்தத்தைச் செய்கிறதும் அயுக்தமாகிறபடியினாலும்—

அத்வைத மதத்தின்படிக்கு ஆத்மா நிர்த்தர்மகனானபடியால் அவனிடத்தில் ப்ரமம் பொருந்தாததினால், ஏஷ:= ஆத்மாவிடத்தில் கல்பிதமென்கிற அர்த்தத்தைச் செய்வது யுக்தமல்லாததினாலும்—

'ஏதே ஸர்வே தேவா:' 'இமானி பஞ்சபூதானி' 'இமானி க்ஷுத்ரமிஶ்ராணி' இத்யாதி வாக்யங்களில் எப்படி 'ஏதே' 'இமானி' இத்யாதி ஶப்தங்கள் தேவதைகளுக்கும், பூதங்களுக்கும் ப்ரஸித்தித்யோதகங்களான விஶேஷணங்களாக இருக்கின்றனவோ, அப்படியே இவ்வாக்யத்திலிருக்கும் 'ஏஷ:, ஏஷ:, ஏஷ:' என்கிற ஏதத் ஶப்தங்கள்—சதுர்முக, இந்த்ர, ப்ரஜாபதிகளின் ப்ரஸித்தித்யோதக விஶேஷணங்களாக இருக்கின்றனவென்று சொல்லுவதே ஸரியாகிறது.

வித்யாரண்யரவர்களும் இந்த அனுபபத்திகளை மனதில் வைத்துக்கொண்டு—'ஏஷ: ப்ரஹ்ம, ஏஷ இந்த்ர:' இத்யாதி 'ஏஷ:, ஏஷ:' என்கிற ஶப்தம் ப்ரஸித்தபோதக விஶேஷணமென்று சொல்லியிருக்கிறார். ஆகையால்—'ஏஷ:, ஏஷ:' என்கிற பதத்தினால் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவை எடுத்துக்கொண்டு அந்த ஆத்மா சதுர்முகன், இந்த்ரன், ப்ரஜாபதி என்று அர்த்தம் செய்யக்கூடாது. 'ஏஷ ப்ரஹ்மா' இது முதலிய வாக்யங்களிலும் ஏதத் ஶப்தத்தினால் ப்ரஜ்ஞான ரூபியான ஆத்மாவை எடுத்துக்கொண்டால் அந்தப்படிக்கே 'ஏதே ஸர்வே தேவா:' 'இமானி பஞ்சபூதானி' 'இமானி க்ஷுத்ரமிஶ்ராணி' இத்யாதி வாக்யங்களும் ஏதத் ஶப்தத்தினால் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவையே எடுத்துக்கொள்ள வேண்டிவரும். அப்படி 'ஏதே இமானி' என்று பஹுவசனாந்த மிருப்பதினால் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவை எடுத்துக்கொள்ளுவதற்கு வழுது. சங்கராசார்யரும் இந்த அனுபபத்திகளை மனதில் வைத்துக்கொண்டு 'ஏஷ: ப்ரஹ்ம' இத்யாதி வாக்யங்களிலிருக்கும் 'ஏதத்' ஶப்தத்தினால் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவை எடுத்துக்கொண்டு 'ஏதே தேவா:' 'இமானி பூதானி' என்கிற வாக்யங்களிலிருக்கும் ஏதத் ஶப்தங்கள்—தேவதைகள், பூதங்கள் முதலியவைகளின் ப்ரஸித்தித்யோதக விஶேஷணங்களாக இருக்கின்றனவென்று ஒப்புக்கொண்டே, தங்களிட மதத்திலிருக்கும் அபிமான (ஆக்ரஹ)த்தினால் வேரு 'ஏஷ: ஏஷ:' என்கிற பதங்களைச் சேர்த்துக்கொண்டு, 'ஏதே தேவா: ஏஷ:' 'இமானி பூதானி ஏஷ:' என்று வாக்யமிருப்பதாக க்ரஹித்துக்கொண்டு—ஏதே = இந்த ப்ரஸித்தரான தேவதைகள், ஏஷ: = இந்த ப்ரஜ்ஞானரூபியான ஆத்மா; இமானி பூதானி = இந்த ப்ரஸித்தமான ஆகாஶாதி பூதங்கள், ஏஷ: = இந்த ப்ரஜ்ஞானரூபியான ஆத்மா என்று அர்த்தம் செய்திருக்கிறார். இவ்விதமாக அர்த்தம் செய்தால் 'ஏஷ: ப்ரஹ்ம, ஏஷ: இந்த்ர:' என்கிற வாக்யங்களிலிருக்கும் ஏதத் ஶப்தத்திற்கு ப்ரஜ்ஞான ரூபமான ப்ரஹ்மம் என்கிற அர்த்தத்தை அங்கீகரிப்பது, 'ஏதே தேவா:' 'இமானி பூதானி' என்கிற வாக்யங்களிலிருக்கும் ஏதத் ஶப்தங்களினால் ப்ரஸித்தி என்கிற அர்த்தத்தை எடுத்துக்கொள்ளுவது அவ்

வாக்யத்தில் 'ஏஷ: ஏஷ:' என்கிற ஸ்வந்தபதங்களைச் சேர்த்துக் கொள்ளுவது இவைகள் அயுக்தமாகிறபடியினாலும்—

"ஏஷ ப்ரஹ்மைஷ இந்த்ர:, ஏஷ ப்ரஜாபதிரேதே ஸர்வே தேவா இமானி பஞ்சமஹாபூதானி ப்ருதிவீ வாயுராகாஶ ஆபோ ஜ்யோதிம்ஷீத்யே தானீமானி ச க்ஷுத்ரமிஶ்ராணீவ | பீஜானீதராணி சேதராணி சாண்டஜானி ச ஜாருஜானி ச ஸ்வேதஜானி சோத்பிஜ்ஜானி சாஶ்வா காவ: புருஷா ஹஸ்தினோ யத்கிஞ்சேதம் ப்ராணி ஜங்கமம் ச பதத்ரி ச யச்ச ஸ்தாவரம் | ஸர்வம் தத் ப்ரஜ்ஞாநேத்ரம்" (ஐ-2-1.) என்கிற வாக்யம்—ஏஷ: = இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, ப்ரஹ்ம = சதுர்முகன், ஏஷ: = இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, இந்த்ர: = இந்த்ரன்....., ஏதே ஸர்வே தேவா: = இந்த எல்லா தேவதைகள் (ஏஷ:) = இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா. இமானி பஞ்சபூதானி = இந்த பஞ்சபூதங்கள், (ஏஷ:) = இந்த பரமாத்மா.........தத்ஸர்வம் = அந்த எல்லாம், (ஏஷ:) ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா என்று ப்ரதிவாதிகள் சொல்லும் அர்த்தத்தைக் கோர்ட்டார் நிருகரிக்கிறார்கள்.

ஏஷப்ரஹ்ம = இந்த ப்ரமாணங்களினால் ஸித்தமாகும் சதுர்முகப்ரஹ்மா (கார்யப்ரஹ்மா), ஏஷ இந்த்ர: = இந்த இந்த்ரன், ஏஷ ப்ரஜாபதி: = இந்த ப்ரஜாபதி, ஏதே ஸர்வே தேவா: = இந்த எல்லா தேவதைகள், இமானி பஞ்சபூதானி = இந்த ஆகாய வாயு தேஜோ ஜல ப்ருதிவீரூபமான பஞ்சபூதங்கள், அண்டஜ ஜாருஜ ஸ்வேதஜ வ்ருக்ஷபக்ஷிகளும், எந்த ஸ்தாவர பதார்த்தங்களுளவோ தத் = அவைகளெல்லாம், ப்ரஜ்ஞாநேத்ரம் = ப்ரஜ்ஞாநாமக பரமாத்மனாலேயே நியம்யங்களாயிருக்கின்றன. (பரமாத்மா இந்த எல்லாவற்றையும் தங்கள் தங்களிட வ்யாபாரத்தில் ப்ரவர்த்திக்கும்படிக்குச் செய்பவன்). ப்ரஜ்ஞானே ப்ரதிஷ்டிதம் = ப்ரஜ்ஞாநாமகனான பரமாத்மனிடத்தில் ஆஶ்ரயித்திருக்கின்றன. (அவ்வெல்லாவற்றிற்கும் பரமாத்மா ஆஶ்ரயனாயிருக்கிறான்). ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா = ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா ஸ்தாபகன். அந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, ப்ரஹ்ம = பூர்ணன் என்று சதுர்முகாதி எல்லா தேவகணங்களுக்கும், மற்றும் இதர ப்ராணிகளுக்கும்

சிதம்:—யஜமானன் சேதனன், ப்ரஸ்தரம் (தர்பமுஷ்டி) ஜடம். இப்படி ஜடத்வ சேதனத்வரூப விருத்ததர்மங்களிருப்பதினுல் யஜமானனுக்கு ப்ரஸ்தரத்துடன் அபேதம் பொருந்தாததினுல் இவ்வாக்யம் அபேதத்தைப் போதிக்காது.

வா. வ:—வேறு எவ்விதமான அறிவை உண்டாக்குகிறது?

சிதம்:—ப்ரஸ்தர: = தர்பமுஷ்டி, யஜமான: என்றல் யஜமானனிட கார்யத்தைச் செய்வது என்று போதிக்கிறது.

வா. வ:—ஐயா! இந்த க்ரந்தத்தைப் பார்த்திருக்கிறீரா?

சிதம்:—பார்த்திருக்கிறேம். இது நம் சங்கராசார்யர்செய்த ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹமென்கிற க்ரந்தம்.

வா. வ:—* இந்த ஶ்லோகங்களின் அர்த்தம் என்ன?

சிதம்:—ஸர்வேஶத்வம், ஸ்வதந்த்ரத்வம், ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களுடன் கூடியிருப்பதினுல் ஸர்வோத்தமனும், ஸத்யகாமனும், ஸத்யஸங்கல்பனுமான ஈஶ்வரன் 'தத்வமஸி' என்கிற வாக்யத்திலுள்ள 'தத்' என்கிற பதத்தின் அர்த்தம். அல்பஜ்ஞனுயும், துக்கியாயும், ஸம்ஸாரியாயும், பரமாத்மனையே கதியாயுடையவனுயுமிருக்கும் ஜீவன் 'த்வம்' பதத்தின் அர்த்தம். இப்படி ஸர்வஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களுடன் கூடியிருக்கும் ஜீவ ப்ரஹ்மங்களுக்கு ஐக்யம் எப்படிப் பொருந்தும்? (பொருந்தாது) ஐக்யம் ப்ரத்யக்ஷத்திற்கு விருத்தமாகிறது. மற்றும்—'ஜீவேஶௌ பின்னௌ விருத்த தர்மாதிகரணத்வாத் வஹ்னிதுஹினவத்' ஜலம் அக்னி இவ்விரண்டு பதார்த்தங்களில் ஶைத்யம், ஔஷ்ண்யம் என்கிற விருத்த தர்மங்களிருப்பதினுல் எப்படி பின்னங்களாயிருக்கின்றனவோ அப்படியே ஸர்வஜ்ஞத்வாஸர்வஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களிருப்பதினுல் ப்ரஹ்மமும் ஜீவனும் பின்ன

* ஸர்வேஶத்வ ஸ்வதந்த்ரத்வ ஸர்வஜ்ஞத்வாதிபிர்குணை:। ஸர்வோத்தம: ஸத்யகாம: ஸத்ய ஸங்கல்ப ஈஶ்வர:॥ தத்பதார்த்த: த்வமர்த்தஸ்து கிஞ்சிஜ்ஞோ துக்க ஜீவன:। ஸம்ஸார்யயம் தத்கதிகோ ஜீவ: ப்ராக்ருத லக்ஷண:। கதமேகத்வமனயோர்கடேத விபரீதயோ:। ப்ரத்யக்ஷேண விரோதோயமுபயோருபலப்யதே। விருத்த தர்மாக்ராந்தத்வாத் பரஸ்பரவிலக்ஷணௌ। ஜீவேஶௌ வஹ்னிதுஹினவிவ ஶப்தார்த்ததோபி ச ॥ (721—724)

மாகவே இருக்கவேண்டும் என்கிற அநுமானத்தினுலும் ஜீவ ப்ரஹ்மைக்யம் விருத்தமாகிறதென்று இந்த ஶ்லோகங்களின் அர்த்தம்.

வா. வ:—சங்கராசார்யரிட இவ்வாக்யத்தினுல் என்னவென்று ஸித்தமாகிறது?

சிதம்:—'த்வம்' பதத்தினுல் போத்யனுன அல்பஜ்ஞத்வாதி தர்மவிஶிஷ்டனுன ஜீவனுக்கு 'தத்' பதத்தினுல் போத்யமான ஸர்வஜ்ஞத்வாதி விஶிஷ்ட ப்ரஹ்மத்துடன் ஐக்யம் பொருந்தாதென்று ஸித்தமாகிறது.

வா. வ:—ஆனுல் இவ்வாக்யத்தை அபேதவிஷயத்தில் நீர் எப்படி உதகரித்தீர்?

சிதம்:—'த்வம்' பதத்திற்கு முக்ய வ்ருத்தியினுல் அறியவரும் அல்பஜ்ஞத்வாதி விஶிஷ்ட ஜீவசித்துடன் 'தத்' பதத்திற்கு முக்யவ்ருத்தியினுல் அறியவரும் ஸர்வஜ்ஞத்வாதி விஶிஷ்டப்ரஹ்ம சித்துக்கு ஐக்யம் பொருந்தாவிடினும், லக்ஷணுவினுல் (அமுக்ய வ்ருத்தியினுல்=செகண்டரி மீனிங்கினுல்) ஜீவசித்திலிருக்கும் அல்பஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களை விட்டு, 'த்வம்' பதத்தினுல் வெரும் 'சித்' என்கிற அர்த்தத்வைத மாத்திரமும், 'தத்' பதத்திற்கு அமுக்ய வ்ருத்தியினுல் ப்ரஹ்மசித்திலிருக்கும் ஸர்வஜ்ஞத்வ ஸர்வோத்தமத்வாதி விருத்த தர்மங்களைவிட்டு வெரும் 'சித்' என்கிற அர்த்தத்தை மாத்திரமும் எடுத்துக்கொண்ட பக்ஷத்தில் அந்த ஜீவசித்துக்கு ப்ரஹ்மசித்துடன் ஐக்யத்தை 'அஸி' என்கிற பதம் அறிவிக்கிறது. ஆகையால் இந்த 'தத்வமஸி' என்கிற வாக்யத்தை அபேத விஷயத்தில் ஆதாரமாக நாம் உதகரித்தோம்.

வா. வ:—'தத்வமஸி' என்கிற வாக்யம் முக்யவ்ருத்தியினுல் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் அபேதத்தை அறிவிக்கிறதில்லையல்லவா?

சிதம்:—முக்யவ்ருத்தியினுல் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் அபேதத்தை அறிவிக்கிறதில்லை,

வா. வ:—'எஜமான: ப்ரஸ்தர:' என்கிற வாக்யத்திற்கு ப்ரஸ் தரம் (தர்பமுஷ்டி) எஜமானனைப்போல் இருப்பது (எஜமானனிட கார்யங்களைச் செய்வது) என்று அர்த்தம் செய்வதைப்போல், த்வம் = நீ (ஜீவன்), தத் = அந்த பரமாத்மனைப்போல் இருக்கிறாய், அந்த பரமாத்மாதீனனாயிருக்கிறாய் என்கிற இது முதலிய அர்த் தங்களை ஏன் செய்யக்கூடாது?

ஸி. தம்:—முக்ய வ்ருத்தியை விட்டபிறகு அமுக்ய விருத்தி யினால் ஜீவன் பரமாத்மாதீனன் என்கிற இது முதலிய அர்த்தங் களைச் செய்யக்கூடுமாயினும், அந்த அர்த்தம் ஐக்யத்தை அறி விக்கும் 'ஏகமேவாத்விதீயம்' இது முதலிய வாக்யங்களுக்கு விருத்தமாகிறபடியால் அந்த வாக்யங்களை யனுசரித்து ஐக்யம் எப்படி ஸித்தமாகுமோ அப்படியே இந்த 'தத்வமஸி' வாக்யத் திற்கு அர்த்தம் செய்யவேண்டும்.

வா. வ:—'தத்' என்று பதம் பிரித்துக்கொண்டபோதிலும் —இவ்வாக்யம் இரண்டாவது வாக்யத்தின் ஆவஶ்யகமில்லாமல் ஐக்யத்தைப் போதிக்காததினால் இவ்வாக்யம் ஐக்ய விஷயத்தில் ஸ்வத: (தானே) எப்படி ஆதாரமாகும்?

ஸி. தம்:—(பதில் இல்லை)

வா. வ:—முக்ய வ்ருத்தியைவிட்டு அமுக்ய வ்ருத்தியினால் இரண்டாவது அர்த்தத்தை அங்கீகரிப்பதாயின் லக்ஷணையினால் 'தத்' என்கிற பதத்திற்கு 'அஸத்' என்கிற அர்த்தத்தை எடுத் துக்கொண்டு, த்வம் = நீ (ஜீவன்), தத் அஸத் = ஶஶவிஷாணமாய், அஸி = இருக்கிறாய் என்கிற அர்த்தத்தை ஏன் செய்யக்கூடாது?

ஸி. தம்:—ஶஶவிஷாணம் அஸத்தானது. ஜீவன் ஸத்ரூபன். இப்படி ஸத்வாஸத்வரூபவிருத்த தர்மங்களிருப்பதினால் ஶஶ விஷாணத்துடன் ஜீவனுக்கு ஐக்யம் பொருந்தாததினால் அப்படி அர்த்தம் செய்யக்கூடாது.

வா. வ:—ஜீவன் அல்பஜ்ஞத்வாதி குணங்களுடன்கூடினவன், ப்ரஹ்மம் ஸர்வஜ்ஞத்வாதி குணங்களுடன் கூடினது. இப்படி ஸர்வஜ்ஞத்வால்பஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களிருப்பதினால் ஜீவ

ப்ரஹ்மங்களுக்கு அபேதம் பொருந்தாததினால், ஜீவன் ப்ரஹ்மத்துடன் அபின்னன் (வேருபட்டவன்) என்று அர்த்தம் செய்வது எப்படிப் பொருந்தும்?

ஸிதம்:—நாங்கள் ஜீவப்ரஹ்மங்களிடத்திலிருக்கும் அல்பஜ்ஞத்வஸர்வஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களை விட்டுவிடுகிறேமாகையால் அவைகளின் ஐக்யம் பொருந்துகிறது.

வா. வ:—ஐயா! ஜீவனிடத்திலிருக்கும் ஸத்வரூபதர்மத்தையும் ஶஶவிஷாணத்திலிருக்கும் அஸத்வரூப தர்மத்தையும் விட்டு ஜீவனுக்கு ஶஶவிஷாணத்துடன் ஐக்யத்தைப் பொருந்துவிப்பதற்கு பாதகமென்ன?

ஸிதம்:—ஜீவன் ஶஶவிஷாணம் இவ்விரண்டினு மிருக்கும் ஸத்வாஸத்வரூபமான தர்மங்களை விடுவதற்கு எப்படி முடியும்? (முடியாது) ஆகையால் அவைகளின் ஐக்யம் பொருந்தாது.

வா. வ:—ஜீவப்ரஹ்மங்களிடமிருக்கும் அல்பஜ்ஞத்வ ஸர்வஜ்ஞத்வரூப விருத்ததர்மங்களை விடுவதற்கு எப்படி முடியும்? (முடியாது). ஆகையால் அவைகளின் ஐக்யம் எப்படிப் பொருந்தும்?

ஸிதம்:—அந்த ஸர்வஜ்ஞத்வால்பஜ்ஞத்வ தர்மங்கள் பொய்யானவைகள். ப்ரஹ்மத்தினிடத்திலும் ஜீவனிடத்திலும் ப்ரமத்தினால் காணப்படுகிறதே யொழிய நிஜமானவைகளல்ல. அவைகளை விடுவது என்ருல் அவைகள் இல்லை என்று அறிவதேயாகையால் விருத்த தர்மங்களில்லாததினால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் அபேதம் பொருந்துகிறது.

வா. வ:—ஜீவனிடமிருக்கும் ஸத்வமும், ஶஶவிஷாணத்திலிருக்கும் அஸத்வமும் மித்யையா அல்லது ஸத்யமா?

ஸிதம்:—ஜீவனிடமிருக்கும் ஸத்வமும், ஶஶவிஷாணத்திலிருக்கும் அஸத்வமும் பொய்யே. ஸத்ய மெப்படியாகும்?

வா. வ:—ஜீவப்ரஹ்மங்களிட மிருக்கும் அல்பஜ்ஞத்வ ஸர்வஜ்ஞத்வங்கள் பொய்யானதாகையால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் அபேதம் பொருந்துகிறதென்று எப்படிச் சொல்லுகிறீர்களோ அப்படியே ஸத்வாஸத்வ தர்மங்கள் பொய்யானதாகையால்

ஜீவனுக்கு ஶஶவிஷாணத்துடன் அபேதம் ஏன் பொருந்தக் கூடாது?

சிதம்:—(பதிலில்லை)

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! நாங்கள் ஆங்கில பாஷையில் பேசினால் உங்களுக்கு அர்த்தமாகுமா?

சிதம்:—இப்படிக் கோர்ட்டில் கேழ்ப்பது யுக்தமல்ல. நாங்கள் ஸம்ஸ்க்ருதத்தில் பேசினால் உங்களுக்கு அர்த்தமாகிறதா என்று கேட்டால் அதற்கு நீர் என்ன பதில் கொடுப்பீர்?

வா. வ:—ஸம்ஸ்க்ருத பாஷையில் பேசினால் நமக்கு அர்த்தஜ்ஞானம் ஆகிறதில்லை என்று நாங்கள் சொல்லுகிறோம், நீரும் அப்படியே சொல்லும்.

சிதம்:—ஆங்கிலபாஷையில் பேசினால் நமக்கு அர்த்த ஞானமாகமாட்டாது.

வா. வ:—ஞானமுண்டாகாததற்குக் காரணமென்ன?

சிதம்:—ஶப்தத்தினால் அர்த்தஜ்ஞானமுண்டாவதற்கு முதலிலேயே அந்த அர்த்தத்திற்கு அந்த ஶப்தத்துடன் ஸம்பந்தம் தெரிந்திருக்க வேண்டும். அந்த ஸம்பந்த ஞானமுண்டாவதற்கு அந்த பதார்த்தத்தின் ஞானம் இருக்கவேண்டும். ஆங்கில ஶப்தத்திற்கு அர்த்தத்துடன் ஸம்பந்தஞானம் நமக்கில்லாததினால் ஆங்கில ஶப்தத்திற்கு அர்த்தஞானமாகிறதில்லை.

வா. வ:—'தத்' பதத்தினால் ப்ரஹ்மத்தின் ஞானமுண்டாவதற்குப் பூர்வமே ப்ரஹ்மத்தின் ஞானமும், ப்ரஹ்மத்திற்கு 'தத்' பதத்துடன் ஸம்பந்த ஞானமும் வேண்டுமல்லவா?

சிதம்:—ஶப்தத்தினால் ப்ரஹ்மஞானமுண்டாவதற்கு முன்னமே ப்ரஹ்ம ஞானமும், ஶப்தத்துடன் ப்ரஹ்மத்திற்கு ஸம்பந்தஞானமும் வேண்டும்.

வா. வ:—'தத்' என்கிற பதத்தினால் ப்ரஹ்மத்தின் ஞானமுண்டாவதற்கு முன்னமே ப்ரஹ்மம் எந்த ப்ரமாணத்தினால் அறியப்பட்டிருக்கிறது (ப்ரஹ்ம ஞானம் முன் எதினால் உண்டாயிருக்கிறது.)?

ஸித்தம்:—நாம் என்ன சொல்லுவது? ப்ரஹ்ம மென்னமோ ப்ரத்யக்ஷத்திஞலும் (இந்த்ரியங்களிஞலும்) அனுமானத்திஞலும் அறியப்படாததாகையால் ஶப்தத்திஞலேயே அறியப்பட வேண்டும்.

வா. வ:—அந்த ஶப்தத்திஞல் அறியப்படுவதற்கும் முன்னமே ப்ரஹ்மஞானம் வேண்டுமல்லவா?

ஸித்தம்:—முன்னமே ப்ரஹ்மஞானம் வேண்டும்.

வா. வ:—இப்படியே அனவஸ்தையுண்டாய் ப்ரஹ்மத்தின் ஞானமே உண்டாகாதல்லவா?

ஸித்தம்:—(பதிலில்லை.)

கோர்ட்:—கங்காதர ஶாஸ்த்ரிகளே! அவரிட கேழ்விக்குப் பதிலென்ன?

பி. வா:—ஶப்தத்திஞல் ப்ரஹ்மஜ்ஞான முண்டாவதற்கு ப்ரஹ்மத்திற்கு ஶப்தத்துடன் ஸம்பந்தஞானம் ஆவஶ்யகமில்லை. ஶப்தத்தைக்கேட்ட மாத்ரத்திஞலேயே ப்ரஹ்மத்தின் ஞானமுண்டாகிறது.

வா. வ:—இவ்விஷயத்தில் ஆதாரமென்ன?

பி. வா:—* ஶப்தத்திற்கு அர்த்தத்துடன் ஸம்பந்தம் தெரிந்திராவிடினும், தூங்கிக்கொண்டிருக்கும் மனிதனுக்கு ஶப்தத்திஞல் எப்படி ஞானமுண்டாகிறதோ, அப்படியே வைதிகஶப்தத்திற்கு ப்ரஹ்மத்துடன் ஸம்பந்தம் அறிந்திராவிடினும் ப்ரஹ்மத்தின் ஞானமுண்டாகிறதென்று ஸுரேஶ்வராசார்யர் சொல்லியிருக்கிருரென்று மதுஸூதன ஸரஸ்வதிகள் அத்வைதஸித்தி க்ரந்தத்தில் சொல்லியிருப்பதே ஆதாரமாகிறது.

* வ்ருத்திமந்தரேணுபி ஸுப்தோத்தாபக வாக்யஸ்யேவ வேதாந்த வாக்யஸ்ய நிர்விஶேஷ ப்ராமாண்யஸ்ய வார்திக க்ருத்பிருப பாதிதத் வாச்ச। ததாஹி— "அக்ருஹீத்வைவ ஸம்பந்தமபிதானுபிதேயயோ:। ஹித்வா நித்ராம் ப்ரபுத்யந்தே ஸுஷுப்தே போதிதா: பரை:। ஜாக்ரத்வன்ன ஹி ஸம்பந்தம் ஸுஷுப்தே வேத்தி கஶ்சன" (ஸுரேஶ்வர வார்திகம் 604) இத்யாதிஞ க்ரந்தேன விஞபி ஸம்பந்தம் வாக்யஸ்ய ப்ராமாண்யமுபபாதிதம்.

வா. வ:—வாதக்ரஸ்தமான பதார்த்தத்தை தீர்மானிக்கும் விஷயத்தில் இருவரும் ப்ரமாணமாக ஒப்புக்கொண்டிருக்கும் ஆதாரத்தைச் சொல்லவேண்டுமே யொழிய, எங்களிட ஆசார்யர் சொல்லியிருக்கிறார் என்று சொல்லுவது யுக்தமாகமாட்டாது. ஆகையால் இருவருக்கும் ஸம்மதமான ஆதாரமிருந்தால் சொல்லும்.

பி. வா:—(பதிலில்லை.)

வா. வ:—ஐயா! நீங்கள் தூங்குகையில் நாங்கள் பேசும் ஆங்கிலபாஷைக்கு உமக்கு அர்த்தஞானமாகிறதா?

பி. வா:—ஜாக்ரதவஸ்தையிலேயே (விழித்திருக்கும்போதே) ஆகாதிருக்க தூங்குகையில் எப்படி அர்த்தஞானமாகும்?

வா. வ:—ஏன் ஆகிறதில்லை?

பி. வா:—அர்த்தத்திற்கு ஶப்தத்துடன் சம்பந்தஞானம் இல்லாததினால் ஆங்கில பாஷைக்கு அர்த்தஞானமாகிறதில்லை.

வா. வ:—ஸுஷுப்த்யவஸ்தையில் (நித்ராகாலத்தில்) ஶப்தத்தினால் அர்த்தத்தின் போதம் (அறிவு) உண்டாவதற்கு ஸம்பந்தஞானம் அவஶ்யகமில்லை என்று உம்மிட ஸுரேஶ்வராசார்யரும், மதுஸூதனஸரஸ்வதிகளும் சொல்லியிருக்கிறார்களென்று நீரே சொல்லி, இப்பொழுது அர்த்தத்திற்கு ஶப்தத்துடன் ஸம்பந்தஞானம் வேண்டுமென்று நீரே சொல்லுவது பரஸ்பரவிருத்தமாகமாட்டாதோ?

பி. வா:—(பதிலில்லை.)

வா. வ:—ஐயா சிதம்பரஶாஸ்த்ரிகளே! தாங்கள் எத்தனை வருஷங்கள் அத்யயனம் செய்திருக்கிறீர்?

சிதம்:—நாம் இருபது வருஷங்கள் அத்யயனம் செய்திருக்கிறோம்.

வா. வ:—அத்தனை நாள் ஏன் அத்யயனம் செய்தீர்?

சிதம்:—வ்யுத்பத்தி உண்டாவதற்கு.

வா. வ:—வ்யுத்பத்தி என்றால் என்ன?

ஸி தம்:—ஶப்தத்திற்கு அர்த்தத்தின் ஸம்பந்தஞானம் (இந்த ஶப்தம் இந்த அர்த்தத்தை அறிவிப்பது என்கிற ஞானம்).

வா. வ:—ஸம்பந்தஞானரூபமான அந்த வ்யுத்பத்தி எதற்காக?

ஸி தம்:—ப்ரஹ்மத்தின் ஞானமுண்டாவதற்காக.

வா. வ:—ப்ரஹ்மத்தின் ஞானமுண்டாவதற்கு ஶப்தத்திற்குள்ள அர்த்தத்தின் ஸம்பந்தஞானம் ஆவஶ்யகமில்லை என்று தாங்களே மின் சொல்லி, இப்போது மறுபடியும் ஸம்பந்தஞானம் வேண்டுமென்று தாங்களே சொல்லுவது விருத்தமல்லவா?

ஸி தம்:—(பதிலில்லை)

## வாதியின் க்ராஸ்.

பி. வா. வ:—விஷ்ணுதாஸாசார்யரே! 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு அர்த்தமென்ன?

வாதி:—இவ்வாக்யத்திற்கு அநேக அர்த்தங்களுண்டு.

பி. வா. வ:-ப்ரக்ருதம் ஒரு அர்த்தத்தைச் சொல்லுமையா?

வாதி:—'ஸ ஆத்மா தத்வமஸி' என்கிற வாக்யத்தில்—ஸ:, ஆத்மா, அதத், த்வம், அஸி என்று பதங்களைப்பிரித்து, ஸ: = அந்த ஸன்னுமகனை பரமாத்மா, ஆத்மா = * ஜகத்கர்த்தாவாக இருக்கிறார், ஸ்வாமியாக இருக்கிறார். த்வம் = நீ (ஜீவன்) அதத் = அந்த ஸன்னுமகனை பரமாத்மாவைவிட பின்னன் (வேறானவன்) என்று அர்த்தம் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—'அதத்' என்று எப்படி பதவிபாகம் செய்கிறீர்?

வாதி:—ஐயா! எப்படி என்றாலென்ன? 'ஆத்மா அதத்' என்கிற இரண்டு பதங்களுக்கு ஸவர்ண தீர்க்க ஸந்தியாகையால் 'ஆத்மாதத்வமஸி' என்கிற வாக்யத்தில், ஆத்மா, அதத் என்று பதம்பிரிப்பதற்கு பாதகமென்ன?

---

* யச்சாப்னோதி யதாதத்தே யச்சாத்தி விஷயானிஹ| யச்சாஸ்ய ஸந்ததோபாவஸ் தஸ்மாதாத்மேதி பண்யதே" என்கிற சங்கராசார்யரால் உதகரிக்கப்பட்டிருக்கும் பாரத ஶ்லோகத்தில் 'ஆத்மா' என்கிற பதத்திற்கு ஜகத்கர்த்தா என்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது.

பி. வா. வ:—'அதத்' என்றும் 'தத்' என்றும் பதவிபாகம் செய்வதற்கு வந்துகொண்டிருக்க 'அதத்' என்றே பதவிபாகம் செய்வதற்கு நீர் காரணம் சொல்லவேண்டுமல்லவா?

வாதி:—'தத்' என்று பதம் பிறிப்பதற்கும் ப்ரதிவாதிகளும் காரணம் சொல்லவேண்டுமல்லவா?

பி. வா. வ.:—அந்த விஷயம் நம் கக்ஷிதாரரை விசாரிக்கும் காலத்தில் சொல்லுவார். தற்காலம் 'அதத்' என்று பதத்தைப் பிரிப்பதற்கு நீர் காரணத்தைச்சொல்லும்?

வாதி:—அநேக காரணங்களிருக்கின்றன. அவைகளில் சில வற்றைச்சொல்லுகிறோம், கேளும்:—

(1) ஸர்வோத்தமத்வ, ஸர்வஜ்ஞத்வாதி குணங்களுடன் கூடின எந்த ஈப்ஸவரனுண்டோ அவனே 'தத்' பதத்திற்கு அர்த்த மாயிருப்பதினாலும்; அதற்கு விருத்தமான அல்பஜ்ஞத்வாதி குணங்களுடன் கூடின எந்த ஜீவனுண்டோ அவனே 'த்வம்' பதத்திற்கு அர்த்தமாயிருப்பதினாலும் 'தத்' 'த்வம்' என்று பதங் களைப்பிரித்துக்கொண்டு—த்வம் = அல்பஜ்ஞத்வாதி குணங்களு டன்கூடின நீ (ஜீவன்), தத் = ஸர்வஜ்ஞத்வாதி குணங்களுடன் கூடின ஈப்ஸவரன், அஸி = இருக்கிறாய் என்று சொல்லும் ஐக்யம் பொருந்தாததினால் 'தத்' என்று பதம் பிரிக்காமல் 'அதத்' என்று பதம் பிறித்து நீ அவனைவிட பின்னன் (வேறானவன்) என்று அர்த்தம் செய்வதே யுக்தமாகிறது.

(2) 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு பூர்வத்திலிருக்கும் (முன்னிருக்கும்) "ஸன்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதா யதனா: ஸத் ப்ரதிஷ்டா:" என்கிற வாக்யத்திலேயே எல்லா ஜீவர் களும் பரமாத்மாவால் பிறந்திருக்கிறார்கள், மற்றும் அவனையே ஆஸ்ரயித்திருக்கிறார்கள் என்று கார்யகாரண பாவத்தினாலும், ஆஸ்ரயாஸ்ரயிபாவத்தினாலும் ஜீவர்களுக்கு பரமாத்மாவுடன் பேதம் சொல்லியிருப்பதினாலும்—

(3) "ப்ராணபந்தனம் ஹி ஸோம்யமன:" என்கிற த்ருஷ் டாந்தவாக்கியத்தில் ஜீவனுக்கு ப்ராணநாமக பரமாத்மா ஆஸ்ரய

னென்று ஜீவனுக்கு பரமாத்மாவுடன் ஆஶ்ரயாஶ்ரயிபாவத்தினுல் பேதம் சொல்லியிருப்பதினுலும்—

(4) ஜீவனுக்கு பரமாத்மாவுடன் ஸம்பந்தத்தை அறிவிப்பதற்காகக் கொடுத்திருக்கும் 'ஸ யதா ஶகுனி:' இது முதலிய ஒன்பது த்ருஷ்டாந்தங்களும் பேதத்தையே அறிவித்துக்கொண்டிருப்பதினுலும் 'அதத்' என்றே பதம் பிறிக்கவேண்டும்.

பி. வா. வ:—ப்ரஹ்மத்தினிடத்திலும் ஜீவனிடத்திலும் இருக்கும் ஸர்வஜ்ஞத்வால்பஜ்ஞத்வாதி குணங்கள் ஆரோபிதமானவைகள் (ப்ரமத்தினுல் தோன்றுவது) பொய்யானவைகளாகையால் அந்த குணங்கள் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யம் சொல்லுவதற்கு பாதகமாகாததினுல் நீங்கள் சொல்லிய முதலாவது காரணம் எப்படி யுக்தமாகும்?

வாதி:—ப்ரதிவாதிகளின் ப்ரஹ்மத்தில் ஆரோபத்திற்கு (அத்யாஸத்திற்கு) காரணமான தர்மம் முதலியவைகளில்லாததினுல் ப்ரமம் பொருந்துவதில்லை. மற்றும் வேதத்தினுல் தெரியவரும் தர்மங்கள் பொய்யாயின் வேதம் அப்ரமாணமென்று சொல்லவேண்டியதாகும். ஆகையால் ஸர்வஜ்ஞத்வாதி தர்மங்கள் பொய்யல்ல. ஆகையால் நாம் சொல்லிய முதலாவது காரணம் யுக்தமேயாகும்.

கோர்ட்:—இவ்விசாரம் முதலிலேயே நடந்திருக்கிறபடியால் மறுபடியும் விசாரிக்கவேண்டியதில்லை.

பி. வா. வ:—ப்ரபோ! ஒவ்வொரு விஷயமும் முன் விசாரிக்கப்பட்டிருக்கும் விஷயத்திற்கு ஸம்பந்தப்பட்டே இருப்பதினுல் விசாரிக்கப்பட்டிருக்கும் விஷயங்கள் அடிக்கடி வந்துகொண்டிருக்கின்றன. ஆயினும் கோர்ட்டார் உத்திரவின்படிக்கு அவ்விசாரத்தை நிறுத்தி வேறுவிசாரம் செய்கிறேம்.

பி. வா. வ:—ஆசார்யரே! 'ஸன்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா:' 'ப்ராணபந்தனம் ஹி ஸோம்யமன:' இவ்விரண்டு வாக்யங்களினுல் அறிவிக்கப்பட்ட பேதம் பொய்யாயிருப்பதினுல் அந்த பேதம் 'அதத்' என்று பதம் பிரிப்பதற்குகாரணமெப்படியாகும்?

வாதி:—வேதத்தினல் அறிவிக்கப்பட்ட பேதம் பொய் யென்பதற்குக் காரணம் (பாதகஞானம்=பேதமில்லை என்று அறி விக்கும் ப்ரமாணம்) இல்லாததினாலும், அத்வைத மதத்தின் படிக்கு பேதத்தின் ஆரோபம் பொருந்தாததினாலும் அந்த பேதம் ஸத்யமென்றே ஒப்புக்கொள்ளவேண்டி யிருப்பதினால் அந்த பேதம் 'அதத்' என்று பதம் பிறிப்பதற்கு காரணமாகிறது.

பி. வா. வ:—'ஸ யதா ஶகுனி:' இது முதலிய ஒன்பது த்ருஷ் டாந்தங்களில் பேதம் சொல்லப்பட்டிருந்த மாத்ரத்தினால் அவை கள் 'அதத்' என்று பதம் பிரிப்பதற்கு எப்படிக் காரணமாகும்?

வாதி:—ஸந்நிக்ருமாயிருக்கும் தார்ஷ்டாந்திகத்தை நிர்ண யிப்பதற்காக த்ருஷ்டாந்தத்தைக் கொடுத்து, த்ருஷ்டாந்தத்தின் படிக்கு தார்ஷ்டாந்திகத்தின் அர்த்தத்தை நிர்ணயிக்கவேண் டியது. அப்படியிருக்க—த்ருஷ்டாந்தத்தில் பேதத்தைச்சொல்லி யிருந்தபோதிலும், தார்ஷ்டாந்திகத்தில் பேதத்தை ஒப்புக்கொள் ளாமல் 'அதத்' என்று பதவிபாகம் செய்வது ஆவஶ்யகமில்லை என்று சொல்லுவது ஶாஸ்திரங்களுக்கும், லோகானுபவத்திற் கும் விருத்தமாகிறது. ஆகையால் த்ருஷ்டாந்தங்களை யனுசரித்து 'அதத்' என்றே பதம் பிரிக்கவேண்டும். அப்படி பதம் பிரிப்ப தற்கு இன்னும் அநேக காரணங்களிருக்கின்றன. கோர்ட்டார் உத்திரவாயின் சிலவற்றைச் சொல்லுகிறோம்.

கோர்ட்:—இப்போது ஆவஶ்யகமில்லை. வேண்டும்போது விசாரிக்கிறோம். Mr. சர்மா! மேல் விசாரம் நடக்கட்டும்.

பி. வா. வ:—ஐயா! இதர ப்ரமாணங்களினால் அறியப்படாத அர்த்தத்தையே ப்ரமாணமென்று சொல்லிக்கொள்ளப்படும் வேதத்தினல் அறியப்படவேண்டியிருக்க—ப்ரத்யக்ஷத்தினால் ஸித் தமாயிருக்கும் ஜீவப்ரஹ்மங்களின் பேதத்தை இவ்வேதம் அறி விப்பதற்கு அவஸரமென்ன?

வாதி:—இதர ப்ரமாணங்களால் அறியவரும் வஸ்துவை வேதம் அறிவித்தபோதிலும் பாதகமில்லை. அத்வைதிகளும்— 'விமதா: ஆத்மான: பரமாத்மன: தத்வதோ ந பித்யந்தே, ஆத் மத்வாத் பரமாத்மவத்' இது முதலிய அனுமானங்களினால் அறிய

வரும் ஐக்யத்தை 'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் அறிவிக்கின்றன வென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். மற்றும்—"ப்ரஹ்ம ஜகத் ஸத்தாபேக்ஷயாதிக ஸத்தாகம், ஜகதத்யாஸாதிஷ்டானத்வாத் ஶுக்திவத்" வெள்ளி ப்ராதிபாஸிகமானதாகையால் (தோன்றுவதாகையால்) அதிற்கதிஷ்டானமான முத்துச்சிப்பி எப்படி வ்யாவஹாரிகமோ (வெள்ளியிலிருக்கும் ப்ராதிபாஸிகஸத்தாவைவிட அதிக ஸத்தாகமோ) அப்படியே வ்யாவஹாரிகமான ஜகத்துக்கு அதிஷ்டானமான ப்ரஹ்மம் ஜகத்தின் வ்யாவஹாரிக ஸத்தாவை விட அதிகமான ஸத்தாவுடையது (பாரமார்த்திக ஸத்யமானது) இது முதலிய அனுமானங்களினால் ஸித்தமாயிருக்கும் பாரமார்த்திக ஸத்யத்வத்தை எப்படி 'ஸத்யம் ஞானமனந்தம் ப்ரஹ்ம' என்கிற ஶ்ருதி அறிவிக்கிறதோ; மற்றும் 'தத்வமஸி' என்கிற வாக்யத்தினால் ஸித்தமாயிருக்கும் அபேதத்தை 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' முதலிய வாக்யங்கள் தெரிவிக்கின்றனவென்று எப்படி அத்வைதிகள் ஒப்புக்கொண்டிருக்கிறார்களோ அப்படியே ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் ஸித்தமான பேதத்தை வேதம் அறிவிக்கிறதென்பதற்கு யாதொரு பாதகமுமில்லை.

பி. வா. வ:—ஒரு ப்ரமாணத்தினால் ஸித்தமாயிருக்கும் பேதத்தை மற்றொரு ப்ரமாணத்தினால் சொல்லுவதற்குக் காரணமென்ன?

வாதி:—ஒரு ப்ரமாணத்தினால் அறியப்பட்டிருக்கும் வஸ்து மற்றொரு ப்ரமாணத்தினால் அறியப்பட்டால் அந்த வஸ்து நன்றாய் உறுதியாகிறது. ஆகையால் அடிக்கடி அநேக ப்ரமாணங்களினால் சொல்லவேண்டியது ஶாஸ்த்ரத்தின் வாடிக்கையாயிருக்கிறது. இதை ப்ரதிவாதிகளும் ஒப்புக்கொள்ளவேண்டியதுதான். வாஸ்தவமாக ஜீவனுக்கு ஈஶ்வரனுடன் பேதம் கேவல ப்ரத்யக்ஷத்தினால் ஸித்தமும் ஆகிறதில்லை.

பி. வா. வ:—'நாஹமீஶ்வர:' நான் ஈஶ்வரனல்ல என்கிற ப்ரத்யக்ஷம் எல்லோருக்கும் அனுபவஸித்தமாயிருக்க இந்த பேதத்தின் ப்ரத்யக்ஷமாகிறதில்லை என்று எப்படிச்சொல்லுகிறீர்?

வாதி:—கடம் ப்ரத்யக்ஷத்திஞல் காணப்படுகிறது. படம் ப்ரத்யக்ஷத்திஞல காணப்படுகிறது. அதிலிருக்கும் விருத்ததர்மங்களும் ப்ரத்யக்ஷத்திஞல் காணப்படுகிறது, ஆகையால் கடத்திற்கு படத்துடன் பேதம் ப்ரத்யக்ஷத்திஞல் ஸித்தமாகிறது. ஜீவனுக்கு தன்னிட ஸ்வரூபம் ப்ரத்யக்ஷத்திஞல் ஸித்தமாயிருப்பினும், ப்ரஹ்மம் ப்ரத்யக்ஷமல்லாததிஞலும், மற்றும் ப்ரஹ்மத்திலிருக்கும் ஸர்வஜ்ஞத்வாதி குணங்களின் ப்ரத்யக்ஷம் இல்லாததிஞலும் தன்னிடத்தில் ப்ரஹ்மத்துடன் பேதம் ப்ரத்யக்ஷத்திஞல் காணப்படுவதில்லை.

ஒரு மனிதனைக்குறித்து 'நீ இராஜனல்லவா' என்று கேழ்க்கவே அம்மனிதன் தனக்கு இன்ன குணங்களுடன் கூடினவன் இராஜனென்கிற அறிவில்லாததிஞல் ஆம் நான் இராஜனே என்று சொல்லுகிறுன். பிறகு அவனைக்குறித்து—'இராஜனெனின் அவனுக்கு ஒரு தேசம் ஸ்வாதீனமிருக்கவேண்டும் அந்த தேசத்தினுள்ள ஜனங்களெல்லோரும் அவனிட உத்திரவின்படிக்கு நடக்கவேண்டும். அவனிடம் கோடிக்கணக்கான பணமிருக்கவேண்டும். யானை, குதிரை, மோடார் சிப்பந்தி வகைராக்களிருக்கவேண்டும். அவைகள் உன்னிடத்திலிருக்கின்றனவா' என்று கேழ்க்கவே—அவைகள் தன்னிடத்திலில்லாததிஞல், மேற்கூறிய வஸ்துக்களையுடையவனே இராஜனென்கிற அறிவு அவனுக்குண்டாவதிஞல் அவனுக்கு 'நான் இராஜனல்ல' என்கிற ஞானமுண்டாகிறது. இராஜனிட லக்ஷணங்கள் (தர்மங்கள்) தெரியாமல் இராஜா வேறு நான் வேறு என்கிற பேதஞானமெப்படி உண்டாவதில்லையோ அப்படியே—ப்ரஹ்மம் ப்ரத்யக்ஷமல்லாததிஞலும், ப்ரஹ்மத்திடத்திலிருக்கும் ஸர்வஜ்ஞத்வாதி தர்மங்களின் ப்ரத்யக்ஷமில்லாததிஞலும் ஸர்வஜ்ஞத்வாதி குணங்களுடன் கூடிய ப்ரஹ்மம் வேறு, நான் வேறு என்கிற பேதஞானம் ப்ரத்யக்ஷத்திஞல் ஸித்தமாகிறதில்லை. ஆகையால் முதலில் பேதஞானம் இல்லாததிஞல் ப்ரஹ்மத்தினிடத்திலிருக்கும் ஸர்வஜ்ஞத்வம், ஜகத்காரணத்வம், ஸர்வாஶ்ரயத்வம் முதலிய தர்மங்களால் ஸித்தமாகும் ஜீவப்ரஹ்மங்களின் பேதத்தை அறிவிக்கும் வேதத்தின் அபூர்வத்வம் போக

தில்லை. (வேதம் இதர ப்ரமாணங்களினால் அறியவாராத பேதத்தையே அறிவிக்கிறது.)

பி. வா. வ:—உத்தாலகருக்கு ஶ்வேதகேதுவைக் குறித்து அவருக்கு ப்ராஹ்மத்துடன் பேதத்தைச் சொல்லுவதற்குக் காரணமென்ன?

வாதி:—'ஸஹ த்வாதஶவர்ஷ உபேத்ய சதுர்விம்ஶதிவர்ஷ: ஸர்வான் வேதானதீத்ய மஹாமனா அனூசானமானீ ஸ்தப்த யேயாய' (உத்தாலகர் தம்மிட குமாரன் பனிரண்டு வயஸ்ஸுள்ளவனையும் அவனுக்கு அத்யயனத்தில் ப்ரவ்ருத்தியுண்டாகாமலிருந்ததைப் பார்த்து அவன்பேரில் கோபத்துடன் அடாய் ஶ்வேதகேதுவே! உன்னைப்போன்ற ப்ரஹ்மபந்துவைப்போல் ஞானமில்லாத பாலகன் நம்மிட குலத்தில் யாரும் இருக்கவில்லை. இத்தகைய மூர்க்கனான நீ நம் குலத்தில் எப்படிப் பிறந்தாய் என்று பலவாறு தூஷித்து அந்த பனிரண்டு வயதுள்ள பையனை அத்யயனத்திற்காக குருகுலத்திற்கு அனுப்பினார்.) அந்த ஶ்வேதகேது பனிரண்டாவது வயதுமுதல் இருபத்திநாலாவது வயதுவரைக்கும் எல்லா வேதங்களையும் அத்யயனம் செய்து தன்னைப்போன்றவர்களொருவருமில்லை தானே ஸர்வஜ்ஞனென்று எண்ணி வணக்கமில்லாதவனாய் தந்தையிடத்திற்கு வரவே, உத்தாலகர் அவனிட கர்வத்தை பரிஹரிப்பதற்காக பரமாத்மா ஸர்வஜ்ஞன் ஸர்வகர்தா ஸர்வாஶ்ரயன்; நீ அல்பஜ்ஞன், அஸ்வதந்த்ரன் ஆகையால் ஸர்வோத்தமனான அந்த பரமாத்மனைவிட நீ அத்யந்த பின்னனானவன். (வேறானவன்) நான் ஸர்வோத்தமனென்று அறிந்து கொள்ள வேண்டாம் என்று ஜீவபரமாத்மாக்களின் பேதத்தை உபதேஶிக்கவேண்டியதாயிற்று.

பி. வா. வ:—'தத்' 'த்வம்' என்று பதம் பிரித்தால் ஐக்யம் ஸித்தமாகுமல்லவா?

வாதி:—'தத்' என்று பதம் பிறித்தபோதிலும் ஐக்யம் ஸித்தமாகிறதில்லை.

பி. வா. வ.—அது எப்படி?

வாதி:—'தத்' 'த்வம்' என்று பதம் பிரித்துக்கொண்டு, அவ்விரண்டும் ஒரே வேற்றுமையாயிருப்பதினால் 'தத்' என்கிற பதத்தினால் தெரியவரும் வஸ்துவுக்கு 'த்வம்' பதத்தினால் தெரியவரும் வஸ்துவுடன் ஐக்யம் போதமாகிறதென்று(அறியவருகிறதென்று) ப்ரதிவாதிகள் ஒப்புக்கொண்டிருப்பினும், 'த்வம்' பதத்திற்கு முக்ய வ்ருத்தியினால் தெரியவரும் ஜீவனுக்கு 'தத்' பதத்திற்கு முக்ய வ்ருத்தியினால் தெரியவரும் ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அவர்கள் ஒப்புக்கொள்ளுவதில்லை. (இவ்வாக்யத்திற்கு முக்ய வ்ருத்தியினால் ஐக்யம் பொருந்துகிறதென்று அத்வைதிகள் ஒப்புக்கொள்ளுவதில்லை) மற்றும் அமுக்ய வ்ருத்தியினால் 'த்வம்' பதத்திலுள்ள அல்பஜ்ஞத்வாதி தர்மங்களை விட்டு வெறும் 'சித்' என்கிற அர்த்தத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு, 'தத்' என்கிற பதத்திற்கும் அமுக்ய வ்ருத்தியினால் ஸர்வஜ்ஞத்வாதி தர்மங்களை விட்டு 'சித்' என்கிற அர்த்தத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு—இவ்வாக்யம் சித் சித்தாயிருக்கிறது என்று சித்துக்கு சித்துடன் ஐக்யத்தை போதிக்கிறதென்று ப்ரதிவாதிகள் (அத்வைதிகள்) சொல்லுகிறார்கள். அப்படி அவர்கள் சொல்லும் அர்த்தத்தில் அநேக தோஷங்கள் வருகின்றன. யாதெனின்:—

(1) சித் சித்தோ அல்லவோ என்கிற சங்கையே யாருக்குமுண்டாகாததினால் சித் சித்தென்று போதிக்கவேண்டிய ஆவச்யகமில்லை.

(2) உங்களிட அத்வைத மதத்தின்படிக்கு 'ப்ரமாணம்' என்கிற பதத்திற்கு அனதிகதார்த்த போதகம்=முதலில் அரியாமலிருந்த வஸ்துவை அரிவிப்பது என்கிற அர்த்தத்தை ஒப்புக்கொண்டிருப்பதினால்—கடம் கடமென்றும், படம் படமென்றும் எப்படி எல்லோருக்கும் தெரிந்தே இருக்கிறதோ அப்படியே சித் சித் என்று எல்லோருக்கும் தெரிந்திருக்கிறபடியால் இந்த 'தத்வமஸி' என்கிற வாக்யம் அதை அறிவிக்குமாயின் ப்ரமாணமாகமாட்டாது.

(3) ஜலம், அக்னி என்கிற பதத்தினால் அவைகளிலிருக்கும் ஔஷ்ணியமும், ஶைத்யமும் (உஷ்ண குணமும் சீத குணமும்) தெரியாமற்போயினும், ஜலத்திற்கும் அக்னிக்கும் ஐக்யம் எப்படி பொருந்துவதில்லையோ அப்படியே, 'தத்' பதத்தினால் அமுக்ய வ்ருத்தியினால் ப்ரஹ்மத்தினிடத்திலிருக்கும் ஸர்வஜ்ஞத்வாதி தர்மங்களும் 'த்வம்' பதத்தினால் ஜீவனிடத்திலிருக்கும் அல்பஜ்ஞத்வாதி தர்மங்களும் தெரியாவிடினும், வாஸ்தவமாக அவ்விரண்டிலும் விருத்த தர்மங்களிருப்பதினால் ஐக்யம் பொருந்துகிறதில்லை.

(4) ஶ்ருதிகளாலும் அனுபவத்தினாலும் ஸித்தமாயிருக்கும் ஸர்வஜ்ஞத்வால்பஜ்ஞத்வாதி தர்மங்கள் பொய் யென்பதற்குக் காரணமில்லாததினாலும், வேதாதிகளுக்கு அப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்ளவேண்டி வருவதினாலும் தர்மங்கள் பொய்யென்பதும் பொருந்துகிறதில்லை.

(5) லக்ஷணாவ்ருத்தியினால் பதார்த்த ஞானம் உண்டாவதற்கு அப்பதார்த்தத்தின் ஞானம் முன்னமே இருக்கவேண்டும் 'தத்' பதத்தினால் லக்ஷணாவ்ருத்தியினால் சித் பதார்த்தத்தின் ஞானமாவதற்கு சித்தின் ஞானம் முதலிலேயே உண்டாயிருக்கவேண்டும். அது இல்லாததினால் லக்ஷணாவ்ருத்தியினால் 'தத்' 'த்வம்' பதங்களினால் சித்தின் அறிவு (போதம்) உண்டாகிறதில்லை.

(6) 'ஶ்ருதி லக்ஷணா விஷயே ச ஶ்ருதிர் ந்யாய்யா ந லக்ஷணா' (ப்ர. ஸூ. ஶாங். பா 3-1-22; 4-2-1) இது முதலிய அநேக இடங்களில் சங்கராசார்யர் ஶ்ருதிக்கு முக்ய வ்ருத்தியினால் தோன்றும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமா? அல்லது லக்ஷணா வ்ருத்தியினால் தோன்றும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமா என்கிற ஸம்ஶயம் உண்டாயின்—முக்யவ்ருத்தியினால் தோன்றும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ளுவதே ந்யாயமானது, லக்ஷணாவ்ருத்தியினால் தோன்றும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ளுவது நியாயமல்ல என்று சொல்லியிருப்பதினால் 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு முக்யவ்ருத்தியினால் பேதத்தையும் பேதகதர்மங்களையும் போதிக்கும் அநேக அர்த்தங்கள் பொருந்திக்கொண்

டிருக்க லக்ஷணாவ்ருத்தியினால் அபேதரூபமான அர்த்தத்தை எடுத்துக்கொள்ளுவது யுக்தமல்ல.

(7) த்வம் = நீ, தத் = அந்த பரமாத்மாவின் அதீனனாய் அஸி = இருக்கிறாய் என்று ஒரு பதத்திற்கு லக்ஷணை ஒப்புக்கொள்ளுவதினாலேயே அர்த்தம் பொருந்திக்கொண்டிருக்க, 'தத்' 'த்வம்' என்கிற இரண்டு பதங்களுக்கும் லக்ஷணாவ்ருத்தியை (கௌணவ்ருத்தியை) ஒப்புக்கொள்ளுவது யுக்தமல்ல.

(8) முக்யவ்ருத்தியை விட்டபிறகு அந்த ஶ்ருதிக்கு ஸ்வத: ஸாமர்த்யமில்லாததினால் லக்ஷணாவினால் இதர ப்ரமாணங்களுக்கு அனுகூலமாயிருக்கும் வேறு அர்த்தத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிடின்—த்வம் = நீ, தத் = ஶஶவிஷாணம், அஸி = இருக்கிறாய் என்றும் அர்த்தம் செய்யலாம். ஆகையால் ஐக்யத்தை யறிவிக்கும் இரண்டாவது (வேறு) வாக்யத்தின் அபேக்ஷை (கோறிக்கை) இருப்பதினால், ஐக்யத்தை ஸ்வத: அறிவிக்காத இந்த ஶ்ருதியை அந்த இரண்டாவது வாக்யத்தின் விசாரம்நடந்து அதின் நிர்மானமாகிறவரைக்கும் அப்படியே அனுமத்தில் வைக்கவேண்டும் (Pending) இத்தகைய அனேக தோஷங்கள் வருகிறபடியால் லக்ஷணாவ்ருத்தியை ஒப்புக்கொண்டு சித் சித் என்று இவ்வளவே போதம் (அறிவு) இவ்வாக்யத்தினால் உண்டாகிறதென்று சொல்லுவது யுக்தமாகிறதில்லை.

பி. வா. வ:—தத், த்வம், அஸி என்று பதம் பிரிக்கப்படுமாயின் முக்ய வ்ருத்தியினால் நீங்கள் என்ன அர்த்தம் சொல்லுவீர்?

வாதி:—'தத்' என்று பதம் பிரிக்கப்படுமாயின்—ப்ராதிபதிகத்திற்கு முன்னிருக்கும் ஏழு வேற்றுமைகளின் ஸ்தானத்தில் 'ஸு' என்கிற ஆதேஶம் வந்து ஏழு விபக்தி (வேற்றுமை) களுடன் கூடின ஶப்தங்களின் ரூபம் முதல் வேற்றுமை ஶப்தத்தைப்போலவே ஆகின்றதென்று 'ஸுபாம்ஸுலுக்' என்கிற பாணிநி ஸூத்ரம் சொல்லுவதினால் 'தத்' என்கிற ஶப்தம் முதல் வேற்றுமையைப்போல் காணப்படினும் 'தத்' என்கிற ஶப்தத்திற்கு தஸ்மின், தஸ்ய, தஸ்மாத், தஸ்மை இது முதலிய வேற்றுமை ஶப்தங்களுக்கு எந்த அர்த்தமுண்டோ அந்த அர்த்

தங்களிருப்பதினுல்—த்வம் = நீ, தத் = தஸ்மின் = அந்த பரமாத்ம னிடத்தில் (ஆச்ரயித்து) இருக்கிருய், தஸ்ய = அந்தபரமாத்மனிட ஸம்பந்தியாய் (நியம்யனுய்) இருக்கிருய், தஸ்மாத் = அந்த பர மாத்மனுல் பிறந்திருக்கிருய் என்கிற இது முதலிய அர்த்தங் களை நாங்கள் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—இப்படி அர்த்தம் செய்வதற்கு உமக்கு என்ன ஆதாரமிருக்கிறது?

வாதி:—அநேக ச்ருதிகளிருக்கின்றன.

பி. வா. வ:—அவைகளைச்சொல்லும்.

வா. எ. 18.

## ஸன்மூலா: என்கிற ச்ருதி விசாரணை.

வாதி:—'ஸன்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாய தனு: ஸத்ப்ரதிஷ்டா:' என்கிற 'தத்வமஸி' வாக்யத்தின் முன் னிருக்கும் வாக்யம்—எல்லா ப்ரஜைகளும் பரமாத்மாவால் பிறந் திருக்கிருர்கள், பரமாத்மாவின் ஆச்ரயத்திலுல் இருக்கிருர்கள் என்று சொல்லுகிறது. 'ஸர்வஸ்ய வசீ, ஸர்வஸ்யேசான:, ஸர்வ பூதாதிவாஸ:' இது முதலிய வாக்யங்களும்—ஜீவன் பரமாத்மா வின் அதீனன், பரமாத்மா ஜீவனுக்கு ஸ்வாமி என்று சொல்லு கின்றன. ஆகையால் அவ்வாக்யங்கள் 'தத்' என்கிற பதம் ஏழு வேற்றுமைகளில் ஏதாவது ஒரு வேற்றுமையுடன் கூடியிருப்ப தாய் வைத்துக்கொண்டு இவ்வாக்யம் மேற்சொல்லப்பட்ட அர்த் தத்தைச் சொல்லுகிறதென்று சொல்லுவதற்கு ஆதாரமாகிறது.

'ஐததாத்ம்ய மிதம் ஸர்வம்' என்கிற பூர்வ வாக்யத்தில்— இதம் ஸர்வம் = சேதனுசேதனுத்மகமான இவ்வெல்லா ஜகத்தும், ஐததாத்ம்யம் = எதற்கு பரமாத்மா ஸ்வாமியாகவும், கர்த்தா வாகவும் இருக்கிருரோ அத்தகையது. (இவ்வெல்லா ஜகத்தும் ஸன்னுமகனுன பரமாத்மனுல் பிறந்தது, மற்றும் நியம்யமானது) என்று சொல்லப்பட்டிருப்பதினுல் அந்த சேதனுசேதன ஜகத் தைப்போலவே, த்வம் = நீயும், தத் = ஐததாத்ம்யம் = அந்த ஸன்னுமகனுன பரமாத்மனுல் பிறந்து அவனுல் நியமிக்கப்படுபவ னுயிருக்கிருய் என்கிற இது முதலிய அர்த்தங்களும் ஆகின்றன.

பி. வா. வ:—'ஸ ஆத்மா' என்கிற பூர்வ வாக்யத்தினால் ப்ர ஸக்தனான ஆத்மாவை 'தத்' என்கிற பதத்தினால் எடுத்துக் கொள்ளுவதை விட்டு தூரத்திலிருக்கும் 'ஐததாத்ம்யம்' என்கிற பதத்தினால் ப்ரஸக்தமாயிருக்கும் அர்த்தத்தை ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்?

வாதி:—'ஆத்மா' என்கிற பதம் புல்லிங்கமா யிருப்பதினால் ஆத்மாவையே எடுத்துக்கொள்ள வேண்டுமென்று ஶ்ருதிக்கு அபிப்ராயமிருந்தால் 'த்வம் ஸோஸி' என்று 'ஸ:' என்கிற புல் லிங்க ஶப்தத்தை ப்ரயோகித்திருக்கவேண்டுமே யொழிய 'தத்' என்று நபும்ஸகலிங்க பத ப்ரயோகம் செய்வது ஸ்வாரஸ்யமல்ல. 'ஐததாத்ம்யம்' என்கிற பதம் நபும்ஸகலிங்கமாயிருப்பதினால் கொஞ்சம் தூரத்திலிருந்தபோதிலும் 'தத்' பதத்தினால் அதின் விசாரம் செய்வதே ஸ்வரஸமாகிறது.

பி. வா. வ:—க்ராஸ் இல்லை.

(ஹியரிங்)

## ப்ரதிவாதியின் ரீ க்ராஸ்.

வா. வ:—முக்யவ்ருத்தியை விட்டு லக்ஷணாவ்ருத்தியினால் அர்த்தம் செய்வதாயின் 'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு ஆசார்யர் சொல்லியவாறு—த்வம் = நீ, தத் = அந்த பரமாத்மனிட அதீனன், மற்றும் அந்த பரமாத்மனை ஆஶ்ரயித்திருப்பவன் அல் லது அந்த பரமாத்மனால் பிறந்தவன் என்கிற இது முதலிய அர்த்தங்களை ஏன் செய்யக்கூடாது?

பி. வா:—'தத்வமஸி' என்கிற வாக்யத்திற்கு ஜீவப்ரஹ்மாக் களுக்கு அபேதத்தை அறிவிக்கும் விஷயத்தில் தாத்பர்யமிருப்ப தினால் பேதபரமான அர்த்தத்தைச் செய்யக்கூடாது.

வா. வ.—'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு அபேதத் தைத் தெரிவிக்கும் விஷயத்தில் தாத்பர்ய முண்டென்பதற்கு ஆதாரமென்ன?

பி. வா. எ. 3.

## உததமாதேஸமென்கிற ஶ்ருதி விசாரணை.

பி. வா:—'உததமாதேஸமப்ராக்ஷ: யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி அமதம் மதம் அவிஜ்ஞாதம் விஜ்ஞாதமிதி' (சாந். 6-1-3) என்னும் வாக்யம் ஆதாரமாயிருக்கிறது. பரமாத்மாவின் ஞானத்தினால் ஸகல பதார்த்தங்களின் ஞானமுண்டாகிறதென்று இந்த வாக்யம் சொல்லுகிறது. ஜீவ ஜடாத்மகமான ப்ரபஞ்சம் பரமாத்மாவுடன் வேறாகயிருந்தால், பரமாத்மாவின் ஞானத்தினால் ஜீவ ஜடாத்மகப்ரபஞ்ச ஞானமெப்படியாகும், (ஆகாது) ஆகையால் ஜீவஜடாத்மகஜகத்து பரமாத்மாவினால் அபின்னம் என்று இந்த வாக்யத்தினால் ஸித்தமாகிறபடியால், இந்த பூர்வவாக்யத்தினால் 'தத்வமஸி' வாக்யத்திற்கு ஐக்யத்தைத் தெரிவிக்கும் விஷயத்தில் தாத்பர்யமுண்டென்று ஸித்தமாகிறது.

வா. வ:—தாங்கள் 'உததமாதேஸமப்ராக்ஷ: யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்னும் வாக்யத்திற்கு ஸங்கரபாஷ்யம் ஆனந்தகிரி வ்யாக்யானம் இவைகளைப் பார்த்திருக்கிறீரா?

பி. வா:—பார்த்திருக்கிறோம்.

வா. வ:—* இந்த ஸங்கரபாஷ்ய வாக்யத்திற்கும் ஆனந்தகிரி வாக்யத்திற்கும் அபிப்ராயமென்ன?

பி. வா:—எந்த பரமாத்மாவை ஶ்ரவணம் செய்வதினால், ஶ்ரவணம் செய்யாமலிருக்கும் எல்லாபதார்த்தங்களும் 'ஶ்ருதம்' ஶ்ரவணம் செய்யப்பட்டதாய் ஆகிறதோ, மற்றும் அவனை மன

* தமாதேஸம் விஶிஷ்டி யேனாதேஸேன ஶ்ருதேனாஶ்ருதமப்யன்யத் ஶ்ருதம் பவத்யமதம் மதமதர்கிதம் தர்கிதம் பவத்யவிஞாதம் விஞாதமநிஶ்சிதம் நிஶ்சிதம் பவதீதி।

ஸர்வாநபி வேதானதீத்ய ஸர்வம் சான்யத் வேத்யமதிகம்யாப்யக்ருதார்த்த ஏவ பவதி யாவதாத்ம தத்வம் ந ஜாநாதீத்யாக்யாயிகாதோவகம்யதே (சாம்-பாஷ்யம் 6-1-3)

இமித்யதீத்ய ஸர்வவேதமதிகத ததர்த்தஞ்ச புத்ரம் ஆத்மவித்யாமதிக்ருத்ய பிதா ப்ருச்சதி தஸ்ய வேதாத்யயநேனைவ க்ருதார்த்தத்வாதித்யாஸங்க்யாஹ ஸர்வானபீதி. (ஆனந்தகிரி)

னம் செய்ததினால், தெரிந்துக்கொள்வதினால் மனனம் செய்யாம லிருக்கும் (விசாரம் செய்யாமலிருக்கும்) தெரிந்துக்கொள்ளாம லிருக்கும், எல்லாம் (ஜகத்து) மதம் தர்கிதம் (விசாரவிஷயம்) விஜ்ஞாதமாகிறதோ (என்றால்-மனனம் செய்யப்பட்டதாகிறதோ, விசாரம் செய்யப்பட்டதாகிறதோ, தெரியப்பட்டதாகிறதோ) அந்த பரமாத்மாவை நீ தெரிந்துக் கொண்டாயா? என்று தந்தை குமாரனைக்கேட்டான். அதற்குமேல் ஸகல வேதங்களையும் அத்ய யனம் செய்து, அந்த வேதங்களுக்கர்த்தம் தெரிந்துகொண் டிருக்கும் தன் குமாரனை 'நீ உன் குருவை பரமாத்மாவின் விஷயகமான ப்ரஶ்னத்தைச் செய்து அந்த பரமாத்மாவைத் தெரிந்துகொண்டாயா? என்று ஏன் கேட்டான்? ஸர்வவேதங் களை யத்யயனம் செய்வது, அவைகளின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்வது இவைகளே மனிதனுக்கு அவஶ்யமாகச் செய்ய வேண்டிய கர்மங்கள். அப்படிப்பட்ட கர்மங்களெல்லாவற்றையும் குமாரன் செய்திருக்க இப்படிப்பட்ட கேழ்விகளுக் கவகாஶமே தென்று ஶங்கித்துக்கொண்டு ஶங்கராசார்யார் ஸமாதானம்சொல் லுகிறார். எல்லா வேதங்களையும் அத்யயனம் செய்திருந்தாலும் பரமாத்மாவைவிட பின்னமான, ஸகல பதார்த்தங்களைத் தெரிந் துக்கொண்டிருந்தாலும், எதுவரையில் பரமாத்மாவைத் தெரி கிறதில்லையோ அதுவரையில் அவன் அக்ருதார்த்தனே (தனக்கு எந்த கர்த்தவ்ய கர்மமுண்டோ அதை செய்ததாக ஆவதில்லை). எப் படி க்ராஜுயேட் அல்லது வக்கீலாவதே புருஷார்த்தமல்லவோ, அதானபிறகு பணத்தைச் சம்பாதிப்பதெப்படி புருஷார்த்தமோ அப்படியே வேதாத்யயனம் செய்வதும், இன்னும் பரமாத்மனை விட பின்னமான ஸகல ஜகத்தின் ஞானம் ஸம்பாதிப்பதுமே புருஷார்த்தமல்ல (முக்ய கர்த்தவ்ய கர்மமல்ல) பரமாத்மாவின் ஞானம் ஸம்பாதிப்பதே முக்யகார்யம். வேதாத்யயனம் செய்வது, இன்னும் பரமாத்மாவைவிட பின்னமான பதார்த்தங்களைத் தெரிந்துகொள்வது, இவைகள் பரமாத்மாவின் ஞானத்திற்கு உப யுக்தமானதென்று அபிப்ராயம்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த ஶங்கராசார்யரின் வாக்யானு ஸாரமாக 'யேனாஶ்ருதம்' என்னும் வாக்யம் ப்ரஹ்மஞானத்தால்

ஸகல ஜகத்தின் ஞானமுண்டாகிறதென்று சொல்லுகிறதென்று ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—ஸித்தமாவதில்லை.

வா. வ:—பின்னென்னவென்று ஸித்தமாகிறது?

பி. வா:—இந்த ஶங்கராசார்யரின் பாஷ்யானுஸாரமாய் ஸகல வேதாத்யயனம் செய்தாலும் மற்றும் பரமாத்மாவைவிட பின்னமான ஜகத்தின் ஞானத்தை ஸம்பாதித்தாலும், பரமாத்மாவைத் தெரிந்துகொள்ளாமற் போனால் அவைகளெல்லாம் வ்யர்த்தமே யாகிறது. ஆகையால் பரமாத்மாவை அவஶ்யமாக தெரியவேண்டுமென்று ஸித்தமாகிறது.

வா. வ:—பரமாத்மாவின் ஞானம் வேறு, ஜகத்தின் ஞானம் வேறு என்று ஸித்தமாகிறதா? அல்லது இரண்டுமொன்றே என்று ஸித்தமாகிறதா?

பி. வா:—பரமாத்மாவின் ஞானம் வேறு, ஜகத்தின் ஞானம் வேறென்று ஸித்தமாகிறது.

வா. வ:—இந்த வாக்யம் பரமாத்மாவுடன் ஜீவனுக்கு பேதத்தைத்தெரிவிக்கிறதா? இல்லையா?

பி. வா:—இந்த வாக்யம் ஞாத்ருஜ்ஞேய பாவத்தால் பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் பேதத்தைத் தெரிவிக்கிறது.

வா. வ:—'யேனாஶ்ருதம்' என்னும் வாக்யம் ப்ரஹ்மாவுடன் ஜீவனுக்கு பேதத்தைத் தெரிவித்துக்கொண்டிருக்க அதை அபேத விஷயத்தில் எப்படி உதஹரித்தீர்?

பி. வா:—இந்த உபநிஷத்தின் வ்யாக்யானத்தில் ஶங்கராசார்யார் இப்படிச் சொல்லியிருந்தாலும் 2-1-14வது ஸூத்ர பாஷ்யத்தில் "ஏகவிஜ்ஞானேன ஸர்வவிஜ்ஞானம் ப்ரதிஜ்ஞாய த்ருஷ்டாந்தா பேக்ஷாயாமிதமுச்யதே! யதா ஸௌம்யைகேனேத்யாதி" "நசான் யதா ஏகவிஜ்ஞானேன ஸர்வஞானமுபபத்யதே" இந்த இரண்டு வாக்யங்களால் ப்ரஹ்மாவின் ஞானத்தால் சேதனாசேதனாத்மக ஜகத்தின் ஞானமாகிறது. ஆகையால் ஜீவனுக்கு ப்ரஹ்மாவுடன் ஐக்யத்தை ஒத்துக்கொள்ளவேண்டுமென்று ஶங்கராசார்யர்

சொல்லியிருக்கிறபடியால் நாங்கள் அபேத விஷயத்தில் இவ்வாக்யத்தை உதஹரித்திருக்கிறோம்.

வா. வ:—அந்த ஸூத்ர பாஷ்யத்தில் இந்த வாக்யத்திற்கென்ன அர்த்தம் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—'யேநாஶ்ருதம் ஶ்ருதம்' என்னும் வாக்யத்திற்கு அவ்விடம் அர்த்தம் செய்யவில்லை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ஶங்கராசார்யார் 'யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்னும் உபநிஷத் வாக்யத்திற்கு வ்யாக்யானம் செய்யும்போது ப்ரஹ்மஞானம் ஜகத்தின் ஞானத்திற்கு பலனாயிருக்கிறது. ப்ரஹ்மஞானம் வேறு, ஜகத்தின் ஞானம் வேறு; ஜகத்து ப்ரஹ்மாவைவிட பின்னமென்று சொல்லி, ஸூத்ரவ்யாக்யானத்தில் ப்ரஹ்மஞானமே ஜகத்தின் ஞானம், ப்ரஹ்மஞானம் ஜகத்தின் ஞானத்தைவிட வேறல்ல. ஆகையால் ஜகத்தும் ப்ரஹ்மமும் ஒன்றே என்று சொல்வது பாஸ்பர விருத்தமாகிறதல்லவா?

பி. வா:—(பதில் இல்லை.)

வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! ஶங்கராசார்யார் உபநிஷத்பாஷ்யத்திலொரு அர்த்தத்தை எழுதி (ஜீவனுக்கும் ப்ரஹ்மாவுக்கும் பேதமுண்டென்று அர்த்தம் செய்து) ஸூத்ர பாஷ்யத்தில் அந்த வாக்யத்திற்கு எதுவும் அர்த்தம் செய்யாமல், அந்த வாக்யத்தினால் ஜீவனுக்கும் ப்ரஹ்மாவுக்கும் அபேதம் ஸித்தமாகிறதென்று சொல்லுகிறார். இப்படிச் சொல்வது ஜனங்களை மோசம் செய்வதற்காகவே இருக்கவேண்டும், அல்லது ப்ரமத்தினாலிருக்க வேண்டும். நிஜ ஸ்திதியை கோர்ட்டாரே நிர்ணயிக்கவேண்டும்.

வா வ:—ஶாஸ்த்ரிகளே! இது எந்த க்ரந்தம் பாரும்?

பி. வா:—இது நம்மிட ஶங்கராசார்யரின் கீதா பாஷ்யம்.

வா. வ:—* இவ்வாக்யங்களின் அர்த்தமென்ன?

---

* 'க்ருத க்ருத்யஶ்ச பாரத' க்ருதம் க்ருத்யம் கர்தவ்யம் யேன ஸ க்ருத க்ருத்யோ விஶிஷ்டஜன்ம ப்ராஸூதேன ப்ராஹ்மணேன் யத் கர்தவ்யம் தத் ஸர்வம் பகவத்தத்வே விதிதே க்ருதம் பவேதித்யர்த்த:। ந சான்யதா

பி. வா:—பகவானிட தத்வஞானத்தை ஸம்பாதித்துக் கொண்டால்தான் உத்தமகுலத்தில் பிறந்த ப்ராஹ்மணன் தன்னுல் கர்த்தவ்யமான கார்யங்களேதுண்டோ அவைகளைச் செய்தவனுகிருன். பகவானிட தத்வஞானத்தைச் சம்பாதித்துக் கொள்ளாவிடில் எவ்வளவு வேதார்த்த ஞானத்தைச் சம்பாதித்துக்கொண்டபோதிலும், செய்யவேண்டிய இதர கர்மங்களைச் செய்தபோதிலும் தன்னுல் செய்யப்படவேண்டிய கார்யங்களைச் செய்தவனுகிறதில்லை. நீ என்னுல் என்னை (பரமாத்மாவை) அறிந்திருப்பதினுல் நீ க்ருதார்த்தனுயிருக்கிருய் என்று அர்த்தம்.

வா. வ:—இவைகளெந்த க்ரந்தங்கள்? நீர் பார்த்திருக்கிறீரா?

பி. வா:—பார்த்திருக்கிருேம். இவைகள் எங்கள் ஶங்கராசார்யரின் கேனேபநிஷத் பாஷ்யம், மற்றும் அதற்கு வ்யாக்யானமான ஆனந்தகிரீயம்.

வா. வ:—* இந்த பாஷ்ய வாக்யத்திற்கும், அதின் ஆனந்தகிரீய வ்யாக்யானத்திற்கும் தாத்பர்யமென்ன?

பி. வா:—முத்துச்சிப்பி முதலானவைகளின் தத்வங்களைத் தெரிந்திருப்பவனுக்கு அந்தச்சிப்பி முதலானவைகளில் ஆரோபிதமான ரஜதாதிகளின் ஞானமுண்டாவதில்லை. ஶுக்த்யாதி தத்வங்கள் எவரால் தெரியப்படவில்லையோ அவர்களுக்கே அந்த ஶுக்த்யாதிகளில் (முத்துச்சிப்பி முதலியவைகளில்) ஆரோபித

---

கர்தவ்யம் பரிஸமாப்யதே கஸ்யசிதித்யபிப்ராய:। ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே' இதி சோக்தம்। 'ஏதத் ஹி ஜன்மஸாமக்ர்யம் ப்ராஹ்மணஸ்ய விசேஷத:। ப்ராப்யைதத் க்ருத க்ருதயோ ஹி த்விஜோ பவதி நான்யதா' இதி ச மானவம் வசனம்। யத ஏதத் பரமார்த்த தத்வம் மத்த: ஶ்ருத்வானஸி தத: க்ருதார்த்த: த்வம் பாரதேதி (கீதா ஶாங். பாஷ்யம் 15-20)

* அத வா ஹேத்வர்த்த உத்தரார்த்தோவிஜ்ஞாதமித்யாதி (கே. ஶாம். பா. 2-11-3)

அத வா ஹேத்வர்த்த இதி லோகே ஶுக்த்யாதி தத்வம் விஜானதாம் யதோத்யஸ்தம் ரூப்யாத்யவிஜ்ஞாதம் பவதி அஜானதாமேவ து அத்யஸ்தம் விஜ்ஞாதம் பவதீதி ப்ரஸித்தம்। ததா ப்ரஹ்மணி ஜ்ஞேயத்வஸ்யாத்யஸ்தத்வாதேவ தத்வவிதோ ந ஞாதம் ப்ரஹ்ம பஶ்யந்தீத்யர்த்த: (ஆனந்தகிரீயம்)

மான ரஜதாதிகளின் ஞானமுண்டாகிறது. இப்படி லோகத்தில் ப்ரஸித்தம். ஆகையால் ப்ரஹ்மாவில் ஞேயத்வம் ஆரோபிதமானதினால் தத்வஞானிகள் (ப்ரஹ்மஞானிகள்) ப்ரஹ்மத்தினிடத்தில் ஆரோபிதமான ஞேயத்வத்தைக் காண்கிறதில்லை என்று அபிப்ராயம்.

வா. வ:—இந்த பாஷ்யத்தினால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—அதிஷ்டானத்தின் ஞானமில்லாதபோதே அதிலாரோபித (அத்யஸ்த)மாயிருக்கும் வஸ்துவின் ஞானமுண்டாகிறது. அதிஷ்டான ஞானமுண்டானபோது அதிலாரோபிதமான வஸ்துவின் ஞானமுண்டாவதில்லை. ப்ரஹ்மத்தில் ஞேயத்வாதி தர்மங்கள் ஆரோபிதமானதினால் ப்ரஹ்மத்தைத் தெரிந்துகொண்ட ஞானிகள் அந்த தர்மங்களைப் பார்ப்பதில்லை என்று ஸித்தமாகிறது.

வா. வ:—உங்கள் மதத்தின்படிக்கு ஜகத்து ப்ரஹ்மத்தில் ஆரோபிதமா அல்லது ஸத்யமா?

பி. வா:—எங்கள் மதத்தில் ஜகத்து ப்ரஹ்மத்தில் கல்பிதம் (ஆரோபிதம்) பொய்யே.

வா. வ:—ஆரோபிதமான ஜகத்து அதிஷ்டானமான ப்ரஹ்மாவின் ஞானத்தால் உங்கள் மதப்ரகாரம் தெரிகிறதா அல்லது தெரிவதில்லையா?

பி. வா:—ப்ரஹ்மஞானிக்கு எல்லாம் ஆத்மாவாகவே இருப்பதால் வேறு ஜகத்தெவ்விடமிருக்கிறது? ஜகத்தில்லை. அந்த ஜகத்தின் ஞானமாவது எப்படி யுண்டாகும்? (ஜகத்தில்லை, ஞாதா இல்லை, ஞானமுமில்லை.)

வா. வ:—ப்ரஹ்மஞானத்தினால் ஜகத்தின் ஞானமுண்டாகிறதென்று 'யேனுஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்னும் ஶ்ருதி சொல்லுகிறதென்று உங்கள் ஆசார்யர் சொல்லியது எப்படி ஸரியாகும்?

பி. வா:—(பதில் இல்லை.)

வா. வ:—(To the Court) தர்மப்ரபோ! 'யேனுஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்னும் ஶ்ருதி ஶங்கராசார்யரின் பாஷ்ய ப்ரகாரம்

ப்ரஹ்மத்துடன் சேதநாசேதநாத்மக ப்ரபஞ்சத்தின் பேதத்தையே தெரிவிக்கிறதென்று ஸித்தமாகிறது. அத்வைதமதப்ரகாரம் ஜகத்து ப்ரஹ்மத்தில் கல்பிதமானதினால் ப்ரஹ்மஞானத்தால் ஜகத்து தெரிகிறதென்று சொல்வது பொருந்துகிறதில்லை. ஆகையால் ப்ரதிவாதி ஐக்யவிஷயத்தில் இந்த ஶ்ருதியை யுதஹரிப்பது அயுக்தமென்பதைக் கோர்ட்டார் நோட் செய்ய வேண்டும்.

பி. வா. வ;—(To the Court) தர்மராஜப்ரபோ! 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு ஐக்யம் சொல்வதில் தாத்பர்யமுண்டென்னும் விஷயத்தில் இன்னுமனேகாதாரங்களிருக்கின்றன. அவைகளின் விசாரம் நடக்கவேண்டும்.

கோர்ட்:—Mr. Sarma! ஆதாரமிருந்தால் சொல்லலாம்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த 'தத்வமஸி' வாக்யத்திற்கு ஐக்ய விஷயத்தில் தாத்பர்யமுண்டென்பதற்கு ஆதாரமாயிருக்கும் ஶ்ருதியைச் சொல்லும்?

பி. வா:—'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு பூர்வத்திலிருக்கும் 'ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத்.........ஏகமேவாத்விதீயம்' என்னும் வாக்யம் பரப்ரஹ்மாவை விட வேறான வஸ்துவில்லையென்று சொல்லிக்கொண்டே, ப்ரஹ்மத்தோடு ஜீவனுக்கு ஐக்யத்தைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறபடியால் அந்த வாக்யம் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு அபேத விஷயத்தில் தாத்பர்யமுண்டென்னும் விஷயத்தில் ஆதாரமாகிறது.

பி. வா. எ. 4.

## ஸதேவ......ஏகமேவாத்விதீயம் என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—இந்த வாக்யத்திலிருக்கும் எந்த பதத்தினால் பரப்ரஹ்மத்தைவிட வேறே வஸ்து இல்லை என்று ஸித்தமாகிறது?

பி. வா:—'ஏகம்' என்னும் பதத்தினால் ஸித்தமாகிறது.

வா. வ:—'ஏகம்' என்னும் பதத்திற்கர்த்தமென்ன?

பி. வா:—த்விதீய வஸ்து (இரண்டாவது வஸ்து) ரஹித மென்று அர்த்தம்.

வா. வ:—அந்த அர்த்தத்தினுல் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—ப்ரஹ்மத்தைவிட வேறு வஸ்து இல்லை என்று ஸித்தமாகிறது.

வா. வ:—'ஏகம்' என்னும் பதத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிருர்?

பி. வா:—'ஏகமேவேதி ஸ்வகார்யபதிதம் அன்யத் நாஸ்தீதி ஏகமேவேத்யுச்யதே' தன்னுல் (பரமாத்மாவினுல்) உத்பன்னமான பதார்த்தங்களில் பின்னமான எந்த பதார்த்தமுமில்லை. ஆகையால் அந்த ப்ரஹ்மம் ஏகம் (ஒன்றே) என்று சொல்லப்படுகிறபடியால் அந்த பதத்திற்கு கார்யமான வஸ்துவினுல் ரஹிதமென்று அர்த்தம் செய்திருக்கிருர்.

வா. வ:—'ஏகம்' என்னும் பதத்திற்கு ஶங்கராசார்யார் செய்த அர்த்தத்தின்படிக்கு இரண்டாவது வஸ்துவில்லை என்று ஸித்தமாகிறதா இல்லையா?

பி. வா:—கார்ய வஸ்துவில்லையென்று சொன்னதினுல், நித்ய பதார்த்தமிருப்பதற்கு பாதகமில்லாததினுல் ப்ரஹ்மாவைவிட வேறு வஸ்துவே இல்லையென்று ஸித்தமாவதில்லை.

வா. வ:—'ஜீவ ஈஶோ விஶுத்தா சித் பேதஸ்தஸ்யா ஸ்தயோர்த்வயோ:। அவித்யா தச்சிதோர்யோக: ஷடஸ்மாகமனுதய:' என்னும் ஶ்லோகம் யாருடையது?

பி. வா:—எங்கள் ப்ராசீனுசார்யருடையது.

வா. வ:—இதற்கர்த்தமென்ன?

பி. வா:—(1) ஜீவன் (2) ஈஶ்வரன் (3) சித் (4) சித்தோடு ஜீவேஶ்வரரின் பேதம், மற்றும் ஜீவேஶ்வரர்களில் பேதம் (5) அவித்யா (6) அவித்யாவுக்கு சித்தோடு ஸம்பந்த மென்று இப்படி ஆறுபதார்த்தங்கள் அனுதியா யிருக்கின்றன என்று அர்த்தம்.

வா. வ:—'தம ஆஸீத்' என்னும் ஶ்ருதிக்கர்த்தமென்ன?

பி. வா:-ப்ரளயகாலத்தில் அவித்யாயிருந்ததென்று அர்த்தம்.

வா. வ:—'ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யநாதீ உபாவபி' (கீதா. 13-17) என்னும் ஶ்லோகத்திற்கர்த்தமென்ன?

பி. வா:—ப்ரக்ருதி, புருஷன் இவ்விரண்டு பதார்த்தங்களும் அநாதியானதென்று அர்த்தம்.

வா. வ:—'நைவேஹ கிஞ்சநாக்ர ஆஸீத், ம்ருத்யுநைவேத மாவ்ருத மாஸீத்' (ப்ரு. 1-2-1) என்னும் ஶ்ருதிக்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—ம்ருத்யுநமக பரமாத்மாவே ப்ரளயகாலத்திலிருந்தார். அவராலிந்த ஸகல பதார்த்தங்களும் ஆவ்ருதமாயிருந்தன (மூடப்பட்டிருந்தன) என்று அர்த்தம்.

வா. வ:—இதென்ன க்ரந்தம் பாருங்கள்?

பி. வா:—ப்ருஹதாரண்யகோபநிஷத்தின் பாஷ்யம்.

வா. வ:—*இந்த வாக்யத்திற்கு தாத்பர்யம் சொல்லுங்கள்?

பி. வா:—பூர்வத்திலெந்த பதார்த்தமும் காணப்படாமலிருந்ததினால் எந்த பதார்த்தமும் இருக்கவில்லை என்னும் ஶங்கை யுண்டாகவே—'ம்ருத்யுநைவேதமாவ்ருதமாஸீத்' என்னும் ஶ்ருதி—ம்ருத்யுவினால் இவ்வெல்லாம் ஆச்சாதிதமாயிருந்ததென்று (மூடப்பட்டிருந்ததென்று) சொல்லுகிறது. எந்த பதார்த்தமில்லாதிருந்தால் ஏது எதைஆச்சாதிக்கும்? ஶ்ருதியாவது இவ்வெல்லாம் ம்ருத்யுவினால் ஆவ்ருதமாயிருந்ததென்று சொல்லுகிறது. வந்த்யா புத்ரன் ககனகுஸுமங்களால் ஆவ்ருதனாயிருக்கிறானென்று யாரும் சொல்வதில்லை. ஆகையால் மூடப்பட்ட பதார்த்தம் ஆவரகனான ம்ருத்யுநமக பரமாத்மா இவ்விரண்டுமிருந்ததென்று இந்த ஶ்ருதியால் ஸித்தமாகிறதென்று பாஷ்யத்தின் தாத்பர்யம்.

---

*யதி வா கிஞ்சிதபி நாஸீத்யேனாவ்ரியதே யச்சாவ்ரியதே ததாநாவக்ஷ்யன் ம்ருத்யுநைவேத மாவ்ருதமிதி। ந ஹி பவதி ககனகுஸுமச்சன்னோ வந்த்யா புத்ர இதி ப்ரவீதி ச ம்ருத்யுநைவேத மாவ்ருத மாஸீதிதி। தஸ்மாத்யேனாவ்ருதம் காரணேன யச்சாவ்ருதம் கார்யம் ப்ராகுத்பத்தே: ததுபயமாஸீத் ஶ்ருதே: ப்ராமாண்யாத் அனுமேயத்வாச்ச।

வா. வ:—'நைவேஹகிஞ்சனாக்ர ஆஸீத், ம்ருத்யுனா வேத மாவ்ருதமாஸீத்' (ப்ரு. 1-2-1) என்னும் வாக்யத்தாலும், இந்த வாக்யத்தின் ஶங்கராசார்யரின் பாஷ்யத்தினாலும், ப்ரஹ்மாதிரிக்த மான இரண்டாவது வஸ்து ப்ரளயகாலத்தில் இருந்ததென்று ஸித்தமாகிறதல்லவா?

பி. வா:—ப்ரளயகாலத்தில் ப்ரஹ்மாதிரிக்தமான இரண்டாம் வஸ்து இருந்ததென்று ஸித்தமாகிறது.

வா. வ:—'ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத் நான்யத் கிஞ்சன மிஷத்' (ஐ.) என்னும் ஶ்ருதிக்கு தாத்பர்யமென்ன?

பி. வா:—ப்ரளயகாலத்தில் பரமாத்மா ஒருவனே இருந்தான். வ்யாபாரத்துடன் கூடிய இரண்டாவது வஸ்து இருக்கவில்லை என்று தாத்பர்யம்.

வா. வ:—இந்த வாக்யத்தினால் ப்ரளயகாலத்தில் அவித்யாதி இரண்டாவது பதார்த்தங்கள் இருந்தனவென்று ஸித்தமாகிறதா, இல்லையா?

பி. வா:—அவித்யா இருந்ததேயாயினும், அதில் ஸ்வாதந்த்ர் யம், வ்யாபாரம் இவைகள் இருக்கவில்லை என்று ஸித்தமாகிறது.

வா. வ:—'ஜீவ ஈஶோ' என்னும் உங்கள் (அத்வைதிகளின்) வாக்யத்தினாலும், 'தம ஆஸீத்' இத்யாதி ஶ்ருதிகளினாலும் கீதா முதலான வாக்யங்களாலும் ப்ரளயகாலத்தில் பரப்ரஹ்மம் தவிர இரண்டாவது வஸ்து இருந்ததென்று ஸித்தமாகிறதா இல்லையா?

பி. வா:—பரப்ரஹ்மம் அல்லாமல் இரண்டாம் வஸ்து இருந்ததென்று ஸித்தமாகிறது.

வா. வ:—ஶங்கராசார்யரின் பாஷ்யத்தின்படிக்கு 'ஏகம்' என்னும் பதம் ப்ரஹ்மாதிரிக்தமான இரண்டாம் வஸ்து இல்லை என்று தெரிவிப்பதில்லையல்லவா?

பி. வா:—ஶங்கராசார்யர் 'ஏகம்' என்னும் பதத்திற்குச் செய்த பாஷ்யானுஸாரமாய் 'ஏகம்' என்னும் பதம் இரண்டாம் வஸ்துவே இல்லை என்று தெரிவிப்பதில்லை.

வா. வ:—'ஏக:' என்னும் பதத்திற்கு எவ்வளவு அர்த்தங்களிருக்கின்றன?

பி. வா:—'ஏகே முக்யான்ய கேவலா:' என்னும் கோசாதிகளை அனுஸரித்தும், வித்யாரண்யரால் செய்யப்பட்ட 'ஏக: ஸுபர்ண:' என்னும் வேதபாஷ்யத்தில் 'ஏக: அஸஹாய:' என்று அர்த்தம் செய்திருப்பதை யனுஸரித்தும், முக்யம், அன்யம், (பின்னம்) கேவலம், அஸஹாயம், எண் இவை முதலான அனேக அர்த்தங்களிருக்கின்றன.

வா. வ:—அனேக ஶ்ருதிகள், கீதாவாக்யங்கள், அத்வைதிகளின் வாக்யங்கள், இவைகளால் ப்ரஹ்மம் அல்லாமல் இரண்டாவது வஸ்துக்கள் இருக்கின்றனவென்று ஸித்தமானதினாலும், ஶங்கராசார்யராலும் 'ஏகம்' என்னும் பதத்திற்கு இரண்டாம் வஸ்துவே இல்லை என்னும் அர்த்தம் செய்யப்படாமலிருப்பதினாலும் 'ஏகமேவாத்விதீயம்' என்னும் வாக்யத்திலிருக்கும் 'ஏகம்' என்னும் பதத்திற்கு 'முக்யம்' இது முதலான அர்த்தங்களை எடுத்துக்கொண்டு பரமாத்மா, ஏகம் = முக்யன் அல்லது அன்யன் = சேதனாசேதன பின்னன், அல்லது அஸஹாயன் (அவனுக்கு யாருடைய ஸஹாயத்தின் அபேக்ஷயுமில்லை) இவை முதலான இதர ப்ரமாணங்களுக்கு அவிருத்தமான, மற்றும் இதர ப்ரமாணங்களுக்கு அனுகூலமாயிருக்கும் அனேக அர்த்தங்கள் பொருந்திக்கொண்டிருக்க — அவைகளை விட்டு உங்கள் (அத்வைதிகளின்) மதத்திற்கும், வேதம், கீதா இத்யாதி ப்ரமாணங்களுக்கும் விருத்தமாயிருக்கும் இரண்டாம் பதார்த்தமே இல்லை என்னும் அர்த்தம் செய்வது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—'ஏகம்' என்னும் பதத்தால் த்விதீய வஸ்துவே இல்லை என்று ஸித்தமாகாவிடினும் 'அத்விதீயம்' என்னும் பதத்தால் த்விதீய வஸ்து இல்லை என்று ஸித்தமாகிறது.

வா. வ:—வேதம், கீதா, இத்யாதிகளினால் த்விதீய வஸ்து உண்டென்று ஸித்தமாகும்போது—'அத்விதீயம்' என்னும் பதத்திற்கு த்விதீய வஸ்து இல்லையென்று அர்த்தம் செய்தால் அந்த ப்ரமாணங்களுக்கு விரோதம் வருகிறதில்லையா?

பி. வா:—அவைகளெல்லாம் (வேத, கீதா இத்யாதி ப்ரமாணங்களெல்லாம்) வ்யாவஹாரிகமான இரண்டாம் வஸ்து உண்டென்று தெரிவிக்கின்றன. 'அத்விதீயம்' என்னும் பதம் பாரமார்த்திகமான த்விதீய வஸ்து இல்லையென்று தெரிவிக்கிறது. ஆகையால் விரோதம் வருவதில்லை.

கோர்ட்:—அடிக்கடி "ப்ரமாணங்கள் வ்யாவஹாரிக வஸ்துவைத் தெரிவிக்கின்றன. நாங்கள் (அத்வைதிகள்) பாரமார்த்திக வஸ்துவை நிஷேதிக்கிறோம்" என்று நீங்கள் (அத்வைதிகள்) சொல்வதும்; "ப்ரமாணங்கள் பாரமார்த்திக வஸ்துவையே தெரிவிக்கின்றன, வ்யாவஹாரிக வஸ்துவைத்தெரிவிக்கிறதில்லை என்று நீங்களே (அத்வைதிகளே) ஒத்துக்கொண்டிருக்கிறீர்கள்" என்று அவர் (த்வைதிகள்) சொல்வதும் வேண்டாம். வேறு விசாரம் நடக்கட்டும்.

வா. வ:—'அத்விதீயம்' என்னும் பதத்திற்கு ஶங்கராசார்யர் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—'அத்விதீயமிதி ம்ருத்வ்யதிரேகேண ம்ருதோ யதான்யத் கடாத்யாகாரேண பரிணமயித்ரு குலாலாதி நிமித்த காரணம் த்ருஷ்டம் ததா ஸத்வ்யதிரேகேண ஸத: ஸஹகாரி காரணம் த்விதீயம் வஸ்த்வந்தரம் ப்ராப்தம் ப்ரதிஷித்யதே அத்விதீயமிதி" என்னும் வாக்யத்தால் மண் கடரூபமாவதற்கு எப்படி குயவன் முதலான ஸஹாயவஸ்து வேண்டுமோ, அப்படியே ஸன்னமக பரமாத்மாவுக்கு ஸஹாயபூதமான இரண்டாம் வஸ்துவின் அபேக்ஷை இல்லாததினால் பரமாத்மா 'அத்விதீயன்' என்று சொல்லிக்கொள்ளப்படுகிறான் (அத்விதீயம் = ஸஹாயரஹிதம்) என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—'அத்விதீயம்' என்னும் பதத்திற்கு ஶங்கராசார்யரின் வ்யாக்யானத்தை யனுஸரித்து ப்ரஹ்மம் அல்லாது இரண்டாம் வஸ்துவே இல்லை என்று ஸித்தமாகிறதா? அல்லது பரமாத்மாவுக்கு ஸஹாயபூதமான இரண்டாம் வஸ்து இல்லை என்று ஸித்தமாகிறதா?

பி. வா:—ஸஹாயபூதமான இரண்டாம் வஸ்து இல்லை என்று ஸித்தமாகிறது. இரண்டாம் வஸ்துவேயில்லை என்று ஸித்தமாகிறதில்லை.

வா. வ:—'அஸித்விதீயோனுஸஸார பாண்டவ:' என்னும் வாக்யத்திலிருக்கும் 'த்விதீய:' என்னும் பதத்திற்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—'அஸித்விதீய:' அஸிஸஹாய: கட்கமே (கத்தியே) யாருக்கு ஸஹாயமாயிருக்கிறதோ, என்றிப்படி 'த்விதீய'மென்னும் பதத்திற்கு ஸஹாயமென்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—'அஸ்ய கோர்த்விதீயோன்வேஷ்டவ்ய:' என்னும் வாக்யத்திலிருக்கும் 'த்விதீய'மென்னும் பதத்திற்கு ஶங்கரபாஷ்யம் மற்றும் மஹாபாஷ்யம், இவைகளில் என்ன அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது?

பி. வா:—'த்விதீய'மென்னும் பதத்தால் ஸ்வஸஜாதீயமான இரண்டாம் பதார்த்தத்தை எடுத்துக்கொள்ள வேண்மென்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது.

வா. வ:—அத்வைதஸித்தி க்ரந்தத்தில் அத்விதீயமென்னும் பதத்திற்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—'அத்விதீயம் ஸ்வஸஜாதீய த்விதீயவஸ்து ரஹிதம்' என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—'த்விதீயம்' என்னும் பதத்திற்கு 'ஸஜாதீய த்விதீயம்' அல்லது 'ஸஹாயம்' என்று அர்த்தமிருப்பதினால் உங்கள் மதப்ரவர்த்தகரான ஶங்கராசார்யரால் செய்யப்பட்டிருப்பதைப் போல் 'ப்ரஹ்ம அத்விதீயம்' ஸஹாய ரஹிதமென்று அர்த்தம் செய்வதும், அல்லது 'ந த்வத் ஸமோஸ்த்யப்யதிக: குதோன்ய:' என்னும் 11-43-வது, கீதா வாக்யானுஸாரமாயும், 'யஸ்மாத் பரம் நா பரமஸ்தி கிஞ்சித்' என்னும் 3-7-வது, ஶ்வேதாஶ்வதர வாக்யானுஸாரமாயும், அத்விதீயம்=ஸஜாதீய த்விதீய வஸ்து ரஹிதம் (பரமாத்மாவுக்கு ஸரியானவர் யாரும் இல்லை) என்று

இதர ப்ரமாணங்களுக்கு அவிருத்தமாகவும், மற்றும் அனுகூல மாயும் இருக்கும் அர்த்தங்களைச் செய்வது யுக்தமாயிருக்க, உங்கள் மத ப்ரவர்த்தகரான ஆசார்யரால் செய்யப்பட்ட அர்த் தத்தை விட்டு 'அத்விதீயம்' என்னும் பதத்திற்கு ப்ரஹ்மத்தைத் தவிர இரண்டாம் வஸ்து இல்லை என்று ப்ரமாண விருத்தமான அர்த்தம் செய்வது யுக்தமல்ல. ஆகையால் 'ஏகமேவாத்விதீயம்' என்னும் ஶ்ருதி தானே ஐக்யத்தைத் தெரிவிக்காமலிருக்க, 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு ஐக்யத்தைச் சொல்வதில் தாத்பர்யமுண்டென்னும் விஷயத்திற்கு ஆதாரமெப்படியாகும்?

பி. வா:—(பதில் இல்லை.)

பி. வா. எ. 2.

## அநேந ஜீவேன என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு ஐக்யத்தைத் தெரிவிப்பதில் தாத்பர்ய முண்டென்னும் விஷயத்தில் வேறு ஆதாரமுண்டோ?

பி. வா:—இருக்கிறது. 'ஸேயம் தேவதைக்ஷத ஹந்தா ஹமிமாஸ்திஸ்ரோ தேவதா:। அநேந ஜீவேனாத்மனானுப்ர விஶ்ய நாமரூபே வ்யாகரவாணீதி'॥ (சாம். 6.-3-2.) என்னும் வாக்யம் பரப்ரஹ்மமே ஜீவரூபத்தால் தேஜஸ்ஸு, முதலானவை களில் ப்ரவேஶித்திருக்கிறதென்று தெரிவிக்கிறபடியால், எல்லா வற்றிலும் இருக்கும் ஜீவர்கள் ப்ரஹ்மமே என்று ஸித்தமாகிறது. இந்த உபக்ரம வாக்யத்தை யனுஸரித்து 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கும் ஐக்யவிஷயத்தில் தாத்பர்யமுண்டென்று ஒத்துக் கொள்ளவேண்டும்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'தேவதா' என்னும் ஶப்தத்திற்கு அர்த்தம் சேதனமா அல்லது அசேதனமா?

பி. வா:—தேவதா ஶப்தத்திற்கு அர்த்தம் சேதனமே.

வா. வ:—சேதனமென்று அர்த்தம் சொல்வதற்கு என்ன ஆதாரம்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யார் "அபி ச கௌஷீதகினஃ ப்ராணஸம்வாதே கரணமாத்ர ஶங்காவிநிவர்தயே அதிஷ்டாத்ரு சேதன பரிக்ரஹாய தேவதா ஶப்தேன விஶிம்ஷந்தி ஏதாஃ வை தேவதாஃ அஹம் ஶ்ரேயஸே விவதமானாஃ" இதி। 'தா வா ஏதாஃ ஸர்வா தேவதாஃ ப்ராணே நிஃஶ்ரேயஸம் விதித்வா இதிச' (ப்ர. ஸூ. ஶா. பா. 2-1-5.) என்னும் வாக்யங்களால் தேவதாஶப்தம் சேதனவாசகம் (தேவதா ஶப்தத்திற்கு அர்த்தம் சேதனமே) என்று சொல்லி இருக்கிறபடியால் தேவதா ஶப்தம் சேதன வாசகமென்று சொல்லவேண்டும்.

வா. வ:—'யஃ ப்ருதிவ்யாம் திஷ்டன்.........யோப்ஸு திஷ்டன்.........யோ விஜ்ஞானே திஷ்டன்' இத்யாதி வாக்யங்கள் அந்தர்யாமியான பரமாத்மா அந்தந்த ப்ருதிவ்யாத்யபிமானி சேதனங்களிலிருக்கிறானென்று சொல்லுகிறதா? அல்லது ப்ருதிவ்யாதி ஜடங்களிலிருக்கிறானென்று சொல்லுகிறதா?

பி. வா:—சேதனங்களிலிருக்கிறான், அசேதனங்களிலுமிருக்கிறானென்று சொல்லுகின்றன.

வா. வ:—'ஶாரீரஶ்சோபயேபி ஹி பேதேனைனமதீயதே' (ப்ர. ஸூ. 1-2-20.) என்னும் ஸூத்ரபாஷ்யத்தில் ஶங்கராசார்யர் தேவதாதி சேதனங்களிலிருக்கும் பரமாத்மாவுடன் தேவதைகளுக்கு பேதமுண்டென்று சொல்லியிருக்கிறாரா? அபேத முண்டென்று சொல்லியிருக்கிறாரா?

பி. வா:—பேதமேயிருக்கிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—'இமாஸ்திஸ்ரோ தேவதாஃ அனேன ஜீவேனாத்மனா அனுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணீ' என்னும் வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லுங்கள்?

பி. வா:—இமாஸ்திஸ்ரோ தேவதாஃ = இந்த தேஜோபிமானி, ஜலாபிமானி, ப்ருதிவ்யபிமானி, (அன்னாபிமானி) தேவதைகளில் (சேதனங்களில்) நான் ஜீவரூபத்தால் ப்ரவேஶித்து, ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டியைச் செய்வேனென்று ஸன்மாத்ரனான தேவதா விசாரம் செய்ததென்று அர்த்தம்,

வா. வ:—அபிமானி தேவதைகளில் (சேதனங்களில்) பரமாத்மா ப்ரவேஶித்திருக்கிறாரல்லவா?

பி. வா:—அபிமானிதேவதைகளில் பரமாத்மா ப்ரவேஶித்திருக்கிறார்.

வா. வ:—எப்படி ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளிலிருக்கும் பரமாத்மாவுடன் அவருக்கு பேதமுண்டோ, அப்படியே அந்த ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளில (சேதனங்களில்) பரமாத்மா ப்ரவேஶித்தாரென்று சொல்லியிருக்கிறபடியால், அபிமானிதேவதைகள் வேறு மற்றும் ப்ரவேஶம் செய்யும் பரமாத்மா வேறென்று அர்த்தமாகி பரமாத்மாவுடன் அபிமானி தேவதைகளுக்கு பேதம் ஸித்தமாகிறதல்லவா?

பி. வா:—அபிமானி தேவதைகளுக்கு பரமாத்மாவுடன் பேதம் ஸித்தமாகிறது. பரந்து (ஆயினும்)—

வா. வ:—பரந்து என்று என்ன சொல்லுகிறீர்? பேதம் ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—அந்த வாக்யத்தினால் பேதமுண்டென்று ஸித்தமாயினும், அந்த பேதம் மித்யா (பொய்) வ்யாவஹாரிகமேயல்லாது பாரமார்த்திகமல்ல.

வா. வ:—வேதத்தால் தெரிவிக்கப்படும் பேதம் மித்யா (பொய்) எப்படியாகும்?

பி. வா:—கேவலம் அந்த பேதம் மாத்ரமே மித்யை ஏன்? அந்த அபிமானி தேவதைகளில் பரமாத்மாவின் ப்ரவேஶமும் பொய். ப்ருதிவ்யாதி பதார்த்தங்களும் பொய், எங்கள் பேச்சும் பொய்யே, வேதாதி ப்ரமாணங்களும் பொய் (மித்யா), இந்த விசாரமும் பொய், கோர்ட் பொய், பரீக்ஷா பொய், நீங்களும் பொய், நானும் பொய், ஸர்வ ப்ரபஞ்சமும் பொய். எங்கள் மதத்தின்படிக்கு நான் சொல்லுகிறேன். ந்யாயாதிபதிகளான ப்ரபுக்களின் மனதிற்குத் தோன்றுகிறபடிக்குத் தீர்மானம் செய்ய வேண்டும்.

கோர்ட்:—மிஸ்டர் மாதவதாஸ்! முன் விசாரம் நடக்கட்டும்.

வா. வ:—'தத்தேவானுப்ராவிஶத்' (தை) 'அனுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணீதி...' 'அனுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரோத்' (சாம்) 'ஸ ஏஷ இஹ ப்ரவிஷ்ட:' (ப்ரு. 1-4-7) 'புர: புருஷ ஆவிஶத்' (ப்ரு. 2—5-18) இத்யாத்யனேக வேதவாக்யங்களால் சொல்லப்பட்ட ப்ரவேஶம் பொய்யென்பதற்கு ஆதாரமென்ன?

பி. வா:—'கல்பிதம் ப்ரவேஶம் ப்ரதிபாதித முபஸம்ஹாதி தஸ்மாதிதி । தஸ்மாத் கார்யஸ்தஸ்யோபலப்யத்வமேவ ப்ரவேஶ இத்யுபசர்யதே' (ப்ரு. பா) 'தத்ப்ரவேஶ: ப்ரகல்ப்யதே' (தை. பா.) இத்யாதி வாக்யங்களால் எங்கள் ஆசார்யரே ப்ரவேஶம் கல்பிதம் (பொய்) என்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—ப்ரவேஶம் பொய்யானால் பரமாத்மா ஜீவரூபத்தால் தேவதைகளில் ப்ரவேஶிக்கவில்லையல்லவா?

பி. வா:—பரமாத்மா இந்த தேவதைகளில் ப்ரவேஶிக்கவில்லை.

வா. வ:—பரமாத்மா ப்ரவேஶம் செய்யாமலிருந்தால் இந்த ஶ்ருதி பரமாத்மா ப்ரவேஶித்தானென்று எப்படிச் சொல்லுகிறது?

பி. வா:—ப்ரவேஶம், ஸ்ருஷ்டி இவைகளெல்லாம் கல்பிக்கப்பட்டிருக்கிறதே யல்லாது, நிஜமாகயில்லை. ஆகையால் அந்த வாக்யத்திற்கு ப்ரவேஶத்தைச் சொல்லும் விஷயத்தில் தாத்பர்யமில்லை.

வா. வ:—பரமாத்மா தேவதைகளில் ப்ரவேஶித்தாரென்று இந்த ஶ்ருதி சொல்லாவிடில் இந்த ஶ்ருதியால் ஐக்யமெப்படி ஸித்தமாகிறது?

பி. வா:—(பதில் இல்லை.)

வா. வ:—'அனேன ஜீவேனாத்மனானுப்ரவிஶ்ய' என்னும் ஶ்ருதி தானே அபேதத்தை ப்ரதிபாதிக்காமலிருக்க—'தத்வமஸி' என்னும் ஶ்ருதிக்கு ஐக்யத்தை போதிப்பதில் தாத்பர்யம் உண்டென்று சொல்வதற்கு எப்படி ஆதாரமாகிறது?

பி. வா:—(பதில் இல்லை.)

## வாதி விசாரணை.

---

பி. வா. வ:—ஆசார்யரே! 'அனேன ஜீவேனாத்மனா' என்னு மிந்த வாக்யத்தினால் பேதம் ஸித்தமாகிறதென்று நீங்களெப்படிச் சொல்லுகிறீர்?

வாதி:—'அந்தர்யாம்யதி தைவாதிஷு தத்தர்ம வ்யப தேஶாத்' (ப்ர. ஸூ. 1-2-18.) இது முதலிய ஸூத்ரங்களால் ஸூத்ரகாரரே பரமாத்மா ப்ருதிவ்யாதி ஸர்வதேவதைகளி லிருந்து அவரவர்களின் வ்யாபாரத்தைச் செய்கிறார். நியமிக்கிறார். ஆகையால் அந்த தேவதைகளுக்கு அவர்கள் அந்தர்யாமியான பரமாத்மாவுடன் பேதம் ஸித்தமாகிறதென்று ஶ்ருதி சொல்லு கிறதென்று சொல்லியிருக்கிறார். மற்றும் ஶங்கராசார்யரும்— அந்த ஸூத்ரத்திற்கும், அந்த ஸூத்ரத்தினால் நிர்ணயிக்கப்படும் 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' என்னும் வேதவாக்யத்திற்கும், அப் படியே அர்த்தம் செய்திருக்கிறார். அதின்படிக்கே ஸன்னமகனான பரமாத்மா அந்த ப்ருதிவ்யாதி தேவதைகளில் ஜீவரூபத்தினால் என்றால் அந்தந்த தேவதைகளின் வ்யாபார ப்ரவர்த்தக (அந்தர் யாமி) ரூபத்தினால் ப்ரவேஶம் செய்து, அந்தந்த ப்ருதிவ்யாதி தேவதிகளின் மூலமாக ஸ்ருஷ்டிக்கிறவனானென்று அர்த்த மிருப்பதினால் நியம்யரான தேவதைகளுக்கு நியாமகனான பர மாத்மாவுடன் பேதம் ஸித்தமாகிறது.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) My Lord! 'ஸ ஆத்மாதத்வ மஸி' என்னும் ஶ்ருதியில் 'ஸ: ஆத்மா, அதத், த்வம், அஸி' என்று பதம் பிறிப்பதற்கும், 'ஸ:, ஆத்மா, தத், த்வம், அஸி' என்று பதம் பிரிப்பதற்கும் வருகிறதாகையால் 'அதத்' என்று பதம் பிறித்துக்கொண்டால் இந்த ஶ்ருதி ஹே ஶ்வேதகேதோ! த்வம் = நீ, அதத் = அந்த ஸன்னமகனான பரமாத்மாவைவிட பின் னனாய், அஸி = இருக்கிறாய் என்கிற அர்த்தத்தைத் தெரிவித்துக் கொண்டே ஜீவபரமாத்மாக்களின் பேதத்தையே தெரிவிக்கிறது.

'தத்' என்று பதவிபாகம் செய்துகொண்டாலும்—ஓ ஶ்வேத கேதுவே! த்வம்= நீ, தத்= அந்த பரமாத்மாவின் அதீனனாய், அஸி= இருக்கிறாய், அல்லது பரமாத்மாவை ஆஶ்ரயித்தவனாயிருக்கிறாய், அதவா பரமாத்மாவினால் பிறந்தவனாயிருக்கிறாய் என்னும் இப்படிப்பட்ட அனேக அர்த்தங்களைச் சொல்லிக்கொண்டே, ஜீவபரமாத்மாக்களின் பேதத்தையே தெரிவிக்கிறதாகையால்—இந்த 'ஸ ஆத்மா தத்வமஸி' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதமுண்டென்னும் விஷயத்திலேயே ப்ரமாணமாகிறது.

'ஸம்ஸர்காஸங்கி ஸம்யக்' இத்யாதி அத்வைதிகளின் வாக்யங்களால் "இந்த வாக்யம் 'தத், த்வம், அஸி' என்னும் பதங்களால் 'சித்' என்று மாத்திரம் போதிக்கிறது, அபேதத்தை போதிப்பதில்லை" என்று அத்வைதிகள் ஒத்துக்கொண்டிருக்கிறபடியால், இந்த வாக்யம் அபேதவிஷயத்தில் அத்வைதமதத்தின்படிக்கும் ப்ரமாணமாவதில்லை.

ஸர்வேஶத்வம், ஸ்வதந்த்ரத்வம், ஸர்வஜ்ஞத்வம், ஸர்வோத்தமத்வம், ஸத்யகாமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம், ஈஶ்வரத்வம் முதலான குணங்களால் கூடிய பரமாத்மா 'தத்' என்னும் பதத்தால் போதிக்கப்படுகிறான். அல்பஜ்ஞத்வம், து:கித்வம் முதலான குணங்களால் கூடிய ஜீவன் 'த்வம்' என்னும் பதத்தினால் போதிக்கப்படுகிறான். விருத்த தர்மங்களையுடைய அக்னி ஜலங்களுக்கும், பரமாணு மேரு முதலானவைகளுக்கும் ஐக்யம் எப்படி பொருந்துகிறதில்லையோ அப்படியே ஸர்வஜ்ஞத்வால்பஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களையுடைய ஜீவ ப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் பொருந்துகிறதில்லை.

ஶங்கராசார்யார் * பரமாணு மேரு, அக்னி உதகம் இவைகளுக்கு எப்படி ஐக்யம் பொருந்துவதில்லையோ, அப்படியே ஸர்வேஶத்வாதி குணயுக்தனான பரமாத்மாவுக்கும், அல்பஜ்ஞத்

* ஸர்வேஶத்வ ஸ்வதந்த்ரத்வ ஸர்வஜ்ஞத்வாதிபிர்குணை:| ஸர்வோத்தம: ஸத்யகாம: ஸத்ய ஸங்கல்ப ஈஶ்வர: ॥ 721 ॥ தத்பதார்த்தஸ்த்வமர்தஸ்து கிஞ்சிஜ்ஞோ து:கஜீவன:| ஸம்ஸாரயயம் தத்கதிக: ஜீவ: ப்ராக்ருத லக்ஷண:||

வாதி தர்மங்களால் கூடிய ஜீவனுடன் ஐக்யம் பொருந்துகிற தில்லை என்று ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹமென்னும் க்ரந்தத்தில் சொல்லியிருக்கிறபடியால் 'ஸ ஆத்மாதத்வமஸி' என்னும் வாக்யம் பாதிதமாகிறதினால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் சொல்வதற்கு ஸமர்த்தமாவதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

---

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

'தத்வமஸி' என்னும் ஸ்ருதி—த்வம் = நீ (ஜீவன்), தத் = ஸன்னுமக பரமாத்மா, அஸி = இருக்கிறாயென்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைப்போதிக்கிறது. யத்யபி, 'ஸ ஆத்மாதத்வமஸி' என்னும் ஸ்ருதிக்கு 'ஸ:', ஆத்மா, அதத், த்வம், அஸி என்று பதங்களைப் பிரித்துக்கொண்டு, த்வம் = நீ, அதத் = அந்த ஸன்னுமகனை பரமாத்மாவைவிட பின்னன், அஸி = இருக்கிறாயென்று அர்த்தம் செய்வதற்கு வந்தபோதிலும் — கீழ்ச் சொல்லும் அனேக காரணங்களால் அது அயுக்தமாகிறது.

(1) 'ஆத்மா-அதத்' என்று பதவிபாகம் செய்வது க்லிஷ்டமாகிறபடியால் (கஷ்டமாகிறபடியால்) 'அதத்' என்று பதவிபாகம் செய்து ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் சொல்வது யுக்தமல்ல.

(2) 'யேனுஸ்ருதம் ஸ்ருதம் பவதி' என்னும் உபக்ரம வாக்யத்தில்—எந்த பரமாத்மாவின் ஞானத்தினால் ஸகல ஜீவஜடாத்மக ப்ரபஞ்ச ஞானமுண்டாகிறதோ, அத்தகைய பரமாத்மாவை நீ தெரிந்துகொண்டிருக்கிறாயா என்று சொல்லியிருக்கிறபடியால், பரமாத்மாவின் ஞானத்தினால் ஜீவனுடைய ஞானம், ஜட

---

722 || கதமேகத்வமனயோர்கடதே விபரீதயோ:। ப்ரத்யக்ஷண விரோதோய முபயோருபலப்யதே|| 723 || விருத்ததர்மாக்ராந்தத்வாத் பரஸ்பர விலக்ஷணௌ,। ஜீவேசௌ வஹ்னிதுஹினாவிவ ஶப்தார்த்ததோபி ச|| 724.|| (ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்?)

ஐக்யந்தயோ:......ந வாச்யயோ: நிகத்யதேன்யோன்ய விருத்த தர்மிணோ:। கத்யோதபான்வோரிவ ராஜப்ருத்யயோ: கூபாம்புராஶ்யோ: பரமாணுமேர்வோ:|| 244.|| (விவேக சூடாமணி.)

பதார்த்தங்களின் ஞானம் ஆகிறதென்று தெரியவருகிறது. ஜீவ பரமாத்மாக்களுக்கு பேதமிருக்குமாயின்—பரமாத்மாவின் ஞானத்தினுல் ஜீவனின் ஞானமுண்டாகிறதென்று சொல்வதெப்படிப் பொருந்தும்? ஆகையால் அந்த 'யேனாஶ்ருதம்' என்னும் உபக்ரம வாக்யத்தில் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் சொல்லியிருப்பதால் அந்த வாக்யத்தை அனுஸரித்து இந்த 'தத்வமஸி' வாக்யத்திற்கும் ஜீவபரமாத்மாக்களின் ஐக்யத்திலேயே தாத்பர்யமுண்டென்று தெரியவருகிறது.

(3) 'ஏகமேவாத்விதீயம்' என்னும் பூர்வவாக்யத்தில் ப்ரஹ்மம், ஏகம்=ஸஜாதீய பேதரஹிதம், அத்விதீயம்=விஜாதீய பேதரஹிதம் என்று பரமாத்மாவினுல் பின்னமான வஸ்துவே இல்லை என்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தையே சொல்லுகிறது. அதையனுஸரித்தும்—

(4) 'அனேன ஜீவேனாத்மனானுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரோத்' என்னும் வாக்யத்தில்—பரமாத்மாவே ஜீவரூபத்தினுல் ப்ரவேஶித்திருக்கிருனென்று சொல்லியிருக்கிறது. அதினுல் பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் ஐக்யம் ஸித்தமாகிறது. அதையனுஸரித்தும்—

(5) மற்றும் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' இதே முதலான ஐக்யத்தை போதிக்கும் அனேக வாக்யங்களை யனுஸரித்தும்—

(6) 'தத்வமஸி தத்வமஸி' என்று அப்யாஸம் செய்வதினுலும் (ஒன்பது தடவைகளில் சொல்லியிருக்கிறபடியாலும்)—

(7) 'தாவதேவ சிரம் யாவன்ன விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே' (சாம். 6-14-2) என்று அத்வைத ஞானத்திற்கு பலனைச் சொல்லியிருக்கிறபடியாலும்—

(8) 'தத்தாஸ்ய விஜஜ்ஞௌ' என்று உபஸம்ஹாரத்தில் ஜீவப்ரஹ்மங்களின் அபேதத்தைச் சொல்லியிருக்கிறபடியாலும்—

(9) இந்த ஜீவப்ரஹ்மாக்களின் அபேதம் ப்ரமாணாந்தரங்களினுல் தெரியாமலிருப்பதினுலும் (அபூர்வமானதினுலும்) இந்த 'தத்வமஸி' வாக்யத்திற்கு ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யத்தை

போதிப்பதிலேயே தாத்பர்யமிருக்கிறதென்று நிஶ்சயமாகிறது. ஆகையால் 'தத்' என்று பதவிபாகம் செய்துகொண்டு ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை இந்த வாக்யம் சொல்லுகிறதென்று சொல்லவேண்டுமேயல்லாது, 'அதத்' என்று பதவிபாகம் செய்து பேதத்தைச் சொல்லக்கூடாது. 'தத்' என்று பதவிபாகம் செய்துகொண்டபோதிலும்— த்வம் = நீ, தத் = தததீன: = அந்த பரமாத்மாவின் அதீனனாயிருக்கிறாய், தத் = தஜ்ஜன்ய: = அந்த பரமாத்மாவினால் பிறந்திருக்கிறாய், தத் = அந்த பரமாத்மனை ஆஶ்ரயித்திருக்கிறாயென்னும் இது முதலான அர்த்தங்களைச் செய்யக்கூடாது.

ஜீவப்ரஹ்மாக்களின் பேதம் ஸர்வஜனங்களுக்கும் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் ஸித்தமாய்க்கொண்டிருப்பதினால் அப்படிப்பட்ட பேதம் வேதத்தினால் சொல்லப்படவேண்டிய ஆவஶ்யகமில்லை.

ப்ரமாணாந்தரத்தினால் ஸித்தமாயிருக்கும் பேதத்தை வேதம் சொன்னால், அந்த வேதங்களுக்கு அஜ்ஞாதார்த்த போதகத்வரூப (அன்ய ப்ரமாணங்களால் தெரியாமலிருக்கும் ஸத்யமான அர்த்தத்தைத் தெரிவிப்பதென்னும்) ப்ராமாண்யமுண்டாகாமல் அப்ராமாண்யமே உண்டாக வேண்டிவரும். யத்யபி 'தத்' என்னும் பதத்தினால் முக்ய வ்ருத்தியால் போதிதமான ஸர்வேஶத்வாதி குணயுக்தமான ப்ரஹ்மசித்துக்கு 'த்வம்' பதத்தினால் முக்ய வ்ருத்தியால் போத்யமான, அல்பஜ்ஞத்வாதி குணயுக்தமான ஜீவசித்துடன் ஐக்யம் பொருந்தாமலிருப்பினும்—இந்த 'தத்வமஸி' என்னும் வாக்யம் லக்ஷணா வ்ருத்தியால் (Secondary meaning) 'தத்' பதத்தினால் ஸர்வேஶத்வாதி விருத்த தர்மங்களை விட்டு போதிதமான கேவல சித்துடன், லக்ஷணாவ்ருத்தியினால் 'த்வம்' பதத்தினால் அல்பஜ்ஞத்வாதி விருத்த தர்மங்களைவிட்டு போதிதமான கேவல ஜீவசித்துக்கு ஐக்யத்தைத் தெரிவிக்கின்றது. இந்த அபிப்ராயத்தையே 'ஐக்யம் தயோர்லக்ஷிதயோர்நவாச்யயோர்னிகத்யதே' 'லக்ஷணாஹ்யுப கந்தவ்யா ததோ வாக்யார்த்த ஸித்தயே। வாச்யார்த்தானுபபத்யைவ லக்ஷணாப்யுபகம்யதே||'

என்னும் வாக்யங்களினால் லக்ஷணா வ்ருத்தியினால் போதிதமான ஜீவசைதன்யத்திற்கும் ப்ரஹ்மசைதன்யத்திற்கும் ஐக்யத்தைச் சொல்லுகிறதென்று ஶங்கராசார்யர் சொல்லியிருக்கிறார்.

மஹாப்ரபோ! கோர்ட்டார் மனதில் விருத்தமான அபிப்ராயத்தை உண்டுபண்ணுவதற்காக மிஸ்டர் தாஸ் அவர்கள் 'ஐக்யந்தயோ:.........நவாச்யயோ:' என்று மாத்திரம் சொல்லி மத்தியில் இருக்கும் 'லக்ஷிதயோ:' என்னும் பாகத்தை விட்டிருக்கிறார். மற்றும் ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹத்திலிருக்கும் 'லக்ஷணஹ்யுபகந்தவ்யா' என்னும் பாகத்தைச் சொல்லாமல் விட்டிருக்கிறார். ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்ய ஞானம் மோக்ஷத்திற்குக் காரணம். பேதஞானம் மோக்ஷத்திற்குக் காரணமல்ல. ஆகையால் ஜனங்களுக்கு மோக்ஷத்தை அடைவிப்பதற்காக ப்ரவ்ருத்தமாயிருக்கும் இந்த ஶ்ருதி ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதென்று சொல்லவேண்டுமே யல்லாது, பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லக்கூடாது. ஆகையால் இந்த ஶ்ருதியினால் ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யம் ஸித்திக்கிறதென்னும் விஷயம் கோர்ட்டார் நோட்செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) My Lord! 'ஸ ஆத்மாதத்வமஸி' என்னும் வாக்யம், த்வம் = நீ, அதத் = அந்த பரமாத்மாவைவிட பின்னனாய், அஸி = இருக்கிறாயென்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே போதிக்கிறது. Mr. H. H. ஶர்மா அவர்கள் 'அதத்' என்று பதவிபாகம் செய்வது க்லிஷ்டமாகிறதென்று சொல்வது யுக்தமல்ல.

'ஆத்மா-அதத்' என்றிருக்கும் இரண்டு பதங்களுக்கும் 'அகஸ்ஸவர்ணே தீர்க்க:' என்கிற பாணினீ ஸூத்ரத்தை அநுஸரித்து ஸவர்ணதீர்க ஸந்தியுண்டாகி 'ஆத்மாதத்' என்று ஆயிருக்கிறது. இதில் 'அதத்' என்று பதவிபாகம் செய்வதற்கு எவ்விதமான க்லேஶமுமில்லை.

"தத்வமஸி வாக்யத்தின் உபக்ரமத்திலிருக்கும் 'யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி அமதம் மதம்' (சாம். 6-1-3.) என்னும் ஶ்ருதி ப்ரஹ்மஞானத்தினால் ஜீவஜடாத்மக ப்ரபஞ்சஞானமாகிறதென்று சொல்லுகிறது. ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யமில்லாவிடில் பரமாத்மாவின் ஞானத்தினால் ஜீவஞானமாவது பொருந்தாததினால், ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தையே சொல்லுகிறது. அதையனுஸரித்து—'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யத்திலேயே தாத்பர்யமென்று ஸித்திக்கிறது" என்று மிஸ்டர். H. H. ஶர்மா அவர்கள் சொன்னது யுக்தமல்ல. 'யேனாஶ்ருதம் ஶ்ருதம்பவதி' என்னும் உபநிஷத்தின் ஶங்கரபாஷ்யம், அதற்கு ஆனந்தகிரியவர்களால் செய்யப்பட்ட வ்யாக்யானம் இவைகளில் * ஸமஸ்த வேதாத்யயனங்களைச் செய்து, பரமாத்மாவைவிட பின்னமான வேதப்ரதிபாத்யமான ஸமஸ்த ஜகத்தைத் தெரிந்துகொண்டு, க்ருதார்த்தனான ஶ்வேதகேதுவைக் குறித்து, நீ பரமாத்மாவை தெரிந்துகொண்டாயா என்று தந்தை ஏன் கேழ்வி கேட்டார் என்று ஆக்ஷேபம் வந்ததற்கு, ஸமஸ்த வேதாத்யயனம் செய்திருந்தாலும், பரமாத்மாவை விட வேறான ஸமஸ்தஜகத்தையும் தெரிந்துகொண்டிருந்தாலும், எதுவரையில் பரமாத்மாவின் ஞானமுண்டாவதில்லையோ, அதுவரையில், இந்த வேதாத்யயனம், பரமாத்மாவைவிட பின்னமான (வேறான) ஜகத்தைத் தெரிந்துகொள்வது, இவைகளெல்லாம் வ்யர்த்தமேயாகிறது. பரமாத்மாவின் ஞானம் ஸம்பாதித்துக்கொண்டால், வேதாத்யயனம், ஸமஸ்த ஜகத்தின் ஞானம் இவைகள் ஸார்த்தகமாகிறது என்று இந்த ப்ரகரணத்தினால் தெரிய வருகிறதென்று சொல்லியிருக்கிறார். ஆகையால் 'யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்னும் ஶ்ருதி பரமாத்மாவின் ஞானம், ஶ்ரவணம், மனனம், இவைகளை ஸம்பாதித்துக்கொண்டால், ஜகத்தின்

* அதீத்ய ஸர்வவேதம் அதிகத ததர்த்தஞ்ச புத்ரம் ஆத்மவித்யாமதிக்ருத்ய கிமிதி பிதா ப்ருச்சதி தஸ்ய ஸர்வ வேதாத்யயனேனைவ க்ருதார்த்தத்வாதித்யாஶங்க்யாஹ ஸர்வானபீதி। ஸர்வான் வேதான் அதீத்ய ஸர்வஞ்ச அன்யத் வேத்யமதிகம்யாபி அக்ருதார்த்த ஏவ பவதி யாவதாத்ம தத்வம் ந விஜானாதி இதி ஆக்யாதோவகம்யதே। (சாம். ஶாம். பா. 6-1-3.)

ஞானஶ்ரவணமனனாதிகளை ஸம்பாதித்துக் கொண்டது ஸார்த்தகமாகிறது. இல்லாவிடில் அவைகள் வ்யர்த்தமேயாகிறது என்றும்; ஜகத்தின் ஞானத்தினால் பரமாத்மாவின் ஞானம் உண்டாகிறது, ஜகத்தின் ஞானம் காரணம், பரமாத்மாவின் ஞானம் கார்யம் என்று தெரிவிக்கிறதே யல்லாது, பரமாத்மாவின் ஞானத்தினால் ஜகத்தின்ஞானம் உண்டாகிறது,பரமாத்மாவும் ஜீவஜடாத்மக ப்ரபஞ்சமும் ஒன்றேயானதினால் பரமாத்மாவின் ஞானமே ஜீவஜடாத்மக ப்ரபஞ்சஞானமென்று சொல்வதில்லை என்று ஸ்பஷ்டமாகச்சொல்லப்பட்டிருக்கிறது.மற்றும்:— 'அத வா ஹேத்வர்த்த உத்தரார்த்தோவிஜ்ஞாத மித்யாதி' (கே. ஶாம். பா. 2-11-3.)'அத வா ஹேத்வர்த்த இதி லோகே ஶுக்த்யாதி தத்வம் விஜானதாம் யதோத்யஸ்தம் ரூப்யாத்யவிஜ்ஞாதம் பவதி அஜானதாமேவ த்வத்யஸ்தம் விஜ்ஞாதம் பவதீதி ப்ரஸித்தம்| ததா ப்ரஹ்மணி ஜ்ஞேயத்வஸ்யாத்யஸ்தத்வாத்தேவ தத்வவிதோ ந ஞாதம் ப்ரஹ்ம பஶ்யந்தீத்யர்த்த:|' என்னும் ஶாங்கர பாஷ்யம் அதற்கு வ்யாக்யானமான ஆனந்தகிரி க்ரந்தம், இவைகளில்—ஶுக்த்யாதிகளின் தத்வங்களைத் தெரிந்துகொண்டிருக்கும் மனிதனுக்கு ஶுக்தியில் அத்யஸ்தமான ரஜதம் (வெள்ளி) தோன்றுவதில்லை. ஶுக்த்யாதிகளின் தத்வத்தைத் தெரிந்து கொள்ளாதவனுக்கே ஶுக்தியில் அந்யஸ்தமாயிருக்கும் (ஆரோபிக்கப்பட்டிருக்கும்) ரஜதம் தோன்றுகிறது. அப்படியே ப்ரஹ்மத்தில் ஜ்ஞேயத்வம் அத்யஸ்தமாயிருப்பதால் ப்ரஹ்மஞானிகள் ப்ரஹ்மத்தில் கல்பிதமான ஜ்ஞேயத்வத்தைப் பார்ப்பதில்லை என்று சொல்லியிருக்கிறபடியால் 'யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்னும் வாக்யம் ப்ரஹ்ம ஞானத்தினால் ப்ரஹ்மத்தில் அத்யஸ்தமான ஜகத்து தோன்றுகிறதென்று சொல்லுகிறதென்பது விருத்தமாகிறது.

இந்த காரணங்களால் 'யேனாஶ்ருதம்' என்கிற வாக்யம் பரமாத்மா ஜீவஜடாத்மக ப்ரபஞ்சத்தைவிட பின்னமென்றே தெரிவிக்கிறது. ஆகையால் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு பேதத்திலேயே தாத்பர்யம் உண்டென்று தெரிவிக்கிறதேயல்லாது அபேதத்தில் தாத்பர்யம் உண்டென்று தெரிவிக்கிறதில்லை.

"ஏகமேவாத்விதீயம் (சாம். 6-2-1) என்னும் ஶ்ருதி ப்ரளய காலத்தில் பரமாத்மாவைவிட பின்னமான ஸஜாதீய வஸ்துக்களிருக்கவில்லை, விஜாதீய வஸ்துக்களிருக்கவில்லை என்று சொல்வதினுல், பரமாத்மாவுடன் பின்னமான வஸ்துவில்லை என்று நிஷேதித்து, ஜீவஜடாத்மக ப்ரபஞ்சத்திற்கு பரமாத்மாவுடன் அபேதத்தைச் சொல்வதினுல், இந்த உபக்ரம வாக்யானுஸாரமாய் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு ஜீவப்ரஹ்மைக்யத்தைச் சொல்லுவதில் தாத்பர்யமென்று சொல்லவேண்டும்" என்று ப்ரதிவாதிகள் சொல்வது யுக்தமாகாது. ஏனென்ருல்:—

ஶங்கராசார்யரே 'ஸ்வகார்ய பதிதம் அன்யன்னாஸ்தீதி ஏகமேவேத்யுச்யதே' என்னும் வாக்யத்தினுல் ப்ரளயகாலத்தில் பரமாத்மாவினுல் பிறந்த பதார்த்தம் எதுவும் இருக்கவில்லை என்று சொல்லியிருக்கிருரே யல்லாது, இரண்டாவது பதார்த்தமே இல்லை என்று,ஏகம்' என்னும் பதம் சொல்லுகிறதென்று சொல்லவில்லை. ஆகையால் 'ஏகம்' என்னும் பதத்தினுல் இரண்டாவது வஸ்துவே இல்லை என்று ஸித்தமாகிறதில்லை.

'ஸத்வ்யதிரேகேண ஸத: ஸஹகாரிகாரணம் த்விதீயம் வஸ்த்வந்தரம் ப்ராப்தம் ப்ரதிஷித்யதே அத்விதீயமிதி' என்னும் வாக்யத்தினுல் 'அத்விதீயம்' என்னும் பதத்திற்கு ஸஹகாரியான (ஸஹாயபூதமான) இரண்டாவது வஸ்து இல்லாததால் 'அத்விதீயம்' என்று சொல்லப்படுகிருரென்று சொல்லியிருக்கிறபடியால் 'அத்விதீயம்' என்னும் பதத்தினுல் ப்ரஹ்மாதிரிக்தமான இரண்டாவது வஸ்துவே இல்லை என்று ஸித்தமாகிறதில்லை.

ஶங்கராசார்யர் செய்த அர்த்தத்தைவிட்டு ப்ரஹ்மத்திற்கு ஸஜாதீய வஸ்துவில்லை, விஜாதீய வஸ்துவில்லை என்று 'ஏகம்' 'அத்விதீயம்' என்னுமிரண்டு பதங்களுக்கு வேறு அர்த்தத்தைச் செய்துகொண்டபோதிலும் — அதில் 'ந த்வத் ஸமோஸ்த்யப்யதிக: குதோன்ய:' (கீ. 11-43.) 'ந தத் ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே' (ஶ்வே.) இத்யாதி ப்ரமாணங்களால் பரமாத்மாவுக்கு ஸத்ருஶமான(ஸமானமான)த்விதீய வஸ்து இல்லை என்று சொல்லியிருக்கிறபடியால் ப்ரஹ்மத்திற்கு ஸஜாதீய வஸ்துவில்லை என்று

ஒப்புக்கொள்ள வேண்டுமாயினும்-'ஏகம்' என்னும் பதத்திற்காவது 'அத்விதீயம்' என்னும் பதத்திற்காவது விஜாதீயவஸ்துவில்லை என்னும் அர்த்தத்தை அத்வைதிகள் சொல்வது யுக்தமாகாது. ஏனென்றால்— 'ஜீவ ஈஶோ விஶுத்தா சித் பேதஸ்தஸ்யாஸ் தயோர்த்வயோ:। அவித்யா தச்சிதோர்யோக: ஷடஸ்மாகமநாதய:॥' என்று அத்வைதிகளே ஆறு பதார்த்தங்களை அநாதியானதென்று ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். 'தம ஆஸீத் தமஸா கூள்ஹமக்ரே' என்னும் ஶ்ருதி தமஸ்ஸு (அவித்யா = ப்ரக்ருதி) இருந்ததென்று சொல்லுகிறது. 'ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யநாதீ உபாவபி' என்னும் கீதா ஶ்லோகமும் ப்ரக்ருதி அநாதி என்று சொல்லுகிறது.

'ம்ருத்யுநா வேதமாவ்ருத மாஸீத்' என்னும் ஶ்ருதி ப்ரளய காலத்தில் ஜகத்து ம்ருத்யுநாமக பரமாத்மாவினால் ஆவ்ருதமாயிருந்ததென்று (கவரப்பட்டிருந்ததென்று) சொல்லியிருக்கிறது. ஶங்கராசார்யரும் இந்த உபநிஷத்தின் வ்யாக்யானத்தில் ஆவ்ரியமாணவஸ்து (மூடப்பட்டுள்ள பொருள்) உண்டென்று சொல்லியிருக்கிறார். ஆகையால், 'ஏகம்' என்னும் பதத்திற்காவது, 'அத்விதீயம்' என்னும் பதத்திற்காவது இரண்டாவது வஸ்துவில்லை என்று அர்த்தம் செய்யக்கூடாது. 'ஏகே முக்யான்ய கேவல:' 'அஸித்வ்தீயோநு ஸஸார பாண்டவ:' (அஸித்விதீய: = அஸிஸஹாய:) 'ஏகஸ்ஸூபர்ண:' ஏக: = அஸஹாய: (வித்யாரண்ய பாஷ்யம்) இவைகளே முதலான அநேக க்ரந்தங்களினால் 'ஏகம்' என்னும் பதத்திற்கு—அன்யம், முக்யம், அஸஹாயம் இத்யாதி அநேக அர்த்தங்களுண்டு. 'த்விதீயம்' என்னும் பதத்திற்கு ஸஜாதீய இரண்டாவது வஸ்து, ஸஹாயம் இது முதலான அநேக அர்த்தங்களிருப்பதினால் 'ஏக:' என்னும் பதத்திற்கு இதர ப்ரமாணங்களுக்கு அநுகூலமாயும், அவிருத்தமாயும், இருக்கும் அன்யன், ஜீவஜடாத்மக ப்ரபஞ்சத்தைவிட பின்னன், முக்யன், அஸஹாயன் என்றும், 'அத்விதீயம்' என்னும் பதத்திற்கு அஸஹாயன், ஸஜாதீயவஸ்து ரஹிதன் என்றும் அர்த்தமாய்க் கொண்டிருக்க—இதர ப்ராமாணங்களுக்கு விருத்தமாகவும்,

'ஷடஸ்மாகமனுதய:' என்று சொல்லும் தம் மதத்திற்கு அநு கூலமில்லாததாயும், மற்றும் விருத்தமாயுமிருக்கும், விஜாதீய வஸ்துரஹிதன் என்று அர்த்தம் செய்வது பொருந்தாததினால்— 'ஏகமேவாத்விதீயம்' என்னும் வாக்யம் ஸங்கராசார்யரின் வ்யாக்யானத்தை அநுஸரித்தும், இதர ப்ரமாணங்களை அநு ஸரித்தும் விஜாதிய வஸ்துவே இல்லை என்று நிஷேதிப்பதில்லை யாதலால் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு அபேதத்தில் தாத் பர்யமுண்டென்று தெரிவிப்பதில்லை.

"ஸேயம் தேவதைக்ஷத ஹந்தாஹ மிமாஸ்திஸ்ரோ தேவதா: அனேன ஜீவேனாத்மனாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணீ" என்னும் வாக்யம் பரமாத்மாவே ஜீவரூபத்தினால் தேஜஸ்ஸு, ஜலம் முதலானவைகளில் ப்ரவேஸித்திருக்கிறானென்று சொல்லு கிறதாகையால் ஸமஸ்த பதார்த்தங்களில் காணப்படும் ஜீவன் பர மாத்மாவே என்று ப்ரதிவாதிகள் சொல்வது ஸரியல்ல. ஏனெனின்—

'கரணமாத்ரா ஸங்காவிநிவர்த்தயே' இத்யாதி வாக்யங்களால் தேவதா ஸப்தம், சேதனவாசகமென்று சொல்லியிருக்கிறபடியா லும்; "த்ரயோவிம்ஸதி தத்வாநாம் கணம் யுகபதாவிஸத்। ஸோனு ப்ரவிஷ்டோ பகவான் சேஷ்டாரூபேண தம் கணம்। பின்னம் ஸம்யோஜயாமாஸ ஸுப்தம் கர்ம ப்ரபோதயன்" இது முதலான க்ரந்தங்களால் பரமாத்மா சேஷ்டகமான ரூபத்தினால் (ஜீவரூபத் தினால்) ப்ருதிவ்யாதி தத்வாபிமானி தேவதைகளில் ப்ரவேஸித்து பதார்த்தங்களை படைத்தாரென்று சொல்லியிருக்கிறபடியினாலும், 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' இத்யாதி வாக்யங்களில் ப்ருதிவ்யாதி ஸப்தங்கள், ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளைத் தெரிவிப்ப தென்றும், ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளில் நாராயணன் நியா மகனாயிருக்கிறானென்று ஸங்கராசார்யார் சொல்லியிருப்பதாலும்; 'ஜீவ இதி அனிருத்தஸ்யாக்யா' என்னும் ப்ரமாணானுஸாரமாய் ஜீவ ஸப்தம் அனிருத்தநாமக பரமாத்மாவையே சொல்லுகிறதாகை யாலும்; 'ஜீவோ ஜீவமஜீஜனத்' ஜீவனாமக அனிருத்த ரூபனான பரமாத்மா ஜீவர்களைப்படைத்தாரென்று சொல்லுகிறதாகை

யாலும், 'யோ வாஸுதேவோ பகவான் க்ஷேத்ரஜ்ஞோ நிர்குணாத் மக:। ஜ்ஞேய: ஸ ஏவ ராஜேந்த்ர ஜீவஸ்ஸங்கர்ஷண: ப்ரபு:' (மஹா பாரதம் ஶாந்தி. 339-40) 'அஹம் ஹி ஜீவஸம்ஜ்ஞோ வை (மஹா பாரதம் ஶாந்திபர்வம் 339-47) என்னும் வாக்யங்கள்-ஜீவஶப்தம் பரமாத்ம பரமென்று சொல்லுகிறபடியாலும், தேவதா ஶப் தத்தினாலும், ஜீவஶப்தத்தினாலும் கூடியிருக்கும் 'இமா: திஸ்ரோ தேவதா: அனுப்ரவிஶ்ய' என்னும் வாக்யம்—"பரமாத்மா தேஜோ ஜல ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளில் (சேதனங்களில்) ப்ரு திவ்யாதி பதார்த்தங்களின் வ்யாபார ப்ரவர்த்தகமான ஜீவனென் னும் பெயரையுடைய அனிருத்த ரூபத்தினால் அவைகளில் ப்ர வேஶித்து, அவைகளை ப்ரேரணை செய்து, ஸ்ருஷ்டிக்கிறேன்" என்று சொல்லுகிறபடியால் ப்ரவேஶிக்கும் பரமாத்மாவுக்கு ப்ர வேஶ்யமான ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளுடன் (சேதனங் களுடன்) பேதத்தைச் சொல்லுகிறதே யல்லாது, ப்ருதிவ்யாதி எல்லா பதார்த்தங்களில் காணப்படும் ஜீவன் பரமாத்மாவே என்று சொல்வதில்லை.

"ஸேயம் தேவதைக்ஷத ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா:" என்னும் வாக்யம் தானே ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதத்தைச் சொல்லாமல் பேதத்தையே சொல்லிக்கொண்டிருப்பதினால், தைத்திரீய ஶாங்கரபாஷ்யம் முதலான க்ரந்தங்களில் பரமாத்மா ஜீவரூபத்துடன் ப்ரவேஶித்திருக்கிறானென்று சொல்லுகிறதென் பது அஸங்கதம். ஶ்ருதிக்கு ப்ரவேஶத்தைச் சொல்வதில் தாத் பர்யமில்லை என்று அத்வைதிகள் ஒத்துக்கொண்டிருப்பதினால் இந்த வாக்யம் பரமாத்மாவே ஜீவரூபத்தினால் ப்ரவேஶித்திருக் கிறான் என்றும் ஜீவனும் பரமாத்மாவும் ஒன்றே என்றும் சொல்வ தில்லை யாதலால் 'ஸ ஆத்மா தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு பேதத்தில் தாத்பர்யம் உண்டென்று சொல்லுகிறதே யல்லாது அபேதத்தைச் சொல்வதில் தாத்பர்ய முண்டென்று சொல்வ தில்லை.

'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத் ததாத்மான மேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யம் பரமாத்மா நான் ப்ரஹ்மம்

என்று தெரிந்துகொண்டான் என்று சொல்லுகிறது. அந்த அர்த்தத்தை விட்டு இவ்வாக்யத்திற்கு ஜீவப்ரஹ்மாக்களின் அபேதபரமாக அர்த்தம் சொன்னால்—'தத்வமஸி' வாக்யத்தில் சொன்ன அகண்டார்த்த போதகத்வம் முதலான தோஷங்கள் வருகிறதாகையால் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' முதலான. வாக்யங்கள் தானே அபேதத்தைப் போதிக்காமலிருக்க வேறொரு வாக்யத்திற்கு அபேதத்தைப் போதிப்பதில் ஸஹாயம் செய்கிறதென்பது பொருந்தாது. அபேதரூபமான அர்த்தத்தைத் தெரிவிப்பதற்கு அஸமர்த்தமான 'தத்வமஸி' என்னும் வாக்யத்தை எத்தனை தடவை சொன்னபோதிலும் அதினால் அபேதம் ஸித்திக்காது.

'தாவதேவசிரம் யாவன்ன விமோக்ஷ்ய அத ஸம்பத்ஸ்யே' என்னும் வாக்யம்—ப்ரஹ்மஞானி எதுவரைக்கும் ப்ராரப்த கர்மத்திலிருந்து விடுவிக்கப்படமாட்டானோ அதுவரைக்கும் மோக்ஷத்தையடைவதற்கு ஆலஸ்யம், அத = ப்ராரப்த கர்ம மோசனானந்தரம், ஸம்பத்ஸ்யே = ப்ரஹ்மத்தை அடைகிறானென்று இவ்வாக்யம் ப்ரஹ்மத்திற்கும், ஜீவனுக்கும், 'ஸம்பத்ஸ்யே' ஸம்பத்தி = ப்ராப்ய ப்ராபக பாவத்தைச் சொல்லிக்கொண்டே பேதத்தையே சொல்லிக்கொண்டிருக்கிறபடியால் இந்த பல போதக வாக்யம் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு பேதத்தில் தாத்பர்யம் உண்டென்று தெரிவிக்கிறது. தானே பேதத்தைச் சொல்லிக்கொண்டிருக்க வேறொரு வாக்யத்திற்கு அபேதத்தில் தாத்பர்யம் உண்டென்று தெரிவிக்கிறதென்பது அத்யந்த அஸங்கதம்.

'தத்தாஸ்ய விஜஜ்ஞௌ' என்னும் வாக்யம் ஸ்வேதகேது......ப்ரஹ்மத்தைத் தெரிந்துகொண்டான் என்று ஞாத்ருஞேய பாவத்தினால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது. அபேதத்தைத் தெரிவிக்கும் பதங்கள் இவ்வாக்யத்தில் இல்லாததினால் இவ்வாக்யமும் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு அபேதம் சொல்வதில் தாத்பர்யம் உண்டென்று தெரிவிக்காததேயல்லாது பேதத்திலேயே தாத்பர்யம் உண்டென்று தெரிவிக்கிறது.

வாக்யங்களால் சொல்லப்படும் அர்த்தம் அபூர்வமாயும், ப்ரமாணாந்தரங்களுக்கு அவிருத்தமாயும் இருக்கவேண்டும். இந்த

ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யம் ப்ரமாணாந்தரங்களுக்குவிருத்தமான திஞல் அபூர்வத்வம் இருந்தமாத்திரத்திஞல் அபேதரூப அர்த் தத்தை சொல்வதில் தாத்பர்யம் உண்டென்று ஸித்தப்படுத்தாது. அந்த அர்த்தம் அபூர்வமான மாத்திரத்திஞலேயே அந்த வாக் யத்திஞல் ப்ரதிபாத்யமென்று சொன்ஞல் 'தத்' என்னும் பதத் திற்கு லக்ஷணவ்ருத்தியிஞல் ஶஶவிஷாணம் என்னும் அர்த்தத் தைச் செய்துகொண்டு, த்வம் = நீ, தத் = ஶஶவிஷாணமாயிருக் கிருயென்று அர்த்தம் செய்வதும் யுக்தமாகும்.

வாஸ்தவத்தில் 'தத்வமஸி' என்னும் வாக்யம் 'சித்' என்று அகண்டார்த்த போதத்தையுண்டாக்குகிறதென்று ப்ரதிவாதிகள் (அத்வைதிகள்) சொல்லுகிருர்கள். அந்த சித்தும் அத்வைத மதத்தின்படிக்கு ஸ்வப்ரகாஶமானதிஞல் எல்லாருக்கும் ஸித்த மானதே. ஆகையால் அந்த அர்த்தம் 'அபூர்வம்' பூர்வத்தில் ஸித்தமாகாததாவதில்லை.

இந்த வாக்யம் ஸகண்டார்த்த போதகமென்று வைத்துக் கொண்டபோதிலும், 'தத்-த்வம்' என்னும் பதங்களுக்கு லக்ஷண வ்ருத்தியிஞல் 'சித்' என்னும் அர்த்தத்தைச் செய்துகொண்டு சித் சித்தாயிருக்கிறதென்று போதிக்கிறது என்று அத்வைதிகள் சொல்வதிஞல், கடம் கடம், படம் படம் என்று எப்படி எல்லா ருக்கும் தெரிந்திருக்கிறதோ அப்படியே 'சித் சித்' என்று எல்லா ருக்கும் தெரிந்திருப்பதிஞல் அத்வைதிகள் சொல்லும் இந்த அர்த்தம் அபூர்வமாகிறதில்லை. "ஜீவப்ரஹ்மாக்களுக்கு அபே தத்தை போதித்தால்தான் அவ்வாக்யத்திற்கு அபூர்வத்வம் வரு கிறது. (ப்ரமாணாந்தரத்திஞல் தெரிவிக்காமலிருக்கும் அர்த்தத் தைத் தெரிவிப்பதாகிறது.) ஆகையால் 'தத்வமஸி' என்னும் வாக்யம் அபேதத்தையே போதிக்கிறது என்று சொல்லவேண் டும்" என்று ப்ரதிவாதி சொல்வது யுக்தமல்ல. ஏனெனின்:—

பேதஞானம் உண்டாக வேண்டியிருந்தால் ப்ரதியோகி ஞானம் வேண்டும். ப்ரதியோகி ஞானம் இல்லாவிடில் பேதஞான மாவதில்லை. பேதத்திற்கு ப்ரதியோகியான ப்ரஹ்மம் வேதா

திரிக்த ப்ரமாணங்களினல் தெரிவதற்கு ஶக்யமல்லாததினல் வாதி (த்வைதிகள்) சொல்லும், த்வம் = நீ, அதத் = பரமாத்மாவை விட பின்னமாயிருக்கிருய், என்னும் அர்த்தம் ப்ரமாணாந்தரத்தினல் தெரிவதற்கு ஶக்யமல்ல. ஆகையால் இந்த அர்த்தம் அபூர்வமானதினல் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு இந்த பேதரூப அர்த்தத்திலேயே தாத்பர்யம் உண்டென்று ஸித்தமாகிறது.

மஹாப்ரபோ! இந்த கேஸ் ஸாதாரணமான (Ex-party) எக்ஸ் பார்டிகேஸல்ல. இதற்குப்ரதிவாதி ப்ரதிவாதிவக்கீல் இருக்கிருர்கள் என்பது எங்களுக்குத் தெரிந்ததே. நாங்கள் ஶங்கராசார்யருடைய வாக்யங்களில் ஒன்று இரண்டு பதங்களை விட்டாலும் ப்ரதிவாதிகளாவது ப்ரதிவாதி வக்கீலாவது கோர்ட்டார் ஸமுகத்தில் விஜ்ஞாபித்துக் கொள்வார்கள் என்பது எங்களுக்குத் தெரிந்தவிஷயமே. ஆயினும் 'ஐக்யம் தயோர்லக்ஷிதயோர் ந வாச்யயோ:' என்னும் ஶ்லோகத்திலிருக்கும் 'லக்ஷிதயோ:' என்னும் பதத்தைவிட்டு 'ஐக்யந்தயோர் ந வாச்யயோ:' என்று சொன்னதற்கும், மற்றும் 'லக்ஷணைஹ்யுபகந்தவ்யா ததோ வாக்யார்த்த ஸித்தயே| வாச்யார்த்தானுபபத்யைவ லக்ஷணைப்யுபகம்யதே' என்னும் ஶ்லோகம் சொல்லாமலிருப்பதற்கும் காரணம்—'தத்—த்வம்' பதார்த்தங்களினல் லக்ஷணை வ்ருத்தியால் போதிதமான சித் சித்துக்கு ஐக்யமாகிலும் 'சித்' என்ருகிலும் போதம் அஶக்யமும், அத்யந்தாயுக்தமுமாகையாலும், 'குணதோஷௌ புதோ க்ருஹ்ணன் இந்துக்ஷ்வேடா விவேஶ்வர:| ஶிரஸா ஶ்லாகதே பூர்வம் பரம் கண்டேநியச்சதி' என்னும் நியாயானுஸாரம் 'லக்ஷிதயோ:' என்னும் பதமும் மற்றும் 'லக்ஷணைஹ்யுபகந்தவ்யா' என்னும் ஶ்லோகமும், விஷத்தைப்போன்றதாகையினலும் அவைகளை கண்டத்திலேயே வைத்துக்கொண்டு (வெளியில் சொல்லாமல்) 'ஐக்யந்தயோ:... ந வாச்யயோர்நிகத்யதேன்யோன்ய விருத்த தர்மிணோ:' 'ஸர்வே ஶத்வ ஸ்வதந்த்ரத்வஸர்வஜ்ஞத்வாதிபிர்குணை:' என்னும் ஶங்கராசார்யரின் வாக்யங்கள் சந்திரனைப்போல் ஸ்வச்சமாயிருக்கிறதினல் (தோஷ ரகிதமாயிருக்கிறபடியால்) அவைகளை சிரஸாதரித்து கோர்ட்டார் ஸமுகத்தில் விண்ணப்பித்துக்கொண்டிருக்கிருேம்.

இவ்விதமாக 'ஸ ஆத்மா தத்வமஸி' என்னும் வாக்யம் முக்ய வ்ருத்தியினால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்வதற்கு ஸமர்த்தமல்ல. லக்ஷணாவ்ருத்தியினாலும், ஐக்யத்தைப் போதிப்ப தற்கு ஸமர்த்தமல்ல. இந்த 'தத்வமஸி' என்னும் வாக்யத்திற்கு ஐக்யத்தை போதிக்கும் விஷயத்தில் தாத்பர்யம் உண்டென்று 'யேனாஸ்ருதம் ஸ்ருதம் பவதி' 'ஏகமேவாத்விதீயம்' 'இமாஸ்தி ஸ்ரோ தேவதா:' 'அனேன ஜீவேனாத்மனானுப்ரவிஸ்ய' என்னும் உபக்ரம வாக்யங்கள் தெரிவிப்பதில்லாததினாலும், லக்ஷணாவ்ருத்தியினால் அர்த்தத்தை ஸ்வீகரிப்பது, முக்ய வ்ருத்தியினால், அர்த்தத்தை ஸ்வீகரிப்பது என்னும் இவைகளில் முக்யவ்ருத்தியினால் அர்த்தத்தை ஸ்வீகரிப்பது உத்தமமானதென்று ஸங்கராசார்யர் 3-1-22, 4-2-1-வது ப்ர. ஸூ. பாஷ்யத்தில் சொல்லியிருப்பதினாலும், பேதபோதகமாயும், பேதத்தை போதிக்கிறதென்று அத்வைதிகளால் அங்கீகரிக்கப்பட்டதாயும் இருக்கும் * 'ஸன்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா:' 'ப்ராணபந்தனம் ஹி ஸோம்ய மன:' இத்யாதி பூர்வவாக்யங்களையும், 'ததஸ்து தம் பஸ்யதே நிஷ்கலம் த்யாயமான:' இத்யாதி அனேக வாக்யங்களையும் அனுஸரித்தும், ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் சொன்ன பக்ஷத்தில் பூர்வாபரவிரோதமும்பஹுஸ்ருதி விரோதமும் வருகிறதினாலும்

* தஸ்யைவ ஸர்வே ரூபமபவன் (ப்ரு. 1-5-21) என்னும் வாக்யத்தினால் ஸமஸ்த இந்த்ரியங்களும், ஏதஸ்யைவ ரூபம் = இந்த ப்ராணனின் ரூபமே, அபவன் = ஆயின என்று இந்த்ரியங்களுக்கு ப்ராணத்துடன் அபேதம் தோன்றிக்கொண்டிருந்த போதிலும் 'அயம் வை ந: ஸ்ரேஷ்ட' இத்யாதி வாக்யங்களால் ப்ராணத்திற்கு இந்த்ரியங்களுடன் பேதம் தோன்றுகிறபடியாலும்; இந்த்ரியங்களுக்கு ப்ராணத்துடன் அபேதத்தைச் சொன்னால் பஹுஸ்ருதி விரோதமும், பூர்வாபரவிரோதமும் வருகிறபடியினாலும்; மற்றும் விருத்த தர்மங்கள் தோன்றிக்கொண்டிருக்கிறபடியினாலும் இந்த்ரியங்களுக்கு ப்ராணரூபத்வம் சொல்லுவதைப்போல் தோன்றும் வாக்யத்திற்கு இந்த்ரியங்கள் ப்ராணாதீனமானவைகளென்று அர்த்தம் சொல்லவேண்டும். ப்ராணத்துடன் அபேதத்தைச் சொல்லக்கூடாதென்று ஸங்கராசார்யர்,

ஸர்வஜ்ஞத்வாஸர்வஜ்ஞத்வ விருத்த தர்மமிருப்பதினால் ஜீவ பரமாத்மாக்களின் ஐக்யம் பொருந்தாததினாலும்:—

‘அதத்’ என்று பதவிபாகம் செய்துகொண்டு முக்யவ்ருத்தியினால், த்வம் = நீ, அதத் = பரமாத்மாவைவிட பின்னனாயிருக்கிறாய் என்றாகிலும், ‘தத்’ என்று பதவிபாகம் செய்துகொண்டு ‘ப்ரஹ்மணே த்வா மஹஸே ஓமித்யாத்மானம் யுஞ்ஜீத’ என்னும் ஶ்ருத்யனுஸாரமாக ‘தத்’ என்னும் ப்ராதிபதிகத்தினால் வந்த சதுர்த்தீ விபக்திக்கு (நாலாம் வேற்றுமைக்கு) ‘ஸுபாம்ஸுலுக்’ என்னும் ஸூத்ரத்தினால் ‘ஸு’ என்னும் ஆதேஶமாகிலும், லோபமாகிலும் செய்துகொள்ளின்—தத் = தஸ்மை = ஜகத்காரணனான பரமாத்மாவுக்காக, த்வம் = நீ ஸமர்ப்பணீயனாயிருக்கிறாய்

---

பாமதீகாரர், முதலான அத்வைதிகள் 2-4-19-வது ஸூத்ரபாஷ்யம், பாமதீ முதலிய க்ரந்தங்களில் சொல்லியிருக்கும்படிக்கும், “அஸன்னேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேத சேத்” என்னும் வாக்யத்தில் எவன் ப்ரஹ்மத்தை அஸத்தென்று தெரிகிறானோ அவன் அஸத்தாகிறான் என்னும் அர்த்தம் தோன்றிக்கொண்டிருந்தபோதிலும்—சேதனன் அஸத் ஆவது பொருந்தாததினால் ‘அஸத் அஸத்ஸம:’ அஸத்துக்கு ஸமனாகிறானென்னும் அர்த்தத்தை ஶங்கராசார்யர் செய்திருக்கும்படிக்கும்—

‘அஹம் ப்ரஹ்ம, அஹம் யஜ்ஞ:, அஹம் லோக:, த்வம் ப்ரஹ்ம, த்வம் யஜ்ஞ:, த்வம் லோக:’ என்னும் இவை முதலான அபேதம் தோன்றும் வாக்யங்களுக்கு அபேதம் பொருந்தாததினால், த்வம் த்வத்கர்த்ருகம் ப்ரஹ்ம = ப்ரஹ்மாத்யயனம் (வேதாத்யயனம்), த்வம் = த்வத்கர்த்ருகா: யஜ்ஞா:, த்வம் லோக: = த்வஜ்ஜய்யா லோகா: (த்வம் என்னும் பதத்திற்கு உன்னால் செய்யப்படும் என்றும், ஜயிக்கப்படும் என்றும் அர்த்தம். அஹம் என்னும் பதத்திற்கு என்னால் செய்யப்படும் என்றும், ஜயிக்கப்படுமென்றும் அர்த்தம். ப்ரஹ்ம என்னும் பதத்திற்கு வேதாத்யயனமென்று அர்த்தம்) என்று ஶங்கராசார்யார் அர்த்தம் செய்திருப்பதைப் போலவும், ‘தத்வமஸி’ வாக்யத்திற்கு பேதபரமாகவே அர்த்தம் செய்ய வேண்டியது.

(ஒப்புவிக்கத்தகுந்தவனு யிருக்கிறாய்) என்னும் அர்த்தத்தை யாகிலும், 'யதோ வா இமானி பூதானி ஜாயந்தே' என்னும் ஶ்ருத்யனுஸாரமாய், தத் = தஸ்மாத் = அந்த பரமாத்மாவினால் பிறந்திருக்கிறாய் என்றாகிலும்; 'ஸ காரணம் காரணாதிபாதிப:' 'ஸர்வஸ்ய வஶீ பூதபால:' இத்யாதி ஶ்ருத்யனுஸாரமாக ஷஷ்டீ ஸ்வாதேஶங்களினால், தத் = தஸ்ய = அவனே ஸ்வாமியாயுள்ளவனாய் (தத்ஸ்வாமிக: = அவனையே ஸ்வாமியாயுடையவன்) த்வம் = நீ, அஸி = இருக்கிறாயென்றாகிலும்; 'ப்ராணபந்தனம் ஹி ஸோம்ய மன:' இத்யாதி ஶ்ருத்யனுஸாரமாய் ஸப்தமீ ஸ்வாதேஶாதிகளால், தத் = தஸ்மின் = அந்த பரமாத்மாவை ஆஶ்ரயித்திருக்கிறாய் என்னும் இத்யாத்யனேக அர்த்தங்கள் முக்ய வ்ருத்தியினால் சொல்வதற்கு வருகிறது.

'தத்' என்னும் பதத்திற்கு லக்ஷணாவ்ருத்தி வைத்துக் கொண்டபோதிலும்—பூர்வோக்தமான ப்ரமாணங்களுக்கு அனுகூலமாயும், பேதம் சொல்லும் ஒன்பது பேத த்ருஷ்டாந்த வாக்யங்களுக்கு அனுகூலமாயும், தத் = தஜ்ஜன்ய:, தததீன:, ததாஶ்ரய: இது முதலிய அர்த்தங்கள் பொருந்திக்கொண்டிருப்பதினாலும் வாதி எக்ஸிபிட்ஸ் 1, 18, ப்ரதிவாதி எக்ஸிபிட்ஸ் 1, 2, 3, 4 வாக்யங்களும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதே யொழிய ஐக்யத்தைச் சொல்வதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

தத்வமஸி வாக்யவிசாரணை முற்றிற்று.

---

வாதி எக்ஸிபிட் 2; ப்ரதிவாதி எக்ஸிபிட் 5.

## அஹம் ப்ரஹ்மாஸ்மி என்கிற ஶ்ருதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! "ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத் தத் ஸர்வமபவத் யோ யோ தேவானாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ ததபவத் ததர்ஷீணாம் ததா மனுஷ்யாணாம்" என்கிற வாக்யத்தை ஏன் உதகரித்தீர்?

வாதி:—ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை ஸித்தப் படுத்துவதற்காக உதகரித்தோம்.

---

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

பி. வா. வ:—உம்மிட மனது ஸ்வாதீனமா யிருக்கிறதா? (உமக்கு பித்தவிகாரமோ அல்லது உன்மாதமோ உண்டாக வில்லை யல்லவா?)

வாதி:—என் மனது ஸ்வாதீனமா யிருக்கிறது. தாங்கள் அப்படிக் கேழ்ப்பதற்குக் காரணமென்ன?

பி. வா. வ:—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம்—அஹம் = நான், ப்ரஹ்மாஸ்மி = ப்ரஹ்ம மிருக்கிறேனென்று ஸ்பஷ்டமாக ஜீவ ப்ரஹ்மங்களுக்கு ஐக்யத்தை அறிவித்துக் கொண்டிருக்க, இவ்வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை ஸித்தப்படுத்துவதற்காக உதகரித்தோ மென்று சொன்னதற்காக ஸம்ஶயமுண்டாய் அப்படிக் கேட்டோம்.

வாதி:—"யா நிஶா ஸர்வபூதானும் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ। யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிஶா பஶ்யதோ முனேঃ" என்கிற 2—69-வது கீதா ஶ்லோகத்தில் சொல்லியவாறு வேதார்த்த விசாரம் செய்யாத லௌகிக ஜனங்களுக்கு வேதத்தின் அர்த்தம் இரவு இருட்டிலிருக்கும் பதார்த்தங்களைப்போல் தெரிவதில்லை. எல்லாகாலத்திலும் வேதார்த்த விசாரம் செய்து கொண்டிருக்கும் வைதிக ஜனங்களுக்கு வேதார்த்தம் பகலில் ப்ரகாஶத்திலிருக்கும் பதார்த்தங்களைப்போல் தெரிகிறது. நாம் வைதிகராயிருப்பதினுல் நமக்கு 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' முதலிய வாக்யங்களுக்கு பேதரூப அர்த்தமேயாகிறது. தாங்கள் லௌகிகர்களாயிருப்பதினுல் வேதார்த்த விசாரம் செய்யாமலிருப்பதினுல் உமக்கு அந்த அர்த்தம் தெரியவில்லை. இப்படியிருக்க—நம்மை மனது ஸ்வாதீனமாயிருக்கிறதா என்று கோர்ட்டில் விசாரிப்பது ஸரியல்ல.

பி. வா். வ:—ஆசார்யரே! கோபிக்கவேண்டாம். 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கு, அஹம்=நான், ப்ரஹ்மாஸ்மி=ப்ரஹ்மமிருக்கிறேன் என்று அர்த்தமாகிறது லௌகிக வேலைகளைச் செய்யும் நமக்குமாத்ரமேயல்ல, சிறுவர்களுக்கும் அப்படியே அர்த்தமாகிறது. அவ்வளவேயன்றி—எப்போதும் வேதவிசாரம் செய்யும் சங்கராசார்யர் முதலிய பெரிய வித்வான்களும் அப்படியே அர்த்தமாகிறதென்று சொல்லியிருக்கிறார்கள். ஆகையினாலேயே கேட்டோம். உம்மிட மனது ஸ்வாதீனமாயிருந்து வேதார்த்தத்தைச் சொல்லுவதற்கு விசித்ரஶக்தி யிருந்து இவ்வாக்யத்திற்கு நீர் வேறு அர்த்தத்தைச் சொல்லின் நான் என்னிட வாக்யத்தை வாபஸ் பெற்றுக்கொள்ளுகிறேன்.

வாதி:—த்வைதாத்வைதிகளின் விவாதம் நடந்துகொண்டிருக்க—நம் ஆசார்யர் இப்படிச் சொல்லியிருக்கிறார், நம் ஆசார்யர் அப்படிச் சொல்லியிருக்கிறார் என்று அவாளவாளிட ஆசார்யர்களை வாதக்ரஸ்த விஷயத்தில் தம் தம் மதத்தை ஸாதித்துக் கொள்ளுவதற்காக ஸாக்ஷியாகச் சொல்லக்கூடாது. பரஸ்பர ஆசார்யர்களின் பேரில் பரஸ்பரர்களுக்கு விஶ்வாஸமிருப்பதில்லை. 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்தின்விசாரம் நடக்கட்டும். இவ்வாக்யத்திற்கு பேதபரமாக அர்த்தம் சொல்லுபவன் ப்ராந்தனுகிறனே அல்லது அபேதபரமாக அர்த்தம் சொல்லுபவன் ப்ராந்தனுகிறனே ஸ்பஷ்டமாகிறது.

பி. வா. வ: — ஆசார்யரே! அவ்வார்த்தைகளப்படியிருக்கட்டும். இவ்வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை எப்படி அறிவிக்கிறதோ அதைச் சொல்லும்?

வாதி:—"ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத், ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மீதி। தஸ்மாத் தத் ஸர்வமபவத் தத்யோயோ தேவானும் ப்ரத்யபுத்யத ஸ ஏவ ததபவத் ததர்ஷீணும் ததா மனுஷ்யாணும்" ப்ரஹ்ம வா=ப்ரஹ்மம்தான், இதமக்ரே=இந்த ஜகத்துக்கு பூர்வத்தில் (முன்), ஆஸீத்=இருந்தது. தத்=அந்த ப்ரஹ்மம், ஆத்மானமேவ=தன்னையே, அஹம் ப்ரஹ்மாஸ்மீதி=நான் ப்ரஹ்மமென்று, அவேத்=தெரிந்துகொண்டது,

தஸ்மாத் = ப்ரஹ்மஞானமிருப்பதினால், தத் = அந்த ப்ரஹ்மம், ஸர்வமபவத் = பூர்ணமாயிற்று. (இந்த ஜகத் ஸ்ருஷ்டிக்கு பூர்வத்தில் ப்ரஹ்மமிருந்தது. அந்த ப்ரஹ்மம் தன்னைத்தானே ப்ரஹ்மமென்று தெரிந்துகொண்டது. அந்த ஞானத்தினாலேயே அந்த ப்ரஹ்மம் பூர்ணமாயிற்று) யோ யோ தேவானாம் ப்ரத்யபுத்யத = தேவதைகளில் யார் யார் ப்ரஹ்மத்தைத் தெரிந்துகொண்டார்களோ அவரவர் பூர்ணராயினர். ருஷிகளில் யார்யார் ப்ரஹ்மத்தை தெரிந்துகொண்டார்களோ அவரவர் பூர்ணராயினர். மனிதர்களில் யார்யார் ப்ரஹ்மத்தை தெரிந்துகொண்டனரோ அவரவர் பூர்ணராயினர் என்று இவ்வாக்யம் ப்ரஹ்ம, தேவானாம், ருஷீணாம், மனுஷ்யாணாம் என்று வெவ்வேறு ஶப்தங்களினால் ப்ரஹ்மம் தேவதைகள் முதலியவர்களை அறிவித்துக் கொண்டிருப்பதினால் ஶப்தபேத நியாயத்தினால் தேவகணம், மனிதர்கள், ரிஷிகள் மற்றும் ப்ரஹ்மம் இவர்களில் பேதம் ஸித்தமாகிறது. மற்றும்—தேவானாம், ருஷீணாம், மனுஷ்யாணாம் என்று பஹுவசனமிருப்பதினால் தேவதைகளில் பரஸ்பரபேதமும், ருஷிகளில் பரஸ்பர பேதமும், மனிதர்களில் பரஸ்பரபேதமும் ஸித்தமாகிறது. இப்படி அநேக பேதங்கள் இவ்வாக்யத்தினால் ஸித்தமாகிறது.

கோர்ட்:—ஆசார்யரே! எப்படியோ பலாத்காரம் செய்து அவ்வாக்யம் பேதத்தை அறிவிக்கும்படிக்குச் செய்கிறீர். வைஷ்ணவர்களின் (த்வைதிகளின்) ஸ்வபாவமே இப்படி என்று கேட்டிருந்தோம். இப்போது அவ்விஷயம் நமக்கு ப்ரத்யக்ஷமாயிருக்கிறது. எந்த வாக்யம் அபேதத்தைச் சொல்லுகிறதென்று அத்வைதிகள் சொல்லுகிறார்களோ அதேவாக்யம் பேதத்தைச் சொல்லுகிறதென்று நீர் சொல்லுவது எப்படிப் பொருந்தும்?

வாதி:—தர்மராஜப்ரபோ! ப்ரபுக்கள் அப்படி உத்திரவளிக்கக்கூடாது. அத்வைதமத ப்ரவர்த்தகாசார்யரென்று சொல்லிக் கொள்ளப்பட்டிருக்கும் சங்கராசார்யரே இவ்வாக்யம் தேவகணத்துக்கு ப்ரஹ்மத்துடனும் ருஷிகணத்திற்கு ப்ரஹ்மத்துடனும் பேதத்தை யறிவிக்கிறதென்று தம்மிட பாஷ்யத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க இப்படி அர்த்தம் செய்வது நம்மிட பலாத்காரமெப்படியாகும்?

கோர்ட்:—சங்கராசார்யர் இவ்வாக்யம் பேதபரமென்று சொல்லியிருக்கிறாரென்று நீர் சொல்லுகிறீர். அதினால்தான் மிஸ்டர் ஹரிஹரசர்மா சொல்லியவாரு உம்மிட மனது ஸ்வாதீனமில்லை என்றே தோன்றுகிறது. அந்த சங்கராசார்யர் இவ்வாரு எப்படி அர்த்தம் சொல்லுவார்? அவர் அப்படிச்சொல்லியிருப்பாராயின் அவரிட வாக்யத்தைக் காட்டும்?

வாதி:—மஹாப்ரபோ! ப்ரதிவாதி வக்கீல் சொல்லியவாரே ப்ரபுக்களும் சொல்லக்கூடாது. இவ்வாக்யம் அபேதபரமென்று சொல்லுபவர் ப்ராந்தரோ, அல்லது பேதபரமென்று சொல்லுபவர் ப்ராந்தரோ அவ்விஷயம் முன் விசாரத்தில் கோர்ட்டாருக்கே தெரியவரும். இந்த பாஷ்யத்திலும், இதின் ஆனந்தகிரி வ்யாக்யானத்திலும் இவ்விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

கோர்ட்:—மிஸ்டர் சர்மா! இப்புத்தகங்களை எடுத்துக் கொண்டு வாதியை மேற்படி விஷயங்களை விசாரியும்.

பி. வா. வ:—அப்படியே ப்ரபோ! ஆசார்யரே! இப்புத்தகத்தில் இவ்வேதவாக்யம் பேதத்தை அறிவிக்கிறதென்று சொல்லும் சங்கராசார்யரின் வாக்யத்தைக்காட்டி அதற்கு தாத்பர்யத்தைச் சொல்லும்?

வாதி:–இதோ 'தேவானாமித்யாதி லோகத்ருஷ்ட்யபேக்ஷயா' என்கிற இவ்வாக்யமே. அதிற்கு 'யோ யோ தேவானாம் ப்ரத்யபுத்யத அதர்வ்ஷீணாம் அத மனுஷ்யாணாம்' என்கிற வாக்யம் ப்ரஹ்மத்திற்கும், தேவதைகளுக்கும், ருஷிகளுக்கும், மனிதர்களுக்கும் பேதத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யம்.

பி. வா. வ:—ஆசார்யரே! சங்கராசார்யரிட பூர்வபக்ஷ வாக்யத்தை வைத்துக்கொண்டு, அவர் 'யோயோ தேவானாம்' என்கிற வாக்யம் பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறாரென்று சொல்லுவது யோக்யமாகுமா?

வாதி:—ஸித்தாந்த வாக்யத்தைச் சொல்லட்டும்.

பி. வா:—இதோ * இவ்வாக்யங்களே.

வாதி:—அவைகளின் அர்த்தத்தைச் சொல்லும்?

பி. வா:—'யோ யோ தேவானாம்' என்கிற வாக்யத்தினால் பரப்ரஹ்மம், தேவதைகள், ரிஷிகள், மனிதர்கள், இவர்களில் பேதம் காணப்பட்டுக்கொண்டிருப்பினும், அந்த பேதம் அஞ்ஞானத்தினால் கல்பிதமானது (மித்யை) நிஜமல்ல. வேதத்தில் சொல்லப்பட்ட அந்த பேதத்தை நிஜமென்றே ஏன் சொல்லக் கூடாதென்று சங்கித்துக்கொண்டு, இவ்வாக்யத்தில் சொல்லியிருக்கும் பேதம் நிஜமென்று ஒப்புக்கொள்ளின்—பரமாத்மாவே ஸர்வத்ர ப்ரவேசித்திருக்கிறான் (ப்ரஹ்மமே ஜீவன்) என்று சொல்லும் 'புர: புருஷ ஆவிசத்' (ப்ரு. 2-5-18) என்கிற வாக்யத்திற்கு விரோதம் வருகிறது. ஆகையால் இவ்வாக்யத்தில் சொல்லியிருக்கும் பேதம் பொய்யென்று அறியவேண்டு மென்ற பிப்ராய மென்று ஸித்தாந்தம் செய்திருக்க பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறாரென்று நீர் எப்படிச் சொல்லுகிறீர்?

வாதி:—ஐயா! சங்கராசார்யர் ஸித்தாந்தம் செய்யும்போது 'அஹம் ப்ரஹ்மாஸ்மி......ததா மனுஷ்யாணாம்' என்கிற இவ்வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தைத் தெரிவிக்கிறது.

---

* தேவானாமித்யாதி லோகத்ருஷ்ட்யபேக்ஷயா ந ப்ரஹ்மத்வபுத்யா உச்யதே 'புர: புருஷ ஆவிசத்' இதி ஸர்வத்ர ப்ரஹ்மைவானுப்ரவிஷ்ட மித்யவோசாம அத: சரீராத்யுபாதிஜனித லோகத்ருஷ்ட்யபேக்ஷயா தேவானாமித்யாத்யுச்யதே. பரமார்த்ததஸ்து தத்ர தத்ர ப்ரஹ்மைவாக்ரே ஆஸீத் (ப்ரு. சாங். பா. 1-4-10)

ப்ரஹ்மைவ அவித்யயா ஸம்ஸரதி முச்யதே ச வித்யயா இத்யுக்தத்வாத் தேவாதீனாம் வித்யாவித்யாப்யாம் பந்தமோக்ஷாக்தி: தத்விருத்பேத்யாசங்க்யாஹ—தேவானாமித்யாதீதி| தத்வ த்ருஷ்ட்யைவ பேதவசனே கா ஹானிரித்யாசங்க்யாஹ—புர இதி.

ஆவித்யகம் பேதமனூத்ய தத்ததாத்மனோ ஸ்திதப்ரஹ்மதைதன்யஸ்யைவ வித்யாவித்யாப்யாம் பந்தமோக்ஷாக்தோர் ந பூர்வாபரவிரோதோஸ்தீதி பலிதமாஹ அத இதி அவித்யா த்ருஷ்டிமனூத்ய தத்வத்ருஷ்டி மன்வாசஷ்டே பரமார்த்தஸ்த்விதி ||

ஆயினும் அந்த பேதம் 'புர: புருஷ ஆவிஶத்' என்கிற வாக்யத்திற்கு விருத்தமாகிறபடியால் அந்த பேதத்தை ஒப்புக்கொள்ளக் கூடாதென்று சொல்லியிருக்கிறாரேயொழிய, இவ்வாக்யம் பேதத்தைச் சொல்லுவதில்லை என்று அவர் சொல்லவில்லை. ஆகையால் இவ்வாக்யம் பேதத்தை அறிவிக்கிறதென்கிற விஷயத்தில் விவாதமென்ன இருக்கிறது? (விவாதமில்லை.)

---

## ப்ரதிவாதி விசாரணை.

---

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இவ்வாக்யம் பேதத்தை யறிவிக்கிறபடியால் பேதவிஷயத்திற்கே ப்ரமாணமாகிறதென்று ஆசார்யர் சொல்லுவது யுக்தமா, அயுக்தமா?

பி. வா:—'யஜமான: ப்ரஸ்தர:' என்கிற வாக்யம் யஜமானனுக்கு ப்ரஸ்தரத்துடன் (தர்ப்பமுஷ்டியுடன்) அபேதம் அறிவித்துக்கொண்டிருந்தபோதிலும், ப்ரமாணத்திற்கு விருத்தமாயிருப்பதினால் அதை ஒப்புக்கொள்ளுவது எப்படி அயுக்தமோ, அப்படியே 'யோ யோ தேவானாம்' என்கிற வாக்யம் பேதத்தை அறிவித்துக்கொண்டிருந்தபோதிலும் அந்த அர்த்தம் அபேதத்தை அறிவிக்கும் ப்ரமாணங்களுடன் விருத்தமாகிறபடியால் அந்த அர்த்தத்தை அங்கீகரிப்பது யுக்தமல்ல. அந்த பேதத்தைப் பொய்யென்றே சொல்லவேண்டும்.

---

## ப்ரதிவாதியின் க்ராஸ்.

---

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யோ யோ தேவானாம்' என்கிற வாக்யத்தில் சொல்லப்படும் பேதம் பொய்யோ நிஜமோ, அந்த விஷயம் வேறு. இவ்வாக்யம் பேதத்தை அறிவிக்கிறதா, இல்லையா?

பி. வா:—பேதத்தை அறிவிக்கிறது.

வா. வ:—இவ்வாக்யம் பேதத்தை அறிவிக்குமாயின் அபேத விஷயத்தில் இதை நீர் எப்படி உதகரித்திர்?

பி. வா:—'யோ யோ தேவானாம்' என்கிற பாகம் தேவதைகள், ருஷிகள், மனிதர்கள், இவர்களுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை அறிவித்துக்கொண்டிருப்பினும்—அவ்வாக்யத்திற்கு முன்னிருக்கும் 'ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மீதி' என்கிற வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அறிவித்துக்கொண்டிருக்கிறபடியால் ஐக்ய விஷயத்தில் இதை உதகரித்தோம்.

வா. வ:—'ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கு அர்த்தமென்ன?

பி. வா:—தத் = அந்த ப்ரஹ்மம், ஆத்மானமேவ = தன்னையே, அஹம் ப்ரஹ்மாஸ்மி = நான் ப்ரஹ்மமென்று தெரிந்து கொண்டதென்று அர்த்தம்.

வா. வ:—இப்படி யார் அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—"தத் ப்ரஹ்ம ஆத்மானமேவ நித்யத்ருக்ரூபம் அத்யாரோபிதாநித்யத்ருஷ்ட்யாதி வர்ஜிதமேவாவேத் விதிதவத் .....தத் கதமவேதித்யாஹ—அஹம்.....ப்ரஹ்மாஸ்மி பவாமீதி" என்கிற வாக்யத்திற்கு ப்ரஹ்மம் தன்னை ப்ரஹ்மமென்று தெரிந்து கொண்டது என்கிற அர்த்தத்தை சங்கராசார்யர் செய்திருக்கிறார்.

வா. வ:—நான் நியாயாதிபதி என்று நியாயாதிபதிகள் நினைத்தால் நீர் நியாயாதிபதிகளாவீரோ?

பி. வா:—நியாயாதிபதிகள் தம்மை நான் நியாயாதிபதி என்று நினைத்ததினால் நானெப்படி நியாயாதிபதியாவேன்? ஆக மாட்டேன். ப்ரபுக்களே நியாயாதிபதி யாவர்.

வா. வ:—ப்ரஹ்மம் தன்னை நான் ப்ரஹ்மமென்று தெரிந்து கொண்டமாத்திரத்தினால் ஜீவன் ப்ரஹ்மமெப்படியாவான்?

பி. வா:—இப்படி ப்ரஹ்மம் தெரிந்துகொண்டமாத்திரத்தினால் ஜீவன் ப்ரஹ்மமாகமாட்டான்.

வா. வ:—ஆனால் 'ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அறிவிக்கிறதில்லையல்லவா?

பி. வா:—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் ஐக்யத்தை அறிவிக்கிறதில்லை.

வா. வ:—இவ்வாக்யம் ப்ரஹ்மத்துடன் ஜீவனுக்கு ஐக்யத்தை அறிவிக்காவிடின் ஐக்யவிஷயத்தில் இவ்வாக்யத்தை ஏன் உதகரித்தீர்?

பி. வா:—இவ்வாக்யத்திற்கு முன்னிருக்கும் வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அறிவிக்கிறபடியால் உதகரித்தோம்.

வா. வ:—அந்த பூர்வவாக்யமேது?

பி. வா:—'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யமே.

வா. வ:—ப்ரஹ்ம வா = ப்ரஹ்மமே, இதமக்ரே = இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு முன், ஆஸீத் = இருந்தது என்கிற அர்த்தத்தை மாத்திரம் இவ்வாக்யம் அறிவித்துக்கொண்டிருப்பதினால் இவ்வாக்யத்தில் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை யறிவிக்கும் பதமில்லையல்லவா?

பி. வா:—'இதமக்ரே' என்கிற வாக்யத்தில்—இதம், அக்ரே என்று இரண்டு பதங்களிருக்க, நீர் ஒரே பதமாக்கிக்கொண்டு 'இதம்' என்கிற முதல் வேற்றுமை பதத்திற்கு ஜகத்தின் என்று ஆறும்வேற்றுமையின் அர்த்தமெப்படிச் செய்தீர்?

வா. வ:—ஆசார்யரே! இவரிட கேழ்விக்குப் பதில்சொல்லும்.

வாதி:—'இதமக்ரே' என்று ஒரே பதமாக்கினால் அந்த பதத்திற்கு ஜகத்துக்கு பூர்வத்தில் என்று அர்த்தமாகிறது. அல்லது 'இதம்' என்று பின்னபதமாக்கினும் 'ஸுபாம் ஸுலுக்' என்கிற ஸூத்ரத்தினால் ஆறாம்வேற்றுமைக்கு (ஙஸ்) ஸு ஆதேசம் வந்திருப்பதினால் 'இதம்' என்கிற பதம் ஆறும் வேற்றுமை பதமும் ஆகிறது. ஆகையால் 'இதம்' என்கிற பதத்திற்கு 'ஜகத்தின்' என்கிற அர்த்தம் ஆகிறது. அல்லது 'இதம்'

என்கிற பதத்தை 'ப்ரஹ்ம' என்கிற பதத்துடன் அன்வயம் செய்து, இதம் = 'ததேதத்ப்ரேய: புத்ராத்ப்ரேயோ வித்தாத் ப்ரேயோன்யஸ்மாத் ஸர்வஸ்மாத் அந்தரதரம் யதயமாத்மா' (ப்ரு. 1-4-8) என்கிற இந்த பூர்வவாக்யத்தில் எல்லோருக்கும் ப்ரியனென்று ப்ரஸக்தனாயிருக்கும் ப்ரஹ்மம், அல்லது 'இமு தத் ப்ரஹ்மாவேத்' என்கிற வாக்யத்தினால் ப்ரஸக்தமாயிருக்கும் ப்ரஹ்மம், அக்ரே = பூர்வத்தில், ஆஸீத் = இருந்தது என்றும் அர்த்தமாகிறபடியால் அப்படி அர்த்தம் செய்வதற்கு எவ்வித அனுபபத்தியுமில்லை.

கோர்ட்:—ஆசார்யரே! பூர்வாபர ஸம்பந்தமில்லாமல் ஏதாவது அர்த்தம் சொல்லவேண்டுமோ?

வாதி:—ப்ரபுக்களே! இந்த அர்த்தம் பூர்வவாக்யத்திற்கு ஸம்பந்தப்பட்டதே.

கோர்ட்:—'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யத்திற்கு பூர்வவாக்யத்துடன் அதின் ஸம்பந்தத்தைக் காட்டி அர்த்தத்தைச் சொல்லும்?

வாதி:—'ததாஹுர் ப்ரஹ்மவித்யயா ஸர்வம் பவிஷ்யந்தோ மனுஷ்யா மன்யந்தே இமு தத் ப்ரஹ்மாவேத் யஸ்மாத் தத் ஸர்வமபவத்' (ப்ரு. 1-4-9)என்கிற இந்த பூர்வ வாக்யம்—ப்ரஹ்மஞானத்தினால் பூர்ணனாகிறான் என்று மனுஷ்யர்கள் எதைத் தெரிந்து கொள்ளுகிறார்களோ அதின் விஷயத்தில் விசாரம் செய்கிறார்கள். பூர்ணத்வத்தை யடைவதற்கு (பூர்ணனாவதற்கு) ப்ரஹ்மஞானம் காரணமாயின், யார்யார் பூர்ணராயிருக்கிறார்களோ அவர்களெல்லோருக்கும் ப்ரஹ்மஞானம் இருந்தே தீரவேண்டும். யாராவதொருவர் ப்ரஹ்மஞானமில்லாமல் பூர்ணராயின் பூர்ணத்வத்திற்கு ப்ரஹ்மஞானம் காரணமாகிறதில்லை. ப்ரஹ்மமென்னமோ பூர்ணமாயிருக்கிறது. 'இமு தத் ப்ரஹ்மாவேத்' அந்த ப்ரஹ்மம் ப்ரஹ்மத்தை அறிந்துகொண்டதா? அந்த ப்ரஹ்மம் ப்ரஹ்மத்தை அறியாமல் பூர்ணமாயிருக்குமாயின் நாமும் ப்ரஹ்மஞானமில்லாமல் ஏன் பூர்ணராகப்படாது என்கிற அபிப்ராயத்தினால் கேள்வி கேட்டிருக்க, அந்த கேள்விக்கு உத்தரரூபமாக ப்ரவ்ருத்த

மாயிருக்கும் 'ப்ரஹ்மவா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யத்திற்கு —இதம் ப்ரஹ்ம=பூர்வவாக்யத்தில் ப்ரஸ்னிக்கப்பட்ட ப்ரஹ்மமே முன்னிருந்தது. அந்த ப்ரஹ்மம் ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொண்டே பூர்ணமாயிருக்கிறதென்று அர்த்தம். பூர்ணத்வம் ப்ராப்தமாவதற்கு ப்ரஹ்மஞானம் காரணம். அதற்காக எல்லோரும் ப்ரஹ்மஞானத்தை ஸம்பாதிக்கவேண்டும் என்று தாத்பர்யம்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யத்திற்கு ஆசார்யர் சொன்னபடிக்கு அர்த்தமிருக்குமாயின் இவ்வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை எப்படி அறிவிக்கும்?

பி. வா:—அவ்வாக்யத்திற்கு ஆசார்யர் சொல்லியவாறு அர்த்தமல்ல. இதம்=இந்த சரீரத்தில் யார் காணப்படுகிறானோ அவன் (ஜீவன்), அக்ரே=ப்ரஹ்ம ஞானமுண்டாவதற்கு முன்னும், ப்ரஹ்ம வா=ப்ரஹ்மமாகவே இருந்தான், ஸர்வமாய் (பூர்ணமாய்) இருந்தான். ஆனால் அஜ்ஞானத்தினால் நான் ப்ரஹ்மமல்ல ஸர்வமல்ல என்று தன்னிடத்திலுண்டாயிருக்கும் ப்ரமத்தினால் நான் கர்த்தா, போக்தா, ஸுகீ, துக்கீ என்று தெரிந்துக் கொள்ளுகிறான். பரமார்த்தத: ப்ரஹ்மமாகவே இருக்கிறான். ஸர்வரூபனாகவே யிருக்கிறான். அத்தகைய அவஸ்தையில் தயாளுவான ஆசார்யர் 'நீ ஸம்ஸாரியல்ல ப்ரஹ்மமே' என்று போதிக்கவே அந்த ப்ரஹ்மம் தன்னை நான் ப்ரஹ்மமென்று அறிந்து கொண்டது என்கிற அர்த்தம் இவ்வாக்யத்திற்கிருப்பதினால் இவ்வாக்யத்தினால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யம் ஸித்தமாகிறது.

கோர்ட்:—ஶாஸ்த்ரிகளே! 'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத் ததாத்மானமேவாவேத்' என்கிற வாக்யத்திற்கு எவ்வளவு அர்த்தம் சொன்னீர் ஐயா! நீர் சொல்லிய அர்த்தத்தை போதிக்கும் பதம் அவ்வாக்யத்திலிருக்கிறதா?

பி. வா:—இந்த அர்த்தங்களை அறிவிக்கும் பதம் இவ்வாக்யத்தில் இல்லாவிடினும், நம் சங்கராசார்யரால் இவ்வாக்யத்திற்கு வ்யாக்யானம் செய்யும்போது இப்படி அர்த்தம் செய்யப்பட்டிருப்பதினால் நாமும் அப்படியே சொல்லுகிறோம்.

கோர்ட்:—மிஸ்டர் தாஸ்! இவ்விஷயத்தை விசாரியும்.

வா. வ:—அப்படியே ப்ரபோ! ஶாஸ்த்ரிகளே! ஜீவன் பரஹ்மமே யிருக்கிறான் என்கிற அர்த்தம் இவ்வாக்யத்திலிருக்கும் எந்த பதத்தினால் ஸித்தமாகிறது?

பி. வா:—'இதம்' 'ப்ரஹ்ம' என்கிற இரண்டு பதங்களால்—இதம் = இந்த ஜீவன், ப்ரஹ்ம வா ஆஸீத் = ப்ரஹ்மமாகவே யிருந்தான் என்று அர்த்தமாகிறபடியால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்தமாகிறது.

வா. வ:—'இதம்' என்கிற பதத்திற்கு 'ஜீவன்' என்று அர்த்தம் செய்வதற்கு ஆதாரமென்ன?

பி. வா:—'இதம்' என்கிற பதம் புத்திஸ்தமான (பூர்வத்தில் தெரிந்திருக்கும்) வஸ்துவை அறிவிப்பதா யிருப்பதால் 'இதம்' என்கிற பதத்திற்கு 'ஜீவன்' என்று அர்த்தமாகிறது.

வா. வ:—பூர்வவாக்யத்தினால் ப்ரஹ்மம் புத்திஸ்தமா யிருப்பதினால், இதம் ப்ரஹ்ம = இந்த ப்ரஹ்மம் என்று அர்த்தம் செய்வதற்கு வந்துகொண்டிருக்க, அதைவிட்டு, ஜீவனையே எடுத்துக் கொள்ளும் விஷயத்தில் ஆதாரமென்ன?

பி. வா:—'கிமு தத் ப்ரஹ்மாவேத்' என்கிற வாக்யத்தினால் அந்த ப்ரஹ்மம் யாது? அந்த ப்ரஹ்மம் எதைத்தெரிந்துகொண்டது? என்று இரண்டு கேழ்விகள் கேழ்க்கப்பட்டிருக்கிறது. அதில் அந்த ப்ரஹ்மம் யாது? என்கிற முதலாவது கேழ்விக்கு 'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யம் பதிலாக ப்ரவ்ருத்தமா யிருப்பதினால் அந்த கேழ்வி வாக்யம் 'இதம்' என்கிற பதத்திற்கு ஶரீரப்ரவிஷ்டனான ஜீவன் என்று அர்த்தம் செய்வதற்கு ஆதாரமாயிருக்கிறது.

வா. வ:—'கிமு தத் ப்ரஹ்மாவேத்' என்கிற வாக்யத்தில் எத்தனை பதங்களிருக்கின்றன?

பி. வா:—கிம், உ, தத், ப்ரஹ்ம, அவேத் என்று ஐந்து பதங்களிருக்கின்றன.

வா. வ:—இந்த ஐந்து பதங்களுக்கு அர்த்தமென்ன?

பி. வா:—தத் ப்ரஹ்ம= அந்த ப்ரஹ்மம், கிம் அவேத் = யாரைத் தெரிந்துகொண்டது என்று அர்த்தமாகிறது.

வா. வ:—இவ்வாக்யத்திலுல் கேழ்வி ஒன்றேயாகிறதா? இரண்டாகிறதா?

பி. வா:—ஒன்றேயாகிறது.

வா. வ:—ஆனல் இவ்வாக்யத்திலுல் இரண்டு கேழ்விகள் கேழ்க்கப்பட்டதென்று எப்படிச் சொன்னீர்?

பி. வா:—ஐயா! கிம், உ, தத், ப்ரஹ்ம என்கிற நாலு பதங்களை ஆவ்ருத்தி செய்துகொண்டு (மற்றொருதடவை சொல்லிக் கொண்டு) முதல்தடவை 'கிமு தத் ப்ரஹ்ம' என்றும், மற்றொரு தடவை 'கிமு தத் ப்ரஹ்ம அவேத்' என்றும் இரண்டு வாக்யங்களாகச் செய்துகொண்டால்—முதல் வாக்யத்திலுல் ப்ரஹ்மம் யாது என்றும், இரண்டாவது வாக்யத்திலுல் ப்ரஹ்மம் எதைத் தெரிந்துகொண்டதென்றும் இரண்டு கேழ்விகளாகின்றனவென்று சொன்னோம்.

வா. வ:—இப்படி ஆவ்ருத்தி செய்துகொண்டு இரண்டு வாக்யங்களிருக்கிறதாக தெரிந்துகொண்டு இரண்டு கேழ்விகளைச் செய்துகொள்ளுவதற்கு ஆதாரமென்ன?

பி. வா:—நம் சங்கராசார்யர் இப்படி ஆவ்ருத்தி செய்துகொண்டு இரண்டு வாக்யங்களாக்கி இரண்டு கேழ்விகளாக்கியிருக்கிறார்.

வா. வ:—அடிக்கடி வாதக்ரஸ்தமான (வழக்குள்ள) விஷயத்தில் ஆசார்யரின் பெயரைச் சொல்லவேண்டாம். வேரேதாகிலும் ஆதாரமிருக்குமாயின் சொல்லும்?

பி. வா:—வேறு ஆதாரமில்லை.

வா. வ:—இரண்டு வாக்யங்களாகச் செய்துகொண்டு இரண்டு கேழ்விகளாக்கிக்கொண்டபோதிலும்—அந்த ப்ரஹ்மம் யாது என்கிற கேழ்விக்கு 'ப்ரஹ்ம' 'இதம்' அந்த ப்ரஹ்மம் 'ததே

தத் ப்ரேய: புத்ராத்.....ஸர்வஸ்மாதந்தரதரம் யதயமாத்மா' என்கிற வாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கும்—எல்லோருக்கும் ப்ரியன், எல்லோரினுமிருப்பவன் என்கிற வாக்யங்கள் பதிலாய்க்கொண் டிருக்க—'இதம்' என்கிற பதத்தினால் ஜீவனை எடுத்துக்கொள்ளும் விஷயத்தில் முதலாவது கேழ்வி எப்படி ஆதாரமாகும்? (ஆதார மாகமாட்டாதல்லவா?)

பி. வா:—(பதிலில்லை.)

வா. வ:—'இதம்' பதத்தினால் ஜீவனையே எடுத்துக்கொள்ள வேண்டுமென்கிற விஷயத்தில் ஆதாரமில்லாததினால், இதம் = ஜீவன் ப்ரஹ்மமாகவே இருந்தானென்கிற அர்த்தம் ஸித்தமாகா ததினால் 'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யமும் ஜீவன் ப்ரஹ்மமே என்கிற விஷயத்தில் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்தைப்போலவே ஆதாரமாகிறதில்லையல்லவா?

பி. வா:—(பதிலில்லை).

வா. வ:—நீங்கள் (அத்வைதிகள்) சொல்லியவாறு ஜீவனிட வாக்யமென்று வைத்துக்கொண்டபோதிலும்—'தத்வமஸி' என் கிற வாக்யத்தைப் போலவே உம்மிட மதத்தில் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் அகண்டார்த்த போதகமே யல்லவா? (சித் என்கிற ஞானத்தை மாத்திரம் பிறக்கக்கூடியதே யல்லவா?)

பி. வா:—ஆம், அவ்வளவுதான்.

வா. வ:—அப்படியாயின் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்ய விஷயத்தில் இவ்வாக்யம் ஆதாரமெப்படியாகும்?

பி. வா:—இவ்வாக்யம் பரமதாத்பர்யத்தினால் ஐக்யத்தை போதிக்காவிடினும் அவாந்தர தாத்பர்யத்தினால் ஐக்யத்தை போதிக்கிறது.

வா. வ:—'அஹம்' என்கிற பதத்தினால் முக்யவ்ருத்தியினால் போத்யனான (அறியப்பட்ட) அந்த:கரண விசிஷ்டனான ஜீவ னுக்கு 'ப்ரஹ்ம' பதத்தினால் முக்யவ்ருத்தியினால் போத்யமான பூர்ணத்வாதி குணவிசிஷ்டமான ப்ரஹ்மத்துடன் ஐக்யமென்

னமோ பொருந்துவதில்லை. அவாந்தர தாத்பர்யத்தினுலாவது ஐக்யம் எப்படி பொருந்துகிறது?

பி. வா.—'அஹம் ப்ரஹ்ம' என்கிற பதங்களினுல் முக்ய வ்ருத்தியினுல் போத்யர்களான விபிஷ்டர்களான ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் பொருந்தாவிடினும், லக்ஷணுவ்ருத்தி (Secondary Meaning) யினுல் போத்யமான சுத்த சித்துக்களுக்கு ஐக்யம் போதிக்கப்படுகிறதென்பது பொருந்துகிறது.

வா. வ.—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யமும் 'அஹம்' பதத்தினுல் முக்ய வ்ருத்தியினுல் போதிதனுன ஜீவனுக்கு 'ப்ரஹ்ம' பதத்தினுல் முக்யவ்ருத்தியினுல் போதிதமான ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அறிவிக்கிறதில்லை. முக்யவ்ருத்தியைவிட்ட பிறகு—(1) அஹம்=நான், ப்ரஹ்ம=ப்ரஹ்மாதீனன் என்று ஏன் அர்த்தம் செய்க்கூடாது? (2) ஜீவப்ரஹ்மாக்களிடத்தில் அல்பஜ்ஞத்வ ஸர்வஜ்ஞத்வ ரூப விருத்த தர்மங்களிருப்பதினுல் அவைகளின் ஐக்யம் எப்படிப் பொருந்தும்? (3) ப்ரஹ்ம பதத்தினுலும், அஹம் பதத்தினுலும், சித்தின் உபஸ்திதி (ஞானம்) எப்படியுண்டாகும்? (4) சித் சித்தா அல்லவா என்கிற ஸம்ஸயம் யாருக்கும் இல்லாததினுல் சித் சித்தென்று அறிவிக்கவேண்டிய ஆவஸ்யகமில்லை யல்லவா? என்கிற இது முதலிய ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானமென்ன?

கோர்ட்:—மிஸ்டர் தாஸ்! இவ்வெல்லா விசாரங்களும் 'தத்வமஸி' வாக்யத்தின் விசாரணையில் நடந்திருக்கிறது. மறுபடியும் விசாரிக்கவேண்டிய ஆவஸ்யகமில்லை.

வா. வ:—(To the Court) அப்படியே மகாப்ரபோ! 'தத்வமஸி' என்கிற வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தைச் சொல்லுகிறதென்று சொல்லின் எந்தெந்த தோஷங்கள் வருகின்றனவென்று நாங்கள் முன் சொல்லியிருக்கிறோமோ அவ்வெல்லா தோஷங்களும் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திலும் வருகின்றனவென்பதைக் கோர்ட்டார் நோட்செய்ய வேண்டும்.

கோர்ட்:—எஸ், ஆகட்டும்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே ! 'அதாதஸ்ஸம்ப்ரத்தி:' என்கிற வேதவாக்யம் எந்த உபனிஷத்திலிருக்கிறது?

பி. வா:—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் ப்ருஹதாரண்யகம் முதல் அத்யாயம் ஐந்தாவது ப்ராஹ்மணத்தில் 4-வது மந்த்ரத்திலிருக்கிறது. இவ்வாக்யம் ஐந்தாவது ப்ராஹ்மணத்தில் பதினேழாவது மந்த்ரத்திலிருக்கிறது:

வா. வ:—* இவ்வாக்யத்திற்கு அர்த்தமென்ன?

பி. வா:—எந்த ஸமயத்தில் தந்தை அனிஷ்டங்களைக் காணுவதினாலும், ரோகம் முதலியவைகளினாலும் தான் மரணமடைகிறேனென்று அறிந்துகொண்டாரோ அந்த ஸமயத்தில் தன்னிட குமாரனைக் குறித்து நீ ப்ரஹ்மம், நீ யஜ்ஞம், நீ லோகம் என்று சொன்னான். அதற்கு குமாரன் நான் ப்ரஹ்மம், நான் யஜ்ஞம், நான் லோகம் என்று அங்கீகரித்தான் என்று அர்த்தம்.

வா. வ:—இவ்வாக்யத்தினால் குமாரனுக்கு (ஜீவனுக்கு) ப்ரஹ்மத்துடனும், யஜ்ஞத்துடனும், லோகத்துடனும் ஐக்யம் தோன்றுகிறதல்லவா?

பி. வா:—ஆபாதத: புத்ரனுக்கு (ஜீவனுக்கு) ப்ரஹ்மம், யஜ்ஞம், லோகம் இவைகளுடன் ஐக்யம் தோன்றிக்கொண்டிருந்த போதிலும்—சங்கராசார்யர் 'யத்வை கிஞ்சானூக்தம்' என்கிற உத்தரவாக்யத்தை அனுஸரித்து வேதபோதகமான 'ப்ரஹ்ம' பதத்திற்கு வேதாத்யயனமென்றும், 'த்வம்' என்கிற பதத்திற்கு 'த்வத்கர்த்ருகம்' (உன்னால் செய்யத்தகுந்தது) என்றும் அர்த்தம் செய்து, ப்ரஹ்ம=வேதாத்யயனம், த்வம்=உன்னால் செய்யத்தகுந்தது, யஜ்ஞ:=யஜ்ஞம், த்வம்=த்வத்கர்த்ருக:=உன்னால் செய்யத்தகுந்தது, லோக:=லோகங்கள், த்வம்=உன்னால்

---

* அதாத: ஸம்ப்ரத்தி: ப்ரேஷ்யன் மன்யதேத புத்ரமாஹ த்வம் ப்ரஹ்ம, த்வம் யஜ்ஞ:, த்வம் லோக: இதி. ஸ புத்ர: ப்ரத்யாஹ. அஹம் ப்ரஹ்ம, அஹம் யஜ்ஞ:, அஹம் லோக இதி யத்வை கிஞ்சானூக்தம் தஸ்ய ஸர்வஸ்ய ப்ரஹ்மேத்யேகதா ஏவைகே ச யஜ்ஞாஸ்தேஷாம் ஸர்வேஷாம் யஜ்ஞ இத்யேகதா ஏவைகே ச லோகாஸ்தேஷாம் ஸர்வேஷாம் லோக இத்யேகதா। (ப்ரு. 1-5-17).

ஐயிக்கத்தகுந்தது என்று அர்த்தம் செய்திருக்கிறார். ஆகையால் 'த்வம்' 'ப்ரஹ்ம' முதலிய பதங்களினால் ஐக்யம் தோன்றினும்—லக்ஷணாவ்ருத்தியினால் 'ப்ரஹ்ம' முதலிய பதங்களுக்குத் தோன்றிய பதார்த்தங்களுக்கு 'த்வம்' பதத்தினால் போத்யமான பதார்த்தத்துடன் பேதமே ஸித்தமாகிறதென்று சொல்லியிருப்பதினால் இந்த ஶ்ருதி 'ப்ரஹ்ம' பதத்தினால் போத்யமான வஸ்துவுக்கு 'அஹம்' 'த்வம்' பதங்களால் போத்யமான வஸ்துக்களுக்கு ஐக்யத்தை போதிக்கிறதில்லை.

வா. வ:—'அஹம் ப்ரஹ்ம' என்கிற உத்தர வாக்யத்திற்கு சங்கராசார்யர் அர்த்தம் செய்திருப்பதைப்போல் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கும், அஹம் = நான், ப்ரஹ்ம = ப்ரஹ்மாதீனன், ப்ரஹ்ம ஜன்யன், ப்ரஹ்மாதாரன் இது முதலிய அர்த்தங்களை செய்தபக்ஷத்தில் பொருந்துகிறதல்லவா?

பி. வா:—பொருந்துகிறது.

---

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

---

வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! "ததாஹுர் ப்ரஹ்மவித்யயா ஸர்வம் பவிஷ்யந்தோ மனுஷ்யா மன்யந்தே கிமு தத் ப்ரஹ்மாவேத் யஸ்மாத் தத் ஸர்வமபவத் இதி. ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத். ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத் தத் ஸர்வமபவத்" (ப்ரு. 1-5-3, 4) என்கிற வாக்யத்திலிருக்கும் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் பரமாத்மாவின் வாக்யமாயிருக்கிறது. எப்படி ராஜா தான் 'நான் ராஜனாயிருக்கிறேன்' என்று சொல்லின், ப்ரஜைகள் ராஜாக்களாகமாட்டார்களோ அப்படியே பரமாத்மா (பரப்ரஹ்மம்) தன்னை 'நான் ப்ரஹ்மமிருக்கிறேனென்று தெரிந்து கொண்டான்' என்று சொன்னமாத்திரத்தினால் ஜீவன் ப்ரஹ்மமென்று ஸித்தமாகிறதில்லை.

மற்றும்—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கு ஜீவன் 'நான் ப்ரஹ்மமாயிருக்கிறேன் என்று அறிந்துகொண்டான், என்று அர்த்தம் செய்வதினாலேயே எல்லா ஜீவர்களும் தங்களை ப்ரஹ்மமென்று தெரிந்துகொண்டு ஸர்வபாவத்தை (பூர்ணத்வத்தை) அடைந்தனர் என்று ஸித்தமாய்க்கொண்டிருக்க, முன் தேவதைகள் அறிந்துகொண்டனர், ரிஷிகள் அறிந்துகொண்டனர், மனிதர்கள் அறிந்துகொண்டனர் என்று சொல்லும் வாக்யங்கள் வ்யர்த்தமாகின்றன. ஆகையால் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கு ஜீவன் தன்னை நான் ப்ரஹ்மமிருக்கிறேன் என்று அறிந்துகொண்டானென்று அர்த்தம் செய்வது பொருந்தாது.

'தத் இமவேத் யஸ்மாத் தத் ஸர்வமபவத்' என்கிற பூர்வ வாக்யத்தில்—ப்ரஹ்மம் பூர்ணமாயிருக்கிறது. அதற்கு ப்ரஹ்ம ஞானமுண்டா? என்று கேட்டதற்கு பதிலாக 'ப்ரஹ்ம வா இத மக்ர ஆஸீத்.........அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் ப்ரவ்ருத்தமாயிருக்கிறபடியால் இவ்வாக்யத்தில் ஜீவனின் ப்ரஸக்தியே இல்லை. ஆகையால் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் ஜீவனால் சொல்லப்பட்ட வாக்யமென்று சொல்லமுடியாது. ப்ரஹ்மத்தின் வாக்யமென்றே சொல்லவேண்டும். 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கு முன்னிருக்கும் (உத்தரத்திலிருக்கும்) 'யோ யோ தேவானாம்' என்கிற வாக்யம் தேவதைகளுக்கும், ருஷிகளுக்கும், மனுஷ்யர்களுக்கும் ப்ரஹ்மத்துடன் பேதத்தை அறிவிக்கிறது. மற்றும் தேவானாம், ருஷீணாம், மனுஷ்யாணாம் என்று பஹுவசனபதங்களிருப்பதினால் தேவதைகளிலும், ருஷிகளிலும், மனிதர்களிலும் பரஸ்பரம் பேதத்தை அறிவிக்கிறதென்கிற விஷயத்தைக் கோர்ட்டார் நோட்செய்யவேண்டுமாய்க் கோருகிறோம்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

---

பி. வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! 'தஹாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம்—தத் = அந்த ஜீவன், ஆத்மானமேவ = தன்னையே, அஹம்ப்ரஹ்மாஸ்மி = நான் ப்ரஹ்மமிருக்கிறேன் என்று, அவேத் = அறிந்து கொண்டது என்று சொல்லிக்கொண்டிருப்பதினால் ஜீவன் ப்ரஹ்மமே என்று ஸித்தமாகிறது.

'ததாஹுஃ ப்ரஹ்மவித்யயா' என்கிற வாக்யத்தில் ப்ரஹ்ம வித்யையினால் பூர்ணதை யுண்டாகிறதென்று எதைத் தெரிந்து கொள்ளுகிறார்களோ அவ்விஷயத்தில் விசாரம் செய்கிறார்கள்—அந்த ப்ரஹ்மம் யாது? ஸர்வபாவத்திற்கு (பூர்ணதையைக் குறித்து) ப்ரஹ்மஞானம் காரணமாயின், ப்ரஹ்மத்திற்கு ஸர்வ பாவம் (பூர்ணதை) இருப்பதினால் அது (ப்ரஹ்மம்) எதை அறிந்துகொண்டு பூர்ணமாயிற்று? என்று (அந்த ப்ரஹ்மம் எதையும் தெரிந்துகொள்ளாமல் பூர்ணமாயிருக்குமாயின் நாமும் ப்ரஹ்மத்தை அறியாமலே பூர்ணராவோம் என்கிற அபிப்ராயத்தினால்) கேள்வி கேட்டதற்கு முதலில்—அந்த ப்ரஹ்மம் யாது? என்கிற கேள்விக்கு பதிலளிப்பதற்காக 'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யம் ப்ரவ்ருத்தமாயிருக்கிறது. இதம் = எல்லா ஶரீரங்களிலும் ப்ரவேஶித்திருப்பவனாய் யார் காணப் படுகிறானோ அவன் (ஜீவன்), அக்ரே = ப்ரஹ்மஞானமாவதற்கு முன்னும், ப்ரஹ்மவா = ப்ரஹ்மைவ = ப்ரஹ்மமாகவே, ஆஸீத் = இருந்தான். மற்றும் ஸர்வரூபனாகவு மிருந்தான். ஆயினும் அஞ்ஞானத்தினால் நான் ப்ரஹ்மமல்ல ஸர்வரூபனுமல்ல என்று ப்ராந்தனாய் நான் கர்த்தா, நான் போக்தா, நான் ஸுகீ, நான் துக்கீ, நான் ஸம்ஸாரி என்று அறிந்துகொள்ளுகிறானே யொழிய, வாஸ்தவமாக ஸம்ஸாரி விலக்ஷணனாய் ப்ரஹ்மரூபனும் ஸர்வரூபனுமாகவே இருக்கிறான் என்று 'அந்த ப்ரஹ்மம் யாது' என்கிற கேள்விக்கு பதில் சொல்லி, 'அந்த ப்ரஹ்மம் எதை அறிந்துகொண்டு பூர்ணமாயிற்று?' என்கிற இரண்டாவது கேள்விக்கு பதிலளிப்ப

தற்காக—'ததாத்மானமேவாவேத்' என்கிற வாக்யம் ப்ரவ்ருத்த மாயிருக்கிறது. தத் = அந்த ஜீவன், தயாளுவான ஆசார்யரின் 'நீயே ப்ரஹ்மமும் ஸர்வஜ்ஞனுமாயிருக்கிறாய்' என்கிற உபதேசத்தினால் தன்னையே நான் ப்ரஹ்மமிருக்கிறேன் என்று அறிந்து கொண்டான். அந்த ஞானத்தினால், ஸர்வம் அபவத் = ஸர்வ பாவத்தை அடைந்தான். யத்யபி ஸர்வபாவம் முன்னிருந்ததே யாயினும், நான் ஸர்வஜ்ஞனல்ல என்கிற ப்ராந்தி யுண்டாயிருந்ததினால் அந்த ப்ராந்தி நிவ்ருத்தியாயிற்று (நான் ஸர்வஜ்ஞனல்ல என்கிற ப்ராந்தி தொலைந்தது) என்று இவ்வாக்யத்திற்கு அர்த்தமிருப்பதினால் இவ்வாக்யம் 'அஹம்' என்கிற பதத்தினால் போத்யனான ஜீவனுக்கு 'ப்ரஹ்ம' பதத்தினால் போத்யனான பரமாத்மாவுடன் 'அஸ்மி' என்கிற பதத்தினால் அபேதத்தை போதிக்கிற படியால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யம் ப்ரதிபாதிக்கிறது.

"யோ யோ தேவானாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ ததபவத் அதர்ஷீணாம், அத மனுஷ்யாணாம்" என்கிற வாக்யம் ப்ரஹ்மம் (பரமாத்மா) தேவதைகள், ரிஷிகள், மனிதர்கள் என்று வெவ்வேறாகச் சொல்லிக்கொண்டிருப்பதினால் அவர்களில் பேதம் போதிதமாகிறதென்று சங்கராசார்யர் சொல்லியிருப்பதினால், இவ்வாக்யத்தினால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதம் ஸித்தமாகிறது" என்ற வாதி வக்கீல் சொல்லுவது ஸரியல்ல. ஏனெனில்—

யத்யபி—நம் சங்கராசார்யர் இவ்வாக்யத்தினால் பேதம் போதிதமாகிறதென்று (அறிய வருகிறதென்று) சொல்லியிருக்கிறார். ஆயினும், அவ்வாக்யம் அவரிட ஸித்தாந்த வாக்யமல்ல, பூர்வபக்ஷ வாக்யம். ஸித்தாந்த வாக்யத்தில் 'புர: புருஷ ஆவிசத்' என்கிற வாக்யம் ப்ரஹ்மம் எல்லாவற்றிலும் ப்ரவேசித்திருக்கிறதென்று ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் அபேதம் சொல்லிக்கொண்டிருப்பதினால், இவ்வாக்யத்தினால் பேதம் போதிதமாய்க்கொண்டிருந்தபோதிலும், அந்த பேதம் பொய்யென்று அறியவேண்டும்; நிஜமென்று அறியக்கூடாதென்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார். சங்கராசார்யரின் இந்த ஸமாதான வாக்யத்தைப் பார்க்காமலே, "சங்கராசார்யர் இவ்வாக்யத்தினால் பேதம்

போதிதமாகிறதென்று சொல்லியிருக்கிறார்" என்று சொல்லுவது ஜனங்களை வஞ்சனை செய்வதற்காகவே என்று அறியவேண்டும்.

"ததாத்மானமேவாவேத், அஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத் தத் ஸர்வமபவத்" என்கிற வாக்யத்திற்கு—தத் = அந்த பரமாத்மா தன்னைக் குறித்து நானே ப்ரஹ்மமென்று அறிந்து கொண்டபடியால் ஸர்வபாவத்தை (பூர்ணத்வத்தை) அடைந்ததென்று சொல்லுவதும் ஸரியல்ல. ஏனெனின்—ப்ரஹ்மத்திற்கு எப்போதும் பூர்ணதையிருப்பதினால் ஞானத்தினால் பூர்ணதை ப்ராப்தமாயிற்றென்று சொல்லுவது பொருந்தாது.

'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யத்தில்—இதம் = இந்த ஸர்வஶரீரங்களிலும் ப்ரவிஷ்டனாயிருக்கும் ஜீவன், அக்ரே = முன் காலத்திலும் ப்ரஹ்மமாகவே இருந்ததென்று சொல்லியிருப்பதினால் 'தத்' என்கிற பதத்தினால் அந்த ஜீவனையே எடுத்துக்கொள்ளவேண்டுமென்று ஸித்தமாகிறது. ஆகையால், தத் = அந்த ஜீவன் தன்னையே ப்ரஹ்மமென்று அறிந்து கொண்டது என்றே அர்த்தமாகிறது. ஆகையால்—தத் = ப்ரஹ்மம் தன்னையே நான் ப்ரஹ்மமென்று அறிந்து கொண்டது என்று சொல்லுவதும் அயுக்தமாகிறது.

---

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! ப்ரஹ்மவித்யையினால், ஸர்வம் = பூர்ணத்வம் ப்ராப்தமாகிறதென்று மனிதர்களைதை தெரிந்துகொள்ளுகிறார்களோ அவ்விஷயத்தில் விசாரம் செய்கிறார்களென்று சொல்லி, பிறகு சொல்லிய 'கிமு தத் ப்ரஹ்மாவேத்' என்கிற வாக்யத்திற்கு அந்த ப்ரஹ்மம் எதைத் தெரிந்துகொண்டது என்று அர்த்தமாய்க் கொண்டிருக்க, அவ்வாக்யத்திலிருக்கும் கிம்—உ—தத்—ப்ரஹ்ம என்கிற நாலு பதங்களையும் ஆவ்ருத்தி செய்துகொண்டு (இரண்டுதடவை எடுத்துக் கொண்டு) இரண்டு கேழ்விகளாக்குவதற்குக் காரணமில்லை. தவிற ப்ரஹ்மம் 'வித்தாத் ப்ரேய:...ஸர்வஸ்மாதந்தா தரம்'(ப்ரு. 1-5-2.)

இது முதலிய பூர்வவாக்யங்களினால் த்ரவ்யத்தைக் காட்டிலும் பிரியனானவன்.........எல்லாவற்றைக்காட்டிலும் அதிக ப்ரியனானவன் என்று சொல்லியிருப்பதினால் அந்த ப்ரஹ்மம் யாது என்று கேழ்ப்பதற்கே அவகாசமில்லை.

'இதம்' என்கிற பதத்தினால் பூர்வவாக்யத்தினால் ஸித்தமாயிருக்கும் வஸ்துவையே எடுத்துக்கொள்ளவேண்டியிருப்பதினால் 'புத்ராத் ப்ரேய:' இத்யாதி வாக்யங்களினால் அறிவிக்கப்பட்ட எல்லாவற்றைக் காட்டிலும் பிரியனான பரமாத்மாவை எடுத்துக் கொள்ளுவதற்கு வருவதினாலும்; ஜீவனையே எடுத்துக்கொள்ள வேண்டும் என்கிற விஷயத்தில் ஆதாரமில்லாததினாலும் 'அந்த ப்ரஹ்மம் யாரைத்தெரிந்துகொண்டது' என்று ஒரே கேழ்வி இருப்பதினால் அந்த கேழ்விக்கு 'ப்ரஹ்மமே இருந்தது, அது தன்னையே தெரிந்துகொண்டது' என்று அர்த்தமாய்க்கொண்டிருப்பதினாலும் மேற் சொல்லப்பட்டிருக்கும் நாலுபதங்களை இரண்டுதடவை எடுத்துக்கொண்டு இரண்டு கேழ்விகளாக்கிக் கொள்ளுவதும் யுக்தமல்ல.

அப்படி இரண்டுகேழ்விகளாக்கிக் கொண்டபோதிலும்—'தத் ப்ரஹ்ம கிம்' அந்த ப்ரஹ்மம் யாது? (எந்த தர்மத்துடன் கூடியது) என்கிற கேழ்விக்கு அந்த ப்ரஹ்மம் இத்தகையதென்று பதில் கூறவேண்டியிருக்க—அதை விட்டு, 'ஸர்வ ஶரீரப்ரவிஷ்டனான ஜீவன் ப்ரஹ்மமே' என்று பதில் கூறுவது (ஜீவனைக்குறித்து ப்ரஹ்மத்வத்தைச் சொல்லுவது) யுக்தமல்ல. 'இதம்' என்கிற பதம் ப்ரமாணத்தினால் ஸித்தமான வஸ்துவையே போதித்துக் கொண்டிருப்பதினால் — அப்பதத்தினால் ஜீவனையே எடுத்துக் கொள்ளவேண்டுமென்கிற விஷயத்தில் ஆதாரமில்லை.

பரமாத்மாவின் ஶரீராந்த: ப்ரவேஶம் பொய்யென்றும், பரமாத்மா ப்ரவேஶித்திருக்கிறாரென்று சொல்லுவதில் ஶ்ருதிக்கு தாத்பர்யமில்லை என்றும் சங்கராசார்யர் 2-6வது தைத்திரீய பாஷ்யத்திலும், 2-5-18வது ப்ருஹதாரண்யக பாஷ்யத்திலும் சொல்லியிருப்பதினால் 'இதம்' என்கிற பதத்திற்கு ஶரீரப்ரவிஷ்டனான ஜீவசைதன்யமென்று அர்த்தம் செய்வது அவரிட மதத்தின்படிக்கே அயுக்தமாகிறது.

தவிற—'ய ஆத்மனி திஷ்டன்' 'யோ விஜ்ஞானே திஷ்டன்' 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' 'ப்ருதிவ்யா அந்தர:' 'யோப்ஸு திஷ்டன்' 'ஸோஜுப்ரவிஷ்டோ பகவான்' இத்யாதி வாக்யங்களில் பரமாத்மா ப்ருதிவ்யாத்யபிமானி சேதனங்களில் நியாமகனுயிருக்கிறனென்று சொல்லியிருப்பதினுல் 'இதம்' என்கிற பதத்திற்கு ஸர்வஶரீரப்ரவிஷ்டனுன என்கிற அர்த்தத்தை வைத்துக்கொண்டபோதிலும்—'இதம்' என்கிற பதத்தினுல் ஸர்வாந்தர்யாமியான பரமாத்மாவே போதிதனுய்க்கொண்டிருப்பதினுலும், அவ்வாக்யத்தின் பூர்வத்திலிருக்கும் 'ஸர்வஸ்மாதந்தரதரம்' என்கிற வாக்யத்தினுல் எல்லாவற்றிலு மிருப்பவன் பரமாத்மாவே என்று சொல்லியிருப்பதினுலும் 'இதம்' ஸர்வாந்தர்யாமியான பரமாத்மா ப்ரஹ்மமே என்று அர்த்தமாகிறது. 'ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யத்திற்கு, இதம் = ஸர்வஶரீர ப்ரவிஷ்டனுன ஜீவன் ப்ரஹ்மம் என்கிற அர்த்தம் ஆகாததினுல் உத்தரத்திலிருக்கும் (முன்னிருக்கும்) 'ததாத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கும், தத் = அந்த பரமாத்மா தன்னையே நான் ப்ரஹ்மமென்று தெறிந்துகொண்டதென்றே அர்த்தமாகிறபடியால், ராஜா 'நான் ராஜா' என்று தெரிந்துகொண்ட மாத்ரத்தினுல் ப்ரஜைகள் எப்படி ராஜாக்களாகிறதில்லையோ அப்படியே ஜீவன் ப்ரஹ்மமாகிறதில்லை.

சங்கராசார்யரும் இவ்வுபனிஷத்பாஷ்யத்தில் 'தத்' என்கிற பதத்தினுல் ப்ரஹ்மத்தையே எடுத்துக்கொண்டு, அந்த ப்ரஹ்மம் தன்னை 'நான் ப்ரஹ்மமிருக்கிறேன்' என்று தெறிந்துகொண்டது என்றே அர்த்தம் செய்திருப்பதினுல் 'தத்' என்கிற பதத்தினுல் ஜீவனை எடுத்துக்கொள்ளுவது அயுக்தமாகிறது.

'இதம்' பதத்தினுல் ஶரீரத்தில் ப்ரவிஷ்டனுன ஜீவனை எடுத்துக்கொண்டு, ஜீவன் ப்ரஹ்மமாகவே இருந்தது. ஆயினும்—அஞ்ஞானத்தினுல் நான் ப்ரஹ்மமல்ல என்று ப்ராந்தனுய் நான் கர்த்தா என்று தன்னிடத்தில் கர்த்ருத்வத்தை ஆரோபித்துக்கொண்டு துக்கத்தை யனுபவிக்கிறன். அப்படி யிருக்க—தயாளுவான ஆசார்யர் 'நீயே ப்ரஹ்மம், நீ ஸர்வரூபனுயிருக்கிறய்,

உனக்கு காணப்படும் கர்த்ருத்வம், போக்த்ருத்வம் முதலிய ஸம்ஸாரம் பொய்' என்று உபதேசித்தனர் என்கிற அர்த்தத்தை போதிக்கும் பதமில்லாமலிருக்க தம்மிட மனதிற்கு வந்தபடி சங்கராசார்யர் சொல்லுவது யுக்தமல்ல.

மற்றும்—'ப்ரஹ்ம ஸத்யம் ஜகன் மித்யா' என்கிற அத்வைத மதத்தின்படிக்கு ப்ரஹ்மத்தில் ப்ரமத்திற்கு காரணமில்லாததினால் ப்ரஹ்மத்திற்கு ஜீவபாவத்தின் (நானே ஜீவன் என்கிற) ப்ரமம் பொருந்துவதில்லை. கர்த்ருத்வாதிகள் கல்பிதமென்கிற விஷயத்தில் ஆதாரமில்லாததே யன்றி, ஶ்ருதி, அனுபவம் முதலியவைகளால் கர்த்ருத்வாதிகள் பரமார்த்த ஸத்யமானவைகளென்று ஸித்தமாகின்றன. ப்ரஹ்மத்திற்கு நான் ப்ரஹ்மமல்ல, ஸர்வரூபமல்ல என்கிற ப்ராந்தி உண்டாவதற்குக் காரணமில்லாததினால், 'ஸர்வமபவத்' அந்த ஸர்வபாவத்தின் ப்ராந்தி நிவ்ருத்தமாயிற்று என்று சொல்லுவதும் பொருந்துவதில்லை.

அத்வைதமதத்தின்படிக்கு கடபடாதிகளெல்லாம் மித்யையே யாகையால் ஸத்யமான ப்ரஹ்மத்திற்கு மித்யையான ஸர்வபாவம் எப்பொழுதும் வருவதில்லை. (பொய்யான கடபடாத்யனேக பதார்த்த ஸ்வரூபமாவதில்லை.) இது முதலிய அநேக காரணங்களினால் 'இதம்' என்கிற பதத்தினால் ஜீவனை எடுத்துக்கொண்டு ஜீவன் 'ப்ரஹ்ம ஆஸீத்' ப்ரஹ்மமாகவே இருந்தான், அந்த ஞானத்தினால் ஸர்வபாவத்தை யடைந்தான் என்று அர்த்தம் செய்வது யுக்தமல்ல.

'யோ யோ தேவானாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ ததபவத்' இது முதலிய வாக்யங்கள் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை ப்ரதிபாதிக்கிறது. இவ்விஷயத்தை சங்கராசார்யரும் அங்கீகரித்திருக்கிறார். ஆகையால் இவ்வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை ப்ரதிபாதிக்கிறதென்று ஸித்தமாகிறது.

'புர: புருஷ ஆவிஶத்' என்கிற வாக்யத்தில் ப்ரஹ்மத்திற்கு ப்ரவேஶம் சொல்லுவதில்லை. ப்ரவேஶம் பொய்யென்று ஶங்கராசார்யர் தாமே சொல்லி, மறுபடியும் இந்த ஶ்ருதியினால்—'ப்ரஹ்மமே ஜீவரூபத்தினால் ப்ரவேஶித்திருப்பதினால் ஜீவன்

ப்ரஹ்மமேயாகையால் ஜீவன் ப்ரஹ்மத்தைவிட பின்னன் என்று சொல்லும் வாக்யம் மித்யாபேதத்தை அறிவிக்கிறது' என்று சொல்லுவது யுக்தமல்ல. ஆகையால் 'யோயோ தேவானும்' என்கிற வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை அறிவிக்கிறது என்கிற சங்கராசார்யரின் வாக்யம் பூர்வபக்ஷமாயிருந்த போதிலும்—'புர: புருஷ ஆவிஶத்' என்கிற வாக்யத்தினுல் ப்ரவேஶம் ஸித்தமாய், ஐக்யம் ஸித்தமாகாததினுல் அந்த பூர்வபக்ஷம் ஸித்தாந்தமேயாகிறது. 'புர: புருஷ ஆவிஶத்' என்கிற வாக்யத்தினுல் பேதம் பாதிதமாகிறதென்று வைத்துக்கொண்ட போதிலும்—'யோ யோ தேவானும் ப்ரத்ய புத்யத' என்கிற வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதத்தை அறிவிக்கிறதென்கிற விஷயத்தில் விவாதமில்லை.

நித்யபதார்த்தங்களுக்கும் ப்ரயோஜ்ய ப்ரயோஜகபாவமிருப்பதினுல் நித்யமாயிருக்கும் பூர்ணதைக்கு நித்யமாயிருக்கும் ஞானம் ப்ரயோஜகமாகிறது. ஆகையால் ஞானத்தினுல் பூர்ணனுயினனென்று சொல்லுவது யுக்தமேயாகிறது.

'ப்ரஹ்மவா இதமக்ர ஆஸீத்' என்கிற வாக்யத்திலிருக்கும் 'இதம்' என்கிற பதத்தினுல் ஜீவனை எடுத்துக்கொள்ளவேண்டுமென்கிற விஷயத்தில் ஆதாரமில்லாததினுல், அதற்கு முன்னிருக்கும் 'ததாத்மானமேவாவேத்' என்கிற வாக்யத்திலிருக்கும் 'தத்' என்கிற பதத்தினுல் ஜீவனை எடுத்துக்கொள்ளுவது அயுக்தமாகிறது. சங்கராசார்யரும் 'தத்' என்கிற பதத்தினுல் ப்ரஹ்மத்தையே எடுத்துக்கொண்டிருக்கிறூர். மற்றும் 'இதமக்ரே' என்று ஒரேபதமிருப்பதினுல் 'இதமக்ரே' என்கிற பதத்திற்கு 'அஸ்ய அக்ரே' என்று விக்ரஹம் செய்துகொள்ளுவதினுல் இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு பூர்வம் என்று அர்த்தமாகிறது. அல்லது 'இதம்' என்று பின்னபதம் செய்தபோதிலும் 'ஸுபாம் ஸுலுக்' என்கிற ஸூத்ரத்தினுல் ஆறாம் வேற்றுமை ஸ்தானத்தில் 'ஸு' ஆதேஶம் வந்திருப்பதினுல் 'இதம்' என்கிற பதத்திற்கு ஷஷ்டீ விபக்த்யந்தபதத்தின் (ஆறும் வேற்றுமைபதத்தின்) அர்த்தமாகலாம். அத:='ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத் ததாத்மானமேவா

வேத் அஹம் ப்ரஹ்மாஸ்மீதி' என்கிற வாக்யம் ஜகத்துக்கு பூர்வத்தில் ப்ரஹ்மமே இருந்தது. அது நான் ப்ரஹ்மமிருக்கிறே னென்று தெரிந்து கொண்டது என்று அர்த்தமாகிறபடியால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அறிவிக்காததேயல்லாமல் —ப்ரஹ்மம், தேவகணம், ருஷிகள், மனுஷ்யாள் என்று வெவ்வேறு பதார்த்தங்களைச் சொல்லிக்கொண்டிருப்பதினால் இவ்வாக்யம் பேதத்தையே அறிவிக்கிறது.

'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யம் ப்ரஹ்மத்தின் வாக்யமாயிருப்பதினால், நான் ப்ரஹ்மமென்று ப்ரஹ்மம் தெரிந்து கொண்டதினால் ஜீவன் ப்ரஹ்மமாவதில்லை. ஜீவனின் வாக்ய மென்று வைத்துக்கொண்டபோதிலும்—இவ்வாக்யம் 'தத்வமஸி' என்கிற வாக்யத்தைப்போலவே அகண்டார்த்த போதகமாகையி னால் (சித் என்கிற போதத்தை மாத்திரம் உண்டாக்கக்கூடிய தாகையால்) இவ்வாக்யத்தினால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யம் ஸித்தமாகிறதில்லை. ஸகண்டார்த்த போதகமென்று வைத்துக் கொண்டபோதிலும்—விருத்த தர்மங்களுடன் கூடியிருக்கும் அக்னி ஜலங்களுக்கு ஐக்யமெப்படிப் பொருந்துகிறதில்லையோ அப்படியே 'அஹம்' பதத்தினால் முக்யவ்ருத்தியினால் போத்ய மான அல்பஜ்ஞத்வாதி தர்மவிசிஷ்டமான ஜீவசைதன்யத்திற்கு ப்ரஹ்மபதத்தினால் முக்யவ்ருத்தியினால் போத்யமான பூர்ணத் வாதி குணவிசிஷ்டமான ப்ரஹ்மசித்துடன் ஐக்யம் பொருந்துவ தில்லை.

லக்ஷணவ்ருத்தியினால் இருவரிடத்திலிருக்கும் தர்மங்களின் போதம் அந்த பதத்தினால் ஆகாவிடினும், அவைகளில் விருத்த தர்மங்களிருப்பதினால் ஐக்யம் பொருந்துவதில்லை. ஶ்ருதி முத லிய ப்ரமாணங்களினால் ஸித்தமாயிருக்கும் ஸர்வஜ்ஞத்வாதி தர்மங்கள் மித்யை என்பதும் பொருந்தாது. அப்படி மித்யை என்று சொல்லின் பௌத்தர்களைப்போல் வேதத்திற்கு அப் ராமாண்யத்தை ஒப்புக்கொள்ளவேண்டியதாகும். வேதத்திற்கு அப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்ளுவது வைதிகர்களுக்கு யுக்த மல்ல. சித் முதலில் அறியப்படாததாகையால் பூர்வத்தில் சொல்லி

யிருப்பதைப்போல் லக்ஷணாவ்ருத்தியினால் ஸூத்தசித்தின் போதம் (அறிவு) உண்டாவதற்கு ஸாத்யமில்லை. இவைகளே முதலிய 'தத்வமஸி' வாக்ய விசாரகாலத்தில் சொல்லிய அநேக காரணங்களினால் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற இவ்வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அறிவிக்கிறதில்லை.

இவ்வுபனிஷத்தில் 'அதாத: ஸம்ப்ரத்தி:' இது முதலிய வாக்யங்களில்—'அஹம் ப்ரஹ்ம' 'த்வம் ப்ரஹ்ம' 'அஹம் யஜ்ஞ:' 'த்வம் யஜ்ஞ:' 'அஹம் லோக:' 'த்வம் லோக:' என்கிற வாக்யங்களில் 'த்வம்' 'அஹம்' என்கிற பதங்களினால் போத்யனான ஜீவனுக்கும் 'ப்ரஹ்ம' பதத்தினால் போத்யமானவஸ்துவுக்கும் ஸாமானாதிகரண்யமிருப்பதினால்(ஏக விபக்த்யந்த பதங்களிருப்பதினால்) ஐக்யம் போதமாய்க் கொண்டிருந்தபோதிலும், அது பாதிதமாய்க் கொண்டிருப்பதினால் அதைவிட்டு 'த்வம்' 'அஹம்' என்கிற பதங்களுக்கு நீ நான் என்கிற அர்த்தம் மாத்திரம் முக்ய வ்ருத்தியினால் ஆய்க்கொண்டிருந்த போதிலும், லக்ஷணாவ்ருத்தியினால் 'அஹம்' என்கிற பதத்திற்கு, மத்கர்த்ருகம் = என்னால் செய்யப்படும் என்றும், 'த்வம்' என்கிற பதத்திற்கு, த்வம் = த்வத்கர்த்ருகம் = உன்னால் செய்யப்படும் என்றும், 'ப்ரஹ்ம' என்கிற பதத்திற்கு வேதம் என்று மாத்திரம் அர்த்தமாய்க் கொண்டிருந்தபோதிலும், லக்ஷணாவினால் 'ப்ரஹ்ம' வேதாத்யயனம் என்று அர்த்தம் செய்துகொண்டு, ப்ரஹ்ம = வேதாத்யயனம், த்வம் = த்வத்கர்த்ருகம் = உன்னால் செய்யப்பட வேண்டியது. (என்னால் இன்றை வரைக்கும் எந்த வேதாத்யயனம் செய்யப்பட்டதோ, செய்யப்பட வேண்டியிருந்ததோ அவைகளே, இத: பரம் = இனிமேல், த்வம் = நீ செய்யவேண்டியது.) 'ப்ரஹ்ம அஹம்' ப்ரஹ்ம = வேதாத்யயனம், அஹம் = நான் செய்கிறேன். 'த்வம் யஜ்ஞ:, த்வம் லோக:' என்கிற வாக்யங்களுக்கும் நான் இன்றைய வரைக்கும் எந்த யஜ்ஞம் செய்திருக்கிறேனோ, செய்யப்பட வேண்டியிருக்கிறதோ, மற்றும் அதினால் எந்த ஸ்வர்க்காதி லோகங்களை ஸம்பாதித்திருக்கிறேனோ, ஸம்பாதிக்க வேண்டியிருக்கிறதோ அந்த யஜ்ஞத்தை இனிமேல், த்வம் = நீ செய்யவேண்டியது. மற்றும் அதனால் ஸ்வர்க்காதி

லோகங்களை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டியது என்கிற அர்த்தத்தை சங்கராசார்யரே செய்திருக்கிறார். வஸ்துத: அவ்வாக்யத்திற்கு அப்படியே அர்த்த மிருப்பதினால் இவ்வுபனிஷத்திற்கு இப்படி அர்த்தம் செய்வது வழக்கமிருப்பதினாலும், ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் அபேதம் பாதிதமாய்க் கொண்டிருப்பதினாலும் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற வாக்யத்திற்கு, அஹம்=நான், ப்ரஹ்ம=ப்ரஹ்மாதீனன், ப்ரஹ்மாச்ரிதன், ப்ரஹ்மத்தினால் பிறந்தவன் என்கிற அர்த்தங்களை எடுத்துக்கொள்ளுவது யுக்தமாகிறது. மற்றும் இதர ப்ரமாணங்களுக்கு அவிருத்தமுமாகிறது. ஆகையால் இவ்வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை போதிக்காமல் பேதத்தையே போதிக்கிறதென்கிற விஷயத்தைக் கோர்ட்டார் நோட் செய்யவேணுமாய்க் கோருகிறோம்.

---

வா. எ. 3. பி. வா. எ. 6.

## ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம என்கிற ச்ருதி விசாரணை.

பி. வா. வ:—சாஸ்த்ரிகளே! 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' (ஐ. 2-1) என்கிற ச்ருதி என்ன சொல்லுகிறது?

பி. வா:—ப்ரஜ்ஞான ரூபியான ஜீவன் ப்ரஹ்மமென்று ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தைச் சொல்லுகிறது.

### க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—சாஸ்த்ரிகளே! தாங்கள் இவ்வைதரேய உபனிஷத்தின் சங்கரபாஷ்யத்தைப் பார்த்திருக்கிறீரா?

பி. வா:—பார்த்திருக்கிறோம்.

வா. வ:—சங்கர பாஷ்யத்திலுள்ள * இவ்வாக்யத்திற்கர்த்தமென்ன?

---

* ஸர்வம் ததசேஷத: ப்ராஜ்ஞா நேத்ரம் ப்ரஜ்ஞப்தி: ப்ராஜ்ஞா தச்ச ப்ரஹ்மைவ நீயதே அநேநேதி நேத்ரம் ப்ராஜ்ஞா நேத்ரம் யஸ்ய தத் இதம் ப்ராஜ்ஞா நேத்ரம் ப்ரஜ்ஞானே ப்ரஹ்மணி உத்பத்திஸ்திதிலயகார்யேஷு ப்ரதிஷ்டிதம்..........தஸ்மாத் ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம (ஐ. சாங். பா. 2—1.)

பி. வா:—சதுர்முகன் (கார்ய ப்ரஹ்மா), இந்திரன், ப்ரஜாபதி, எல்லா தேவதைகள், பஞ்சமகா பூதங்கள், எல்லா வ்ருக்ஷங்கள், யானைகள், குதிரைகள் இவ்வெல்லாம், ப்ரஜ்ஞாநேத்ரம்= ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவினுலேயே தங்கள் தங்கள் வ்யாபாரங்களுடன் கூடுகிறூர்கள் (அந்த ப்ரஹ்மாதிகளின் ஸகல வ்யாபாரங்களையும் பரப்ரஹ்மமே செய்விக்கிறது). மற்றும் ப்ரஜ்ஞாநாமக பரப்ரஹ்மத்தின் ஆஶ்ரயத்தினுலேயே இருக்கிறூர்கள். (இவ்வெல்லாவற்றிற்கும் பரப்ரஹ்மமே ஆஶ்ரயம்.) ப்ரஜ்ஞானமே ஸர்வாஶ்ரயமாகவும் ஸர்வ வ்யாபாரங்களைச் செய்விப்பதாயுமிருப்பதினுல் ப்ரஜ்ஞானமே பரப்ரஹ்மமென்று அர்த்தம்.

வா. வ:—இவ் வாக்யத்தினுல் என்னவென்று ஸித்தமாயிற்று?

பி. வா:—சதுர்முகாதி எல்லா ப்ராணிகளுக்கும் பரப்ரஹ்மம் ஆஶ்ரயமாகவும், அவ்வவைகளின் வ்யாபாரங்களின் ப்ரவர்த்தகமாயு மிருக்கிறதென்று ஸித்தமாகிறது.

வா. வ:—ஆதாராதேய பாவத்தினுலும், நியம்ய நியாமக பாவத்தினுலும் ஆதேய வஸ்துவுக்கு ஆதார வஸ்துவுடனும், நியம்ய வஸ்துவுக்கு நியாமக வஸ்துவுடனும் பேதம் ஸித்தமாகிறதா அல்லது அபேதம் ஸித்தமாகிறதா?

பி. வா:—ஆதாராதேய பாவத்தினுலும்,நியம்ய நியாமகபாவத்தினுலும் ஆதேய வஸ்துவுடன் ஆதார வஸ்துவுக்கும், நியம்ய வஸ்துவுடன் நியாமக வஸ்துவுக்கும் பேதம் ஸித்தமாகிது.

வா. வ:—இவ்விஷயம் உமக்கெப்படித் தெறிந்தது?

பி. வா:—நம் சங்கராசார்யர் நியம்ய நியாமக பாவத்தினுலும், ஆதாராதேய பாவத்தினுலும் பேதம் ஸித்தமாகிறதென்று 4-4-4-வது ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யத்திலும், அதிற்கு பூர்வோத்தர ஸூத்ர பாஷ்யங்களிலும் சொல்லியிருப்பதினுல் தெறிந்தது.

வா. வ:—இவ்வாக்யத்தினுல் பேதம் ஸித்தமாயின், இவ்வாக்யத்தை அபேதவிஷயத்தில் எப்படி உதஹரித்தீர்?

பி. வா:—(பதிலில்லை).

வா. வ:—பேதத்தைச் சொல்லும் இவ்வாக்யம் உமக்கு ஸாதகமாகாததேயல்லாமல், பாதகமுமாகிறதல்லவா?

பி. வா:—இவ்வாக்யத்தினுல் போதிதமாகும் பேதம் ஸத்யமாயின் அதின் விரோதம் நம் அத்வைத மதத்திற்கு வரும். அந்த பேதம் பொய்யாகையால் அவ்வாக்யத்தின் விரோதம் நமக்கு வருகிறதில்லை.

வா. வ:—'இதம் ரஜதம்' என்கிற ஞானத்தினுல் தோன்றும் ரஜதம் (வெள்ளி) பொய்யா அல்லது நிஜமா?

பி. வா:—தோன்றும் வெள்ளி பொய்.

வா. வ:—ஏன் பொய்?

பி. வா:—'நேதம் ரஜதம்' இது வெள்ளியல்ல என்கிற ஞானத்தினுல் வெள்ளி பாதிதமாகிறதினுல்(வெள்ளி இல்லை என்று தெரிய வருவதினுல்) அந்த வெள்ளி பொய்யென்று தெறிய வேண்டும்.

வா. வ:—ஆனுல் ஆதாராதேயபாவத்தினுலும் நியம்ய நியாமகபாவத்தினுலும் அறியவரும் பேதம் பொய்யென்று அங்கீகரிப்பதற்கு பேதபாதகமான (பேதமில்லை என்று அறிவிக்கும்) ப்ரமாணமிருக்கிறதா?

பி. வா:—ப்ரஜ்ஞானம் = ஜீவன், ப்ரஹ்ம = ப்ரஹ்மமே என்று ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை யறிவிக்கும் 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற முன்னிருக்கும் வாக்யமே பாதகமாயிருப்பதினுல் நியம்ய நியாமகபாவாதிகளால் ஸித்தமாகும் பேதம் பொய்யென்று ஒப்புக்கொள்ள வேண்டும்.

வா. வ:—(1) 'ப்ரஜ்ஞாநேத்ரம்' (2) 'ப்ரஜ்ஞானே ப்ரதிஷ்டிதம்' (3) 'ப்ரஜ்ஞாநேத்ரோ லோக:' (4) 'ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா' (5) 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' இவ்வைந்து வாக்யங்களிலிருக்கும் ப்ரஜ்ஞா, ப்ரஜ்ஞானம் என்னும் ஶப்தங்களுக்கு ஶங்கராசார்யர் என்னவென்று அர்த்தம் செய்திருக்கிறார்? (ப்ரஜ்ஞா ஶப்தம் ப்ரஜ்ஞான ஶப்தம் இவ்விரண்டும் யாரை போதிக்கின்றனவென்று சொல்லியிருக்கிறார்?)

பி. வா:—ப்ரஜ்ஞா ப்ரஜ்ஞானம் என்கிற ஶப்தங்கள் ப்ரஹ்மத்தை (பரமாத்மாவை) போதிக்கிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—ஆனால் 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யத்திற்கு என்ன அர்த்தமாகிறது?

பி. வா:—ப்ரஜ்ஞானம் = பரமாத்மா, ப்ரஹ்ம = பூர்ணன், (நித்ய ஶுத்த புத்த முக்த ரூபன்) என்று அர்த்தமாகிறது.

வா. வ:—'ந து ப்ரத்யக் ப்ரஹ்மணோரைக்யமனேன வாக்யே ஞேச்யதே' என்கிற வாக்யம் யாருடையது?

பி. வா:—இந்த பாஷ்யத்தின் ஆனந்தகிரியவர்களிட வ்யாக்யான வாக்யம்.

வா. வ:—இவ்வாக்யத்திற் கர்த்தமென்ன?

பி. வா:—'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யம் ஜீவப்ரஹ்மைக்யத்தை அறிவிக்கிறதில்லை என்று அர்த்தம்.

வா. வ:—'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யம் ஜீவப்ரஹ்மைக்யத்தை அறிவிக்கிறதில்லை என்று சங்கராசார்யரின் பாஷ்யத்தினாலும், ஆனந்தகிரியவர்களின் டீகையினாலும் ஸித்தமாகிறதல்லவா?

பி. வா:—சங்கராசார்யரின் பாஷ்யாதிகளினால் இவ்வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை அறிவிக்காதென்று ஸித்தமாகிறது.

வா. வ:—'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யம் சங்கராசார்யரின் பாஷ்யானுஸாரமாக ஜீவர்களுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அறிவிக்காவிடின், ஜீவப்ரஹ்மைக்ய விஷயத்தில் இவ்வாக்யத்தை எப்படி உதஹரித்தீர்? மற்றும் 'ப்ரஜ்ஞா நேத்ரம்' 'ப்ரஜ்ஞானே ப்ரதிஷ்டிதம்' இத்யாதி வாக்யங்களினால் ஸித்தமான ஜீவப்ரஹ்ம பேதத்திற்கு பாதகமாகிறதென்று எப்படிச் சொன்னீர்?

பி. வா:—(பதிலில்லை.)

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யத்தினால் அபேதம் ஸித்திக்காமற்போயி

ஹும், அதின் பூர்வ வாக்யத்தினால் சதுர்முகாதி ஜீவர்களுக்கு பர ப்ரஹ்மத்துடன் ஐக்யம் ஸித்தமாகிறதென்று நம் கக்ஷிக்காரராகிய கங்காதர ஶாஸ்த்ரிகள் சொல்லுகிறார். அதை விசாரிக்க உத்திர வளிக்கக் கோருகிறேன்.

கோர்ட்:—அப்படியே விசாரியும்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இதற்கு பூர்வவாக்யமேது?

பி. வா:—"ஏஷ ப்ரஹ்மைஷ இந்த்ர ஏஷ ப்ரஜாபதிரேதே ஸர்வே தேவா இமானி ச பஞ்சமஹாபூதானி ப்ருதிவீ வாயுராகாஶ ஆபோ ஜ்யோதீம்ஷீத்யேதானீமானி ச க்ஷுத்ரமிஶ்ராணீவ। பீஜானீதராணி சேதராணி சாண்டஜானி ச ஜாராயுஜானி ச ஸ்வேதஜானி சோத்பிஜ்ஜானி சாஶ்வா காவ: புருஷா ஹஸ்தினோ யத் கிஞ்சேதம் ப்ராணி ஜங்கமம் ச பதத்ரி ச யச்ச ஸ்தாவரம் । ஸர்வம் தத் ப்ரஜ்ஞாநேத்ரம் ப்ரஜ்ஞானே ப்ரதிஷ்டிதம் ப்ரஜ்ஞாநேத்ரோ லோக: ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா." (ஐ. 3-3.)

பி. வா. வ:—இவ்வாக்யத்திற் கர்த்தமென்ன?

பி. வா:—ஏஷ: = ப்ரஜ்ஞா ரூபியான பரமாத்மா, ப்ரஹ்மா = சதுர்முகன், ஏஷ: = ப்ரஜ்ஞாரூபியான ஆத்மா, இந்த்ர: = தேவராஜன், ஏஷ: = ப்ரஜ்ஞாரூபியான ஆத்மா, ப்ரஜாபதி: = ப்ரஜேஶ்வரன், ஏதே ஸர்வே தேவா: = எந்த அக்ன்யாதி தேவதைகளுளரோ அவ்வெல்லா தேவதைகளும், ஏஷ: = ப்ரஜ்ஞானரூபியான ஆத்மா, இமானி பஞ்சபூதானி = இந்த ப்ருதிவீ வாயு ஆகாய ஜலதேஜோரூபமான பஞ்சமஹா பூதங்கள், பக்ஷிகள், மனிதர்கள், ஸ்வேதஜங்கள் (வேர்வையினால் உண்டாகக்கூடியது) வ்ருக்ஷங்கள், குதிரைகள், பசுக்கள், யானைகள் முதலியது யாது யாது உளதோ அவ்வெல்லாம், ஏஷ: ஏவ = இந்த ப்ரஜ்ஞான ரூபியான ஆத்மாவே. மற்றும் இவ்வெல்லாம் 'ப்ரஜ்ஞாநேத்ரம்' ப்ரஜ்ஞா = ப்ரஜ்ஞாரூபியான ப்ரஹ்மத்தை, நேத்ரம் = தங்கள் தங்களிட வ்யாபாரங்களில் ப்ரவர்த்தகமாயுள்ளது, (அந்த பரமாத்மாவினாலேயே எல்லோரிட வ்யாபாரங்களும் நடக்கிறது) மற்றும் ப்ரஜ்ஞாநாமகனான பரமாத்மனிடத்தில் ப்ரதிஷ்டிதமாயிருக்கிறது. (எல்லா ஜகத்துக்கும் ப்ரஹ்மம் ஆஶ்ரயமாயிருக்கி

றது.) மற்றும்—ப்ராஜ்ஞாநேத்ர:= எந்த ப்ரஜ்ஞாநாமக ஆத்மா, ஜனங்களுக்கு, நேத்ர: = கண்களைப்போல், ஸ்புரணத்தை (ஞானத்தை) கொடுக்கிறவனாயிருக்கிறானோ, அந்த ப்ரஜ்ஞாரூபி யான ப்ரஹ்மமே, ப்ரதிஷ்டா = எல்லா ஜகத்தும் நஷ்டமா யிருக்கும் காலத்திலும் இருப்பது என்று அர்த்தம்.

பி. வா. வ:—இவ்வாக்யத்தினால் என்னவென்று ஸித்த மாகிறது?

பி. வா:—ஹிரண்யகர்ப்பாதி எல்லா சேதனர்களும், ஆகா ஶாதி ஸகல ஜடங்களும் பரப்ரஹ்மத்தின் ரூபமே என்று ஸித்த மாகிறது. (ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்தமாகிறது.)

கோர்ட்:—ஆசார்யரே! 'ஏஷ ப்ரஹ்மா, ஏஷ இந்த்ர:' இத் யாதி வாக்யங்களுக்கு ஶாஸ்த்ரிகள் சொல்லியபடிக்கே ஏன் அர்த்தம் செய்யக்கூடாது?

வாதி:—ஶாஸ்த்ரிகள் சொல்லியபடிக்கு அர்த்தம் செய்த பக்ஷத்தில் அநேக தோஷங்கள் வருகின்றன. ஆகையால் அப்படி அர்த்தம் செய்யக்கூடாது.

பி. வா. வ:—அநேக தோஷங்கள் வருகின்றனவென்று சொன்னமாத்திரத்தினால் என்ன ப்ரயோஜனம். அவைகளைச் சொல்லும்?

வாதி:—அத்வைத மதத்தின்படிக்கு 'ஏஷ:' என்கிற பதத்தி னால் போதிதமாகும் ப்ரஜ்ஞானரூபி ப்ரஹ்மம் சுத்தமானது. சதுர்முகன், இந்த்ரன், ப்ரஜாபதி முதலியவர்கள் உபாதியுடன் கூடினவர்கள். ஆகையால் அவர்களுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யம் பொருந்துகிறதில்லை. மற்றும்—ஜடமான பஞ்சபூதாதிகளுக்கு சேதனனான ஆத்மாவுடன் அபேதம் பொருந்துகிறதில்லை.

பி. வா. வ:—இமானி பஞ்சபூதானி = இந்த ஜடமான பஞ்ச பூதாதிகள், ஏஷ: = இந்த ஆத்மாவிடத்தில் கல்பிதமென்கிற அர்த் தம் நம்மிட அத்வைத வ்யாக்யானகாரரால் செய்யப்பட்டிருக்கி றது. ஆகாஶாதிகளுக்கு ஆத்மாவுடன் அபேதமென்று அர்த்தம் சொல்லவில்லை. ஆகையால் ஜடமான ஆகாஶாதிகளுடன் ஆத்மா

வுக்கு அபேதம் பொருந்தாமற்போயினும் பாதகமில்லை. வேரேதாவது தோஷமிருந்தால் சொல்லும்?

வாதி:—'இமானி பஞ்சபூதானி' இத்யாதி வாக்யங்களில் 'ஏஷ: ஏஷ:' என்கிற பதங்களை ஸொந்தமாகச் சேர்த்துக்கொள்ளுவதும் அந்த 'ஏஷ: ஏஷ:' என்கிற பதங்களுக்கு இந்த ஆத்மாவிடத்தில் கல்பிதமென்கிற இல்லாத அர்த்தத்தை எடுத்துக்கொள்ளுவதும் அயுக்தமாகின்றன. தவிர—அத்வைத மதத்தின்படிக்கு ஆத்மா நிர்த்தர்மகனுகையால் அவனிடத்தில் ப்ரமம் பொருந்தாததினுல், 'ஏஷ:' என்கிற பதத்திற்கு ஆத்மாவிடத்தில் கல்பிதம் (ஆரோபிதம்) என்று அர்த்தம் செய்வதும் யுக்தமல்ல.

'ஏதே ஸர்வே தேவா:' 'இமானி பஞ்சபூதானி' 'இமானி க்ஷுத்ரமிஶ்ராணி' இத்யாதி வாக்யங்களில் எப்படி 'ஏதே' 'இமானி' முதலிய ஶப்தங்கள் தேவதைகளுக்கும், பூதங்களுக்கும் ப்ரஸித்தித்யோதகங்களான விசேஷணங்களாக இருக்கின்றனவோ அப்படியே இவ்வாக்யத்திலிருக்கும் 'ஏஷ: ஏஷ: ஏஷ:' என்கிற ஏதச்சப்தங்கள் சதுர்முக இந்த்ர ப்ரஜாபதிகளுக்கு ப்ரஸித்தித்யோதக விசேஷணங்களா யிருக்கின்றனவென்று சொல்லுவதே உசிதமாகிறது.

வித்யாரண்யரும் நாம் சொல்லிய இவ்வனுபபத்திகளை எல்லாம் மனதில் வைத்துக்கொண்டே 'ஏஷ ப்ரஹ்மா, ஏஷ இந்த்ர:' இத்யாதி வாக்யங்களிலிருக்கும் 'ஏஷ:, ஏஷ:' என்கிற ஶப்தங்கள் ப்ரஸித்திபோதக விசேஷணமென்றே சொல்லி யிருக்கிருர். ஆகையால் 'ஏஷ: ஏஷ:' என்கிற பதங்களினுல் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவை எடுத்துக்கொண்டு, அந்த ஆத்மா சதுர்முகன், இந்த்ரன், ப்ரஜாபதி என்று அர்த்தம் செய்யக்கூடாது. 'ஏஷ ப்ரஹ்ம' இது முதலிய வாக்யங்களிலிருக்கும் 'ஏதத்' ஶப்தத்தினுல் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவை எடுத்துக்கொண்ட பக்ஷத்தில் அவ்விதமே 'ஏதே ஸர்வே தேவா:' 'இமானி பஞ்சபூதானி' 'இமானி க்ஷுத்ரமிஶ்ராணி' இத்யாதி வாக்யங்களிலிருக்கும் ஏதத் ஶப்தங்களினுல் ப்ரஜ்ஞான ரூபியான ஆத்மாவையே எடுத்துக்கொள்ள வேண்டியதாகும். தவிர 'ஏதே' 'இமானி' என்று பஹுவசனுந்த

மிருப்பதினால் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவை எடுத்துக்கொள்ளு வதற்கு வராது. சங்கராசார்யரும் இந்த அனுபபத்திகளை மனதில் வைத்துக்கொண்டே 'ஏஷ ப்ரஹ்ம' இத்யாதி வாக்யங்களிலிருக் கும் 'ஏதத்' ஶப்தங்களினால் ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவையே எடுத்துக்கொண்டிருக்கிறார். 'ஏதே தேவா:' 'இமானி பூதானி' என்கிற வாக்யங்களிலிருக்கும் 'ஏதத்' ஶப்தங்கள் தேவதைகள் பூதங்கள் இத்யாதிகளுக்கு ப்ரஸித்தித்யோதக விசேஷணங்களாக இருக்கின்றனவென்று ஒப்புக்கொண்டும் இருக்கிறார். ஆயினும் தம் மதத்திலிருக்கும் அபிமானத்தினால் (ஆக்ரஹத்தினால்) அங் கில்லாத வேறு 'ஏஷ: ஏஷ:' என்கிற பதங்களைச் சேர்த்துக் கொண்டு, 'ஏதே தேவா: ஏஷ:' 'இமானி பூதானி ஏஷ:' என்று வாக்யங்களிருப்பதாக க்ருஹித்துக்கொண்டு, ஏதே = இந்த ப்ர ஸித்தரான தேவதைகள், ஏஷ: = இந்த ப்ரஜ்ஞானரூபியான ஆத்மா, இமானி பூதானி = இந்த ஆகாஶாதி பூதங்கள், ஏஷ: = இந்த ப்ரஜ்ஞானரூபியான ஆத்மா என்று அர்த்தம் செய்திருக்கி றார். அப்படி அர்த்தம் செய்ததில்—'ஏஷ: ப்ரஹ்மா' 'ஏஷ: இந்த்ர:' என்கிற வாக்யங்களிலிருக்கும் 'ஏதத்' ஶப்தங்களுக்கு ப்ரஜ்ஞான ரூபி ப்ரஹ்மமென்கிற அர்த்தத்தை அங்கீகரிப்பதும், 'ஏதே தேவா:' 'இமானி பூதானி' என்கிற வாக்யங்களிலிருக்கும் 'ஏதத்' ஶப்தங்களினால் 'ப்ரஸித்தி' என்கிற அர்த்தத்தை எடுத்துக் கொள்ளுவதும், அவ்வாக்யங்களில் 'ஏஷ: ஏஷ:' என்கிற ஸொந்த பதங்களைச் சேர்த்துக்கொள்ளுவதும் அயுக்தமாகின்றன.

பி. வா. வ:—சங்கராசார்யரிட அர்த்தத்தில் இன்னுமேதா வது தோஷமுண்டா?

வாதி:—'ஏஷ ப்ரஹ்மா ஏஷ இந்த்ர:.....இமானி பஞ்சபூதானி ...யச்ச ஸ்தாவரம் தத் ப்ரஜ்ஞாநேத்ரம்' இந்த ப்ரஸித்தரான சதுர்முகாதிகளெல்லோரும், ப்ரஜ்ஞா நேத்ரம் = ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவினாலேயே ப்ரவர்த்திக்கப்படுகிறார்களென்று அர்த்த மாகிறது. சங்கராசார்யரும் அப்படியே அர்த்தம் செய்திருக்கி றார். ஆயினும்—தம் மதத்தின் ஆக்ரஹத்தினால் 'ஸர்வம் தத் ப்ரஜ்ஞா நேத்ரம்' என்கிற வாக்யத்திலிருக்கும் 'ஸர்வம் தத்' என் கிற பதங்களை இரண்டுதடவை ஆவ்ருத்தி செய்துகொண்டு,

அதற்குமேல் 'ஏஷ:' என்கிற ஸொந்தபதத்தைச் சேர்த்துக் கொண்டு, இவைகளெல்லாம் ஏஷ:= இந்த ப்ரஜ்ஞானரூபியான ஆத்மாவே என்று அர்த்தம் செய்து, 'தத் ஸர்வம்' என்கிற பதங்களை மறுபடியும் எடுத்துக்கொண்டு, ஏதத்ஸர்வம் ப்ரஜ்ஞா நேத்ரம்= இவ்வெல்லாம் ப்ரஜ்ஞாநாமக பரப்ரஹ்மத்திஞல் ப்ரவ்ருத்தமாகிறதென்று அர்த்தம் செய்திருக்கிருர். ஸர்வம் தத் ப்ரஜ்ஞா நேத்ரம்= இவ்வெல்லாம் ப்ரஜ்ஞாநேத்ரம் என்று ஒரே வாக்யமிருக்க மத்தியில் 'ஏஷ:' என்கிற பதத்தை அத்யாஹாரம் செய்து கொண்டு, அந்த பதத்தின் முக்யார்த்தத்தை விட்டு, அதில் கல்பிதமென்று அமுக்யார்த்தத்தைச் செய்வதும், ஆவ்ருத்தி செய்துகொண்டு இரண்டு வாக்யங்களாக செய்துகொள்ளுவதும் மிகவும் அயுக்தமாகிறது.

---

## வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! 'ஏஷ ப்ரஹ்மைஷ.........ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யத்திற்கு நீர் என்ன அர்த்தம் செய்கிறீர்?

வாதி:—ஏஷ: ப்ரஹ்ம= இந்த ப்ரமாணங்களிஞல் ஸித்தமாகும் சதுர்முகப்ரஹ்மா, (கார்ய ப்ரஹ்மா), ஏஷ இந்த்ர:= இந்த இந்த்ரன், ஏஷ: ப்ரஜாபதி:= இந்த ப்ரஜாபதி, ஏதே ஸர்வே தேவா: = இவ்வெல்லா தேவதைகள், இமானி பஞ்சபூதானி = இந்த ஆகாஶ வாயு தேஜோ ஜல ப்ருதிவீரூப பஞ்சபூதங்கள், அண்டஜ, ஜராயுஜ, ஸ்வேதஜ, வ்ருக்ஷ பக்ஷிகள் முதலியவைகளேது உளதோ, தத்=(ஸ்தாவரஜங்கமாத்மகமான) அவைகளெல்லாம், ப்ரஜ்ஞாநேத்ரம்=ப்ரஜ்ஞாநாமக பரப்ரஹ்மத்திஞல் நியம்யமானவைகள். (பரமாத்மா இவ்வெல்லாவற்றையும் அவ்வவைகளின் வ்யாபாரங்களில் ப்ரவர்த்திக்கச்செய்பவன்). ப்ரஜ்ஞானே ப்ரதிஷ்டிதம்=ப்ரஜ்ஞாநாமகஞன பரமாத்மாவினிடத்தில் ஆஶ்ரயித்திருக்கின்றன. (அவ்வெல்லாவற்றிற்கும் பரமாத்மா ஆஶ்ரயஞயிருக்கிருன்), ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா=ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா ஸ்தாபகன், அந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, ப்ரஹ்ம= பூர்ணன், என்று சதுர்முகாதி எல்லா தேவகணங்களுக்கும், இதர ப்ராணிகளுக்கும்,

ஆகாசாதி ஸமஸ்த ஜடபதார்த்தங்களுக்கும் பரமாத்மாவுடன் ஆஶ்ரயாஶ்ரயி பாவத்தினாலும், நியம்ய நியாமகபாவத்தினாலும், ஸ்தாபக ஸ்தாப்ய பாவத்தினாலும் பேதத்தைச் சொல்லி, 'ப்ராஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யத்தினால் அந்த பரமாத்மா பூர்ணனென்று பரமாத்மாவின் பூர்ணத்வத்தைச் சொல்லுகிறது.

'ஸன்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜாஸ்ஸதாயதனா: ஸத்ப்ரதிஷ்டா:'என்கிற வாக்யத்தில் எப்படி ஸர்வ ப்ரஜைகள் பரமாத்மாவினால் பிறந்திருக்கிறார்களென்றும், பரமாத்மாவை ஆஶ்ரயித்திருக்கிறார்களென்றும், பரமாத்மாவே ஸர்வ ப்ரஜைகளுக்கும் ஸ்தாபகனென்றும் சொல்லியிருக்கிறதோ, அப்படியே இவ்வாக்யம் ஸர்வப்ராணிகளுக்கும் பரமாத்மா ஆஶ்ரயனென்று சொல்லி பேதத்தைச் சொல்லியிருக்கிறது.

---

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) த்ர்மராஜப்ரபோ! 'ப்ராஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற ஶ்ருதி—ப்ராஜ்ஞானம் = ஜீவன், ப்ரஹ்ம = பரமாத்மா, என்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தை அறிவித்துக்கொண்டிருக்கிறபடியால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யமுண்டென்று கோர்ட்டார் தீர்மானிக்கவேணுமாய்க் கோருகிறோம்.

---

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—ப்ரபோ! "ஸர்வம் தத் ப்ரஜ்ஞாநேத்ரம் ப்ரஜ்ஞானே ப்ரதிஷ்டிதம் ப்ரஜ்ஞாநேத்ரோ லோக:ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா ப்ராஜ்ஞானம் ப்ரஹ்ம" என்கிற வாக்யத்தில்—ஸர்வம் தத் = சதுர்முகனே முதலான எல்லா ப்ராணிகளும், ஆகாசாதி எல்லா ஜடங்களும் ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவை தங்கள் தங்கள் வ்யாபாரங்களில் ப்ரேரகனாயுள்ளவர்கள். (ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவினால் ப்ரேரிக்கப்படுபவர்கள்) ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவிடத்தில், ப்ரதிஷ்டிதம் = ஆஶ்ரயித்திருப்பவர்கள், ப்ரஜ்ஞாநேத்ர: = ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவையே கண்களைப்போல் ஞானத்தைக் கொடுப்

பவனுயுள்ளவர்கள். ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவையே ப்ரதிஷ்டாபகனுயுள்ளவர்கள். அத்தகைய ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவே, ப்ரஹ்ம = பூர்ணன் என்று 'ஸன்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதனு: ஸத்ப்ரதிஷ்டா:' என்கிற சாந்தோக்ய வாக்யத்தைப்போலவே ஆதாராதேய பாவத்தினுலும், நியம்ய நியாமக பாவத்தினுலும் சதுர்முகன் முதலான எல்லா ஜீவர்களுக்கும், ஆகாஶம் முதலிய எல்லா ஜடங்களுக்கும் ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவுடன் பேதத்தைச் சொல்லிக்கொண்டே, ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவே ப்ரஹ்மமென்று பரமாத்மாவுக்கு ப்ரஹ்மத்வத்தைச் சொல்லுகிறதேயொழிய, 'ப்ரஜ்ஞானம்' என்கிற பதத்தினுல் ஜீவனை எடுத்துக்கொண்டு அவன் (ஜீவன்) பரப்ரஹ்மமென்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுவதில்லை.

சங்கராசார்யரும் இப்படியே அர்த்தம் செய்திருப்பதினுல் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தை அறிவிக்காததேயல்லாமல், பேதத்தையே அறிவிக்கிறபடியால் 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற ஶ்ருதியின் ஆதாரத்தின்பேரில் ஜீவப்ராஹ்மாக்களுக்கு ஐக்யமுண்டென்று சொல்லுவதற்கு முடியாது. ஆகையால் இவ்வாக்யம் பேதத்தையே சொல்லுகிறதென்று கோர்ட்டார் தீர்மானிக்கவேணுமாய்க் கோருகிறேம்.

---

## ப்ரதிவாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

**பி. வா. வ:**—மஹாப்ரபோ! 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்கிற வாக்யத்தினுல் ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யம் ஸித்தமாகாமற் போயினும், அதின் 'ஏஷ ப்ரஹ்ம..........தத் ஸர்வம் ப்ரஜ்ஞா நேத்ரம்' என்கிற பூர்வவாக்யம், ஏஷ: = இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, ப்ரஹ்மா = சதுர்முகப்ரஹ்மா, ஏஷ: = இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, இந்த்ர: = இந்த்ரன், ஏஷ: = இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, ப்ரஜாபதி: = ருத்ரன், ஏதே ஸர்வே தேவா: = இவ்வெல்லா தேவதைகளும் (ஏஷ:) இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, இமானி பஞ்சபூதானி = இந்த ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்கள் (ஏஷ:) இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா, மற்றும் அண்டஜம், ஸ்வேதஜம்,

பசுக்கள், யானைகள், குதிரைகள் முதலிய எல்லா ப்ரபஞ்சமும் (ஏஷ:) இந்த ப்ரஜ்ஞாநாமக பரமாத்மா என்று எல்லா சேதனு சேதனுத்மக ப்ரபஞ்சத்திற்கு ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவுடன் அபேதத்தைச் சொல்லுகிறதென்று சங்கராசார்யர் வ்யாக்யானம் செய்திருக்கிறபடியால் இவ்வாக்யத்தினுல் அபேதம் ஸித்தமாகிற தென்கிற விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேணுமாய்க் கோருகிறேம்.

---

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

*வா. வ:*—மஹாப்ரபோ! மேற்கூறிய சங்கராசார்யரின் வ்யாக்யானம், வாதி முன் சொல்லிய அநேக *காரணங்களினுலும், இந்த சதுர்முகப்ரஹ்மா, இந்த்ரன், ப்ரஜாபதி, இவ்வெல்லா தேவதைகள், இந்த பஞ்ச மஹாபூதங்கள், யானைகள், குதிரைகள், பசுக்கள், பக்ஷிகள் முதலிய எல்லா சேதனுசேதனுத்மக ப்ரபஞ்சம், ப்ரஜ்ஞாநேத்ரம் = ப்ரஜ்ஞாநாமக பரமாத்மாவினுல் வ்யாபாரங்களையுளது. அந்த பரமாத்மாவையே ஆஶ்ரயித்திருக்கிறது. ப்ரஜ்ஞானம் = அத்தகைய பரமாத்மா, ப்ரஹ்ம = பூர்ணன், என்று சங்கராசார்யரே அர்த்தம் செய்திருக்கிறபடியினுலும் அயுக்கமாகிறது. ஆகையால் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதில்லை. நியம்ய நியாமகபாவத்தினுலும், ஆஶ்ரயாஶ்ரயி பாவத்தினுலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே சொல்லுகிறதென்கிற விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேணுமாய்க் கோருகிறேம்.

* இக்காரணங்களை விசாரணையில் காணவும்.

வா. எ. 4; பி. வா. எ. 8.

"ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்...ய ஆத்மனி திஷ்டன் ஏஷத ஆத்மாந்தர்யாம்யம்ருதோத்ருஷ்டோ த்ரஷ்டாஶ்ருத ஶ்ரோதா...நான்யோதோஸ்தி த்ரஷ்டா நான்யோதோஸ்தி ஶ்ரோதா" என்னும் (3-7-3 முதல் 23 வரையிலிருக்கும்) ப்ருஹதாரண்யக அந்தர்யாமி ப்ரகரண வாக்யங்களின் விசாரணை.

## வாதி விசாரணை.

---

*வா. வ:—ஆசார்யரே! 'ய ஆத்மனி திஷ்டன் ஆத்மனோந்தரோ யம் ஆத்மா ந வேத யஸ்ய ஆத்மா ஶரீரம் ய ஆத்மானமந்தரோ யமயதி ஏஷத ஆத்மாந்தர்யாம்யம்ருத:' (ப்ரு. 3-7-22) '.....அத்ருஷ்டோ த்ருஷ்டா.....நான்யோதோஸ்தி த்ரஷ்டா' (ப்ரு. 3-7-23) இவை முதலான அந்தர்யாமி ப்ரகரணத்திலிருக்கும் வாக்யங்கள் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தை எப்படித் தெரிவிக்கின்றன?*

*வாதி:-எந்த பரமாத்மா, ஆத்மனி = ஜீவனிடத்திலிருந்து ஜீவனைவிட, அந்தர: = பின்னனா யிருக்கிறானோ, யாரை ஜீவன் தெரிந்துகொள்ளமாட்டானோ, யாருக்கு ஜீவன் ஶரீரமாயிருக்கிறானோ (ஶரீரம்போல் நியம்யனாயிருக்கிறானோ) எவன் ஜீவர்களை நியமித்துக்கொண்டிருக்கிறானோ அவனே உன்னிட அந்தர்யாமி, மற்றும் ஆத்மா = 'யச்சாப்னோதி' என்னும் பாரத வாக்யானுஸாரமாய் ஜகஜ்ஜன்மாதிகர்த்தா, அம்ருத: = நாஶரஹிதன் இப்படிப்பட்ட பரமாத்மா அன்யர்களால் காணப்படுபவனாகான். தான் எல்லாவற்றையும் காணுவான். (த்ரஷ்ட்ரு). அத: = பரமாத்மா தர்ஶனத்திற்கு அஶக்யனானபடியால் (குடம் முதலான ரூபமுடைய பதார்த்தங்களைப்போல் இதரர்களால் தெரிந்து கொள்வதற்கு அஶக்யனானபடியால்) 'அன்ய: த்ரஷ்டா' பரமாத்மாவைவிட பின்னனான ஜீவன் 'த்ரஷ்டா ந' பரமாத்மாவைக் காணுகிறவனாவதில்லை என்று இந்த வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஆதாராதேய பாவத்தினாலும், த்ரஷ்ட்ருத்வாத்ரஷ்ட்ருத்வ தர்மங்களினா*

னும் நியம்ய நியாமகபாவத்திஞலும் பேதத்தைச் சொல்லும் 'அந்தர:' என்னும் பதத்திஞலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறது. இவ்விதமாகவே:—

(1) யோ விஜ்ஞானே திஷ்டன் விஜ்ஞாஞதந்தரோயம் (ப்ரு. 3-7-22) என்னும் அந்தர்யாமி ப்ரகரணத்தின் காண்வஶாகிய வாக்யம் விஜ்ஞான ஶப்த வாச்யஞன ஜீவஞல் பரமாத்மாவுக்கு பேதத்தைச் சொல்லுகிறது.

(2) ய: ப்ருதிவ்யாம் திஷ்டன் ப்ருதிவ்யா அந்தர: (ப்ரு. 3-7-3) என்னும் வாக்யம் ப்ருதிவ்யபிமானி தேவதையிஞலும்,

(3) யோப்ஸு திஷ்டன் அத்ப்யோந்தர: (ப்ரு. 3-7-4) என்னும் வாக்யம் ஜலாபிமானி தேவதையிஞலும்,

(4) யோக்னௌ திஷ்டன்னக்னேரந்தர: (ப்ரு. 3-7-5) என்னும் வாக்யம் அக்ன்யபிமானி தேவதையிஞலும்,

(5) யோந்தரிக்ஷே திஷ்டன்னந்தரிக்ஷாதந்தர: (ப்ரு. 3-7-6) என்னும் வாக்யம் அந்தரிக்ஷாபிமானி தேவதையிஞலும்,

(6) யோ வாயௌ திஷ்டன் வாயோரந்தர: (ப்ரு. 3-7-7) என்னும் வாக்யம் வாய்வபிமானி தேவதையிஞலும்,

(7) யோ திவி திஷ்டன் திவோந்தர: (ப்ரு. 3-7-8) என்னும் வாக்யம் ஸ்வர்க்காபிமானி தேவதையிஞலும்,

(8) ய ஆதித்யே திஷ்டன் ஆதித்யாதந்தர: (ப்ரு. 3-7-9) என்னும் வாக்யம் ஆதித்யமண்டலாபிமானி தேவதையிஞலும்,

(9) யோ திக்ஷு திஷ்டன் திக்ப்யோந்தர: (3-7-10) என்னும் வாக்யம் திகபிமானி தேவதையிஞலும்,

(10) யஶ்சந்த்ரதாரகே திஷ்டன் சந்த்ரதாரகாதந்தர: (3-7-11) என்னும் வாக்யம் சந்திர நக்ஷத்ராதி தேவதைகளிஞலும்,

(11) ய ஆகாஶே திஷ்டன் ஆகாஶாதந்தர: (3-7-12) என்னும் வாக்யம் ஆகாஶாபிமானி தேவதையிஞலும்,

(12) யஸ்தமஸி திஷ்டம்ஸ்தமஸோந்தர: (3-7-13) என்னும் வாக்யம் தமோபிமானி தேவதையிஞலும்,

(13) யஸ் தேஜஸி திஷ்டம்ஸ்தேஜஸோந்தர: (3-7-14) என்னும் வாக்யம் தேஜோபிமானி தேவதையினுலும்,

(14) யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன் ஸர்வேப்யோ பூதேப்யோந்தர:(3-7-15)என்னும் வாக்யம் ஸர்வபூதங்களினுலும்,

(15) ய: ப்ராணே திஷ்டன் ப்ராணுதந்தர: (3-7-16) என்னும் வாக்யம் ப்ராணத்தினுலும்,

(16) யோ வாசி திஷ்டன் வாசோந்தர: (3-7-17) என்னும் வாக்யம் வாகபிமானி தேவதையினுலும்,

(17) யஶ்சக்ஷுஷி திஷ்டம்ஶ்சக்ஷுஷோந்தர: (3-7-18) என்னும் வாக்யம் சக்ஷுரபிமானி தேவதையினுலும்,

(18) யஶ்ஶ்ரோத்ரே திஷ்டன் ஶ்ரோத்ராதந்தர: (3-7-19) என்னும் வாக்யம் ஶ்ரோத்ராபிமானி தேவதையினுலும்,

(19) யோ மனஸி திஷ்டன் மனஸோந்தர: (3-7-20) என்னும் வாக்யம் மனோபிமானி தேவதையினுலும்,

(20) யஸ்த்வசி திஷ்டம்ஸ்த்வசோந்தர: (3-7-21) என்னும் வாக்யம் த்வகபிமானி தேவதையினுலும்,

(21) யோ ரேதஸி திஷ்டன் ரேதஸோந்தரோ யம் ரேதோ ந வேத யஸ்ய ரேத ஶரீரம் யோ ரேதோந்தர: யமயத்யேஷத ஆத்மாந்தர்யாம்யம்ருதோத்ருஷ்டோ த்ரஷ்டாஶ்ருத: ஶ்ரோதாமதோ மந்தாவிஜ்ஞாதோ விஜ்ஞாதா நான்யோதோஸ்தி த்ரஷ்டா நான்யோதோஸ்தி ஶ்ரோதா நான்யோதோஸ்தி மந்தா நான்யோதோஸ்தி விஜ்ஞாதைஷத ஆத்மாந்தர்யாம்யம்ருதோதோன்யதார்த்தம் ததோ ஹோத்தாலக ஆருணிருபரராம(3-7-23) என்னும் வாக்யம் ரேதோபிமானி தேவதையினுலும் பரமாத்மாவுக்கு ஆதாராதேய பாவத்தினுலும், த்ரஷ்ட்ருத்வா த்ரஷ்ட்ருத்வ தர்மங்களினுலும், நியம்ய நியாமக பாவத்தினுலும், அந்தர: என்னும் பதத்தினுலும் பேதத்தைத் தெரிவிக்கின்றன.

வா. வ:—ஆசார்யரே! 'ய ஆத்மனி திஷ்டன்' என்னும் இதே முதலான மேற்சொல்லப்பட்ட மந்த்ரங்களுக்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறர்?

வாதி:—'ய ஆத்மனி திஷ்டன்' என்னும் இது முதலான மந்த்ரங்களுக்கு ஶங்கராசார்யார் ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்திலும், உபநிஷத்பாஷ்யத்திலும், வ்யாக்யானம் செய்திருக்கிறார். அதில் நான் எந்த வ்யாக்யானத்தை யனுஸரித்து அர்த்தம் சொல்ல வேண்டும்?

வா. வ:—க்ரமமாக இரண்டையும் சொல்லுங்கள்?

வாதி:—(1) 'அந்தர்யாம்யதி தைவாதிஷு தத்தர்மவ்யபதேஶாத்' (ப்ர. ஸூ. 1-2-18), 'ந ச ஸ்மார்த்த மதத்தர்மாபிலாபாத்' (1-2-19), 'ஶாரீரஶ்சோபயேபிஹி பேதேநைனமதீயதே' (1-2-20), என்னும் மூன்று ஸூத்ரரூபமான அதிகரணத்தில் 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' இது முதலான அந்தர்யாமி ப்ரகரணத்தில் ப்ருதிவீ முதலான இருபத்தொரு பதார்த்தங்களின் அந்தர்யாமியானவன் ஒருவன் இருக்கிறான். அவன், ப்ருதிவ்யாத்யபிமானி தேவதையோ, யோகஸித்தனான ஜீவனோ, ஸாங்க்யர்களால் சொல்லப்படும் ப்ரதானமோ அல்லது ஜீவனோ, அதவா பரமாத்மாவோ என்னும் ஸந்தேஹம் உண்டானதற்கும்; அந்தர்யாமி, ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளே என்று சிலரும், யோகி என்று சிலரும், ப்ரதானமென்று சிலரும், ஜீவனென்று சிலரும், பூர்வபக்ஷம் செய்ததற்கும், ப்ருதிவ்யாத்யந்தர்யாமி ப்ருதிவ்யாதி தேவதைகளல்ல, யோகிகளல்ல, ஸாங்க்யர்களால் சொல்லப்பட்ட ப்ரக்ருதியுமல்லவென்று சொல்லி, 'ஶாரீரஶ்சோபயேபிஹி பேதேநைனமதீயதே' என்னும் ஸூத்ரத்தினால் ஸூத்ரகாரர் 'ய ஆத்மனி திஷ்டன்' (மாத்யம்தின ஶாகா) என்னும் வாக்யத்தினால் ஜீவன் அந்தர்யாமியைவிட பின்னனென்று சொல்லப்பட்டிருப்பதால் ஜீவன் அந்தர்யாமி அல்லவென்று சொல்லியிருக்கிறாரென்று ஶங்கராசார்யார் இந்த ஸூத்ரவ்யாக்யானத்தில் 'ய ஆத்மனி திஷ்டன்' இத்யாதி அந்தர்யாமி வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கும் ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளுக்கும், பரமாத்மாவுக்கும் பேதத்தையே சொல்லுகின்றனவென்று சொல்லியிருக்கிறார்.

(2) 'உபயவ்யபதேஶாத்வஹி குண்டலவத்' என்னும் 3-2-27வது ஸூத்ரபாஷ்யத்தில், 'யஸ்ஸர்வாணி பூதான்யந்தரோ

யமயதி' 'இதி நியந்த்ருநியந்தவ்யத்வேன ஜீவப்ராஜ்ஞயோர் பேதோ வ்யபதிஶ்யதே' என்று இந்த அந்தர்யாமி ப்ரகரணத்தி லிருக்கும் 'யஸ்ஸர்வாணி' என்னும் வாக்யம் ஜீவர்களுக்கு பரமாத் மாவினால் பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறார்.

(3) 'பேதவ்யபதேஶாச்சான்ய:' என்னும் 1-1-21ம் ஸூத்ரத் தில்—'ய ஆதித்யே திஷ்டன்' என்னும் வாக்யத்தில், 'ஆதித்யா தந்தர:', 'யமாதித்யோ ந வேத' என்று பரமாத்மா ஜீவனைவிட பின்னனென்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறபடியால் ஆதித் யாதி ஶரீரங்களுக்கு அபிமானிகளான ஜீவர்களால் பின்னனாய் ஈஶ்வரன் அந்தர்யாமியாயிருக்கிறானென்று சொல்லியிருக்கிறார்.

(4) ப்ருஹதாரண்யகோபநிஷத் பாஷ்யத்திலும் "ய: நாராய ணாக்ய: ப்ருதிவீம் ப்ருதிவீதேவதாம் யமயதி நியமயதி ஸ்வவ்யா பாரே அந்தர: அப்யந்தரஸ்திஷ்டேத் ஏஷ தே ஆத்மா தே தவ ச மம ச ஸர்வபூதானாம் சேத்யுபலக்ஷணார்த்தம் ஏததந்தர்யாமீ யஸ்த்வயா ப்ருஷ்டோம்ருத: ஸர்வஸம்ஸார தர்மவர்ஜித:" எந்த நாராயணன் ப்ருதிவீதேவதையை அதின் வ்யாபாரத்தில் நியமிக்கி றானோ அந்த ஆத்மாவே (நாராயணனே) எனக்கும், உனக்கும், ஸர்வப்ராணிகளுக்கும் அந்தர்யாமி என்று நியம்ய நியாமக பாவத்தினாலும், 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' இவை முதலான 21 மந்த்ரங்களில் ப்ரஹ்மாதி ஸமஸ்த ஜீவர்களுக்கு பரமாத்மாவினால் பேதத்தைச் சொல்லியிருக்கிறார்.

## ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ய ஆத்மனி திஷ்டன்' இத்யாதி வேதவாக்யங்கள் ஜீவேஶ்வரர்களுக்கு பேதத்தைப் போதிக்கிற தென்று ஶங்கராசார்யரே வ்யாக்யானம் செய்திருக்க—அதை வைதிகர்களான நீங்கள் ஒத்துக்கொள்ளவேண்டியதல்லவா?

பி. வா:—மாதவதாஸரே! தாங்கள் வேதங்களால் சொல்லப் பட்ட ஜீவேஶ்வரரின் பேதத்தை ஒத்துக்கொள்ளவேண்டு மல்லவா என்று செய்த ஆக்ஷேபம் புதியதல்ல. வேதத்திலேயே "சதுர்முகாதி ஜீவர்கள் நியம்யர்கள், பரமாத்மா நியாமகன் என்று சொல்வதினால் நியம்யரான சதுர்முகாதி ஜீவர்கள் வேறு,

நியாமகனான பரமாத்மா வேறு என்று பேதமுண்டாகிறதல்லவா என்று ஶங்கித்துக்கொண்டு, அதை பரிஹரிப்பதற்காக 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யம் ப்ரவ்ருத்தமாயிருக்கிறது (புறப்பட்டிருக்கிறது). இந்த வாக்யம் 'அத:' = அந்தர்யாமியான பரமாத்மாவினால், 'அன்ய:' = பின்னனான, 'த்ரஷ்டா' காண்பவன், ந = இல்லை என்று சொல்வதினால், த்ரஷ்டாவான ஜீவன் பரமாத்மாவைவிட பின்னனல்லவென்று ஸித்திக்கிறதினால் 'ய ஆத்மனி திஷ்டன்' இத்யாதி பூர்வவாக்யங்களினால் நியம்யநியாமக பாவத்தினால் சதுர்முகாதி ஜீவர்களுக்கு பரமாத்மாவுடன் பேதம் ஸித்தித்தாலும் அந்த பேதம் ஸ்வீகரிப்பதற்கு யோக்யமாகாது" என்று எங்கள் ஶங்கராசார்யரே * 'யம் ப்ருதிவீ ந வேத' இத்யாதி வாக்யங்களினால் இந்த உபநிஷத்பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறபடியால்பேதம் ஸ்வீகரிப்பதற்கு அர்ஹமாகாது.

வா. வ:—'ப்ரக்ஷாலனாத்தி பங்கஸ்ய தூராதஸ்பர்ஶனம் வரம்' என்னும் நியாயத்தை ஶங்கராசார்யார் எந்த விஷயத்தில் எடுத்துக்கொண்டிருக்கிறார்?

பி. வா:—'நேதி நேதி' (ப்ரு. 2-3-6) என்னும் வாக்யம் பரப்ரஹ்மத்தை நிஷேதிக்கிறதென்று ஏன் சொல்லக்கூடாதென்று ஶங்கையுண்டாகவே—ப்ரஸக்தமா யிருப்பதையே (பூர்வத்தில் எதினாலாவது தெரிந்திருப்பதையே)நிஷேதிக்கத்தக்கது,ப்ரஹ்மம் எந்த ப்ரமாணத்தினாலும் தெரியப்படாததினால் நிஷேதிப்பதற்குத் தகுந்ததல்லவென்று பதில் சொன்னதற்கு-'ப்ரஹ்ம விதாப்னோதிபரம்' என்னும் உபநிஷத் வாக்யத்தினால் ப்ராப்தமாயிருப்பதினால் (ப்ரஸக்தமாயிருப்பதினால்) அதை நிஷேதிக்கலாமல்லவா என்னும் ஶங்கை யுண்டாயிற்று. அதைப் பரிஹரிப்பதற்காக இந்த நியாயத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார். தானே சேற்றை மெறித்து அலம்பிக்கொள்ளுவதைவிட சேற்றை மெறிக்காமலிருப்பதே எப்படி நலமோ, அப்படியே இதர ப்ரமாணங்களால் ப்ரஸக்தமாகாத ப்ரஹ்மத்தை வேதம் தானே சொல்லி தானே

* யம் ப்ருதிவீ ந வேத யம் ஸர்வாணி பூதானி ந விதுரிதி சான்யே நியந்தா விஜ்ஞாதாரோன்யோ நியந்தா அந்தர்யாமீதி ப்ராப்தம் ததன்யத்வா ஶங்கா நிவ்ருத்யர்த்தமுச்யதே 'நான்யோதோ' இதி.

நிஷேதிக்கிறதென்பது யுக்தமாகாது. ப்ரஹ்மத்தைத் தான் சொல்லாமலிருப்பதே யுக்தமாகும் என்று 'நேதி நேதி' என்னும் வாக்யம் பரமாத்மாவை நிஷேதிப்பதில்லை என்னும் விஷயத்தில் மேற்கூறிய நியாயத்தை ஸ்வீகரித்திருக்கிறார்.

வா. வ:—எந்த ப்ரமாணத்தினால் ப்ரஸக்தமான ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளுக்கு பரமாத்மாவினால் பேதத்தை 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யம் நிஷேதிக்கிறதென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' இத்யாதி வாக்யங்களால் நியம்ய நியாமகபாவத்தினால் ப்ராப்தமான பேதத்தை நிஷேதிக்கிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளுக்கு பரமாத்மாவினால் பேதம் வேறு ப்ரமாணங்களினால் ப்ராப்தமாவது இல்லையல்லவா ?

பி. வா:—ப்ருதிவ்யாதி தேவதைகள் பரமாத்மா இவர்கள் அத்ருஶ்யர்களானபடியால் இதர ப்ரமாணங்களினால் அவராகட்டும், அவர்களின் பேதமாகட்டும் ப்ரஸக்தமாவதில்லை. வாக்யத்தினாலேயே ப்ரஸக்தமாகவேண்டும்.

வா. வ:—'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' இத்யாதி வாக்யங்களினால் ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளையும், அவர்களுக்கு பரமாத்மாவினால் பேதத்தையும் சொல்லி, மறுபடியும் தானே நிஷேதிப்பது 'ப்ரக்ஷாளநாத்தி பங்கஸ்ய தூராதஸ்பர்ஶனம் வரம்' சேற்றை மெறித்து அலம்பிக்கொள்ளுவதைவிட மெறிக்காமலிருப்பதே நலமென்பதுபோல், ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளையும், அவர்களின் பேதத்தையும் சொல்லாமலிருப்பதே நலமாகும். ஆகையால் 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யம் ஆதித்யாதி ஜீவர்களுக்கு பரமாத்மாவினால் பூர்வவாக்யத்தினால் நியம்ய நியாமகபாவத்தினால் ப்ராப்தமான பேதத்தை நிஷேதிக்கிறதென்பது எப்படிப் பொருந்தும் ?

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! *'கஸ்மாத்புன:காரணாத்' என்னும் பாஷ்யத்தின் அபிப்ராயமென்ன?

பி. வா:—ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகள் மஹானுபாவர்களானபடியால் தமக்குள் நியாமகனாயிருக்கும் அந்தர்யாமியை மனிதர்களைப்போலவே தெரிந்துகொள்ளமாட்டார்களென்று 'யம் ப்ருதிவீ ந வேத' 'யம் ஆபோ ந விது:' இத்யாதி வேதவாக்யங்களால் சொல்லப்பட்டது எப்படி பொருந்துமென்னும் ஆக்ஷேபம் உண்டாகவே—அந்த ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பதற்காக 'ஏஷோந்தராத்மாந்தர்யாம்யம்ருதோத்ருஷ்டோ த்ரஷ்டாஶ்ருத ஶ்ரோதாமதோ மந்தாவிஞாதோ விஞாதா நான்யோதோஸ்தி த்ரஷ்டா நான்யோதோஸ்தி ஶ்ரோதா" என்னும் வேதவாக்யம் ப்ரவ்ருத்தமாயிருக்கிறதென்று அபிப்ராயம்.

வா. வ:—தேவதைகள் தம் அந்தர்யாமியை ஏன் தெரிந்துகொள்ளமாட்டார்கள் என்னும் ஆக்ஷேபத்தை பரிஹரிப்பதற்காக ப்ரவ்ருத்தமான 'அத்ருஷ்டோ த்ரஷ்டா நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யம் அந்த ஆக்ஷேபத்தை எப்படிப் பரிஹரிக்கிறது?

பி. வா:—பரமாத்மா 'அத்ருஷ்ட:' யாராலும் கண்டுகொள்ளுவதற்கு அஶக்யன், கேழ்க்கப்படுவதற்கும் அஶக்யன், ஸ்வயம் பார்ப்பவன், கேட்பவன். 'அத: அன்ய: த்ரஷ்டா நாஸ்தி' இந்த எவராலும் காணப்பட்டுக்கொள்ளுவதற்கு அஶக்யனானபடியால் அந்தர்யாமியான பரமாத்மாவைவிட வேறு யாரும் பரமாத்மாவைக் காண்பவரில்லை என்று சொல்லுகிறது. எப்படி தர்மாதர்மங்கள் (புண்ய பாபங்கள்) முதலானவைகள் அதீந்த்ரியங்களானபடியால் அவைகளைக் காண்பவரில்லையோ, அப்படியே அந்தர்யாமியான பரமாத்மா இந்த்ரியாதிகளால் காண்பதற்கு அஶக்யனானபடியால், தேவதைகள் மஹானுபாவ

* கஸ்மாத் புன: காரணாத் ப்ருதிவ்யாதிதேவா மஹாபாகாஸ்ஸந்த்யோ மனுஷ்யாதிவதாத்மனி திஷ்டந்தமாத்மனோ நியந்தாரமந்தர்யாமிணம் ந விதுரித்யத ஆஹ । அத்ருஷ்டோ ந த்ருஷ்டோ இதி ।.

ராயினும் அவனைப் பார்க்கிறதில்லை. அப்படிப் பார்க்காமலிருப்பதினால் தேவதைகளுக்கு ந்யூனதை (குறைவு) இல்லை என்று பரிஹரித்திருக்கிறார்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே!'யோ வை தத் காப்ய ஸூத்ரம் வித்யாத்தம் ச அந்தர்யாமிணமிதி ஸ ப்ரஹ்மவித் ஸ லோகவித் ஸ தேவவித் ஸ வேதவித் ஸ பூதவித் ஆத்மவித் ஸ ஸர்வவிதிதி' என்னும் இந்த அந்தர்யாமி ப்ரகரணத்தின் உபக்ரம (ஆரம்ப) வாக்யத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—* யாராவது ஒரு மனிதன் இந்த ஸூத்ரத்தைத் தெரிந்துகொள்வானோ அப்படியே ஸூத்ராந்தர்கதனாய் ஸூத்ரத்திற்கு நியாமகனான அந்தர்யாமியை முன்சொல்லியுள்ளபடிக்கு தெரிந்துகொள்ளுகிறானோ அவன் 'ப்ரஹ்மவித்' பரமாத்மாவைத் தெரிந்துகொண்டவனாகிறான். அந்தர்யாமியினால் நியமிக்கப்படும் பூராதிலோகங்களைத் தெரிந்து கொள்ளுகிறான். அக்ன்யாதி தேவதைகளைத் தெரிந்துகொள்ளுகிறான். ப்ரமாணங்களாயிருக்கும் ஸகல வேதங்களைத் தெரிந்துகொள்ளுகிறான். ஸூத்ரத்தினால் தரிக்கப்பட்ட ஸூத்ராந்தர்கதனான அந்தர்யாமியால் நியம்யமான சதுர்முகாதி ஸகலப்ராணிகளையும் தெரிந்துகொள்ளுகிறான். கர்த்ருத்வ, போக்த்ருத்வ விஶிஷ்டனான அந்தர்யாமியால் நியம்யனான தன்னையும் தெரிந்துகொள்ளுகிறான். பரமாத்மாவினால் நியம்யமான எல்லா ஜகத்தையும் தெரிந்துகொள்ளுகிறான் என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

---

* ய: கஶ்சித்வை தத் ஸூத்ரம் ஹே காப்ய வித்யாத் விஜானீயாத் தம் சாந்தர்யாமிணம் ஸூத்ராந்தர்கதம் தஸ்யைவ ஸூத்ரஸ்ய நியந்தாரம் வித்யாத் ய இத்யேவமுக்தேன ப்ரகாரேண ஸ ஹி ப்ரஹ்மவித் பரமாத்மவித் ஸ லோகாம்ஶ்ச பூராதீனந்தர்யாமிணா நியம்யமானான் லோகான் வேத்தி ஸ தேவாம்ஶ்சாக்ன்யாதீன் லோகினோ ஜானாதி வேதாம்ஶ்ச ஸர்வப்ரமாணபூதான் வேத்தி பூதானி ச ப்ரஹ்மாதீனி ஸூத்ரேண த்ரியமாணானி ததந்தர்கதேனாந்தர்யாமிணா நியம்யமானானி வேத்தி ஸ ஆத்மானம் ச கர்த்ருத்வ போக்த்ருத்வ விஶிஷ்டம் தேனைவாந்தர்யாமிணா நியம்யமானம் வேத்தி ஸர்வஞ்ச ஜகத்ததாபூதம் வேத்தி (ப்ரு. பா. 3-7-1.)

வா. வ:—'யோ வை தத் காப்ய' இத்யாதி வேதவாக்யங்களி ஞலும், அதிற்கு வ்யாக்யானமான ஶங்கரபாஷ்யத்திஞலும் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—சதுர்முகாதி ஸகல தேவதைகள் (சேதனர்கள்) நியம்யர்கள், ஸமஸ்த ஜகத்து நியம்யம், பரமாத்மா நியாமகன் என்று சொல்லியிருக்கிறபடியால் நியம்ய நியாமக பாவத்திஞல் சேதஞ சேதஞத்மக ப்ரபஞ்சத்திற்கு ப்ரஹ்மத்தோடு பேதம் ஸித்திக்கிறது, மற்றும் ஜீவன் அந்தர்யாமியான பரமாத்மாவை தெரிந்துகொள்ளுபவன் (ஞாத்ரு). சதுர்முகாதி ஸமஸ்த சேதனர்களை தெரிந்துகொள்ளுபவன். ஸமஸ்த ஜகத்தையும் தெரிந்து கொள்ளுபவன் என்று ஸித்திக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ய ஏததக்ஷரம் கார்கி விதித்வாஸ் மால் லோகாத்ப்ரைதி ஸ ப்ராஹ்மண:' (ப்ரு. 3-8-10) என்னும் அக்ஷர ப்ரகரணத்திலிருக்கும் வாக்யத்திற்கு அர்த்தமென்ன?

பி. வா:—எவன் அக்ஷரஞமக பரமாத்மாவை தெரிந்து கொண்டு மரணத்தை அடைகிருஞே அவனே ப்ராஹ்மணன் (பலனை அடைபவன்) என்று அர்த்தம்.

வா. வ:—இதஞல் என்னவென்று ஸித்தமாகிறது?

பி. வா:—ஜீவன் அக்ஷரநாமக பரமாத்மாவை தெரிந்து கொள்ளுகிறவனென்று ஸித்தமாகிறது.

வா. வ:—'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந் தவ்ய:' 'த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்யா' 'தஸ்மின் த்ருஷ்டே பராவரே' 'மனஸைவானு த்ருஷ்டவ்யம்' 'ஏஷ வா த்ரஷ்டா' 'த்ருஷ்ட்வேவ தம் முச்யதே நாபரேண' இது முதலான வாக்யங் களின் அபிப்ராயமென்ன?

பி. வா:—ஜீவன் பரமாத்மாவை ஶ்ரவணம் செய்யவேண்டி யது, தர்ஶனம் செய்யத்தக்கது, (ஜீவன் த்ரஷ்டா, ஶ்ரோதா) அந்த பரமாத்மாவின் தர்ஶனத்திஞல் மோக்ஷத்தை அடையத் தக்கது என்று அபிப்ராயம்.

வா. வ:—இந்த வாக்யங்களிஞல் ஜீவன் த்ரஷ்டா, ஶ்ரோதா என்று ஸித்தமாகிறதா இல்லையா?

பி. வா:—கேழ்ப்பதென்ன? ஜீவன் த்ரஷ்டாவென்று ஸித்த மாகிறது. ஜீவன் பரமாத்மாவைப் பார்க்காமலிருந்தால் ஜீவ னுக்கு மோக்ஷமாவது எப்படி?

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் சொல்லி யிருக்கிறார்?

பி. வா:—'அதோஸ்மாதந்தர்யாமிணோ நான்யோதோஸ்தி த்ரஷ்டா ததா நான்யோதோஸ்தி ஶ்ரோதா' என்னும் வாக்யத்தி னால் 'அத:' இந்த அந்தர்யாமியான பரமாத்மாவைவிட வேறான த்ரஷ்ட்ரு இல்லை, ஶ்ரோத்ரு இல்லை என்னும் அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறார்.

வா. வ:—இந்த வ்யாக்யானத்தினால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—அந்தர்யாமியான பரமாத்மாவைவிட த்ரஷ்டா ஶ்ரோதா இல்லை என்று சொல்வதினால் பரமாத்மாவைவிட வேறு ஜீவனே இல்லை. ஜீவபரமாத்மாக்கள் ஒன்றே என்று ஸித்திக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த அந்தர்யாமி ப்ரகரணம் பத்திலிருக்கும் 'யோ வை தத் காப்ய ஸூத்ரம் வித்யாத்' இத் யாதி வாக்யங்கள் 'ய ஏததக்ஷரம் கார்கி விதித்வா' 'ஆத்மா வாரே த்ரஷ்டவ்ய:' 'த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்யா' 'ஏஷ வா த்ரஷ்டா' இவைகளே முதலான பூர்வத்தில் சொன்ன அனேக வேதவாக்யங்கள்—ஜீவன் த்ரஷ்டா, ஶ்ரோதா, ஞாதாவென்று சொல்லுகிறது. ஶங்கராசார்யரும் அந்த வேதவாக்யங்களுக்கு ஜீவன் த்ரஷ்டா, ஞாத்ரு, ஶ்ரோத்ரு என்று வ்யாக்யானம் செய் திருக்கிறார். இப்படியிருக்க 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என் னும் வாக்யத்திற்கு பரமாத்மாவைவிட வேறான த்ரஷ்டாவே இல்லை என்று அர்த்தம் சொல்வது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—'ஏஷ வா த்ரஷ்டா' இத்யாதி வாக்யங்கள் ஜீவ னுக்கு வ்யாவஹாரிக த்ரஷ்ட்ருத்வத்தைச் சொல்லுகிறது. 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் ஶ்ருதி பாரமார்த்திக த்ரஷ்ட்ருத்வத்தை நிஷேதிக்கிறது. ஆகையால் அந்த வாக்யங்க

ளுக்கு பரஸ்பர விரோதம் வருவதில்லை: ஆகையால் பொருந்து கிறது.

வா. வ:—'ஏஷ வா த்ரஷ்டா' இத்யாதி வாக்யங்களில் ஜீவனுக்கு வ்யாவஹாரிக த்ரஷ்ட்ருத்வத்தைச் சொல்லுகிறதென்னும் பதம் உண்டோ? 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யத்தில் பாரமார்த்திக த்ரஷ்ட்ருத்வம் இல்லை என்னும் பதம் உண்டோ?

பி. வா:—இல்லை.

கோர்ட்:—ப்ரமாணங்கள் தம்தம்விஷயத்தை தாத்விகமென்றே (பாரமார்த்திகமென்றே) விஷயீகரிக்கின்றன. வ்யாவஹாரிகமென்று விஷயீகரிக்காது என்று உங்களிட அத்வைதிகளே சொல்லியிருக்கிறபடியால் மருபடியும் நீங்கள் ப்ரமாணங்களினால் ஸித்தமாகும் த்ரஷ்ட்ருத்வாதிகளை வ்யாவஹாரிகமென்று சொல்லக்கூடாது. வேறு ஸமாதானமிருந்தால் சொல்லும்?

பி. வா:—(பதில் இல்லை).

---

## வாதி விசாரணை.

---

பி. வா. வ:—ஆசார்யரே! 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யத்திற்கு நீங்களென்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:-ஶாஸ்த்ரியார் சொன்னபடியே மஹானுபாவர்களான ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகள் ஸாதாரண மனிதர்களைப் போல் தமக்குள்ளிருக்கும் அந்தர்யாமியை அறிவதில்லை என்பது எப்படிப்பொருந்தும்? என்று சங்கை உண்டாகவே—ப்ரஸக்தமான 'அத்ருஷ்டோ த்ரஷ்டா—அஶ்ருத: ஶ்ரோதா.....நான்யோதோஸ்தி த்ரஷ்டா நான்யோதோஸ்தி ஶ்ரோதா' என்னும் வாக்யம், 'ஏதத் வயா ந விஜ்ஞேயம் ரூபவானிதி த்ருஶ்யதே' என்று சொல்லியிருக்கிறபடி பரமாத்மா இதரர்களால் அத்ருஶ்யன் (காணப்படுகிறவனல்ல) கேழ்க்கப்படுபவனல்ல, அத:= இதரர்க

ளால் ஸ்வத: காணப்பட்டுக்கொள்ளுவதற்கு அஶக்யனானபடியா லும், கேழ்க்கப்படுபவனல்லாததினாலும் 'அன்ய: த்ரஷ்டா' பர மாத்மாவைவிட வேறான ஜீவன், அந்தர்யாமியை த்ரஷ்டாவும் ஶ்ரோதாவும் ஆவதில்லை என்று சொல்லுகிறபடியால், தர்மாதிகள் (புண்யபாபங்கள்) அதீந்த்ரியங்களானபடியால் தர்மாதி த்ரஷ்ட் ருக்கள் யாரும் இல்லை என்று சொன்னால்-த்ருஷ்டாவே (ஜீவனே) இல்லை என்று ஸித்திக்காதோ, மற்றும் தர்மங்களைப் பார்க்காம லிருப்பதினால் மனிதனுக்கு கனிஷ்டதை (அல்பதனம்) உண்டாவ தில்லையோ அப்படியே பரமாத்மா இதரர்களால் தம் ப்ரயத்னத் தினால் காணப்பட்டுக்கொள்ளாமற்போவதினால் த்ரஷ்ட்ருக்க ளான ஜீவர்களே இல்லை என்று ஸித்திக்கமாட்டாது. ப்ருதிவ்யாத் யபிமானி தேவதைகளுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவை பார்க்காமலிருப்பதினால் ந்யூனதையும் உண்டாகமாட்டாது என்று சொல்லுகின்றன.

---

வா. எ. 28; ப்ர. வா. எ. 18.

## ஸ யஶ்சாயம் புருஷே என்னும் ஶ்ருதி விசாரணை.

## வாதி விசாரணை.

வா. வ:—'ஸயஶ்சாயம் புருஷே யஶ்சாஸாவாதித்யே ஸ ஏக:' என்னும் தைத்திரீய ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத் தை எப்படித் தெரிவிக்கிறது?

வாதி:—புருஷனிடத்தில் (ஜீவனிடத்தில்) எந்த பரமாத்மா இருக்கிறானோ, ஆதித்யனிடத்தில் எந்த பரமாத்மா இருக்கிறானோ அந்த பரமாத்மா 'ஏக:' ஒருவனே என்று ஜீவாந்தர்கதனான பர மாத்மாவினால், ஆதித்யாந்தர்கதனான பரமாத்மாவுக்கு பேதமில்லை என்று அர்த்தம். இந்த ஶ்ருதி—புருஷன் (ஜீவன்) ஆதாரன், பரமாத்மா ஆதேயன், ஆதித்யன் ஆதாரன், பரமாத்மா ஆதே யன் என்று ஆதாராதேயபாவத்தினால் ஆதித்யாதி ஜீவர்களுக்கு பரமாத்மாவினால் பேதத்தைத் தெரிவிக்கின்றது.

## ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ஸ யஶ்சாயம் புருஷே யஶ்சாஸா வாதித்யே ஸ ஏக:' என்னும் வாக்யத்தினுல் ஜீவேஶ்வரர்களுக்கு ஐக்யம் (அபேதம்) எப்படி ஸித்திக்கிறது?

பி. வா:—புருஷனிடத்தில் எந்த பரமாத்மா இருக்கிறுனே, ஆதித்யனிடத்தில் எந்த பரமாத்மா இருக்கிறுனே அந்த பரமாத்மா 'ஏக:' ஒருவனே, அவனிடத்தில் பேதமில்லை என்று சொல்லி யிருக்கிறபடியால் பரமாத்மா ஜீவனைவிட வேறல்ல, ஒருவனே என்று ஸித்திக்கிறது?

வா. வ:—'ய ஆதித்யே திஷ்டன் ஆதித்யாதந்தர:' (ப்ரு.) 'ஆத்மனி திஷ்டன்—ஆத்மனோந்தர:' (ப்ரு.) இந்த வாக்யங்கள் எந்த அர்த்தங்களைச் சொல்லுகின்றனவென்று 'அந்தர்யாம்யதி தைவாதிஷு தத்தர்மவ்யவபதேஶாத்' 'ஶாரீரஶ்சோபயேபி ஹி பேதனைமதீயதே' என்னும் ஸூத்ரங்களில் ஸூத்ரகாரர் நிர்ணயித்திருக்கிறுரென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறுர்?

பி. வா:—ஆதித்யாதி தேவதைகளிலிருந்து ஆதித்யாதி தேவதைகளை நியமிக்கும் பரமாத்மா ஆதித்யாதி தேவதைகளை விட பின்னன். 'ஆத்மனி' ஜீவர்களிலிருந்து ஜீவர்களை நியமிக்கும் பரமாத்மா ஜீவர்களைவிட பின்னனென்று ஸூத்ரகாரர் நிர்ணயித்திருக்கிறுரென்று தம்மிட பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறுர்.

வா. வ:—ஆதித்யாந்தர்கதனை பரமாத்மா ஆதித்யனுடன் பின்னனென்றும், ஜீவாந்தர்கத பரமாத்மா ஜீவனுடன் பின்னனென்றும் ஸித்திக்கிறதா அல்லது அபின்னனென்று (ஆதித்ய பரமாத்மாக்களுக்கும், ஜீவபரமாத்மாக்களுக்கும் ஐக்யமென்று) ஸித்திக்கிறதா?

பி. வா:—ஆதித்யன், ஜீவர்கள் இவர்களைவிட பரமாத்மா பின்னனென்று ஸித்திக்கிறது.

வா. வ:—'ய ஆதித்யே திஷ்டன்—ய ஆத்மனி திஷ்டன்' என்னும் வாக்யங்களைப்போல் 'ஸ யஶ்சாயம் புருஷே யஶ்சாஸாவா தித்யே ஸ ஏக:' என்னும் வாக்யமும் ஆதித்யாந்தர்கதனை பர

மாத்மாவுக்கு ஆதித்யனுடன் பேதமும், ஜீவாந்தர்கதனை (புருஷாந்தர்கதனை) பரமாத்மாவுக்கு ஜீவனுடன் பேதமும் தெரிவித்துக்கொண்டிருக்க—ஜீவபரமாத்மாக்களின் அபேதவிஷயத்தில் இந்த வாக்யத்தை எப்படி உதஹரித்தீர்?

பி. வா:—'ஸ யஶ்சாயம் புருஷே யஶ்சாஸாவாதித்யே' என்னும் வாக்யத்தினுல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாயினும்—'ஸ ஏக:' என்னும் வாக்யம் பரமாத்மா ஒருவனே என்று சொல்லுகிறபடியால் ஜீவ பரமாத்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறது.

வா. வ:—'ஸ ஏக:' என்னும் வாக்யம் எந்தபரமாத்மா புருஷனிடத்தில் இருக்கிருனே, எந்த பரமாத்மா ஆதித்யனிடத்திலிருக்கிருனே, அந்த அந்தர்யாமி ரூபங்கள் ஒன்றே என்று சொல்லுகிறதேயல்லாமல் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தை (அபேதத்தை)ச் சொல்லுவதில்லை. 'ஸ யஶ்சாயம் புருஷே' என்று பூர்வவாக்யத்திலேயே ஜீவன், பரமாத்மாவைவிட வேறென்று சொல்லி 'ஸ ஏக:' என்னும் வாக்யத்தினுல் அபேதம் சொல்லுகிறதென்பது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதில் இல்லை.)

---

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன், யோ ஆதித்யே திஷ்டன், ய ஆத்மனி திஷ்டன்' இவைகளே முதலான அந்தர்யாமி ப்ரகரணத்திலிருக்கும் 21 வாக்யங்கள் ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகளுக்கும், ஜீவர்களுக்கும், பரமாத்மாவுடன் நியம்யநியாமக பாவத்தினுல் பேதத்தைச் சொல்லுகிறது. ஸூத்ரகாரர் இந்த வாக்யம் பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிருர். ஶங்கராசார்யார் இந்த மந்த்ரங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் சொல்லுகிறதென்று வ்யாக்யானம் செய்திருக்கிருர். ஆகையால் ஜீவபரமாத்மாக்களின் பேதவிஷயத்தில் இந்தஶ்ருதி ஆதாரமாகிறது. 'ஸ யஶ்சாயம் புருஷே யஶ்சாஸாவாதித்யே' என்னும் தைத்திரீய வாக்யம் ஆதாராதேய

பாவத்தினுல் ஆதித்யாதி ஜீவர்களுடன் பரமாத்மாவுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது. இந்த விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிரேும்.

---

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) My Lord! 'யஃ ப்ருதிவ்யாம் திஷ்டன்' இது முதலான வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறது. ஸூத்ரகாரரும் ஶங்கராசார்யரும் பேதத்தைச்சொல்லுகிறதென்று வ்யாக்யானம் செய்திருக்கிருர்கள். ஆயினும்—'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் உத்தர வாக்யத்திலேயே, அத: = இந்த பரமாத்மாவைவிட வேறு த்ரஷ்டாவான ஜீவன் இல்லை என்று சொல்லியிருக்கிறபடியால் அந்த பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) என்று சொல்லவேண்டுமேயொழிய, பாரமார்த்திக ஸத்யமென்று சொல்லக்கூடாது. 'ஸ யஶ்சாயம் புருஷே யஶ்சாஸாவாதித்யே' என்னும் வாக்யத்தினுல் பேதம் தோன்றினும்—'ஸ ஏக:' என்னும் வாக்யம் பரமாத்மா ஒருவனே என்று சொல்லியிருக்கிறபடியால் அந்த பேதம் மித்யா என்றே சொல்லவேண்டும். ஆகையால் 'ய ஆத்மனி திஷ்டன்' இத்யாதி வாக்யங்களேயாகிலும் 'ஸ யஶ்சாயம் புருஷே' என்னும் வாக்யமாகிலும் ஜீவபரமாத்மாக்களின் பேதவிஷயத்தில் ஆதாரமாகாததேயன்றி அபேதவிஷயத்திலேயே ஆதாரமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று கோருகிரேும்.

---

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ!

(1) ஆதித்யாதிஜீவர்களுக்கு பரமாத்மாவுடன் நியம்யநியாமக பாவத்தினுல் பேதம் இதரப்ரமாணங்களினுல் ஸித்திக்காததினுல், வேதம் தானே பேதத்தைச் சொல்லி 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யத்தினுல் நிஷேதிக்கிறதென்பது 'ப்ரக்ஷாள

ஞத்தி பங்கஸ்ய தூராதஸ்பர்ஸனம் வரம்' சேற்றை மெறித்து அலம்பிக்கொள்ளுவதைவிட மெறிக்காமலே இருப்பது ஶ்ரேஷ்டமானது என்று சொல்லுவதைப்போல் பேதத்தைச் சொல்லி நிஷேதிப்பதைவிட, பேதத்தைச் சொல்லாமலே இருப்பது நலமாகும்.

(2) இந்த அந்தர்யாமி ப்ரகரண ஆரம்பத்திலேயே 'தச்சாந்தர்யாமிணம் (வித்யாத்) ஸ ப்ரஹ்மவித்' இத்யாதி அனேக வாக்யங்களிஞல் ஜீவன் ஞாத்ரு என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(3) 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' இத்யாத்யனேக வாக்யங்களிஞல் ஜீவன் பரமாத்மாவுடன் பின்னனென்று சொல்லப்பட்டிருக்கிறது. வேதார்த்த நிர்ணயகமான ஸூத்ரங்களிஞல் ஸூத்ரகாரர் இந்த வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று நிர்ணயம் செய்திருக்கிறுர். ஶங்கராசார்யரும் ஸூத்ரகாரர் இந்த வாக்யங்கள் பேதத்தை ப்ரதிபாதிக்கின்றனவென்று நிர்ணயம் செய்திருக்கிறுரென்று சொல்லியிருக்கிறுர்.

(4) 'ஏஷ வா த்ரஷ்டா'—'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய:' இவைகளே முதலான அனேக வாக்யங்கள் ஜீவன் த்ரஷ்ட்ரு என்று சொல்லுகின்றன.

(5) 'ய ஏததக்ஷரம் கார்கி விதித்வா' என்னும் அந்தர்யாமி ப்ரகரணத்திற்கு முன்னிருக்கும் அக்ஷரப்ரகரணத்தில் ஜீவன் ஞாத்ரு என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(6) மஹானுபாவர்களான தேவதைகள் தம் அந்தர்யாமியான பர்மாத்மாவை ஏன் தெரியமாட்டார்கள் என்னும் ஶங்கையுண்டாகவே 'அத்ருஷ்டோ த்ரஷ்டாஶ்ருதஶ்ரோதா......... நான்யோதோஸ்தி த்ரஷ்டா—நான்யோதோஸ்தி ஶ்ரோதா' என்னும் வாக்யம் ப்ரவ்ருத்தமாயிருப்பதிஞல் எப்படி தர்மாதிகள் (புண்ய பாபங்கள்) அதீந்த்ரியங்களானபடியால், தர்மாதிகளைப் பார்க்கும் ஜனங்கள் இல்லை என்று சொன்னல் ஜனங்களே இல்லை என்று ஸித்திக்கமாட்டாதோ, தர்மாதிகளைப் பார்க்காமலிருப்பதிஞல் அவர்களுக்கு ந்யூனதையும் உண்டாவதில்லையோ, அப்படியே பரமாத்மா 'அத்ருஷ்ட்ரு' அன்யரால் அவர்களின் ப்ரயத்னமாத்தி

ரத்திஞல் காணப்பட்டுக்கொள்ளுபவனல்ல. ஆகையால் அந்த பரமாத்மாவைக் காணுபவர் (த்ரஷ்ட்ரு) யாரும் இல்லை என்று சொன்ஞல் த்ரஷ்ட்ருகளான ஜீவர்களே இல்லை என்ருகட்டும், ப்ருதிவ்யாத்யபிமானி தேவதைகள் பரமாத்மாவைப் பார்க்கா திருப்பதிஞல் அவர்களுக்கு ந்யூனதையாகட்டும் ஸித்திப்பதில்லை. ஆகையால் 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா—நான்யோதோஸ்தி ஶ்ரோதா' என்னும் வாக்யம் பரமாத்மாவைவிட வேருன த்ரஷ்ட்ருவான ஜீவனே இல்லை என்று சொல்வதில்லை. அப்படிச் சொல்லவேண்டுமாயின் ஜீவனுக்கு த்ரஷ்ட்ருத்வம், ஶ்ரோத்ருத்வம், விஞாத்ருத்வம், இவைகளை ப்ரதிபாதிக்கும் அனேக வேத வாக்யங்களிஞல் விரோதம் உண்டாகும். வேதங்களிஞல் சொல்லப்பட்ட த்ரஷ்ட்ருத்வாதிகள் வ்யாவஹாரிகம், நாங்கள் பாரமார்த்திக த்ரஷ்ட்ருத்வத்தை நிஷேதிக்கிருேம் என்பதையும், அத்வைதிகளே ப்ரமாணங்கள் தம்தம் விஷயத்தை தாத்விகமென்றே (பாரமார்த்திக ஸத்யமென்றே) க்ரஹிக்கின்றனவே யல்லாது வ்யாவஹாரிகமென்று க்ரஹிப்பதில்லை என்று சொல்லி யிருக்கிறபடியால் வேதங்கள் வ்யாவஹாரிக த்ரஷ்ட்ருத்வத்தைச் சொல்லுகின்றனவென்பது தம் வாக்யங்களுக்கே விருத்தமாகிற படியால் 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' என்னும் வாக்யம் பரமாத்மாவைவிட வேறே த்ரஷ்ட்ருவான ஜீவன் இல்லை என்று நிஷேதிக்கிறதென்பதற்கு ஸாத்யமில்லை. 'ய ஆத்மனி திஷ்டன்' இத்யாத்யனேக வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே சொல்லுகிறபடியால் இந்த வாக்யத்திஞலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்திக்கிறது. இப்படியே 'ஸ யஶ்சாயம் புருஷே யஶ்சாஸாவாதித்யே' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே தெரிவிக்கிறதென்பதைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டும்.

வா. எ. 5; பி. வா. எ. 9.

# நான்யோதோஸ்தி த்ரஷ்ட்ரு என்னும் அக்ஷர ப்ரகரண ஶ்ருதி விசாரணை.

---

## வாதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி ஸூர்யா சந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி த்யாவா ப்ருதிவ்யௌ வித்ருதே திஷ்டத ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி நிமேஷா முகூர்தா அஹோராத்ராண்யர்த்தமாஸா மாஸா ருதவ: ஸம்வத்ஸரா இதி வித்ருதாஸ்திஷ்டந்த்யேதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி ப்ராச்யோன்யா நத்ய: ஸ்யந்தந்தே ஶ்வேதேப்ய: பர்வதேப்ய: ப்ரதீச்யோன்யாம் யாம் யாம் ச திஶமன்வேதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி தததோ மனுஷ்யா: ப்ரஶம்ஸந்தி யஜமானம் தேவாதர்வீம் பிதரோன்வாயத்தா: 19. யோ வா ஏததக்ஷரம் கார்க்யவிதித்வாஸ்மிம்ல்லோகே ஜுஹோதி யஜதே தபஸ்தப்யதே பஹூனி வர்ஷ ஸஹஸ்ராண்யம்தவதேவாஸ்ய தத் பவதி யோ வா ஏததக்ஷரம் கார்க்யவிதித்வாஸ்மால் லோகாத் ப்ரைதி ஸ க்ருபணோத ய ஏததக்ஷரம் கார்கி விதித்வாஸ்மால்லோகாத் ப்ரைதி ஸ ப்ராஹ்மண: 10. தத்வா ஏததக்ஷரம் கார்க்யத்ருஷ்டம் த்ரஷ்ட்ரஶ்ருதம் ஶ்ரோத்ரமதம் மந்த்ரவிஞாதம் விஞாத்ரு நாந்யததோஸ்தி த்ரஷ்ட்ரு நான்யததோஸ்தி ஶ்ரோத்ரு நான்யததோஸ்தி மந்த்ரு நான்யததோஸ்தி விஞாத்ரைதஸ்மின் கல்வக்ஷரே கார்க்யாகாஶ ஓதஶ்ச ப்ரோதஶ்சேதி|| (ப்ரு. 3-8-11) என்னும் வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை எப்படி தெரிவிக்கின்றன?

வாதி:—இந்த அக்ஷரநாமகனை பரமாத்மாவின் ஆஜ்ஞையினால் ஸூர்ய சந்த்ராதிகள் த்யாவாப்ருதிவிகள், நிமிஷ முகூர்த்தாதிகள் முதலான எல்லா பதார்த்தங்களும் தரிக்கப்பட்டிருக்கின்றன. இந்த பரமாத்மாவின் ஆஜ்ஞையினாலேயே நதிகள் ப்ர

வஹிக்கின்றன என்று ஸூர்யசந்த்ரர்கள் முதலான சேதனு சேதனுத்மக ஜகத்து பரமாத்மாவினுல் மாஸ்யம், (மிக்ஷிக்கப்படு வது) பிறந்தது, நியமிக்கப்படுவது, தரிக்கப்படுவது. பரமாத்மா ஜகத்துக்கு மாஸகன், ஜனகன் (நிர்மாண கர்த்தா) நியாமகன், தாரகன் என்று மாஸ்யமாஸக பாவத்தினுலும், ஜன்ய ஜனக பாவத்தினுலும், நியம்ய நியாமக பாவத்தினுலும், தார்ய தாரக பாவத்தினுலும், சேதனுசேதனுத்மக ஸமஸ்த ப்ரபஞ்சத்திற்கும், பரமாத்மாவுக்கும் பேதத்தைச் சொல்லுகிறது. மற்றும் 'ஏததக்ஷ ரம் கார்கி விதித்வா' என்னும் வாக்யத்தினுல் அக்ஷரநாமக பர மாத்மா ஞேயன், ஜீவன் ஞாதா, என்று ஞாத்ருஞேய பாவத்தி னுல் பேதத்தைச் சொல்லுகிறது.

## ப்ரதிவாதி விசாரணை.

பி. வா. வ:—மாஸ்த்ரிகளே! இந்த வாக்யத்தை ஜீவபர மாத்மாக்களின் அபேதவிஷயத்தில் தாங்கள் உதஹரித்திருக்கிறீர் அல்லவா? இந்த வாக்யத்தினுல் அபேதம் எப்படி ஸித்திக்கிறது?

பி. வா:—'நான்யதோஸ்தி த்ரஷ்ட்ரு நான்யதோஸ்தி ம்ரோத்ரு' என்னும் வாக்யம், அத:=இந்த பரமாத்மாவினுல், அன்ய:=வேறு, த்ரஷ்டாவும் ம்ரோதாவுமான ஜீவன் இல்லை என்று சொல்வதினுல் பரமாத்மாவைவிட பின்னனுன ஜீவன் இல்லை என்று ஸித்திக்கிறது.

---

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—மாஸ்த்ரிகளே! 'ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய' என்னும் வாக்யத்திற்கு மங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறுர்?

பி. வா:—ஸூர்யசந்த்ராதி ஸமஸ்த ஜகத்து பரமாத்மாவினுல் மாஸ்யம், ஜன்யம், நியம்யம், தார்யம், பரமாத்மா மாஸகன், ஜனகன், நியாமகன், தாரகன் என்று அர்த்தம் செய்திருக்கிறுர்.

வா. வ:—(1) 'ஜகத்வ்யவஸ்தா ப்ரமாஸ்த்ருபூர்விகா வ்யவஸ் தாத்வாத் ராஜ்யவ்யவஸ்தாவத்'

(2) 'யிமதௌ யியிஷ்ட ஞானவதா நிர்மிதௌ ப்ரகாஶகத்வாத் தீபவத்'

(3) 'யிமதௌ நியந்த்ருபூர்விகௌ நியந்த்ருப்ர வ்ருத்தித்வாத் ப்ருத்யாதி ப்ரவ்ருத்திவத்'

(4) 'யிமதௌ ப்ரயத்னவதா த்ருதௌ அஸ்வா தந்த்ர்யாத் ஹஸ்தன்யஸ்த பாஷாணவத்'

இவைகளே முதலான அனுமானங்களை யார் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—இந்த மந்த்ரத்திற்கு வ்யாக்யானம் செய்யும் போது இந்த அனுமானங்கள் வேதத்திலும் ஶங்கராசார்யரின் பாஷ்யத்திலும் ஸூசிதங்களாய் இருக்கின்றனவென்று ஆனந்தகிரி என்பவர் சொல்லி யிருக்கிறார்.

வா. வ:—இவைகளால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—ஸூர்யாதி ஜகத்துக்கு, ஒரு தாரகன், நிர்மாண கர்த்தா, ப்ரஶாஸகன், நியாமகன் உண்டு. அவனே அக்ஷரநாமக பரமாத்மாவென்று ஸித்தமாகிறது.

வா. வ:—ஶாஸ்ய ஶாஸக பாவாதிகளால் ஸூர்யாதி ஜீவர்களுக்கு பரமாத்மாவினால் பேதம் ஸித்திக்கிறதா இல்லையா?

பி. வா:—'ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய' என்னும் வாக்யத்தினால் பேதம் ஸித்திக்கிறது.

வா. வ:—வேதத்தினால் ஸித்தமான பேதம் உங்களால் ஸ்வீகரிக்கப்படவேண்டுமல்லவா?

பி. வா:—வேதத்திற்கு பேதத்தைச் சொல்வதில் தாத்பர்யமிருந்தால் ஸ்வீகரிக்கவேண்டியதே. அந்த வாக்யத்திற்கு பேதத்தைச் சொல்வதில் தாத்பர்யமில்லை.

வா. வ:—பேதம் சொல்வதில் தாத்பர்யம் இல்லையானால் இந்த ஶ்ருதி பேதத்தை ஏன் சொல்லுகிறது?

பி. வா:—நிஷேதிப்பதற்காக அனுவாதம் செய்கிறது.

வா. வ:—நிஷேதம் எதற்குப் பொருந்துகிறது?

பி. வா:—வேறு ஏதாவது ப்ரமாணங்களினால் ப்ரஸக்தமா யிருப்பதற்கே பொருந்துகிறது.

வா. வ:—ஸூர்யாதி தேவதைகளுக்கு பரமாத்மாவுடன் பேதம் எந்த ப்ரமாணங்களினால் ஸித்தமாயிருக்கிறது?

பி. வா:—வேதாதிரிக்தமான ப்ரமாணத்தினால் அந்த பேதம் ப்ரஸக்தமாவதற்கு அஶக்யமானபடியால் 'ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய' என்னும் வேதத்தினாலேயே ப்ரஸக்தமா யிருக்கிறதென்று சொல்லவேண்டும்.

வா. வ:—'ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி' என்னும் பூர்வவாக்யத்தினால், தானே ப்ரஸக்தியை யுண்டாக்கி 'நான்யததோஸ்தி' என்னும் உத்தரவாக்யத்தினால் தானே நிஷேதிப்பது, 'ப்ரக்ஷாளனாத்தி பங்கஸ்ய' என்கிற ந்யாயத்தையனு ஸரித்து (தானே ப்ரஸக்தியை யுண்டாக்கி நிஷேதிப்பதைவிட ப்ரஸக்திக்காமலே இருப்பது ஶ்ரேஷ்டமாயிருக்க—தானே ப்ரஸக்தியை யுண்டாக்கி தானே நிஷேதிப்பது) அயுக்தமாகிற தல்லவா?

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—ஐயா! பேத நிஷேதகமான வாக்யம் யாது? பேதத்தை எப்படி நிஷேதிக்கிறது?

பி. வா:—'நான்யததோஸ்தி த்ரஷ்ட்ரு, நான்யததோஸ்தி ஶ்ரோத்ரு' என்னும் வாக்யம், அத: = பரமாத்மாவைவிட, அன்யத் = வேறான, த்ரஷ்ட்ரு = ஜீவன், ந = இல்லை என்று பேதத்தை நிஷேதிக்கிறது,

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'தத்வா ஏததக்ஷரம் கார்கி அத்ருஷ்ட: த்ரஷ்ட்ரு அஶ்ருதம் ஶ்ரோத்ரு ....... நான்யததோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யத்திற்கு ஶங்கராசார்யார் என்ன வ்யாக்யானம் செய்திருக்கிறார்?

பி. வா.—* 'ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி' என்னும் வாக்யத்தினால் ஜகத்துக்கு ஒரு ஶாஸகன் இருக்க

* ப்ரதானவாதின: ஶங்காமனூத்யோத்தரவாக்யேன நிராகரோதி—அக்ஷேரித்யாதினா (ப்ரு. ஆனந்த. 3-8-11)

வேண்டும். அந்த ஶாஸகத்வம் பரமாத்மாவைவிட வேறொருவ ருக்கும் பொருந்துகிறதில்லை. ஆகையால் பரமாத்மாவை ஒப்புக் கொள்ளவேண்டுமென்று சொன்னதற்கு-அக்னிக்கு தாஹகத்வம், ப்ரகாஶகத்வம், எப்படி ஸ்வபாவமோ அப்படி ப்ரதானத்திற்கு ஶாஸகத்வாதிகள் ஸ்வபாவமானதினால் பொருந்தலாம். ஆகையால் ஜகத்துக்கு ஶாஸகம் ப்ரக்ருதியே ஆகிறது. ஆகையால் ப்ரக்ரு தியைவிட வேறான பரமாத்மாவை ஒத்துக்கொள்வதற்கு காரணம் இல்லை என்று ஸாங்க்யர்கள் பூர்வபக்ஷம் செய்யவே, அந்த ஆக்ஷே பத்தைப் பரிஹரிப்பதற்காக 'தத்வா ஏததக்ஷரம் கார்க்யத்ருஷ்டம் த்ரஷ்ட்ரு......நான்யததோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யம் ப்ரவ்ருத்தமாயிற்றென்று சொல்லி, அக்ஷரம் ஜனங்களால் அத் ருஷ்டமானது. தான் ஸ்வயம் த்ரஷ்ட்ரு = பார்க்கக்கூடியது. பரமாத்மாவைவிட பின்னமான அசேதனமான ப்ரதானமாகிலும், ப்ருதிவ்யாதி ஆகாஶாந்த பதார்த்தங்களாகிலும், த்ரஷ்ட்ரு ஆவ தில்லை. ஆகையால் ஜகத்துக்கு ஶாஸகமான த்ரஷ்ட்ருவான அக்ஷரம் ப்ரக்ருதி முதலான அசேதனம் ஆகிறதில்லை. ஆகையால் ஶாஸகமான அக்ஷரம் பரமாத்மாவே, ப்ரக்ருதியல்ல என்று அங்கீகரிக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்.

வா: வ:—ஶங்கராசார்யார் இந்த வாக்யத்தினால் யாருக்கு த்ரஷ்ட்ருத்வத்தை நிஷேதித்திருககிறார்?

பி. வா:—ப்ரதானம் முதலான அசேதனத்திற்கு த்ரஷ்ட்ருத் வத்தை நிஷேதித்திருக்கிறார்.

வா. வ:—த்ரஷ்ட்ருவான ஜீவன் இல்லை என்று நிஷேதிக்க வில்லையல்லவா?

பி. வா:—நிஷேதிக்கவில்லை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யோ வா ஏததக்ஷரம் கார்கி அவி தித்வா..............ய ஏததக்ஷரம் கார்கி விதித்வா' என்னும் வாக்யம்

---

அக்னேர்தஹன ப்ரகாஶகத்வவத் ஸ்வாபாவிகஸ்ய ப்ரஶாஸ்த்ருத்வம சேதனஸ்யைவேத்யத ஆஹ—தத்வா ஏததக்ஷரம்......ததேவாக்ஷரம் ஸர்வ புத்தித்வாரேண விஜ்ஞானக்ரியாகர்த்ரு நாசேதனம் ப்ரதானமன்யத் வா (ப்ரு. ஶாம். பா. 3-8-11).

அன்யத்வா பூர்வோக்தமவ்யாக்ருதாதி ப்ருதிவ்யந்தம் (ஆனந்தகிரி).

ஏன் ப்ரவ்ருத்தமாயிருக்கிறதென்று ஶங்கராசார்யார் சொல்லி யிருக்கிறார்?

*பி. வா:*—'ஜகத் வ்யவஸ்தா ப்ரஶாஸ்த்ரு பூர்விகா வ்யவஸ் தாத்வாத் ராஜ்யவ்யவஸ்தாவத்' இதே முதலான அனுமானங்களி னல் ஶாஸகனை அக்ஷரநாமக பரமாத்மா உண்டென்று சொல்லி, யாருடைய அஞ்ஞானத்தினல் பந்தம் உண்டாகிறதோ யாரிட ஞானத்தினல் மோக்ஷம் உண்டாகிறதோ அந்த ஞானஞானங்க ளுக்கு விஷயமான ஒரு வஸ்து இருக்கவேண்டும். அந்த வஸ் துவே பரமாத்மாவென்று பரமாத்மாவை ஸித்தப்படுத்துவதற் காக ப்ரவ்ருத்தமாயிருக்கிறதென்று ஶங்கராசார்யார் சொல்லி யிருக்கிறார்.

*வா. வ:*—ஶாஸ்த்ரிகளே! பரமாத்மா த்ரஷ்ட்ருவான ஜீவ னின் ஞானத்திற்கு விஷயனாய் ஸித்திக்கவேண்டும். த்ரஷ்ட்ரு வான ஜீவனே இல்லையாயின் அவனுக்கு ஞானமில்லாததாய் உங்கள் அக்ஷரனாமக பரமாத்மாவே ஸித்திக்காமற்போகவேண்டி வருவதினல் 'நான்யதஜோஸ்தி' என்னும் வாக்யம் த்ரஷ்ட்ருவே இல்லை என்று சொல்லுகிறதென்பது எப்படிப் பொருந்தும்?

*பி. வா:*—(பதில் இல்லை).

*வா. வ:*—ஶாஸ்த்ரிகளே! 'யேனஶ்ருதம் ஶ்ருதம் பவத்ய மதம் மதம்' (சாம் 6-1-3) என்னும் வாக்யத்திற்கு ஶங்கரா சார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

*பி. வா:*—'யேனைதேஶேன ஶ்ருதேனஶ்ருதமப்யன்யத் ஶ்ருதம் பவதி அமதம் மதம் பவதி' என்று பரமாத்மாவை ஶ்ரவ ணம் செய்வதினலும், மனனம் செய்வதினலும், தெரிந்துகொள் வதினலும், பரமாத்மாவினல் பின்னமான ஜகத்து ஶ்ருதமாகி றது, மதமாகிறது, ஞாதமாகிறது என்று அர்த்தம் செய் திருக்கிறார்.

*வா. வ:*—இந்த வேத வாக்யத்தினலும், ஶங்கராசார்யரிட வ்யாக்யானத்தினலும், ஜீவன் பரமாத்மாவை ஶ்ரவணம் செய்கி றன், மனனம் செய்கிறன், தெரிந்துகொள்ளுகிறன். ஜீவன் ஶ்ரோதா, மந்தா, விஞாதா என்று ஸித்திக்கிறதா இல்லையா?

பி. வா:—ஜீவன் ஸ்ரோதா, மந்தா, விஜ்ஞாதா என்று ஸித்திக்கிறது.

வா. வ:—'ஏஷ ஹி த்ரஷ்டா, ஸ்ரோதா மந்தா, போக்தா விஜ்ஞாத்மா புருஷ:' (ஷட். 4-9) என்னும் வாக்யம் என்ன சொல்லுகிறது?

பி. வா:—ஜீவன் த்ரஷ்ட்ரு, ஸ்ரோத்ரு, மந்த்ரு, ஞாத்ரு என்று சொல்லுகிறது.

வா. வ:—இந்த வாக்யத்தினால் ஜீவன் த்ரஷ்ட்ரு, ஸ்ரோத்ரு, மந்த்ரு, ஞாத்ரு என்று ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—ஜீவனுக்கு த்ரஷ்ட்ருத்வாதி தர்மங்கள் உண்டென்று ஸித்திக்கிறது.

வா. வ:—'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய: ஸ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: (ப்ரு. 2-3-5) இந்த வாக்யம் எந்த அர்த்தத்தைச் சொல்லுகிறது?

பி. வா:—பரமாத்மா ஜீவனால் பார்க்கப்படுபவன், கேழ்க்கப்படுபவன் (ஜீவன், த்ரஷ்டா, ஸ்ரோதா) என்று சொல்லுகிறது.

வா. வ:—இந்த வாக்யத்தினால் ஜீவன் த்ரஷ்டா, ஸ்ரோதா என்று ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—ஜீவன் த்ரஷ்ட்ரு, ஸ்ரோத்ரு என்று ஸித்திக்கிறது.

வா. வ:—'யதா பஸ்ய: பஸ்யதே ருக்மவர்ணம்' (மும். 3-1-3) என்னும் வாக்யம் என்ன சொல்லுகிறது?

கோர்ட்:—ஒரே விதங்களான எத்தனை வாக்யங்களை கேட்டுக்கொண்டிருக்கிறீர்? போதும் முடியுங்கள்.

வா. வ:—மஹாப்ரபோ! பூர்வத்தில் சொல்லியுள்ள வாக்யங்களும் மற்றும் 'தமாத்மஸ்தம் யேனுபஸ்யந்தி' இது முதலான ஆயிரக்கணக்கான வாக்யங்களும், ஸூத்ரங்களும், கீதாவாக்யங்களும், ஜீவன் த்ரஷ்ட்ரு, ஸ்ரோத்ரு, மந்த்ரு, ஞாத்ரு என்று சொல்லிக்கொண்டிருக்க—த்ரஷ்ட்ருவான ஜீவனே இல்லை என்று 'நான்யதோஸ்தி' என்னும் வாக்யத்திற்கு அத்வைதிகள் சொல்லும் அர்த்தம் யுக்தமல்லவென்று தெரிவிப்பதற்காக அனேக வாக்

யங்களைக் கேழ்க்கும் ப்ரஸங்கம் உண்டானதினால் கேட்டோம். கோர்ட்டார் உத்தரவின்படிக்கு முடிக்கிறோம். ஆவஸ்யகம் உண்டானபோது கேழ்ப்பதற்கு தயவு செய்து உத்திரவளிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

கோர்ட்:—Yes, வேறு விசாரம் நடக்கட்டும்,

வா. வ:—ஸாஸ்த்ரிகளே! 'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய:' இது முதலான ஆயிரக்கணக்கான வாக்யங்கள் ஜீவன் த்ரஷ்ட்ரு, ஸ்ரோத்ரு, மந்த்ரு, விஜ்ஞாத்ரு.பரமாத்மா த்ருஸ்யன்,ஸ்ராவ்யன், மனனீயன், விஜ்ஞேயன் என்று சொல்லுகின்றன. ஸங்கராசார்யரும் 'ஏததேவாக்ஷரம் தர்ஸனக்ரியா கர்த்ரு ஸர்வத்ர.........நாசேதனம் ப்ரதானம் அன்யத் வா' (பூர்வோக்தமவ்யாக்ருதாதி ப்ருதிவ்யந்தம்) என்று அசேதனமான ப்ரதானமாகிலும் ப்ருதிவ்யாதிகளே யாகிலும், தர்ஸனகர்தா (த்ரஷ்ட்ரு) அல்லவென்று அசேதனமான ப்ரதானத்திற்கு த்ரஷ்ட்ருத்வத்தை நிஷேதிக்கிறதென்று சொல்லியிருக்கிறாரே யல்லாது, ஜீவன் த்ரஷ்ட்ரு அல்லவென்று நிஷேதிக்கிறதென்று சொல்லவில்லை. அதை யனுஸரித்து,அத:=இந்த அக்ஷரநாமக பரமாத்மாவைவிட, அன்யத்=வேறான ப்ரதானம் முதலான ஜடம் த்ரஷ்ட்ரு அல்லவென்றாகிலும், 'அக்ஷரம்.........அத்ருஷ்டம' தர்மாத்யதீந்த்ரிய பதார்த்தங்களைப்போல் அக்ஷரம தாஸனத்திற்கு அஸக்யமானதென்று பூர்வவாக்யத்தில் சொல்லியிருக்கிறபடியால் அதை அனுஸரித்து, அத:=அக்ஷரம் இதரர்களுக்கு காணப்படுவதற்கு அஸக்யமானதினால் 'அன்யத் த்ரஷ்ட்ரு ந' பரமாத்மாவைக காணும் வேறொரு வஸ்து இல்லை என்றாகிலும் அர்த்தம் பொருந்திக்கொண்டிருக்க-வேறான த்ரஷ்டாவே இல்லை என்று (பரமாத்மாவினால் பின்னமான ஜீவனே இல்லை என்று) நிஷேதிக்கிறதென்பது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—நீங்கள் சொல்லும் 'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய:' இத்யாதி ஆயிரக்கணக்கான ஸ்ருதிகள் ஜீவனுக்கு வ்யாவஹாரிக த்ரஷ்ட்ருத்வத்தை சொல்லுகின்றன. 'நான்யதஸ்தோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யம் ஜீவனுக்கு பாரமார்த்திக த்ரஷ்ட்ருத்

வத்தை நிஷேதிக்கிறது. (பாரமார்த்திகத்ரஷ்டாவான ஜீவன் இல்லை) ஆகையால் விரோதம் வருவதில்லை.

கோர்ட்:—வேதாதி ப்ரமாணங்களினால் சொல்லப்படும் வஸ்துக்கள் வ்யாவஹாரிகமென்று சொல்லக்கூடாது, பாரமார்த்திகமென்றே சொல்லவேண்டுமென்று நீங்களே (அத்வைதிகளே) சொல்லி, அடிக்கடி வேதாதி ப்ரமாணங்களினால் ஸித்தமான த்ரஷ்ட்ருத்வாதிகள் வ்யாவஹாரிகமென்று சொல்லக்கூடாது. வேறேதாவது ஸமாதானமிருந்தால் சொல்லும்.

பி. வா:—ஶங்கராசார்யார் 'நான்யததோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யம் பரமாத்மாதிரிக்தமான, த்ரஷ்ட்ரு = ஜீவன், இல்லை என்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை நிஷேதிக்கிறதென்று ப்ரஹ்மஸூத்ரபாஷ்யத்தில் சொல்லியிருக்கிறபடியால் நாங்கள் ஜீவபரமாத்மாக்களின் அபேதவிஷயத்தில் இந்த வாக்யத்தை உதாஹரித்திருக்கிறோம்.

வா. வ:—ஶங்கராசார்யார் சொன்னபடிக்கு வேறு அர்த்தம் பொருந்திக்கொண்டிருக்க அனேக ப்ரமாணங்களுக்கு விருத்தமாக இந்த அர்த்தத்தை ஸ்வீகரிப்பது எப்படி யுக்தமாகும்?

பி. வா:—(பதில் இல்லை)

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:...தத்வா ஏததக்ஷரம் கார்கி அத்ருஷ்டம் த்ரஷ்ட்ரு...நான்யததோஸ்தி த்ரஷ்ட்ரு நான்யததோஸ்தி ஶ்ரோத்ரு .....ஏதஸ்மின் கலு அக்ஷரே கார்கி ஆகாஶ ஓதஶ்ச ப்ரோதஶ்சேதி' என்னும் அக்ஷரப்ரகரணம்—ஸூர்யன், சந்திரன், த்யுலோகம், ப்ருதிவீலோகம், நிமேஷம், முகூர்த்தம் முதலான சேதனாசேதனாத்மக ஸமஸ்த ஜகத்து அக்ஷரநாமகனான பரமாத்மாவின் ஆஜ்ஞையினால் தரிக்கப்பட்டிருக்கிறது, பரமாத்மாவினால் ஶாஸ்யமானது, நிர்மிதமானது, இந்த அக்ஷரநாமக பரமாத்மாவின் ஞானத்தினா

லேயே மோக்ஷம் உண்டாகிறது, அக்ஷரனால் பின்னமான ஜடமான ப்ரக்ருத்யாதிகள் ஜகத்துக்கு ஶாஸகமும், த்ரஷ்ட்ருவுமாவதில்லை என்று பரமாத்மாவுக்கு ஸூர்யசந்த்ராதி ஸமஸ்த சேதனசேதநாத்மக ப்ரபஞ்சத்துடன் பேதத்தைச் சொல்லுகிறது. ஶங்கராசார்யரும் உபநிஷத்பாஷ்யத்தில் இப்படியே அர்த்தம் செய்திருக்கிறார். ஆகையால் இவ்வாக்யத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்திக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டும்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! யத்யபி 'ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி' இத்யாதி பூர்வவாக்யங்களில் ஸூர்யசந்த்ராதிகளுக்கு பரமாத்மாவுடன் ஶாஸ்யஶாஸகபாவாதிகளால் சொல்லிய (ப்ரஸக்தமான) பேதத்தை 'நான்யதோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யம் பரமாத்மாவைவிட அன்யனான த்ரஷ்ட்ரு இல்லை என்று நிஷேதிக்கிறபடியால் பூர்வ வாக்யங்களினால் சொல்லப்பட்ட ஜீவபரமாத்மாக்களின் பேதம் அங்கீகரிப்பதற்கு தகுந்ததல்ல. 'நான்யதோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யத்தினால் சொல்லப்பட்ட பேதாபாவமே (ஐக்யமே) அங்கீகரிக்கவேண்டுமென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமாய்க் கோருகிறோம்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ.—(To the Court) மஹாப்ரபோ! 'நான்யதோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யம் ப்ரஸக்தமான ஜீவபரமாத்மாக்களின் பேதத்தை நிஷேதிக்கிறதென்பது அனேக காரணங்களினால் யுக்தமாகிறதில்லை. எப்படி யெனில்:—

(1) எதையாகிலும் நிஷேதிக்கவேண்டுமாயின்—அது பூர்வத்தில் ப்ரஸக்தமாயிருக்கவேண்டும்.(சொல்லப்பட்டிருக்கவேண்டும்) ஸூர்யசந்த்ராதி தேவதைகளுடன் பேதத்தை நிஷேதிக்கவேண்டுமாயின் அந்த பேதம் பூர்வத்தில் ப்ரஸக்தமாயிருக்கவேண்டும். ஸூர்யசந்த்ராதிகளுக்கு பரமாத்மாவுடன் பேதம் ப்ரத்யக்ஷாதிகளால் ப்ரஸக்தமாவதில்லை. வேதம் பூர்வவாக்யத்தினால் தானே ஸூர்யசந்த்ராதிகளின் பேதத்தைச் சொல்லி தானே உத்தரவாக்யத்தினால் நிஷேதிக்கிறதென்பது 'ப்ரக்ஷாளனாத்தி பங்கஸ்ய தூராதஸ்பர்ஶனம் வரம்' சேற்றை மெறித்து அலம்பிக்கொள்ளுவதை விட மெறிக்காமலிருப்பதே மேலாகும் என்னும் நியாயத்தைப்போல் பேதத்தைச் சொல்லி நிஷேதிப்பதைவிட பேதத்தைச் சொல்லாமலிருப்பதே உத்தமமாகும். ஆகையால் தானே பூர்வவாக்யத்தினால் பேதத்தைச் சொல்லி உத்தரவாக்யத்தினால் நிஷேதிக்கிறதென்பது அயுக்தம்.

(2) 'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்ய:' இத்யாதி ஆயிரக்கணக்கான வாக்யங்களினால் ஜீவனுக்கு த்ரஷ்ட்ருத்வம், ஶ்ரோத்ருத்வம், ஸித்தமாய்க்கொண்டிருப்பதினாலும், மற்றும் 'த்வா ஸுபர்ணா' இத்யாதி வாக்யங்களினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தித்துக்கொண்டிருப்பதினாலும் 'ஏதஸ்யவாக்ஷரஸ்ய ப்ரஶாஸனே கார்கி' இத்யாதி பூர்வவாக்யங்களினாலும் ஞாத்ருத்வமும் பேதமும் ஸித்தமாய்க்கொண்டிருப்பதினாலும்—

(3) "ப்ரதானம் முதலான அசேதனமே ப்ரஶாஸகமான அக்ஷரமாகட்டும் என்னும் ஸாங்க்யரின் ஆக்ஷேபத்தை பரிஹரிப்பதற்காக இவ்வாக்யம்—பரமாத்மாவே த்ரஷ்டா, அசேதனமான ப்ரதானமாகிலும், ப்ருதிவ்யாதிகளேயாகிலும், த்ரஷ்ட்ரு அல்லவென்று சொல்லிக்கொண்டிருப்பதினால் ப்ரதானம் த்ரஷ்ட்ரு ஆவதில்லை, அக்ஷரம் ஆவதில்லை என்று ஶங்கராசார்யார் சொல்லிக்கொண்டிருப்பதினால்--'நான்யதோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும் வாக்யம் பரமாத்மாதிரிக்தமான த்ரஷ்ட்ருவான ஜீவனே இல்லை என்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் நிஷேதிக்கிறது" என்று ப்ரதிவாதி சொல்லுவது பொருந்தாததினால் இந்த அக்ஷரப்ரகர

ணத்தினால் ஜீவேஶ்வரர்களுக்கு பேதமே ஸித்திக்கிறதென்பதை ப்ரபுக்கள் கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்தனை.

வா. எ. 6; பி. வா. எ. 14.

## யத்ர ஹி த்வைதமிவ பவதி என்னும் ஶ்ருதி விசாரணை

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யத்ர ஹி த்வைதமிவ பவதி' (ப்ரு. 2-4-14) என்னும் ஶ்ருதியை எந்த அர்த்தம் ஸித்திப்பதற்காக உதஹரித்தீர்?

பி. வா:—ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் தோன்றும் பேதம் பொய்யென்று ஸித்தப்படுத்துவதற்காக உதஹரித்திருக்கிறோம்.

பி. வா. வ:—பேதம் பொய்யென்று இந்த வாக்யத்தினால் எப்படி ஸித்திக்கிறது?

பி. வா:—'யத்ர ஹி த்வைதமிவ பவதி ததிர இதரம் ஜிக்ரதி' என்னும் ஶ்ருதி, யத்ர = எந்த அவித்யாவஸ்தையில், இவ = பொய்யான, த்வைதம் = த்வைத ப்ரபஞ்சமிருக்கிறதோ, அந்த அவித்யாவஸ்தையில் ஒருவன் மற்றொன்றை ஆக்ராணிப்பானென்று பேதம் முதலான ப்ரபஞ்சத்திற்கு, 'இவ' என்னும் பதத்தினால் மித்யாத்வத்தைத் தெரிவிக்கின்றது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த க்ரந்தம் ஏது?

பி. வா:—இது எங்கள் ஶங்கரபகவத்பாதாசார்யார் செய்த ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்யமும், அதின் ஆனந்தகிரி வ்யாக்யானமும், மற்றும் வார்த்திகமும்.

வா. வ:—* இவ்வாக்யங்களுக்கு தாத்பர்யமென்ன?

---

* நனு த்வைதேனோபமீயமானத்வாத் த்வைதஸ்ய பாரமார்த்திகத்வமிதி (ப்ரு. ஶா. பா. 2-4-14.)

பி. வா:—த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்திகமான சந்த்ரமுகங்களுக்கு வஸ்துத்வம் (பாரமார்த்திகத்வம்) காணப்படுகிறதினால் 'த்வைதமிவ' என்று த்வைதத்திற்கு த்வைதத்தின் த்ருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறபடியால் த்வைதப்ரபஞ்சத்திற்கு பாரமார்த்திக ஸத்யத்வம் ஸித்திக்கிறதென்று தாத்பர்யம்.

வா. வ:—இதென்ன க்ரந்தம்?

கோர்ட்:—Mr. Sarma, Mr. Dass, இவ்விசாரம் இரண்டாம் இஷ்யூ விசாரணைகாலத்தில் 75-90 பக்கங்களில் நடந்திருக்கிறது. ஆகையால் இந்த விசாரம் இப்போது அனாவஶ்யகம்.

---

வா. எ. 7.

## யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் என்னும் ஶ்ருதி விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்' என்னும் ஶ்ருதியினால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு அபேதம் எப்படி ஸித்திக்கிறது?

பி. வா:—'யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத் கேன கம் பஶ்யேத் தத் கேன கம் ஜிக்ரேத் தத் கேன கம் ரஸயேத் தத் கேன கமபிவதேத் தத் கேன கம் ஶ்ருணுயாத் தத் கேன கம் மன்வீத தத் கேன கம் ஸ்ப்ருஶேத் தத் கேன கம் விஜானீயாத் யேனேதம் ஸர்வம் விஜாநாதி தம் கேன விஜானீயாத் ஸ ஏஷ நேதி நேத்யாத்மாக்ருஹ்யோ ந ஹி க்ருஹ்யதேஶீர்யோ ந ஹி ஶீர்யதேஸங்கோ ந ஹி ஸஜ்யதேஸிதோ ந வ்யததே ந ரிஷ்யதி விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்' (ப்ரு. 4-5-15) என்னும் ஶ்ருதி பேதம் முதலான ப்ரபஞ்சம் மித்யா, ஆத்மாவைவிட வேறு ஜகத்து இல்லை என்று சொல்லிக்கொண்டே ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யத்தைத் தெரிவிக்கிறது.

---

த்வைதேன த்வைதஸ்ய உபமீயமானத்வாத் த்ருஷ்டாந்தஸ்ய தார்ஷ்டாந்திகஸ்ய ச தஸ்ய வஸ்துத்வம் ஸ்யாத் உபமானோபமேயயோ ஶஶிசந்த்ரமுகயோர்வஸ்துத்வோபலம்பாத் இத்யர்த்த: (ஆனந்தகிரீயம்)

நனு த்வைதமிவேத்யேததுபமானம் கதம் பவேத்। த்வைதம் வஸ்து நசேதஸ்தி (ஸு. வார்த்திகம்.)

பி. வா. வ:—இந்த ஶ்ருதிக்கு அர்த்தத்தைச் சொல்லும்.

பி. வா:—எந்த அவித்யாவஸ்தையில் இந்த ஞானிக்கு எல்லாம் ஆத்மாவே = ப்ரஹ்மமேயாகுமோ (ஆத்மாதிரிக்தமாயிருக்காதோ) அப்பொழுது எந்த க்ராணேந்த்ரியத்தினுல் எந்த கந்தத்தை ஆக்ராணிப்பான், (ஆக்ராணிக்கமாட்டான்) எந்த நாவினுல் எந்த ரஸத்தை தெரிந்துகொள்வான், எந்த வாகிந்த்ரியத்தினுல் எந்த ஶப்தத்தையுச்சரிப்பான், எந்த ஶ்ரோத்ரேந்த்ரியத்தினுல் எந்த ஶப்தத்தைக் கேழ்ப்பான், எந்த மனஸ்ஸினுல் எதை யோசிப்பான், எந்த த்வகிந்த்ரியத்தினுல் எந்த ஸ்பர்ஶத்தைத் தெரிந்து கொள்வான், எதினுல் எதை அறிவான், எந்த பரமாத்மாவினுல் இந்த எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளுகிறுனே அத்தகைய பரமாத்மாவை எப்படி தெரிந்துகொள்வான், அந்த ஆத்மா (ப்ரஹ்மம்) 'நேதி நேதி' ஸர்வ விலக்ஷணன், க்ரஹிப்பதற்கு யோக்யனுகாததினுல் க்ரஹிக்கப்படமாட்டான். நாஶம் செய்யப்படுவதற்கு யோக்யனுகாததினுல் நாஶம் செய்யப்படுபவனல்ல........... விஜ்ஞாத்ருவான தன்னை எப்படித் தெரிந்துகொள்ளுவான், என்று ஞானுவஸ்தையில் ஆத்மாதிரிக்தமான பதார்த்தமே இல்லை என்று பேதம் முதலான எல்லா ப்ரபஞ்சத்திற்கும் மித்யாத்வத்தைச் சொல்லிக்கொண்டே ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கிறது.

---

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இதென்ன க்ரந்தம்? யாரால் செய்யப்பட்டது?

பி. வா:—இந்த க்ரந்தம் எங்கள் ஶங்கரபகவத்பாதரின் பாஷ்யத்திற்கு வ்யாக்யானமான ப்ரஹ்மவித்யாபரணம். அத்வைதானந்தரால் செய்யப்பட்டது.

வா. வ:—இது உங்களுக்கு மான்யமேயல்லவா?

பி. வா:—பரம மான்யம்.

வா. வ:—*இந்த வாக்யத்திற்கு அபிப்ராயமென்ன ?

பி. வா:—'யேனேதம் ஸர்வம் விஜாநாதி தம் கேன விஜானீயாத்' எந்த ஈஶ்வரனால் ஜீவன் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளுகிறானோ அந்த ஈஶ்வரனை எப்படித் தெரிந்துகொள்வான், என்று இந்த வாக்யத்தில் ஈஶ்வரன் ஜீவனைவிட பின்னனென்று சொல்லியிருக்கிறபடியால், அந்த வாக்யம் ஜீவேஶ்வரர்களுக்கு அத்யந்தாபேதத்தைச் சொல்லும் (அத்வைத) மதத்திற்கு விருத்தமாகிறதென்று அபிப்ராயம்.

வா. வ:—'யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்,.........தத் கேன கம் விஜானீயாத்......யேனேதம் விஜாநாதி தம் கேன விஜானீயாத்' என்னும் வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்தோடு பேதத்தைத் தெரிவிக்கிறதல்லவா ?

பி. வா:—இந்த வாக்யத்தினால் ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதம் ஸித்தமாகிறது. ஆயினும்—பூர்வவாக்யத்தில் ஜீவப்ரஹ்மாக்களின் அபேதத்தைச் சொல்லியிருக்கிறபடியால் இந்த வாக்யமும் 'யதாகதம்சித்' (எப்படியாகிலும்) 'யேன' என்னும் பதத்திற்கு 'ய:' என்று வ்யத்யாஸம் செய்துகொண்டு (மாற்றிக் கொண்டு) எந்த ஜீவன் ஜகத்தைக்காணுவானோ அந்த ஜீவனை (தன்னை) எப்படிக்காணுவான் என்று கஷ்டப்பட்டு பேதபரம் எப்படியாகாதோ அப்படி யோஜனை செய்யவேண்டுமென்று எங்கள் ப்ரஹ்மவித்யாபரணகாரர் அபேயதீக்ஷிதர் முதலான பண்டிதர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

வா. வ:—அபேதத்தைச் சொல்லும் பூர்வ வாக்யம் ஏது?

பி. வா.—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யமே?

---

* விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத் இத்யத: பூர்வவாக்யே யேனேதம் ஸர்வம் விஜாநாதி தம் கேன விஜானீயாத், இதி ஜீவாத் பின்னதயா பரமேஶ்வர: கிமர்த்தம்ப்ரதிபாத்யதே, யேனேஶ்வரேண ஜீவ: இதம் ஸர்வம் விஜாநாதி தம் பரமேஶ்வரம் கேன விஜானீயாதிதி ஹி ததர்த்த: தஸ்மாதிதம் வாக்யமத்யந்தாபேதவாதினோநனுகுணம் இதி (ப்ரஹ்மவித்யாபரணம் 1-4-22.)

வா. வ:—இந்த வாக்யத்தின் விசாரம் பின்னுல் நடந்திருக்கிறது. இந்த வாக்யம், தானே அபேதத்தைச் சொல்லாமலிருக்க 'ஸ்வயமனுத்தீர்ண: க: பரான் தாரயிஷ்யதி' (தானே தாண்டமுடியாமல் முழுகிக்கொண்டிருக்க இதரர்களைத் தாண்டுவிப்பது எப்படி) என்னும் நியாயானுஸாரமாக இரண்டாம் வாக்யம் அபேதத்தைச் சொல்லுகிறதென்னும் விஷயத்தில் எப்படி ஆதாரமாகும்?

பி. வா.—(பதில் இல்லை).

வா. வ;='ஸ வா ஏஷ நேதி நேதி' என்னும் வாக்யம் எவ்விடத்தியது?

பி. வா:—'யேனேதம் ஸர்வம் விஜாநாதி தம் கேன விஜானீயாத்' என்னும் வாக்யத்திற்கு முன்னிருக்கும் வாக்யமே.

வா. வ:—'ஸ வா ஏஷ நேதி நேதி' என்னும் வாக்யத்திற்கர்த்தமென்ன?

பி. வா:—'ஸ: ஏஷ: யேனேதம் ஸர்வம் விஜாநாதி' என்னும் வாக்யத்தில் யச்சப்தத்தினுல் சொல்லப்பட்ட பரமாத்மா 'இதி ந, இதி ந.' ஸமஸ்த பதார்த்த விலக்ஷணன் என்று அர்த்தம்.

வா. வ:—'யேன' என்னும் ஶப்தத்திற்கும், 'ஸ: ஏஷ:' என்னும் ஶப்தங்களுக்கும் ஒரே அர்த்தம் செய்துகொள்ள வேண்டுமல்லவா?

பி. வா:—ஆம்.

வா. வ:—'ஸ ஏஷ:' என்னும் ஶப்தத்தினுல் யாரை எடுத்துக்கொள்ளவேண்டும்?

பி. வா:—பரப்ரஹ்மத்தை (பரமாத்மாவை) எடுத்துக்கொள்ளவேண்டும்.

வா. வ:—'யேன' என்னும் ஶப்தத்தினுலும் அவனையே எடுத்துக்கொள்ளவேண்டுமல்லவா?

பி. வா:—'யேன' என்னும் ஶப்தத்தினுலும் பரமாத்மாவையே எடுத்துக்கொள்ளவேண்டும்.

வா. வ:—'யேன' என்னும் ஶப்தத்தினல் பரமாத்மாவை எடுத்துக்கொண்டதேயானல் 'யேனேதம் ஸர்வம் விஜானதி' என்னும் வாக்யத்திற்கு என்ன அர்த்தமாகிறது?

பி. வா:—யேன = எந்த பரமாத்மாவினல், இதம் ஸர்வம் = இவ்வெல்லாவற்றையும் அறிகிருனே அந்த பரமாத்மாவை எப்படி அறிவான் என்று அர்த்தமாகிறது.

வா. வ:—'யேன' என்னும் பதத்திற்கு 'ய:' என்று ப்ரதமாந்தம் செய்துக்கொண்டு, ய: = ஜீவன் என்று அர்த்தம் செய்வதற்கு வராமல், எந்த பரமாத்மாவினல் என்று அர்த்தம் செய்ய வேண்டியிருப்பதினல், ப்ரஹ்மவித்யாபரணகாரர், அப்பய தீக்ஷிதர் சொல்லியிருக்கிறபடி இந்த வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறபடியால், அபேதவாதிகளுக்கு (அத்வைதிகளிக்கு) ப்ரதிகூலமாகிறதல்லவா?

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—'யேன' என்னும் பதத்திற்கு 'ய:' என்று விபக்தி வ்யத்யாஸம்செய்துக்கொண்டு, 'ய:' என்னும் பதத்திற்கு ஜீவன், என்னும் அர்த்தம் செய்துக்கொண்டு, ஜீவன் தன்னை எப்படித் தெரிந்துகொள்வான் என்று அர்த்தம் செய்துக்கொண்டால் 'விஜ்ஞாதாரமரே கேந விஜானீயாத்' என்னும் வாக்யத்திற்கு விஜ்ஞாதாவான தன்னை (ஜீவனை) எப்படித் தெரிந்துகொள்ளுவான், என்று அர்த்தமாகிறபடியால் இந்த வாக்யம் புனருக்தமாகிறதல்லவா?

பி. வா:—இந்த வாக்யங்களுக்கு வ்யாக்யான வ்யாக்யேய பாவத்தைச் சொல்லுகிருேமாகையால் புனருக்தமாவதில்லை.

வா. வ:—ஸ்பஷ்டமாயிருக்கும் வாக்யத்திற்கு வ்யாக்யான வ்யாக்யேயபாவத்தைச் சொல்வதெப்படி? வேறுகதி இல்லாமற் போனலல்லவோ இவ்விதமாகச் சொல்லவேண்டும்.

பி. வா:—(பதில் இல்லை).

வே. வி. ஸிவில் ஸூட்

வாதி விசாரணை.

பி. வா. வ.—ஆசார்யரே! இந்த வாக்யத்திற்கு நீங்களென்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—க்ராணேந்த்ரியாதிகளால் கந்தாதிகளின் ஆக்ராணாதிகளைச் செய்வது, பரமாத்மாவைக்காணுவது, தன்னைக்காணுவது முதலானதுகள் வெவ்வேறு வஸ்துவிருந்தாலொழிய பொருந்தாது. 'யத்ர து அஸ்ய ஸர்வமாத்மைவாபூத்' (அத்வைதிகள் சொல்லும்படிக்கு) ஞானவஸ்தையில் (மோக்ஷாவஸ்தையில்) ஆத்மாதிரிக்தமான வஸ்துவே இல்லையாயின், எந்த க்ராணேந்த்ரியாதிகளினால் எந்த கந்தாதிகளின் ஆக்ராணாதிகளைச் செய்வான், எதனால் எதைக் காணுவான், 'யேனேதம் ஸர்வம் விஜாநாதி, தம் கேன விஜாநீயாத்' எந்த பரமாத்மாவினால் ஜீவன் இவ்வெல்லாவற்றையும் அறிகிறானோ அப்படிப்பட்ட பரமாத்மாவை எப்படித் தெரிந்துகொள்ளுவான், தன்னை எப்படி தெரிந்துகொள்ளுவான்? தன்னிட ஞானம், பரமாத்மாவின் ஞானம், கந்தாதிகளின் ஞானம், இவைகள் மோக்ஷத்திலும் ஆவஶ்யகமானதென்று 'ஜக்ஷன், க்ரீடன், ரமமாண:' இத்யாதி ஶ்ருதிகள் சொல்லுகிறபடியால் கந்தாதி ஞானத்திற்கும், பரமாத்மாவின் ஞானத்திற்கும் காரணமான, ஆத்மாதிரிக்தமான பதார்த்தத்தை ஒத்துக்கொள்ள வேண்டுமென்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையும், ஜகத்துக்கு ஸத்யத்வத்தையும் தெரிவிக்கிறதென்று அர்த்தம் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—மோக்ஷாவஸ்தையில் கந்தாதி ஞானத்தின் ஆவஶ்யகமில்லை. பரமாத்மாவின் ஞானம் ஆவஶ்யகமில்லை. தன்னிட ஞானம் ஆவஶ்யகமில்லை. ஆகையால் கந்தாதி ஞானத்திற்கும், பரமாத்மாவின் ஞானத்திற்கும் தன்னிட ஞானத்திற்கும் காரணமான ஆத்மாதிரிக்தமான இரண்டாவது வஸ்துவே ஆவஶ்யகமில்லையல்லவா?

வா. வி:—நாங்கள் வைதிகர்கள் வேதத்தில் சொன்னபடிக்கு பதார்த்தங்களை ஒத்துக்கொள்ளவேண்டியது. 'ஜக்ஷன் க்ரீடன்

ரமமாண:' 'காமான்னீ காமரூப்யனு ஸஞ்சரன்' 'ஸ யதி பித்ரு லோக காமோ பவதி ஸங்கல்பாதேவ அஸ்ய பிதரஸ்ஸமுத்திஷ்டந்தே' 'அனுவ்ருத்திப்ரஸப்தாதனுவ்ருத்திப்ரஸப்தாத்' இத்யாதி அனேக ஶ்ருதி ஸூத்ராதிகள் மோக்ஷதஶையில் பக்ஷணக்ரீடாதர்ஶனுதிகள் உண்டென்று சொல்லுகிறபடியால் அவைகளை ஒப்புக்கொள்ள வேண்டியது. அப்படியே அவைகளுக்கு காரணங்களான பதார்த்தங்களையும் ஒத்துக்கொள்ளவேண்டி யிருப்பதினுல், பக்ஷணுதிகள் வேண்டாம், அதற்கு காரணமான ஆத்மாதிரிக்தமான பதார்த்தங்கள் வேண்டாம் என்று சொல்வது வைதிகர்களுக்கு யுக்தமல்ல.

பி. வா. வ:—ஆசார்யரே! 'ஜக்ஷன், க்ரீடன், ரமமாண:' இத்யாதி ஶ்ருதிகள் மோக்ஷதசையில் ஜக்ஷணுதிகளை சொல்லுகிறதென்னும் விஷயத்தில் ஆதாரமென்ன? ஸம்ஸாராவஸ்தையிலேயே பக்ஷணுதிகளைச் சொல்லுகிறபடியால் ஸம்ஸாராவஸ்தையில் ஆத்மாதிரிக்தமான பதார்த்தம் உண்டென்று சொல்லுகிறதென்று ஏன் சொல்லக் கூடாது?

வாதி;—ஶாஸ்திரிகளே! இதென்ன க்ரந்தம் பாரும்.

பி. வா:—இது எங்கள் ஶங்கரபகவத்பாதாசார்யரின் ப்ருஹதாரண்யக பாஷ்யமும், மற்றும் ஸூத்ரபாஷ்யமும்.

வா. வ:—* இவ்விரண்டு வாக்யங்களுக்கு தாத்பர்யமென்ன?

பி. வா:—யத்யபி 'ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:' இத்யாதிஶ்ருதிகள் மோக்ஷதஶையில் க்ரீடாதிகளைச் சொல்லுகின்றன. ஆயினும் அந்த ஶ்ருதிகளுக்கு முக்தர்களுக்கு துக்கம் இல்லை என்று

*ஜக்ஷன் க்ரீடன்னித்யாதி ஶ்ருதிவிரோதோஸம்வேத்யத்வஇதிசேன்ன ஸர்வாத்மைகத்வே யதா ப்ராப்தானுவாதித்வாத் முக்தஸ்ய ஸர்வாத்மபாவே ஸதி யத்ர க்வசித் யோகிஷு வா தேவேஷு வா ஜக்ஷணுதி ப்ராப்தம் தத்யதா ப்ராப்தமேவானூத்யதே தத்தஸ்யைவ ஸர்வாத்மபாவாதிதி ஸர்வாத்மபாவ மோக்ஷஸ்துதயே (ப்ரு. ஶாங். பா. 3-9-28.)

அத ஏவ ச ஜக்ஷணுதி ஸங்கீர்த்தனமபி துக்காபாவமாத்ராபிப்ராயம் ஸ்துத்யர்த்தமாத்மாதிரிக்த்யாதிவத் ந ஹி முக்யான்யேவ ரதிக்ரீடாதினுன்யாத்மனி நிமித்தானி ஶக்யந்தே வர்ணயிதும் த்விதீய விஷயத்வாத்தேஷாம் (ப்ர. ஸூ. ஶாங். பா. 4-4.6.)

சொல்லுவதில் தாத்பர்யமென்று சொல்லவேண்டும். அல்லது— யோகிகள், தேவதைகள், ஸம்ஸாராவஸ்தையில் பக்ஷ்ணாதிகளைச் செய்கிறார்கள். பக்ஷ்ணாதிகளைச் செய்யும் அந்த யோகிகளாலும், தேவதைகளாலும் முக்தர்களுக்கு ஐக்யம் (ஸர்வாத்மகத்வம்) இருப்பதினால் அந்த பக்ஷ்ணாதிகள் முக்தர்களுக்கு உண்டென்று இந்த ஶ்ருதி அனுவாதம் செய்கிறதேயல்லாது ஸ்வத: முக்தனுக்கு பக்ஷ்ணாதிகள் உண்டென்று சொல்லுவதில்லை என்று தாத்பர்யம்.

வாதி:—பண்டிதனான முக்தனுக்கு ஸர்வஸ்வரூபமிருப்பதினால் யோகிகளிடத்திலும், தேவதைகளிடத்திலும் இருக்கும் பக்ஷ்ணாதிகளை முக்தர்களுக்கு சொல்லுகிறதென்று சொன்னால்— ஸ்தாவராதிகளில் துக்கமுண்டு. அதினால் முக்தர்களுக்கு அத்வைதமதத்தின்படிக்கு ஐக்யமிருப்பதினால் முக்தர்களுக்கும் துக்கம் உண்டென்று ஏன் சொல்லக்கூடாது?

பி. வா:—ஆசார்யரே! இந்த ஶங்கை தாங்களே புதியதாகச் செய்தீர்களென்று நினைக்காதீர்கள். எங்கள் ஶங்கரபகவத்பாதாசார்யார் தம்முடை பாஷ்யத்தில் ஶங்கித்துக்கொண்டு அதற்கு ஸமாதானமும் சொல்லியிருக்கிறார்.

வாதி:—அந்த ஸமாதானத்தைச் சொல்லும்?

பி. வா:—* யோகிகளிடத்திலும் தேவதைகளிலும், இருக்கும் பக்ஷ்ணாதிகளையும் அதினால் உண்டாகும் ஸுகமும், முக்தர்களுக்குச் சொன்னால், ஸ்தாவரமான வ்ருக்ஷாதி ப்ராணிகளிலிருக்கும், துக்காதிகளும் முக்தர்களுக்கு ஏன் சொல்லக்கூடாதென்று ஶங்கித்துக்கொண்டு — ஸ்தாவராதிகளுக்கிருக்கும் துக்கங்கள் மித்யை (பொய்) ஆனபடியால் சொல்லக்கூடாது என்று சொல்லியிருக்கிறார்.

* யோக்யாதிஷு யதா ப்ராப்த ஜக்ஷணாதிவத் ஸ்தாவராதிஷு ததா ப்ராப்த துக்கி:த்வமபீதி சேன்ன, நாமரூபக்ருத கார்ய காரணோபாதி ஸம்பர்க்க ஜனித ப்ராந்த்யத்யாரோபிதத்வாத் ஸுகித்வ துக்கித்வாதி விஶேஷஸ்யேதி பரிஹ்ரியதே தத் ஸர்வமிதி (ப்ரு. ஶா. பா. 3-9-28.)

வா. வ:—யோகிகளுக்கிருக்கும் பக்ஷண ஸுகாதிகள் மித்யையானபடியால் அவைகளையும் துக்கத்தைப்போலவே முக்தர்களுக்குச் சொல்லக்கூடாதல்லவா?

பி. வா:—(பதில் இல்லை).

வாதி:—ஶாஸ்த்ரிகளே! 'ஜக்ஷன்' இத்யாதி ஶ்ருதிகள் ஸ்பஷ்டமாய் முக்தர்களுக்கு பக்ஷணாதி வ்யாபாரம் உண்டென்று சொல்லிக்கொண்டிருக்க—அப்படி அமுக்யார்த்தத்தை ஏன் அங்கீகரிக்க வேண்டும்?

பி. வா:—பக்ஷணக்ரீடாதிகளைச் செய்வதற்கு இரண்டாம் வஸ்துக்கள் வேண்டும். மோக்ஷதசையில் இரண்டாம் வஸ்துவே இல்லையாதலால், முக்யமான பக்ஷணாதிகளைச் சொல்லக்கூடாதென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார்.

வாதி:—மோக்ஷத்தில் த்விதீயவஸ்து உண்டென்று ஶ்ருதி ஸூத்ரங்களினால் ஸித்தமாயிருக்க--இரண்டாம் வஸ்துவே இல்லை என்று சொல்வது எப்படிப் பொருந்தும்?

கோர்ட்:—ஆசார்யரே! மோக்ஷத்தில் த்விதீய வஸ்து உண்டென்று சொல்லும் ஶ்ருதி ஸூத்ரங்களைச் சொல்லும்?

வாதி:—'ஸர்வாம்ஶ்ச லோகாநாப்னோதி, தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி' இத்யாத்யனேக ஶ்ருதிகளும், 'ஜகத்வ்யாபாரவர்ஜம்' 'அநாவ்ருத்திஶ்ஶப்தாதநாவ்ருத்திஶ்ஶப்தாத்' இத்யாதி ஸூத்ரங்களும் மோக்ஷதசையில் அனேக பதார்த்தங்கள் உண்டென்று சொல்லுகின்றன. அத்வைதிகளும் இந்த ஶ்ருதி ஸூத்ரங்கள் மோக்ஷத்தில் பதார்த்தங்கள் உண்டென்று சொல்லுகிறதென்று சொல்லி, தம் மதத்திலிருக்கும் அபிமானத்தினால்—மோக்ஷம் ஸகுண மோக்ஷமென்றும் (2) நிர்குண மோக்ஷமென்றும் இரண்டு விதமானது. இவ்வாக்யம் ஸகுண மோக்ஷ விஷயகமானது. யத்ய -நிர்குணப்ரஹ்மவித்யைக்கு நிர்குணமோக்ஷமே ஆகவேண்டியது. இந்த ஸகுண மோக்ஷம் ஆகக்கூடாது. ஆயினும் நிர்குண ப்ரஹ்மவித்யையை துதிப்பதற்குச் சொல்லுகிறதென்று அஸங்கதமான பதிலைச் சொல்லியிருக்கிறார். ஆகையால் ஶ்ருதி ஸூத்ரங்கள் மோக்ஷத்தில் த்விதீய வஸ்துவை சொல்லுகிறதென்பது நிர்விவாதம்.

கோர்ட்:—ஆசார்யரே! ஶங்கராசார்யார் சொன்ன பதில் அஸங்கதம் ஏன்?

வாதி:—ஸ்வல்பாயாஸ ஸாத்யமான கார்யத்திற்கு மஹா பலனைச் சொன்னால் அது ஸ்தோத்ரார்த்தமாக சொல்லப்பட்டிருக்கிறதென்று சொல்லலாம். வெகு ஆயாஸ ஸாத்யமான கார்யத்திற்கு அல்பாயாஸ ஸாத்யமான கார்யத்தின் பலனைச் சொன்னால் அது அந்த கார்யத்தின் ஸ்தோத்ரம் ஆவதில்லை என்று சொல்லுவது ஸர்வஸம்மதம். ப்ரக்ருதம் நிற்குணவித்யா பஹு ஆயாஸ ஸாத்யமான கார்யம். அதற்கு அல்பாயாஸ ஸாத்யமான ஸகுண வித்யைக்கு பலனான ஸகுண மோக்ஷத்தைச் சொன்னால் தூஷணமாகிறதேயல்லாது ஸ்தோத்ரமாகிறதென்பது அயுக்தமாகிறது.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! "யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத் கேன கம் பஶ்யேத்.........யேனேதம் ஸர்வம் விஜானாதி தம் கேன விஜானீயாத் விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்" என்னும் வாக்யம் எந்த மோக்ஷாவஸ்தையில் (ஞானாவஸ்தையில்) ஞானிக்கு எல்லாம் ஆத்மாவேயாகிறதோ, (ஆத்மாதிரிக்தமாக ஒரு வஸ்துவும் இல்லாமலாகிறதோ) அக்காலத்தில் எந்த க்ராணேந்த்ரியாதிகளினால் கந்தாதிகளின் ஆக்ராணாதிகளைச் செய்வான், தன்னை எப்படித் தெரிந்துகொள்வான், (எதையும் தெரிந்துகொள்வதில்லை) என்று மோக்ஷதஶையில் பரமாத்மாவைவிட வேறான வஸ்துவே இல்லை என்று சொல்லிக்கொண்டே ஜீவேஶ்வரர்களுக்கு பேதத்தை நிஷேதித்துக்கொண்டே, ஐக்யத்தைத் தெரிவிக்கிறதென்பதைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று கோருகிறோம்.

யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

---

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'யத்ர த்வஸ்ய' என்னும் ஶ்ருதிக்கு மோக்ஷதசையில் பரமாத்மாதிரிக்தமான வஸ்துவே இல்லை என்று சொல்லும் தாத்பர்யமிருக்குமேயாயின்— 'மோக்ஷே கிமபி நாஸ்தி' என்று சொன்ன மாத்ரத்திலேயே அந்த அர்த்தம் ஸித்தித்துக்கொண்டிருக்க—இவ்வளவு பெரிய வாக்யங்களும் மற்றும் 'பஶ்யேத், ஜிக்ரேத், விஜாநீயாத்' இத்யாதிவிதிலிங்கந்த ப்ரயோகங்களும் வ்யர்த்தமாக வேண்டியதாகும்.

மற்றும்—ப்ரஹ்ம வித்யாபரணகாரர் அபேய தீக்ஷிதர் முதலான அத்வைதிகள் 'யேனேதம் ஸர்வம் விஜாநாதி தம் கேன விஜாநீயாத்' என்னும் வாக்யம்—எந்த பரமாத்மாவினால் ஜீவன் ஜகத்தை தெரிந்துகொள்ளுகிறானோ, அப்படிப்பட்ட பரமாத்மாவை எப்படித் தெரிந்துகொள்ளுவான், என்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறபடியால், இந்த வாக்யம் ஜீவேஶ்வரர்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுபவர்களுக்கு (அத்வைதிகளுக்கு) விருத்தமானது என்று சொல்லியிருக்கிறார்கள். ஶங்கராசார்யரும் 'விஜ்ஞாதாரமரே கேன விஜாநீயாத்' என்னும் வாக்யம் ஜீவனுக்கு மோக்ஷதசையில் கர்த்ருத்வத்தை தெரிவிக்கிறதென்று சொல்லியிருக்கிறபடியால் — கர்த்ருத்வாதிகளினால் கூடிக்கொண்டிருக்கும் விஶிஷ்ட ஜீவனுக்கு பரப்ரஹ்மத்தினால் பேதமே ஸித்திக்கிறபடியால் இந்த வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதத்தை தெரிவிக்காமலிருப்பதேயல்லாமல் பேதத்தையே தெரிவிக்கிறது.

## ப்ரதிவாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! ப்ரஹ்ம வித்யாபரணகாரர் அபேய தீக்ஷிதர் இவர்கள்—இந்த 'யேனேதம்' என்னும் வாக்யம் ஸ்வாரஸமாய் ஜீவேஶ்வரர்களுக்கு பேதத்தைத் தெரிவித்தபோதிலும்—'யேன' என்னும் பதத்திற்கு 'ய:' என்று

ப்ரதமாந்தமாக மாற்றிக்கொண்டு 'ய:' என்னும் பதத்தினுல் பரமாத்மாவை எடுத்துக்கொள்ளாமல் ஜீவனை எடுத்துக்கொண்டு 'ய:' எந்த ஜீவன் ஜகத்தை தெரிந்துகொள்ளுகிருனே அப்படிப்பட்ட தன்னை எப்படித் தெரிந்துகொள்வான் என்று அர்த்தம் செய்வதினுல், ஜீவேஶ்வரர்களுக்கு பேதம் ஸித்திப்பதில்லை. யத்யபி--'யேன' என்னும் பதத்தை 'ய:' என்று மாற்றிக்கொண்டு யோஜனை செய்வது (பொருந்துவிப்பது) க்லிஷ்டமானது. (க்லேஶகரமானது). மற்றும் 'யேனேதம்' என்னும் வாக்யம்—ஜீவன் தன்னை எப்படிக்காணுவான் என்று அர்த்தம் செய்தால்—இதே அர்த்தத்தைச் சொல்லும் 'விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்' என்னும் வாக்யம் புனருக்தமாகிறது, ஆயினும்—பூர்வவாக்யத்தில் அத்வைதம் ப்ரஸக்தமாயிருப்பதினுல், அதை அனுஸரித்து 'யேன' என்னும் பதத்தை 'ய:' என்று மாற்றிக்கொள்ள வேண்டியிருப்பதினுல், யோஜனுக்லேஶத்தை ஸஹிப்பது தோஷமல்ல. 'விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்' என்னும் வாக்யம் 'யேனேதம் ஸர்வம் விஜானுதி' என்னும் வாக்யத்திற்கு வ்யாக்யான ரூபமானதென்று ஒப்புக்கொள்ளுகிறபடியால் புனருக்தமாவதில்லை.

யத்யபி 'விஜ்ஞாதாரம்' என்னும் பதம் மோக்ஷாவஸ்தையில் ஜீவனுக்கு கர்த்ருத்வத்தைச் சொல்லிக்கொண்டிருந்தாலும்—ஜீவன் மோக்ஷத்தில் நிர்விஶேஷ ப்ரஹ்மஸ்வரூபமே ஆயிருப்பதினுல் கர்த்ருத்வாதிகள் பொருந்துவதில்லாததினுல் ஸம்ஸாராவஸ்தையிலிருக்கும் கர்த்ருத்வத்தை அனுவாதம்செய்கிறதென்று எங்கள் ஶங்கராசார்யார் சொல்லியிருப்பதினுல் கர்த்ருத்வம் மோக்ஷதசையில் ஜீவனுக்கு ஸித்திப்பதில்லை. ஆகையால் அவ்வாக்யத்தினுல் பேதத்தைச் சொல்வது யுக்தமல்ல என்பதைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமாய்க் கோருகிறேன்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வ. வா:—(To the Court) மஹாப்ரபோ! 'யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்' என்னும் வாக்யத்தைவிட பூர்வத்தில் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லும் வாக்யம் இல்லாததினால், பூர்வத்தில் ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யம் ப்ரஸக்தமாகவில்லை. ஆகையால் 'யேனேதம்' என்னும் வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிப்பதில் எந்த பாதகமும் இல்லை. ஆகையால் 'யேன' என்னும் பதத்தை 'ய:' என்று மாற்றிக்கொண்டு கஷ்டப்பட்டு, பேதத்தைத் தெரிவிக்காத (அபேதபரமான) அர்த்தத்தைச் செய்வது யுக்தமல்ல.

'யேனேதம் ஸர்வம் விஜாநாதி ஸ ஏஷ நேதி நேதி' என்னும் (ப்ரு. 4-5-15) வாக்யத்தில் 'யேன' என்னும் பதத்தினால் போத்யனவனையே 'ஸ ஏஷ நேதி நேதி' என்னும் வாக்யத்திலிருக்கும் 'ஸ ஏஷ:' என்னும் பதங்களினால் எடுத்துக்கொள்ளவேண்டியதினாலும், 'ஸ ஏஷ:' என்னும் பதங்களினால் ப்ரஹ்மத்தையே எடுத்துக்கொள்ள வேண்டியிருப்பதினாலும், ஶங்கராசார்யரும் 'ஸ ஏஷ:' என்னும் பதங்களினால் ப்ரஹ்மத்தையே எடுத்துக்கொண்டிருப்பதினாலும் அதற்கு ஸரியான 'யேனேதம் ஸர்வம் விஜாநாதி' (ப்ரு. 2-4-14) என்னும் வாக்யத்திலிருக்கும் 'யேன' என்னும் பதத்தை 'ய:' என்று மாற்றிக்கொண்டாலும், அந்த பதத்தினால் ஜீவனை எடுத்துக்கொள்வதற்கு வாராததினால் 'யேனேதம் ஸர்வம் விஜாநாதி' என்னும் வாக்யத்திலிருக்கும் 'யேன' என்னும் பதத்தினால் பரமாத்மாவையே எடுத்துக்கொள்ள வேண்டும். ஆகையால் 'யேனேதம்' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது.

'யேனேதம்' என்னும் வாக்யத்திலிருக்கும் 'யேன' என்னும் பதத்தினால் ஜீவனை எடுத்துக்கொண்டால்—விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்' என்னும் வாக்யம் புனருக்தமாகிறது. நம்மனதிற்கு வந்த (தோன்றிய) அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டு, அப்படிச் சொல்வதினால் உண்டான புனருக்தத்திற்கு வ்யாக்யான வ்யாக்யேய பாவம் சொல்வது அத்யந்த அயுக்தமாகிறது.

'விஜ்ஞாதாரம்' என்னும் பதத்தினுல் ஜீவனுக்கு மோக்ஷதசை யில் கர்த்ருத்வம் தோன்றுகிறது. அதற்கு எந்த பாதகமும் இல்லை. இதுவுமன்றி—'ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:, பர்யேதி, காமான்னீ காமரூப்யனு ஸஞ்சரன்' இத்யாத்யனேக வாக்யங்கள் மோக்ஷத்தில் ஜீவனுக்கு கர்த்ருத்வமுண்டென்றுசொல்லுகின்றன. ஶங்கராசார் யார் முதலான அத்வைதிகள் இவ்வாக்யம் மோக்ஷத்தில் கர்த்ருத் வத்தைத் தெரிவிக்கிறதென்று சொல்லியிருக்கிருர். ஆயினும்—தம் மதாபிமானத்தால் அந்த க்ரீடாதிகளை முக்தன் செய்கிருனென்று அபிப்ராயமல்ல. து:கமில்லை என்று ஆகிலும், க்ரீடாதிகளினுல் உண்டாகும் ஸுகம் உண்டென்ருகிலும், தாத்பர்யம் என்று ஏதோ ஸமாதானத்தைச் சொல்லிப் போயிருக்கிருர். ஏதாவதா கட்டும்—இந்த ஶ்ருதிகள் மோக்ஷதசையில் கர்த்ருத்வாதிகளைச் சொல்லுகிறதென்னும் விஷயத்தில் விவாதம் இல்லை. ஆகையால்— 'விஜ்ஞாதாரம்' என்னும் பதத்தினுல் தோன்றும் கர்த்ருத்வம் மோக்ஷதசையில் இருப்பது அல்ல, ஸம்ஸாராவஸ்தையில் தோன்று வதையே சொல்லுகிறதென்று ப்ரதிவாதி சொல்வது யுக்தமல்ல. ஆகையால் இந்த ஶ்ருதியும் மோக்ஷதசையில் கர்தாதி ஞானம், பரமாத்மாவின் ஞானம், பித்ராதிகளின் ஞானம், ஆவஶ்யக மென்று சொல்லிக்கொண்டு, அதற்குக் காரணமான ப்ரஹ்மாதி ரிக்தமான த்விதீயவஸ்து ஆவஶ்யகமென்று ஜீவபாமாத்மாக் களுக்கு பேதத்தையே தெரிவிக்கிறபடியால் இவ்வாக்யத்தினுல் ஜீவப்ரஹ்மாக்களின் பேதம் ஸித்தமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

வா. எ. 8.

## ததஸ்து தம் பஶ்யதே என்னும் ஶ்ருதி விசாரணை.
## வாதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'ததஸ்து தம் பஶ்யதே நிஷ்கலம் த்யாயமான:' (மும். 3-1-8) என்னும் ஶ்ருதிக்கு அர்த்தமென்ன? இந்த ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களின் பேதத்தை எப்படித் தெரிவிக் கிறது?

வாதி:—தத: = ப்ரஹ்மஞானயோக்யதை ப்ராப்தமாயிருப்பதால், நிஷ்கலம் = ஷோடஶகளாரஹிதனை பரமாத்மாவை, த்யாயமான: = த்யானம் செய்கிறவன், தம் = அந்த பரமாத்மாவை,ப்ரத்யக்ஷமாய், பஶ்யதே = காண்கிறான் என்று அர்த்தம். இந்த வாக்யம் த்யாத்ருத்யேய பாவத்தினாலும், த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்யபாவத்தினாலும், ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது.

## ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! உங்கள் ஶங்கராசார்யர் இவ்வாக்யத்திற்கு என்ன அர்த்தம் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—இந்த வாக்யம் த்யாத்ருத்யாதவ்ய பாவத்தினாலும், த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்யபாவத்தினாலும், ஜீவனுக்கு பரமாத்மாவுடன் பேதத்தைத் தெரிவிக்கிறதென்று எங்கள் ஶங்கராசார்யர் 3-2-27வது, ப்ரஹ்ம ஸூத்ர *பாஷ்யத்தில் அர்த்தம் சொல்லியிருக்கிறார்.

வா. எ. 9.

# பராத்பரம் புருஷமுபைதி என்னும் ஶ்ருதி விசாரணை.

## வாதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' (மும். 3-2-8.) என்கிற ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை எப்படித் தெரிவிக்கிறது?

வாதி:—வித்வான் = ஞானி (ஜீவன்), பராத் = உத்தமரான ப்ரஹ்மாதிகளைவிட, பரம் = உத்தமனை, திவ்யம் = க்ரீடாதிகுண விஶிஷ்டனை, புருஷம் = பரமாத்மாவை, உபைதி = அடைகிறான் என்று ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது.

* கவசிஜஜீவபராஜஞ்யோர்பேதா வ்யபதிஶ்யதே 'ததஸ்து தம் பஶ்யதே நிஷ்கலம் த்யாயமான:' (மும் 3-1-8) இதி த்யாத்ருத்யாதவ்யத்வேன, த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்யத்வேனச (ப்ர. ஸூ. ஶா. பா. 3-2-27).

ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த மந்த்ரத்திற்கு உங்கள் ஶங்காராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யார் இந்த வாக்யம் ப்ராப்ய ப்ராப்த்ருபாவத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறதென்று 3-2-27 வது * ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் அர்த்தம் செய்திருக்கிறார்.

---

வா. எ. 10; ப்ர. வா. எ. 10.

## பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி என்னும் ஶ்ருதி விசாரணை.

---

வாதி விசாரணை.

வா. வ—ஆசார்யரே! 'பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி' (மும். 3-2-9) என்னும் ஶ்ருதிக்கு அர்த்தமென்ன? அதனால் என்னவென்று ஸித்தமாகிறது?

வாதி—'பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' (3-2-8) என்னும் பூர்வவாக்யத்தில்-ஞானி சதுர்முகப்ரஹ்மா முதலான உத்தமரைவிட உத்தமனான, க்ரீடாதிகுண விஶிஷ்டனான பரமாத்மாவை அடைகிறானென்று சொன்னதின்பேரில்-'ஶ்ரேயாம்ஸி பஹுவிக்னானி' ஶ்ரேயஸ்ஸுக்கு அனேக தடைகள் வருவது 'வழக்கமாயிருப்பதினாலும், தேவதைகள் ப்ரஹ்மப்ராப்திரூபமான ஶ்ரேயஸ்ஸுக்கு தடைசெய்வதினாலும், ப்ரஹ்மஞானியாயினும் ப்ரஹ்மத்தை யடையாமல் வேறு கதியை யடையலாமென்று ஶங்கை யுண்டாகவே—அதற்கு ஸமாதானார்த்தமாக இந்த மந்த்ரம் ப்ர

---

* க்வசிஜ்ஜீவ ப்ராஜ்ஞயோர் பேதோ வ்யபதிஶ்யதே.........'பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' (மும். 3-2-8) இதி கர்த்ரு கர்தவ்யத்வேன (ப்ர. ஸூ. ஶாம். பா. 3-2-27)

'பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' (மும். 3-2-9) இதி ப்ராஹ்மணஶ்ச முக்தோப ஸ்ருப்யத்வம் ப்ரஸித்தம் ஶாஸ்த்ரே (ப்ர. ஸூ. பா. 1-3-2).

ஸக்தமாயிருக்கிறது. பரமம் ப்ரஹ்ம வேத = பரப்ரஹ்மத்தைத் தெரிந்தவன்,ப்ரஹ்ம பவத்யேவ = ப்ரஹ்மஞானத்தினால் அவித்யா நிவ்ருத்தியாயிருக்கிறபடியால் ப்ரஹ்மத்தை அடைந்தே தீரு கிறான். தேவதைகளும் ப்ரஹ்மஞானிக்கு ப்ரஹ்மத்தை யடைவதில் விக்னம் செய்வதற்கு ஸமர்த்தர்கள் ஆவதில்லை என்று அர்த்த மிருப்பதால், 'பராத்பரம் புருஷமுபைதி' என்னும் வாக்யத்தில் சொல்லப்பட்ட ப்ரஹ்மப்ராப்தி ரூபமோக்ஷத்தை உறுதிப்படுத் திக்கொண்டே, அந்த வாக்யத்தைப்போலவே ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தினால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தையே தெரிவிக் கிறதென்று ஸித்தமாகிறது.

## ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! * இந்த மந்த்ரத்திற்கு இந்த உப நிஷத் பாஷ்யத்தில் ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக் கிறார்?

பி. வா:—'பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' என்னும் வாக் யத்தினால் ஞானிக்கு சொல்லப்பட்ட ப்ரஹ்மப்ராப்தி ரூப மோக்ஷத்தை (ஶ்ரேயஸ்ஸை) தேவதைகள் விக்னம் செய்வதினால் ஞானி அடையாமல் வேறு கதியை யடைவானென்று ஶங்கித்துக் கொண்டு, ப்ரஹ்மஞானிக்கு ப்ரஹ்மத்தின் ப்ராப்தி ஆகியே தீரு கிறது. தேவதைகள் விக்னம் செய்வதற்கு ஸமர்த்தர்கள் ஆவ தில்லை என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—இதென்ன க்ரந்தம்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யரின் ஸாக்ஷாத் ஶிஷ்யரான ஸுரேஶ்வராசார்யர் செய்த தைத்திரீய பாஷ்ய வார்த்திகம், மற் றும் அதற்கு ஆனந்தகிரியவர்களால் செய்யப்பட்ட வ்யாக் யானம்.

* நனு ஶ்ரேயஸ்யனேகே விக்னா: ப்ரஸித்தா அத: க்லேஶாந்த மன் யதமேனான்யேன வா தேவாதினா விக்னிதோ ப்ராஹ்மவிதப்யன்யாம் கதிம் ம்ருதோ கச்சதி ந ப்ரஹ்மைவ ந......ஸ நான்யாம் கதிம் கச்சதி தேவைரபி தஸ்ய ப்ரஹ்மப்ராப்திம் ப்ரதி விக்னே ந ஶக்யதே கர்தும் (மும்.ஶாம்.3-2-9)

வா. வ:—* இந்த வாக்யத்திறைல் அவர்கள் என்ன சொல்லி யிருக்கிருர்கள்.

பி. வா:—'ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி' என்னும் வாக்யம் ஜீவன் ப்ரஹ்மஞானத்தை யடைந்தபிறகு ப்ரஹ்மத்தை யடைகிருனென்று சொல்லப்படுகிறது. ஞானியான ஜீவன் ப்ரஹ்மமாகவே யிருப்பானுயின் 'பவதி' என்றுசொன்ன ப்ராப்தி பொருந்தாததினுல் 'ப்ரஹ்மைவ பவதி' என்னும் வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தையே சொல்லுகிறதென்கிற ஸங்கையுண்டாகவே—அதற்கு ஸமாதானுர்த்தமாய் ப்ரவ்ருத்தமான இவ்வாக்யத்திற்கு தாத்பர்யம் என்னவென்ருல்—'ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி' என்னும் ஶ்ருதியினுல் சொல்லப்பட்ட ப்ராப்தி—க்ராமப்ராப்தி எப்படி முக்யமோ அப்படி முக்யமல்ல. ப்ரஹ்ம ஞானத்தினுல் ப்ரஹ்மத்தின் அஞ்ஞானம் நிவ்ருத்தமாகிறது (போகிறது) என்று சொல்லவேண்டும். ஆகையால்—ப்ரஹ்மவேத = ப்ரஹ்மத்தைத் தெரிந்தவன், ப்ரஹ்ம பவதி = ப்ரஹ்மத்தின் அஞ்ஞான நிவ்ருத்தியானவனுய் ஆகிருனென்று சொல்லவேண்டும். ப்ரஹ்மத்தை யடைகிருனென்று சொன்னது ஔபசாரிகம் (கௌணம்) என்று சொல்லியிருக்கிருர்கள்.

வா. வ:—ஶாஸ்திரிகளே! 'ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி' என்னும் ஶ்ருதியினுல் ஸ்வரஸமாய் (முக்யமாய்) தோன்றும் அர்த்தம் ஏதென்று ஸுரேஶ்வராசார்யரின் அபிப்ராயம்?

பி. வா:—'ப்ரஹ்ம பவதி' என்னும் வாக்யத்தினுல் ப்ரஹ்மத்தை யடைகிருனென்று ப்ராப்யப்ராபக பாவம் தோன்றுகிறதென்று அபிப்ராயம்.

வா. வ:—'ப்ரஹ்ம பவதி' என்னும் வாக்யத்தினுல் ப்ராப்ய ப்ராபகபாவம் தோன்றுவதினுல் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதம் தோன்றுகிறதல்லவா?

பி. வா:—(பதில் இல்லை).

---

* ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதீதி ஶ்ரவணுதன்யோ ஜீவோ ஞான த்வாரா ப்ரஹ்ம ப்ராப்னோதீத்யப்யுபகமாத் பேதபக்ஷே ப்ராப்தே வித் தாந்தமாஹ நான்யஸ்யேதீத்யாதி (தைத்திரீய வார்த்திக டீகா. 2-8-54.)

வா. எ. 11.

# பரம்ஜ்யோதிருபஸம்பத்ய என்னும் ஶ்ருதி விசாரணை.

---

## வாதி விசாரணை.

*வா.வ:—ஆசார்யரே! "பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேன ரூபேணாபி நிஷ்பத்யதே ஸ உத்தம: புருஷ: ஸ தத்ர பர்யேதி ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:" (சாம். 8-12-3) என்னும் ஶ்ருதிக்கு அர்த்தமென்ன? இதனால் பேதமெப்படி ஸித்தமாகிறது?*

*வாதி:—ஜீவன் எந்த, பரம் ஜ்யோதி: = பரமாத்மாவை, உபஸம்பத்ய = அடைந்து, ஸ்வேன ரூபேண = தன் ஸ்வரூபத்தால், அபிநிஷ்பத்யதே = அபிவ்யக்தனாகிறானோ அந்த புருஷன் (பரமாத்மா) உத்தமன். ஜீவன், தத்ர = அந்த பரமாத்மாவிடத்தில் ஸஞ்சரித்துக்கொண்டும், பக்ஷணம் செய்துகொண்டும், விளையாடிக்கொண்டும், ஸ்திரீகளுடன் ரமித்துக்கொண்டும், இருக்கிறானென்று ஜீவபரமாத்மாக்களுக்கு அதிகரண அதிகர்தவ்ய பாவத்தினாலும், ஸம்பத்ரு ஸம்பத்தவ்ய (அடையும் அடையப்படும்) பாவத்தினாலும் பேதத்தைச் சொல்லுகிறது.*

## ப்ரதிவாதி விசாரணை.

*வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த வாக்யத்திற்கு உங்கள் ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?*

*பி. வா:—'ஸ தத்ர பர்யேதி' (சாம். 8-12-3) இத்யதிகரணோதி கர்தவ்ய நிர்தேஶாத் 'ஜ்யோதிருபஸம்பத்ய' (சாம். 8-12-3) இதி ச கர்மகர்த்ரு நிர்தேஶாத் பேதேனைவாவஸ்தானமிதி' என்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று 4-4-4-வது ஸூத்ரபாஷ்யத்தில் அர்த்தம் செய்திருக்கிறார்.*

*வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இதென்ன க்ரந்தம்?*

*பி. வா:—இது ப்ரஹ்மவித்யாபரண க்ரந்தம். எங்கள் ஸூத்ர பாஷ்யத்திற்கு வ்யாக்யானம்.*

வா. வ:—'ஏவம் ஸ தத்ர பர்யேதீத்யாதி பெதநிர்தேஶஸ்ய பலோபதேஶகததயா ஸாதனீபூத ஞானோபதேஶகதாபேதநிர் தேஶ ஔபசாரிகோ யதாகதம்சின்னேய இதி' (ப்ர. ஶாம். 4-4-4) என்னும் வாக்யத்திற்கு தாத்பர்யமென்ன?

பி. வா:—சில வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதத்தைச் சொல்லுகின்றன. 'ஸ தத்ர பர்யேதி' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறது. எந்த வாக்யத்தின் அர்த்தத்தை நாங்கள் அங்கீகரிக்கவேண்டும் என்று விசாரம் செய்து பார்க்க 'ஸ தத்ர பர்யேதி' என்னும் வாக்யம் பலத்தைச் சொல்லும் வாக்யமானதினுல் அது முக்யமானது. அந்த பல வாக்யத்தினுல் சொல்லப்பட்ட பேதத்தை வைத்துக் கொண்டு ஸாதனமான ஞானத்தைச் சொல்லும் வாக்யத்திலிருக்கும் அபேதத்தைச் சொல்லும் பதங்களுக்கு கௌணமான (அமுக்யமான) அர்த்தத்தைச் சொல்லவேண்டும் என்று தாத்பர்யம்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ப்ரஹ்மவித்யாபரணகாரருக்கு 'ஸ தத்ர பர்யேதி' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யமா? அல்லது அபேதத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யமா?

பி. வா:—'ஸ தத்ர பர்யேதி' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்றே ப்ரஹ்ம வித்யா பரணகாரருக்கு தாத்பர்யம்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த ஶங்கராசார்யரின் பாஷ்ய வாக்யமும், இந்த ப்ரஹ்ம வித்யாபரண வாக்யமும், பூர்வபக்ஷ வாக்யங்களா அல்லது ஸித்தாந்த வாக்யங்களா?

பி. வா:—பூர்வபக்ஷ வாக்யங்களே.

பி. வா. வ:—இவைகள் பூர்வபக்ஷ வாக்யங்களாயின் ஸித்தாந்த வாக்யங்களில் என்ன சொல்லியிருக்கிருர்?

பி. வா:—யத்யபி—'ஸ தத்ர பர்யேதி' என்னும் வாக்யம் ஜீவபராமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவித்துக்கொண்டிருந்தாலும் 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யங்கள்

ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதம் சொல்லுகிறபடியால் இந்த 'ஸ தத்ர பர்யேதி' என்னும் பேதத்தைச் சொல்லும் * வாக்யத்தை கௌணமாக (அமுக்யமாக) 'யதாகதம்சித்' (எப்படியாவது) வ்யாக்யானம் செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறர்.

வா: வ:—ஶாஸ்த்ரிகளே! தத்வமஸ்யாதி வாக்யங்கள் ஜீவ பரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதோ இல்லையோ அவ்விசாரம் முன்னமே நடந்திருக்கிறது. ப்ரக்ருதம் 'ஸ தத்ர பர்யேதி' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை சொல்லுகிறதல்லவா?

பி. வா:—(பதில் இல்லை.)

---

வா. எ. 12.

## ஸோன்வேஷ்டவ்யோ ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய: என்னும் ஶ்ருதி விசாரணை.

---

வா. வ:—'ஸோன்வேஷ்டவ்யோ ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய:' என்னும் ஶ்ருதிக்கு அர்த்தமென்ன? இதனால் ஜீவபரத்மாமாக்களின் பேதம் எப்படி ஸித்தமாகிறது?

வாதி:—ஸ: = அந்த பரமாத்மா, அன்வேஷ்டவ்ய: = ஶாஸ்த்ரங்களினாலும், ஆசார்யரின் உபதேஶத்தினாலும் தெரியப்படுகிறவன், விஜிஜ்ஞாஸிதவ்ய: = விசாரம் செய்து கொள்ளப்படுபவன் என்று அர்த்தம். மற்றும் இந்த வாக்யம் அன்வேஷ்டவ்யான்வேஷ்ட்ரு பாவத்தினாலும், ஜிஜ்ஞாஸ்யஜிஜ்ஞாஸக பாவத்தினாலும் பேதத்தைத் தெரிவிக்கிறது.

---

* பேதநிர்தேஶஸ்து அபேதேப்யுபசர்யதே (ப்ர. ஸூ. ஶாம். பா. 4-4-4).

தத்வமஸ்யாதி வாக்யமபி நான்யதா வ்யாக்யாதுமுசிதம். அபி து க்வாசித்கோ முக்தோ பேதநிர்தேஶ: (ஸ தத்ர பர்யேதீத்யாதி ரூப:) ஏவம் யதாகதம் சித் வ்யாக்யேய இதி (ப்ரஹ்ம வித்யாபரணம்.)

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 2-1-22-வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் * இந்த வாக்யத்திற்கு ஶங்கராசார்யர் என்ன அர்த்தம் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—இவ்வாக்யம் கர்த்ருகர்மாதி பாவத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. எ. 13.

## ஆத்மா வாரே த்ரஷ்டவ்ய: என்னும் ஶ்ருதி விசாரணை.

---

வா. வ:—ஆசார்யரே! 'ஆத்மா வாரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:' (ப்ரு. 2-4-5) என்னும் ஶ்ருதிக்கு என்ன அர்த்தம்? அதனால் பேதம் எப்படி ஸித்தமாகிறது?

வாதி:—பரமாத்மா ஜீவனால் காணப்பட்டுக்கொள்பவன், கேழ்க்கப்படுபவன், மனனம் செய்யப்படுபவன், த்யானம் செய்யப்படுபவன் என்று அர்த்தம். இவ்வாக்யத்தினால் த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவத்தினாலும், ஶ்ரோத்ரு ஶ்ரோதவ்ய பாவத்தினாலும், மந்த்ருமந்தவ்ய பாவத்தினாலும், த்யாத்ருத்யேய பாவத்தினாலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 2-1-22-வது ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தில் † 'ஆத்மா வாரே' என்னும் வாக்யத்தினால் என்ன ஸித்தமாகிறதென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—கர்த்ரு கர்மாதி பாவத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதென்று சொல்லியிருக்கிறார்.

* ஸோன்வேஷ்டவ்ய: ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய: (சாம் 3-7-1).........இத்யேவம் ஜாதீயக: கர்த்ரு கர்மாதி பேதநிர்தேஶோ ஜீவாததிகம் (அன்யத்) ப்ரஹ்ம தர்ஶயதி (ப்ர. ஸூ. பா. 2-1-22.)

† ஆத்மா வாரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:' (ப்ரு. 2-4-5.).........இத்யேவம் ஜாதீயக: கர்த்ரு கர்மாதி பேதநிர்தேஶோ ஜீவாததிகம் (அன்யத்) ப்ரஹ்ம தர்ஶயதி (ப்ர. ஸூ. பா. 2-1-22.)

வா. எ. 14.

## ப்ரஹ்மவிதாப்னோதி பரம் என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'ப்ரஹ்மவிதாப்னோதி பரம்' (தை. 2-1) என்னும் ஶ்ருதிக்கு அர்த்தமென்ன?

வாதி:—ப்ரஹ்மஞானி பரப்ரஹ்மத்தை அடைகிறனென்று சொல்லிக்கொண்டே ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த வாக்யத்தினுல் ஜீவபரமாத்மாக்களுக்கு ப்ராப்த்ருப்ராப்ய பாவத்தினுலும், ஞாத்ருஞேய பாவத்தினுலும் பேதம் ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—இந்த வாக்யத்தினுல் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதம் ஸித்திக்கிறது.

வா. எ. 15.

## ஏதமேவ விதித்வா என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—'ஏதமேவ விதித்வா முனிர்பவதி' என்னும் வாக்யத்திற்கு அர்த்தமென்ன? இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை எப்படித் தெரிவிக்கிறது?

வாதி:—இந்த பரமாத்மாவை தெரிந்துகொண்டே மனனஶீலன் ஆகிறன் என்று அர்த்தம். ஞாத்ருஞேய பாவத்தினுல் பேதத்தைத் தெரிவிக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 2-3-43-வது ஸூத்ர பாஷ்யத்தில் ஶங்கராசார்யார் 'ஏதமேவ.........பவதி' என்னும் வாக்யத்தினுல் என்ன ஸித்திக்கிறதென்று சொல்லியிருக்கிறர்?

பி. வா:—* இந்த வாக்யத்தினுல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்திக்கிறதென்று சொல்லியிருக்கிறர்.

* 'ஏதமேவ விதித்வா முனிர்பவதி' 'ய ஆத்மனி திஷ்டன்னுத்மான மந்தரோ யமயதி' இதி ச ஏவம் ஜாதீயகோ பேதநிர்தேஶோ நாஸதி பேதே யுஜ்யதே (ப்ர. ஸூ. பா. 2-3-43.)

வா. எ. 16.

## அயம் ஶாரீர ஆத்மா என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'அயம் ஶாரீர ஆத்மா ப்ராஜ்ஞேனாத்மனான்வாரூட:' (ப்ரு. 4-3-35) என்னும் ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களின் பேதத்தை எப்படித் தெரிவிக்கிறது?

வா. தி:—ஶாரீர: = ஜீவன் உத்க்ரமண காலத்தில், ப்ராஜ்ஞேன ஆத்மனா = ப்ராஜ்ஞநாமக பரமாத்மாவினால், அன்வாரூட: = மேல் ஏற்றிக்கொள்ளப்பட்டுப் போகிறுனென்று ஆரோஹணக்ரியையில் பரமாத்மாவுக்கு கர்த்ருத்வத்தையும், ஜீவனுக்கு கர்மத்தையும் சொல்லிக்கொண்டே ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது.

வா. வ:—ஶாஸ்திரிகளே! ஶங்கராசார்யார் 'அதிகந்து பேத நிர்தேஶாத்' என்னும் ஸூத்ர வ்யாக்யானத்திலும், 'ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோர்பேதேன' என்னும் ஸூத்ர வ்யாக்யானத்திலும் என்ன சொல்லியிருக்கிறார்?

பி. வா:— 'அயம் ஶாரீர:' என்னும் ஶ்ருதி உத்க்ராந்தி காலத்திலும், ஜீவனைவிட பரமாத்மா பின்னனென்று சொல்லுகிறதென்று எங்கள் ஆசார்யார் மேற்சொன்ன * இரண்டு ஸூத்ர பாஷ்யங்களிலும் சொல்லியிருக்கிறார்.

வா. வ:—ஶங்கராசார்யரின் வ்யாக்யானத்தின்படிக்கு 'அயம் ஶாரீர:' என்னும் ஶ்ருதியினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதல்லவா?

* ததா உத்க்ராந்தாவபி 'அயம் ஶாரீர ஆத்மா ப்ராஜ்ஞேனான்வாரூட: உத்ஸர்ஜன் யாதி' இதி ஜீவாத்பேதேன பரமேஶ்வரம் வ்யபதிஶதி...தஸ்மாத்ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோர்பேதேன வ்யபதேஶாத். (ப்ர. ஸூ. ஶா. பா. 2-1-22)

'ஶாரீர ஆத்மா ப்ராஜ்ஞேனாத்மனான்வாரூட:' இத்யேவம் ஜாதீயக: கர்த்ருகர்மாதிபேதநிர்தேஶ: ஜீவாததிகம் (அன்யத்) ப்ரஹ்மதர்ஶயதி (ப்ர. ஸூ. பா. 1 3-42)

பி. வா:—ஶ்ருதியினால் பேதம் ஸித்தமாயினும், அந்த பேதம் பாரமார்த்திக ஸத்யமானதல்ல. ஐக்யத்தைச் சொல்லும் இதர ஶ்ருதிகளுக்கு விரோதம் வருகிறபடியால் வ்யாவஹாரிக ஸத்ய மென்று சொல்லவேண்டுமென்று ஶங்கராசார்யாரின் அபிப்ராய மாகையால் பேதம் ஸித்தமாகிறதில்லை.

வா. வ:—வேதாதி ப்ரமாணங்களினால் ஸித்தமான பேதம் வ்யாவஹாரிக ஸத்யமென்று சொல்லக்கூடாதென்று நீங்களே பௌத்தர்களைக் கண்டித்து மற்றும் நீங்களே வ்யாவஹாரிக ஸத்யமென்று சொல்வது எப்படி யுக்தமாகும்?

பி. வா:—(பதில் இல்லை)

---

வா. எ. 17.

## ஸோஸ்னுதே ஸர்வான் காமான் என்னும் ஶ்ருதி விசாரணை.

### வாதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'ஸோஸ்னுதே ஸர்வான் காமான் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா' (தை) என்னும் ஶ்ருதிக்கு அர்த்தத்தைச் சொல்லும்?

வாதி:—ஸ: = ப்ரஹ்மஞானி, ஸர்வான் காமான் = அபேக்ஷித மான ஸமஸ்த போகங்களை, ப்ரஹ்மணாஸஹ = ப்ரஹ்மத்தோடு கூடிக்கொண்டு, அஶ்னுதே = அனுபவிக்கிறானென்று முக்த ஜீவர் களுக்கு பரமாத்மாவுடன் ஸஹபோகத்தைச் சொல்லிக்கொண் டிருக்கிறபடியால் பேதத்தைச் சொல்லுகிறது என்று அர்த்தம்.

### ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்திரிகளே! இதென்ன க்ரந்தம் பாருங்கள்?

பி. வா:—எங்கள் ஶங்கர பகவத்பாதாசார்யரின் ஸாக்ஷாத் ஶிஷ்யரான ஸுரேஶ்வராசார்யரின் வார்த்திகமும், அதற்கு ஆனந்த கிரியவர்களால் இயற்றப்பட்ட டீகையும்.

வா. வ:—இந்த க்ரந்தங்கள் உங்களுக்கு மான்யங்களே யல் லவா?

பி. வா:—பரம மான்யங்கள்.

வா. வ:—* இந்த வாக்யங்களுக்கு அபிப்ராயமென்ன?

பி. வா:— 'ஸ: ப்ரஹ்மணு விபஶ்சிதா' என்னும் வாக்யத்தி லிருக்கும் 'ஸஹ' என்னும் பதத்திற்கு கூடிக்கொண்டு என்னும் அர்த்தம் முக்கியமானது. அப்படிப்பட்ட முக்யார்த்தத்தை வைத்துக்கொண்டால்—ஜீவன் ப்ரஹ்மத்தோடு கூடிக்கொண்டு போகத்தை யனுபவிக்கிருனென்று அர்த்தமாய் ஜீவப்ரஹ்மாக் களுக்கு பேதம் உண்டென்று ஸித்தமாகிறது. அந்த அர்த்தம் 'தத்வமஸி' என்னும் வாக்யத்திஞல் விருத்தமாகிறதிஞல் 'ஸஹ' என்னும் ஶப்தத்திற்கு கூடிக்கொண்டு என்னும் முக்யார்த்தத்தை விட்டு, 'நிபாதாஞம் அனேகார்த்தத்வாத்' நிபாதங்களுக்கு அனேக அர்த்தங்களிருப்பதிஞல் 'ஸஹ' என்னும் பதத்திற்கு ஒரேகாலத்தில் என்னும் அர்த்தம் செய்யவேண்டுமென்று அபிப் ராயம்.

வா. வ:—'ஸஹ ப்ரஹ்மணு விபஶ்சிதா' என்னும் வாக்யத்தி லிருக்கும் 'ஸஹ' என்னும் ஶப்தத்திற்கு 'கூடிக்கொண்டு' என் னும் முக்யார்த்தத்தை எடுத்துக்கொண்டால் ஜீவப்ரஹ்மாக் களுக்கு பேதம் ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—பேதம் ஸித்திக்கிறது. ஆயினும் — ஐக்யப்ரதி பாதகமான 'தத்வமஸி' என்னும் வாக்யத்திஞல் விரோதம் வரு கிறபடியால் 'ஸஹ' என்னும் பதத்திற்கு முக்யார்த்தத்தைவிட்டு அமுக்யார்த்தத்தை எடுத்துக்கொள்ள வேண்டும்.

வா. வ:—'தத்வமஸி' என்னும் வாக்யம், 'தத்' 'த்வம்' என் னும் பதங்களின் முக்யார்த்தங்களுக்கு ஐக்யத்தை சொல்வதற்கு வருமல் அமுக்யார்த்தத்தை எடுத்துக்கொண்டு அர்த்தத்தை சொல்லவேண்டி யிருக்கிறது. அந்த அமுக்யார்த்தமும் எதை

* ப்ரதீசி ந ஸ்யாத்தத் ப்ரஹ்ம பேதார்த்தா சேத் ஸஹார்த்ததா (தை. ஸூ. வா. 1-117)

ஸஹஶப்தஸ்ய யதாஶ்ருதார்த்தத்வம் கிம் ந ஸ்யாதித்யா ஶங்க்யாஹ ப்ரதீசீதி| ஸஹஶப்தஸ்ய முக்யார்த்தத்வே ஸத்யாத்ம ப்ரஹ்மணோர்பேதாத் பேதார்த்ததா ஸஹஶப்தஸ்ய ஸ்யாத். (தை. வா. ஆனந்தகிரி டீகா 1-117.)

எடுத்துக்கொள்ளவேண்டும் என்பது வ்யவஸ்தை யில்லாமல் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்க மற்றொரு ஶ்ருதியை பாதிக்கும் யோக்யதை அதற்கு எப்படி யுண்டாகும்? (உண்டாகாது). ஆகையால் அந்தஶ்ருதியின் பாதகம் வருவதில்லை யாதலால் 'ஸஹ' என்னும் பதத்திற்கு முக்யார்த்தத்தையே எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படியிருக்க இந்தஶ்ருதி பேதத்தைச் சொல்லுகிற தென்னும் விஷயத்தில் பாதகமென்ன இருக்கிறது?

பி. வா:—(பதில் இல்லை).

---

வா. எ. 27.

## ஸதா ஸோம்ய ததா ஸம்பன்னோ பவதி என்னும் ஶ்ருதி விசாரணை.

### வாதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'ஸதா ஸோம்ய ததா ஸம்பன்னோ பவதி' (சாம். 6-1-8) என்னும் ஶ்ருதியினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் எப்படி ஸித்திக்கிறது?

வாதி:—ஜீவன், ததா = ஸுஷுப்திகாலத்தில், ஸதா = ஸன்னுமகனான பரப்ரஹ்மத்தினால், ஸம்பன்ன: பவதி = ஸம்பத்தனாகிறான் (பரமாத்மாவை அடைகிறான்) என்று ப்ராப்ய ப்ராபக பாவத்தைச் சொல்லியிருக்கிறபடியால், ப்ராப்த்ருவான ஜீவனுக்கு ப்ராப்யனான பரமாத்மாவுடன் பேதம் ஸித்தமாகிறது.

### ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்திரிகளே! இதென்ன க்ரந்தம்?

பி. வா:—எங்கள் ஶங்கரபகவத்பாதரின் ஸூத்ரபாஷ்யம்.

வா. வ:—* இந்த வாக்யத்தின் அபிப்ராயத்தைச் சொல்லும்?

பி. வா:—'ஸதா ஸோம்ய' என்னும் சாந்தோக்யஶ்ருதி—ஸுஷுப்தி காலத்தில் ஜீவன் பரமாத்மாவை யடைகிறானென்று

---

* பேதநிர்தேஶாத் 'ஸதா ஸோம்ய ததா ஸம்பன்னோ பவதி (சாம். 6-8-1) இத்யேவம் ஜாதீயக: கர்த்ருகர்மாதி பேதநிர்தேஶ:ஜீவாததிகம் (அன்யத்) ப்ரஹ்ம தர்ஶயதி' (ஸூத்ர. பா. 2-1-22)

ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தைச் சொல்லிக்கொண்டே ஜீவன் பரமாத்மாவினுல் பின்னனென்று தெரிவிக்கிறதென்று அபிப்ராயம்.

வா. வ:—இந்த ஶ்ருதியினுல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்திக்கிறதென்றே ஶங்கராசார்யரின் அபிப்ராயமல்லவா?

பி. வா:—இந்த ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் தெரிவித்தாலும், அபேதத்தையே தெரிவிக்கிறதென்று சங்கராசார்யரின் அபிப்ராயம்.

வா. வ:—அந்த அபிப்ராயத்தைத் தெரிவிக்கும் ஶங்கராசார்யரின் வாக்யத்தைச் சொல்லி, அதின் அபிப்ராயத்தைச் சொல்லும்?

பி. வா:—'ததா தஸ்மின் காலே ஸதா ஸச்சப்தவாச்யயா ப்ரக்ருதயா தேவதயா ஸம்பன்னோ பவதி ஸங்கத: ஏகீபூதோ பவதி' (சாம். ஶாம். பா. 6-8-1) என்னும் வாக்யம். இதனுல் 'ஸதா ஸோம்ய' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதத்தைத் தெரிவிக்கிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—ஶாஸ்திரிகளே! ஒரே வேதவாக்யம் விருத்தமான பேதத்தையும் அபேதத்தையும் சொல்லுகிறதென்பது பொருந்துமா?

பி. வா:—பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) அபேதம் பாரமார்த்திகம். ஆகையால் பரஸ்பர விரோதம் இல்லாததினுல் அப்படி சொல்வது பொருந்தும்.

கோர்ட்:—ப்ரமாணங்களினுல் சொல்லப்பட்ட விஷயம் வ்யாவஹாரிகமென்று சொல்லக்கூடாதென்று நீங்களே பௌத்தர்களைக் கண்டித்து, மருபடி வேதாதி ப்ரமாணங்களினுல் சொல்லப்பட்ட பேதம் வ்யாவஹாரிகமென்று நீங்களே சொல்வது ஸரியல்ல. வேறேதாவது ஸமாதானமிருந்தால் சொல்லுங்கள்?

பி. வா:—(பதில் இல்லை).

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! வா. எ. 8 'ததஸ்து தம் பஶ்யதே நிஷ்களம் த்யாயமான:' (மும். 3-1-8) என்னும் ஶ்ருதி த்யாத்ருத்யேய பாவத்தினாலும், ஞாத்ருஞேய பாவத்தினாலும், ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறது. ஶங்கராசார்யார் தம் பாஷ்யத்தில் இந்த வாக்யம் பேதத்தைச் சொல்லுகிறதென்று ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 9:—இவ்விதமாகவே 'வித்வான்.......... பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' (மும். 3-2-8) என்னும் ஶ்ருதி ஞாத்ருஞேய பாவத்தினாலும், ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தினாலும், பேதத்தைத்தெரிவிக்கிறது. மற்றும், பராத் = உத்தமரான சதுர்முகாதிகளினால், பரம் = உத்தமனென்று பரமாத்மாவுக்கு சதுர்முகாத்யுத்தமத்வத்தை சொல்லியிருக்கிறபடியால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது. ஶங்கராசார்யரும் தம் பாஷ்யத்தில் பேதத்தைத் தெரிவிக்கிறதென்று ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 10; ப்ர. எ. 10:—'பரமம் ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி' (மும். 3-2-9) என்னும் வாக்யம் 'ப்ரஹ்ம வேத' என்று ஞாத்ருஞேய பாவத்தினாலும், ப்ரஹ்ம பவதி = ப்ரஹ்மத்தை அடைகிறானென்று ப்ராப்யப்ராபக பாவத்தினாலும், ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே சொல்லுகிறது. ஶங்கராசார்யரும் தம் உபநிஷத் பாஷ்யத்தில் ப்ரஹ்மஞானியான ஜீவன் ப்ரஹ்மத்தை அடைந்தே தீருகிறான். ப்ரஹ்மஞானிக்கு ப்ரஹ்மப்ராப்திரூப பலத்திற்கு விக்னம் செய்வதற்கு யாரும் ஸமர்த்தராவதில்லை என்று ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தைச் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. எ. 11:—'பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேன ரூபேணாபிநிஷ்பத்யதே ஸ உத்தம: புருஷ: ஸ தத்ர பர்யேதி ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:' (சாம்.) என்னும் வாக்யம்—ஜீவன் பரமாத்மாவையடைந்து ப்ராக்ருதி பந்தத்தினால் முக்தனாய் தன் ஸ்வரூபத்தோடு அபிவ்யக்தனாய், மோக்ஷத்தில்—க்ரீடா, பக்ஷணம், ரமணம்,

ஸஞ்சாராதிகள் இவைகளைச் செய்துகொண்டே ஸுகமுடையவ னாய் இருக்கிறான் என்று ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தினாலும், ஆதாராதேய பாவத்தினாலும், மோக்ஷத்தில் பேதத்தைத் தெரிவிக்கிறது. ஶங்கராசார்யாரும் தம்மிட பாஷ்யத்திலும், ப்ரஹ்ம வித்யாபரணகாரர் அதற்கு வ்யாக்யானமான ப்ரஹ்மவித்யாபரணக்ரந்தத்திலும், இந்தவாக்யம் மோக்ஷதசையில் பேதத்தைத் தெரிவிக்கிறதென்று ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 12:—'ஸோன்வேஷ்டவ்ய: ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய:' என்னும் ஶ்ருதி ஜிஜ்ஞாஸ்ய ஜிஜ்ஞாஸக பாவத்தினாலும், த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவத்தினாலும், பேதத்தைத் தெரிவிக்கிறது. ஶங்கராசார்யரும் பேதத்தை தெரிவிக்கிறதென்று ஒத்துக் கொண்டிருக்கிறார்.

வா. எ. 13:—'ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:' என்னும் ஶ்ருதி த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவத்தினாலும், ஶ்ரோத்ரு ஶ்ரோதவ்ய பாவத்தினாலும், மந்த்ரு மந்தவ்ய பாவத்தினாலும், த்யாத்ருத்யாதவ்ய பாவத்தினாலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது. ஶங்கராசார்யரும் அப்படியே ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 14:—'ப்ரஹ்மவிதாப்னோதி பரம்' என்னும் வாக்யம் ஞாத்ருஞேய பாவத்தினாலும், ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தினாலும், ஜீவேஶ்வரர்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது. ஶங்கராசார்யரும் அப்படியே ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 15:—'ஏதமேவ விதித்வா முனிர்பவதி' என்னும் ஶ்ருதி ஞாத்ருஞேய பாவத்தினால் பேதத்தைத் தெரிவிக்கிறது. ஶங்கராசார்யரும் அப்படியே ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 16:—'அயம் ஶாரீர: ப்ராஜ்ஞேனாத்மனான்வாரூட:' என்னும் ஶ்ருதி ஆரோஹண க்ரியா கர்த்ருத்வ கர்மங்களினால் (ஏறுவது, ஏற்றிக்கொள்வது இவைகளால்)பேதத்தைத் தெரிவிக்கிறது. அப்படியே ஶங்கராசார்யரும் ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 17:—'ஸோஶ்னுதே ஸர்வான் காமான் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா' என்னும் ஶ்ருதி ப்ரஹ்மஞானி தனக்கு இஷ்ட

மான ஸமஸ்தபோகங்களேயும் பரப்ரஹ்மத்துடன் கூடிக்கொண்டு அனுபவித்துக்கொண்டிருக்கிறுனென்று பரமாத்மாவுடன் ஸஹ போகத்தைச்சொல்லியிருப்பதினுல் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது. ஸுரேஶ்வர வார்த்திகத்திலும் இந்த வாக்யம் ஸ்வரஸத: பேதத்தையே தெரிவிக்கிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

வா. எ. 27:— 'ஸதா ஸோம்ய ததா ஸம்பன்னோ பவதி' (சாம். 6-8-1) என்னும் வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ப்ராப்த்ரு ப்ராப்ய பாவத்தினுல் பேதத்தைச் சொல்லுகிறது. ஶங்கராசார்யாரும் அப்படியே ஒத்துக்கொண்டிருக்கிருர்.

ஆகையால் 8, 9, 10, 11, 12, 13, 14, 15, 16, 17, 27 இந்த வாக்யங்களினுல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்திக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேணுமாய்க் கோருகிறேம்.

## ப்ரதிவாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! வாதி எக்ஸிபிட்ஸ் 8, 9, 10, 11, 12, 13, 14, 15, 16, 17, மற்றும் ப்ர. வா. எ. 10 இவைகள் ஜீவபரமாத்மாக்களுக்கு ஆதாராதேய பாவத்தினுலும், ப்ராப்ய ப்ராப்த்ரு பாவம், ஞாத்ருஞேய பாவம், த்யாத்ருத்யேயபாவம், இவை முதலானவைகளினுலும் ஜீவபரமாத்மாக்களின் பேதத்தைச் சொல்லுகிறதென்று வாதி சொல்லுகிருர். எங்கள் ஶங்கராசார்யரும் அப்படியே சொல்லியிருக்கிருர். ஆயினும்—'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' 'நான்யததோஸ்தி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' 'தத்வமஸி' இத்யாதி வாக்யங்களினுல் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறபடியால், இந்த ஶ்ருதிகளினுல் ஸித்திக்கும் பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) என்று சொல்லவேண்டி யிருப்பதினுல் பாரமார்த்திக பேதம் உண்டென்னும் விஷயத்தில் இந்த ஶ்ருதிகள் ஆதாரமாகிறதில்லை என்னும்விஷயத்தைக் கோர்ட்டாருக்குத் தெரிவித்துக்கொண்டிருக்கிறேம்.

வா. எ. 27:—'ஸதா ஸோம்ய ததா ஸம்பன்னோ பவதி' என்னும் வாக்யம் ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தினுல் ஜீவப்ரஹ்மாக்

களுக்கு பேதத்தையும் சொல்லுகிறது, அபேதத்தையும் சொல்லுகிறது. ஆயினும்—அபேதத்தைச் சொல்லும் தத்வமஸ்யாதி வாக்யங்களுக்கு விருத்தமாகிறபடியால் பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) என்று சொல்லவேண்டும். ஆகையால் ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யம் இந்த ஸ்ருதிகளினால் ஸித்தமாகிறதென்று கோர்ட்டார் நிர்ணயிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' 'நான்யோதோஸ்தி த்ரஷ்டா' 'நான்யதோஸ்தி த்ரஷ்ட்ரு' என்னும்வாக்யங்கள் அகண்டார்த்த போதகங்களானதினால் 'சித்' என்று மாத்ரம் ஞானத்தை யுண்டாக்குகின்றனவென்று ப்ரதிவாதிகளே ஒத்துக்கொண்டிருப்பதினால் அந்த வாக்யங்கள் அபேதத்தை போதிப்பதில்லை. ஸகண்டார்த்தபோதகமென்றுவைத்துக்கொண்டபோதிலும்-ஜீவேஶ்வரர்களுக்கு அபேதத்தை போதிப்பதில்லை என்னும் விஷயத்தை பூர்வத்திலேயே அறிவித்துக்கொண்டிருக்கிறோம்.'ஸ்வகோசரே ப்ரவர்த்தமானனி தத்வ மிதமித்யேவ ப்ரவர்தந்தே.........ந புன: ஸாம்வ்யாவஹாரிகம் ந: ப்ராமாண்யமிதி' என்று பாமதிகாரர் முதலான அத்வைதிகள் வ்யாவஹாரிக ப்ரமாணத்தைச் சொல்லும் பௌத்தர்களை ப்ரமாணங்கள்-பாரமார்த்திக வஸ்துக்களையே விஷயீகரிப்பதினால் வ்யாவஹாரிக வஸ்துக்களை விஷயீகரிக்கிறதென்று சொல்லக்கூடாதென்று கண்டித்திருக்கிறார்கள். அதற்கு விருத்தமாக ஸ்ருத்யாதி ப்ரமாணங்கள் வ்யாவஹாரிக பேதத்தை விஷயீகரிக்கின்றனவென்பது அத்யந்த அயுக்தம். ஆகையால் ஸ்ருதியினால் ஸித்தமான பேதத்தை வ்யாவஹாரிகமென்று சொல்லக்கூடாது. ஆகையால் இந்த ஸ்ருதிகளினால் ஸித்தமான பேதம் பாரமார்த்திக ஸத்யமானது, என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

வா. எ. 26.

## த்வாஸுபர்ணா என்னும் ஶ்ருதி விசாரணை.

## வாதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! "த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே ! தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்யனஸ்னன்னன்யோபிசாகஶீதி" (முண். 3-1) என்னும் ஶ்ருதியை எந்த விஷயத்தில் ஆதாரமாக நீங்கள் உதஹரித்திருக்கிறீர்?

வாதி:—ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் உண்டென்னும் விஷயத்தில் ஆதாரமாக உதஹரித்திருக்கிறோம்.

வா. வ:—இந்த ஶ்ருதிக்கு அர்த்தம் என்ன? இதனால் ஜீவ பரமாத்மாக்களுக்கு பேதம் எப்படி ஸித்திக்கிறது?

வாதி:—ஸுபர்ணா = ஸுபர்ணௌ = பக்ஷிஸமானரான, ஸயுஜா = ஸயுஜௌ = ஸர்வதா கூடிக்கொண்டிருக்கும், ஸகாயா = ஸகாயௌ = நேசரான, த்வா = த்வௌ = பின்னரான இருவர் தேஹமென்னும் ஒரே வ்ருக்ஷத்தை ஆஶ்ரயித்திருக்கிறார்கள். தயோ: = அவரிருவர்களில், அன்ய: = ஒருவன் (ஜீவன்) பிப்பலம் = கர்மங்களாலுண்டாகும் ஸுகதுக்கரூபமான பலனை ஸ்வாது அத்தி = நல்லதென்று தெரிந்துகொண்டு, அனுபவித்துக்கொண்டிருக்கிறான். அன்ய: = (ஜீவனைவிட) வேறான ஈஶ்வரன், அனஶ்னன் = கர்மபலன்களை அனுபவிக்காமல், அபிசாகஶீதி = ப்ரகாசிக்கிறான் என்று அர்த்தம். இந்த ஶ்ருதியில் 'த்வௌ' வேறுபட்டவர் அல்லது இருவர் என்று சொல்லியிருக்கிறபடியாலும், 'ஸயுஜௌ' ஸர்வகாலத்திலும் கூடிக்கொண்டிருக்கிறார்களென்று ஸாஹித்யத்தை (சேர்ந்திருப்பதை)ச் சொல்லியிருக்கிறபடியினாலும், 'பிப்பலம் அத்தி அனஸ்னன்' என்று கர்மபல போக்த்ருத்வ கர்மபல போக்த்ருத்வாபாவ ரூபமான விருத்த தர்மங்களை சொல்லியிருக்கிறபடியினாலும் ஜீவ பரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறது.

## ப்ரதிவாதி விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்திரிகளே! இந்த மந்த்ரத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—இந்த மந்த்ரத்திற்கு ஶங்கராசார்யார் அநேக இடங்களில் வ்யாக்யானம் செய்திருக்கிறார். அவைகளில் எதைச் சொல்ல வேண்டும்?

பி. வா. வ:—க்ரமமாக எல்லாவற்றையும் சொல்லும்.

பி. வா:—இந்த மந்த்ரம் முண்டக (ஆதர்வண) உபநிஷத்திலிருக்கிறது. *மேற்படி உபநிஷத் பாஷ்யத்தில்—எப்பொழுதும் சேர்ந்துகொண்டிருக்கும் இருவர் சரீரத்தை ஆஶ்ரயித்திருக்கிறார்கள். அந்த இருவரில் ஒருவனான ஜீவன் கர்மபலன்களை அநுபவித்துக்கொண்டிருக்கிறான். மற்றொருவனான பரமாத்மா கர்மபலன்களை அநுபவிப்பதில்லை. அநுபவிக்கக்கூடிய கர்மபலன்களுக்கும், அநுபவிக்கும் ஜீவனுக்கும், ப்ரேரகனாயிருக்கிறானென்று அர்த்தம் செய்திருக்கிறார்.

† கர்மபலனை அநுபவித்துக்கொண்டிருக்கிறானென்று சொல்லியிருக்கிறபடியால் ஒருவன் ஜீவன் என்றும், கர்மபலத்தை அநுபவிக்காத சேதனனென்று சொல்லியிருக்கிறபடியால், மற்றொருவன் பரமாத்மா என்றும் இருவர் 'த்வாஸுபர்ணா' என்னும் இந்த மந்த்ரத்தில் சொல்லிக்கொள்ளப்படுகிறார்களென்று 1-2-12 வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார்.

* த்வா ...ஸயுஜௌ ஸஹைவ ஸர்வதா யுக்தௌ...வ்ருக்ஷம் சரீரம்... பரிஷ்வக்தவந்தௌ.......தயோ: பரிஷ்வக்தயோரன்ய: ஏக: க்ஷேத்ரஜ்ஞ: (ஜீவ:) கர்மநிஷ்பன்னம்......பலம்......அத்தி பக்ஷயதி...அனஶ்னன்னன்ய இதர: ஈஶ்வரோ......நாஶ்னாதி ப்ரேரயிதா ஹ்யஸௌ உபயோர்போஜ்ய போக்த்ரோ. (மும். பா. 3-1)

† 'த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா' (மும். 3-1-1) எவமாதிஷ்வபி ......தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தி இதி அதனலிங்காத் விஜ்ஞாநாத்மா பவதி. அனஶ்னன்னன்யோ அபிசாகஶீதி இத்யனஶனசேதனத்வாப்யாம் பரமாத்மா. (ப்ர. ஸூ. பா. 1-2-12)

மற்றும் 1-3-7வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் 'த்வா ஸுபர்ணு' என்னும் மந்த்ரத்தில் கர்மபலனை உண்ணுகிறவன் என்றும், கர்ம பலனை உண்ணுதவன் என்றும் சொல்லியிருக்கிறபடியால் ஜீவபரமாத்மாக்கள் இந்த வாக்யத்தில் சொல்லப்படுகிறார்களென்று சொல்லியிருக்கிறார்.

க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்திரிகளே! இந்த வாக்யத்தினுல் என்னவென்று ஸித்தமாகிறது?

பி. வா:—ஶங்கராசார்யருடைய வ்யாக்யானங்களை யனுஸரித்து இவ்வாக்யத்தினுல் ஜீவபரமாத்மாக்களுக்குபேதம் ஸித்தமாகிறது.

வா. வ:—இந்த க்ரந்தம் ஏது, பாருங்கள்?

பி. வா:—எங்கள் வித்யாரண்யர் செய்த ருக்வேதபாஷ்யம்.

வா. வ:—† இவ்வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லும்?

பி. வா:—ஜீவன் கர்ம பலனை யனுபவிக்கிருன். பரமாத்மா ஆப்த காமனுகையால் கர்ம பலனை யனுபவிப்பதில்லை. இந்த மந்த்ரம் பொய்யான பேதத்தை ஆஶ்ரயித்துக்கொண்டு, "தயோரன்ய:" என்று பேதத்தைச் சொல்லுகிறது என்று அர்த்தம்.

வா. வ:—ஶாஸ்திரிகளே! பேதம் நிஜமோ, பொய்யோ, அதை பிறகு விசாரிப்போம். இந்த வித்யாரண்யருடைய வ்யாக்யானத்தின்படிக்கு இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை அறிவிக்கிறதல்லவா?

பி. வா:—பேதத்தை அறிவிக்கிறது.

---

தாப்யாம் ச ஸ்தித்யதனுப்யாம் ஈஶ்வர க்ஷேத்ரஜ்ஞௌ (ஈஶ்வர ஜீவௌ) தத்ர க்ருஹ்யேதே இதி. (ப்ர. ஸூ. ஶாங். பா. 1-3-7)

† லௌகிகபுத்யா பேதமப்யுபேத்யோச்யதே தயோரன்ய: ஜீவாத்மா பிப்பலம் கர்மபலம் ஸ்வாது ஸ்வாதுபூதம் அத்தி புங்க்தே யஸ்ய யதுபார்ஜிதம் தத் தஸ்ய ஸ்வாது பவதி அன்ய: பரமாத்மா அனஶ்னன் ஆப்தகாமத்வேன அபுஞ்ஜான:.........தஸ்மாதவாஸ்தவ பேதமுபஜீவ்ய தயோரன்ய இத்யுக்தம் இதி (ரு. 2-3-17-20. வித்யாரண்ய பாஷ்யம்).

## ப்ரதிவாதி வக்கீல் ப்ரதிவாதியை திருத்தல்.

பி. வா. வ:—ஶாஸ்திரிகளே! உங்கள் சங்கராசார்யார் "த்வா ஸூபர்ணா" என்னும் ஶ்ருதி ஜீவன், பரமாத்மா இவ்விருவரையும் சொல்லிக்கொண்டே, அவர்களுக்கு பேதத்தை அறிவிக்கிறதென்று சொல்லி இருக்கிறாரென்று சொல்லுகிறீர். இந்த மந்த்ரத்திற்கு 1-2-12வது ஸூத்ரபாஷ்யத்தில் அந்த சங்கராசார்யாரே வேறுவிதமாக வ்யாக்யானம் செய்திருப்பதை நீர் பார்த்திருக்கிறீரல்லவா?

பி. வா:—பார்த்திருக்கிறோம்.

பி. வா. வ:—அந்த வ்யாக்யானத்தை ஏன் சொல்லவில்லை? அதைச் சொல்லும்?

பி. வா:—* பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணம்—இந்த த்வா ஸூபர்ணா என்னும் உபநிஷத் வாக்யத்தை எடுத்துக்கொண்டு, அந்த வாக்யத்தில் கர்மபலனை உண்ணுவதென்று ஏது சொல்லப்படுகிறதோ அது 'ஸத்வம்' அந்த:கரணம் (புத்தி) என்றும், கர்ம பலனை உண்ணாமல் பிரகாஶமாயிருப்பது என்று ஏது சொல்லப்படுகிறதோ அது 'ஜ்ஞ:' ஜீவன் என்றும் இந்த 'த்வாஸூபர்ணா' என்னும் வாக்யம் அந்த:கரணத்தையும், ஜீவனையும் சொல்லுகிறதென்று வ்யாக்யானம் செய்திருக்கிறது (த்வா ஸூபர்ணா என்னும் மந்த்ரத்தில் ஜீவபரமாத்மாக்கள் சொல்லிக் கொள்ளப்படுவதில்லை) என்று ஶங்கராசார்யார் வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

பி. வா. வ:—பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்தை யனுசரித்து 'த்வா ஸூபர்ணா' என்னும் மந்த்ரம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிப்பதில்லை யல்லவா?

---

* தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தீதி ஸத்வம் அனஶ்னன்னன்யோ பிசாகஶீதீதி ஜ்ஞ:.........தாவேதௌ ஸத்வ க்ஷேத்ரஜ்ஞாவிதி.........ததேதத் ஸத்வம் யேன ஸ்வப்னம் பஶ்யதி அத யோயம் ஶாரீர: உபத்ரஷ்டா ஸ க்ஷேத்ரஜ்ஞ: தாவேதௌ ஸத்வக்ஷேத்ரஜ்ஞாவிதி.........ந ஹ வா ஏவம் விதி கிஞ்சன ரஜ: ஆத்வம்ஸதே இத்யாதி. (பைங்கிரஹஸ்ய பிராஹ்மணம்.)

பி. வா:—'த்வாஸுபர்ணு' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களையே சொல்வதில்லை என்று சொல்லிக்கொண்டிருக்க—அவர்களுக்கு பேதம் சொல்லுகிறது என்று சொல்வது எவ்விதத்திலும் பொருந்தாது.

பி. வா. வ:—ஆசார்யரே! 'த்வா ஸுபர்ணு' என்னும் வாக்யம் அந்த:கரணத்தையும், ஜீவனையும், சொல்லுகிறதென்றும், ஜீவபரமாத்மாக்களையாகிலும், அவர்களிட பேதத்தையாகிலும், சொல்லுவதில்லை என்றும் பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணம் சொல்லிக்கொண்டிருக்க—இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று நீர் எப்படிச் சொல்லுகிறீர்?

வாதி:—'த்வாஸுபர்ணு' என்னும் ஶ்ருதியினால் ஜீவனும் பரமாத்மாவும் சொல்லிக்கொள்ளப்படுகிறார்களென்று தோன்றுகிறது. ஶங்கராசார்யரும் அப்படியே அர்த்தம் செய்திருக்கிறார். ஆகையால் அந்த வாக்யம் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் சொல்லுகிறது என்று சொல்லுகிறோம்.

பி. வா. வ:—இந்த மந்த்ரம் அந்த:கரணத்தையும்,ஜீவனையும் சொல்லுகிறதென்றும், ஶங்கராசார்யார் அர்த்தம் செய்திருக்கிறார். இப்படி அர்த்தம் செய்ததற்கு பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணம் அனுகூலமாயிருக்கிறது. ஆகையினால் இந்த வ்யாக்யானமே ஸரியானதென்று சொல்லவேண்டுமல்லவா?

வாதி:—இந்த வ்யாக்யானம் ஸரியானதென்னும் விஷயத்தில் ஶங்கராசார்யருக்கு தாத்பர்யமில்லை. பைங்கிரஹஸ்ய பிராஹ்மணமும் 'த்வாஸுபர்ணு' என்னும் மந்திரம் அந்த:கரணத்தையும், ஜீவனையும் சொல்லுகிறதென்று சொல்வதில்லை. சொல்லுகிறதென்பது பொருந்துவதும் இல்லை. ஆகையினால் இந்த 'த்வா ஸுபர்ணு' என்னும் ஶ்ருதி ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதத்தையே சொல்லுகிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! ஶங்கராசார்யருக்கு இந்த வ்யாக்யானத்தில் தாத்பர்யமில்லை என்பது உமக்கு எப்படித் தெரியும்?

வாதி:—1-2-12-வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் ஶங்கரா சார்யரே 'அபர ஆஹ' இதரர்கள் சொல்லுகிறார்கள் என்று சொல்லியிருக்கிறபடியால் இது அவரிட அபிப்ராயமல்லவென்று ஸ்பஷ்டமாகிறது.

பி. வா. வ:—'த்வா ஸுபர்ணா' என்னும் மந்த்ரம் அந்த: கரணத்தையும், ஜீவனையும் சொல்லுகிறதென்று பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்தில் ஏன் சொல்வதில்லை? பின்னும் அப்படிச் சொல் லுகிறதென்பதும் ஏன் பொருந்துவதில்லை?

வாதி:—"தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தீதி ஸத்வம்" என்று கர்மபலனை யனுபவிப்பது 'ஸத்வம்' என்று சொல்லப்பட் டிருக்கிறது. அந்த:கரணமென்பது ஜடமானபடியினால் கர்ம பலனை உண்ணுகிறதென்பது பொருந்துவதில்லை. 'ரமணீயசரணா: ரமணீயாம் யோனிமாபத்யந்தே' (சாம்) 'நாகஸ்ய ப்ருஷ்டே ஸுக்ருதே தேனுபுக்த்வேமம் லோகம் ஹீனதரம் வா விஶந்தி' (மும். 1-10) இதுமுதலிய அநேக வேதாதி ப்ரமாணங்களால் ஜீவன் கர்மபலனை அனுபவிப்பவனென்று சொல்லியிருக்கிறபடியி னாலும், கர்மபலனை உண்ணுகிறவன் 'ஸத்வம்' என்றால்—ஜீவ னென்றே அர்த்தம் செய்யவேண்டும். ஸத்வஶப்தம்—'ஸத்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம்' (கீ. 18-40) இது முதலிய அநேக இடங்க ளில் ஜீவனைச் சொல்லுவதாக காணப்படுகிறது. ஶங்கராசார்யரும் அந்த பதத்திற்கு—"ஸத்வம் ப்ராணிஜாதம்" என்று வ்யாக்யா னம் செய்திருக்கிறார்.

'அனஶ்னன்னன்யோ அபிசாகஶீதீதி ஜ்ஞ:' என்னும் வாக்யத்தால் கர்மபலனை உண்ணாமலிருப்பது 'ஜ்ஞ:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஜீவன் பூர்வத்தில் சொல்லப்பட்ட ப்ரமாணங்களால் கர்மபலனை அனுபவிக்கிறவனானபடியால் 'ஜ்ஞ:' என்னும் பதத்தினால் ஜீவனை எடுத்துக்கொள்ளக்கூடாது. கர்மங் களுக்கு அத்யக்ஷனான பரமாத்மாவையே எடுத்துக்கொள்ளவேண் டும். ஆகையினால் பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்தில் கர்மபலனை யனுபவிக்கும் பொருளைச் சொல்லும் ஸத்வமென்னும் பதத்தினால் அந்த:கரணத்தை எடுத்துக்கொள்வது யுக்தமல்ல. கர்மபலனை

உண்ணுமலிருக்கும் பொருளை சொல்லும் 'ஜ்ஞ:' என்னும் பதத்தினுல் ஜீவனை எடுத்துக்கொள்வதும் யுக்தமல்ல. ஆகையினுல் பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணம் 'தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தீதி ஸத்வம்' என்னும் வாக்யத்தினுல் கர்மபலனை புசிக்கும் ஜீவனையே சொல்லுகிறது. 'அனஶ்னன்னன்யோ அபிசாகஶீதீதி ஜ்ஞ:' என்னும் வாக்யத்தினுல் கர்மபலனை புசிக்காமலிருக்கும் பரமாத்மாவையே சொல்லுகிறது. ஆகையினுல் பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்தை யனுஸரித்து 'த்வாஸுபர்ணு' என்னும் மந்த்ரம் ஜீவேஶ்வரர்களைச் சொல்லிக்கொண்டே, அவரிருவர்களுடைய பேதத்தையும் அறிவிக்கிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! "ததேதத் ஸத்வம் யேன ஸ்வப்னம் பஶ்யதி" என்னும் வாக்யத்தில் 'யேன' என்னும் த்ருதீயா விபக்தியினுல் ஸ்வப்னதர்ஶனத்திற்குக் காரணமானது (ஸாதனமானது) ஸத்வமென்று சொல்லிக்கொள்ளப்படுகிறது. ஜீவன் ஸ்வப்னதர்ஶனத்திற்குக் கர்த்தாவானபடியால் ஸத்வபதத்தினுல் ஜீவனை எடுத்துக்கொள்வது எப்படி ஸாத்யமாகும்?

வாதி:—'பிப்பலம் ஸ்வாத்வத்தீதி ஸத்வம்' என்று சொல்லப்பட்ட கர்மபலபோக்த்ருத்வம் அந்த:கரணத்திற்கு பொருந்தாததினுல் விபக்தி பரிணுமத்தால், ய: = ஜீவன் என்று அர்த்தம் செய்யவேண்டும்.

பி. வா. வ:—ஆசார்யரே "அத யோயம் ஶாரீர உபத்ரஷ்டாஸ க்ஷேத்ரஜ்ஞ:" என்று சொல்லப்பட்ட, ஶாரீரத்வம், க்ஷேத்ரஜ்ஞத்வம், உபத்ரஷ்ட்ருத்வம் இவைகள் ஜீவனுக்கு பொருந்துகிறதே யொழிய, பரமாத்மாவுக்கு பொருந்துகிறதில்லை. ஆகையினுல் 'ஜ்ஞ:' என்னும் பதத்தினுல்பரமாத்மாவை எடுத்துக்கொள்வதற்கு முடியாதல்லவா?

வாதி:—Mr. H. H. ஶர்மா! ஜீவனுக்கு கர்மபலபோக்த்ருத்வாபாவம் பொருந்துவதில்லை. பரமாத்மாவுக்கே பொருந்துகிறதென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். "யோஸ்யாத்மன: காரயிதா தம் க்ஷேத்ரஜ்ஞம் ப்ரசக்ஷதே" என்னும் ஸ்ம்ருதியும்,: 'உபத்ரஷ்டானுமந்தா ச பர்தா போக்தா மஹேஶ்வர: । பரமாத்மேதி

சாப்யுக்தோ தேஹேஸ்மின் புருஷ: பர: ' (கீ- 13-22) இவைகளே முதலான அநேக ப்ரமாணங்களால் பரமாத்மாவுக்கு ஶரீரவ்ருத்தித்வம் = ஶாரீரத்வம், உபத்ரஷ்ட்ருத்வம், க்ஷேத்ரஜ்ஞத்வம் இவைகளைச் சொல்லியிருப்பதினால் 'ஜ்ஞ:' என்னும் பதத்தினால் பரமாத்மாவை எடுத்துக்கொள்வதற்கு எவ்விதமான பாதகமும் வருவதில்லை.

வா. வ:—ஶாஸ்திரிகளே! * இவ்வாக்யம் எது?

பி. வா:—இது எங்கள் ஶங்கராசார்யாரின் ஸூத்ரபாஷ்யம்.

வா. வ:--இந்த வாக்யத்திற்கபிப்ராயம் என்ன ?

பி. வா:—'த்வாஸுபர்ணா' என்னும் மந்த்ரத்தில் 'தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தி' என்னும் வாக்யத்தினால் கர்மபலபோக்த்ருத்வம் சொல்லப்பட்டிருப்பதினால் ஜீவன் சொல்லிக்கொள்ளப்படுகிறான். 'அனஶ்னன்னன்யோபிசாகஶீதி' என்னும் வாக்யத்தினால் பரமாத்மா சொல்லிக்கொள்ளப்படுகிறான் என்று சொல்லி, இந்த 'த்வாஸுபர்ணா' என்னும் மந்த்ரத்திற்கு முன்னிருக்கும் 'ஸமானே வ்ருக்ஷே' என்னும் மந்த்ரத்தில் 'அன்யம் ஈஶம் பஶ்யதி' என்னும் வாக்யத்தில் ஜீவனும் பரமாத்மாவும், த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவத்தினால் சொல்லப்படுகிறபடியால் 'த்வாஸுபர்ணா' என்னும் மந்த்ரத்தில் ஜீவபரமாத்மாக்கள் சொல்லிக்கொள்ளப்படுகிறார்கள் என்னும் விஷயத்தில் 'ஜுஷ்டம் யதா பஶ்யதி' என்னும் மந்த்ரத்தின் ஸம்மதமுண்டென்று அபிப்ராயம்.

அனந்தரே ச மந்த்ரே தாவேவ (ஜீவபரமாத்மானாவேவ) த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவேன விஶிநஷ்டி 'ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்னோ அநீஶயா ஶோசதி முஹ்யமான: | ஜுஷ்டம் யதா பஶ்யத்யன்யமீஶமஸ்ய மஹிமானமிதி வீதஶோக: இதி. (ப்ர. ஸூ, சாம். பா.)

வா. எ. 19.

## ஜுஷ்டம் யதா பஶ்யதி என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்திரிகளே! 'ஜுஷ்டம் யதா பஶ்யத்யன்யமீஶம்' என்னும் வாக்யத்தில் 'பஶ்யதி' என்று த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவத்தினாலும் 'ஈஶம்' என்று நியம்ய நியாமக பாவத்தினாலும் 'ஜுஷ்டம்' என்று ஶேவ்ய ஶேவக பாவத்தினாலும் 'அன்யம்' என்னும் பதத்தினால் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் சொல்லப்படுகிறதல்லவா?

பி. வா:—ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் சொல்லப்படுகிறது.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'த்வாஸுபர்ணா' 'ஜுஷ்டம் யதா பஶ்யத்யன்யமீஶம்' என்னும் வாக்யங்களால் சொல்லிக்கொள்ளப்படும் பேதம் ஸத்யமா அல்லது மித்யையா?

பி. வா:—'த்வாஸுபர்ணா' 'அன்ய மீஶம்' இவ்வாக்யங்களினால் சொல்லிக்கொள்ளப்படும் பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்).

கோர்ட்:—ஶாஸ்திரிகளே! வேதத்தில் சொல்லப்பட்ட விஷயம் அடிக்கடி மித்யா (வ்யாவஹாரிகம்) என்று சொல்வது ஸரியல்ல. வேறேதாவது ஸமாதானமிருந்தால் சொல்லும்?

பி. வா:—(பதில் இல்லை).

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) தர்மப்ரபோ! 'த்வாஸுபர்ணா' என்னும் ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களில் 'த்வா' என்னும் பதத்தினால் த்வித்வஸங்க்யை சொல்லியிருக்கிறபடியாலும், 'ஸயுஜா' என்னும் பதத்தினால் எப்பொழுதும் கூடிக்கொண்டிருப்பதைச் சொல்லியிருக்கிறபடியாலும், கர்மபல போக்த்ருத்வம், கர்மபல போக்த்ருத்வாபாவம் என்னும் விருத்த தர்மங்களால் 'அன்ய: அன்ய:' என்னும் பதங்களினால் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் சொல்லுகிறது. மற்றும் 'ஜுஷ்டம் யதா பஶ்யத்யன்யமீஶம்' என்னும் ஶ்ருதி த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவத்தினாலும்

ஸேவ்ய ஸேவக பாவத்தினாலும், நியம்ய, நியாமக பாவத்தினாலும், 'அன்யம்' என்னும் பதத்தினால் ஜீவபரமாத்மாக்களிட பேதத்தைச் சொல்லுகிறது. ஸங்கராசார்யரும் இந்த 'த்வாஸுபர்ணா' 'ஜுஷ்டம் யதா பஸ்யதி' என்னும் ஸ்ருதிகளுக்கு இவ்விதமாகவே அர்த்தம் செய்திருக்கிறபடியால், ஜீவன் பரமாத்மாவைவிட பின்னன் (வேருபட்டவன்) என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## பிரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) Your honour !—'த்வாஸுபர்ணா' 'ஜுஷ்டம் யதா பஸ்யத்யன்யமீஸம்' என்னும் ஸ்ருதிகள் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதத்தைச் சொல்லிக்கொண்டிருந்தபோதிலும்—'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லிக்கொண்டிருக்கிறபடியால், இந்த ஸ்ருதியில் சொல்லப்பட்ட பேதம் மித்யா (பொய்). ஆகையினால் இவ்வாக்யம்-பேதம் பாரமார்த்திக ஸத்யமென்னும் விஷயத்தில் ஆதாரமாவதில்லை.

மற்றும்—'தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தீதி ஸத்வம்' 'அனஸ்னன்னன்யோபிசாகஸீதீதி ஜ்ஞ:' என்னும் பைங்கிரஹஸ்ய பிராஹ்மணம் 'த்வாஸுபர்ணா' என்னும் ஸ்ருதி அந்த:கரணத்தையும் ஜீவனையும் ப்ரதிபாதிக்கிறதென்று, சொல்லியிருப்பதால் 'த்வாஸுபர்ணா' என்னும் வாக்யம் ஜீவேஸ்வரர்களை சொல்லுவதில்லை. ஆகையினால் இவ்வாக்யம் ஜீவேஸ்வரர்களின் பேத விஷயத்தில் ஆதாரமாகக் காட்டியிருப்பது யுக்தமல்ல என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—மஹாப்ரபோ! 'த்வாஸுபர்ணா' 'ஜுஷ்டம் யதா பஸ்யத்யன்யமீஸம்' என்னும் ஸ்ருதிகள் ஜீவனையும், பரமாத்மாவையும் சொல்லிக்கொண்டே, விருத்த தர்மங்களால் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதத்தைத் தெறிவிக்கின்றன. ஸங்கராசார்யரும் பேதத்தையே சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறார். அந்த 'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் அபேதத்தைச் சொல்வ

தில்லையாகையால் அவைகள் பேதம் பொய்யென்பதற்குக் காரணமாவதில்லை. (பாதகமாவதில்லை) ஆகையால், ஶ்ருதிகளின் பதஸ்வாரஸ்யத்திலும்,ஶங்கராசார்யரிடவ்யாக்யானத்திலும் இந்த ஶ்ருதி பேதவிஷயத்தில் ஆதாரமாகிறது. பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணமும்—'த்வாஸுபர்ணா' என்னும் ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களை ப்ரதிபாதிக்கிறதென்று சொல்லுகிறதேயல்லாது, அந்தஃகரணம், ஜீவன் இவைகளை ப்ரதிபாதிக்கிறதென்று சொல்வதில்லை. ஏனென்றால்—'ஸத்வம்' என்னும்பதத்தினால் போதிக்கப்படுபவன் ஜீவனேயொழிய அந்தஃகரணமல்ல. அந்தஃகரணத்திற்கு கர்மபல போக்த்ருத்வம் பொருந்துவதில்லை. 'ஸத்வம்' என்னும் ஶப்தத்தை 'ஸத்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம்' என்னும் கீதா முதலான ப்ரமாணங்களில் ஜீவனிடத்தில் ப்ரயோகித்திருப்பதால் ஜீவனுக்கே பொருந்துகிறது. ஆகையால் பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணம் 'ஸத்வம்' என்னும் பதத்தினால் ஜீவனையே சொல்லுகிறது.

'யோஸ்யாத்மன: காரயிதா தம் க்ஷேத்ரஜ்ஞம் ப்ரசக்ஷதே' (ஸ்ம்ருதி.) 'உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்தா மஹேஶ்வர:। பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேஸ்மின் புருஷ: பர:' (கீதா 18-12) இத்யாதி ப்ரமாணங்களால் பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்தில் 'ஜ்ஞ:' என்னும் பதத்தினால் சொல்லிக்கொள்ளப்படுகிறவனுக்கு சொல்லிய ஶாரீரத்வம், உபத்ரஷ்ட்ருத்வம், க்ஷேத்ரஜ்ஞத்வம், கர்மபல பக்ஷண கர்த்ருத்வாபாவம், முதலான தர்மங்கள் பரமாத்மாவிடத்திலேயே பொருந்துகிறதேயல்லாது ஜீவனிடத்தில் பொருந்துவதில்லை. ஆகையால் 'ஜ்ஞ:' என்னும் பதத்தினால் பரமாத்மாவையே எடுத்துக்கொள்ளவேண்டும். ஆகையால் 'த்வாஸுபர்ணா' என்னும் ஶ்ருதி ஜீவனையும், பரமாத்மாவையும் சொல்லுகிறதென்று பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணம் சொல்லுகிறதென்றே சொல்லவேண்டும்.

மற்றும் இந்த மந்த்ரத்திற்கு முன்னிருக்கும் 'ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்னோநீஶயா ஶோசதி முஹ்யமான:। ஜுஷ்டம் யதா பஶ்யத்யன்யமீஶமஸ்ய மஹிமானமிதி வீதஶோக:' (முண். 3-2) என்னும் மந்த்ரம் 'த்வாஸுபர்ணா' என்னும் மந்த்

ரத்தில் சொல்லப்பட்ட ஜீவபரமாத்மாக்களை சொல்லுகிறதென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார். வஸ்துத: அப்படியே சொல்லுகிறபடியால் 'த்வாஸுபர்ணா' 'ஜுஷ்டம் யதா பஶ்யதி' என்னும் ஶ்ருதிகள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே சொல்லுகின்றன. அந்த பேதம் பாதிதமல்லாமலிருப்பதினால் பாரமார்த்திக ஸத்யமென்றே ஸித்திக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

வா. எ. 20

## ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம் என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேனாம்ருதத்வமேதி' (ஶ்வே. 1-6) என்னும் இந்த ஶ்ருதிக்கு அர்த்தமென்ன? இதனால் என்ன ஸித்தமாகிறது?

வாதி:—ஆத்மானம் = ஆத்மாவைவிட, ப்ருதக் = பின்னன் (தன்னாலும் ப்ரபஞ்சத்தினாலும் பின்னன்) பின்னும் ஸகல ஜகத்திற்கு; ப்ரேரிதாரம் = ப்ரேரகன் என்று தெரிந்துகொண்டு, அதனால், ஜுஷ்ட: = பரமாத்மாவின் ப்ரீதிக்கு பாத்ரனாய், தத: = பிறகு, தேன = அந்த ப்ரீதியினால் (ப்ரஸாதத்தினால்,) அம்ருதத்வமேதி = மோக்ஷத்தை யடைகிறான் என்று அர்த்தம். ஆகையினால் ப்ரேரிக்கப்படும் ஜீவனுக்கு ப்ரேரகனான பரமாத்மாவோடு பேதத்தையும், அந்த பேதஞானத்திற்கு மோக்ஷ ஸாதனத்வத்தையும் சொல்லுகிறபடியால் பேதம் ஸத்யமானதென்று ஸித்தமாகிறது.

---

வா. வ:—ஶாஸ்திரிகளே! 'இந்த ப்ருதகாத்மானம்' என்னும் வாக்யம் ப்ரேரிக்கப்படும் ஜீவனுக்கு ப்ரேரகனான பரமாத்மாவுடன் பேதத்தையும், அந்த பேத ஞானத்திற்கு மோக்ஷகாரணத்வத்தையும் சொல்லுகிறபடியால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஸத்யமான பேதம் ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—(பதில் இல்லை)

பி. வா. வ:—ஶாஸ்திரிகளே! இது என்ன க்ரந்தம் பாருங்கள்?

பி. வா:—இது எங்கள் மதுஸூதனஸரஸ்வதியவர்கள் செய்த அத்வைதஸித்தி என்னும் க்ரந்தம். மற்றும் அதற்கு வ்யாக்யானமான கௌட ப்ராஹ்மானந்தர் செய்த லகுசந்த்ரிகா என்னும் க்ரந்தமும்.

பி. வா. வ:—இந்த * வாக்யத்தின் அபிப்ராயமென்ன?

பி. வா:—'ப்ருதகாத்மானம்' என்னும் வாக்யம் 'ப்ருதக்' என்னும் பதத்தினாலும், ப்ரேர்ய ப்ரேரக பாவத்தினாலும், ஜீவ பரமாத்மாக்களுக்கு பேத முண்டென்று சொல்லி, அந்த பேத ஞானம் மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லுகிறபடியால் ஜீவேஶ்வரர்களின் பேதம் ஸத்யமென்கிற ஶங்கை உண்டாகவே—'ப்ருதகாத்மானம்' என்னும் ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு 'ப்ருதக்' என்னும் பதத்தினால் பேதத்தையும், 'ப்ரேரிதாரம்' என்னும் பதத்தினால் ப்ரேர்ய ப்ரேரக பாவத்தையும் சொல்லுவதைப்போல் தோன்றினும், ப்ரேரிதாரம் = தத்வஞானம் உண்டாவதற்கு பூர்வத்தில் (ப்ரம காலத்தில்) ப்ரேரகனென்று தோன்றும், ப்ருதக் = தன்னைவிட வேறாகத்தோன்றும், ஆத்மானம் = பரமாத்மாவின் ஸ்வரூபத்தை, மத்வா = தெரிந்துகொண்டு முக்தனாகிறானென்று அர்த்தம் சொல்லியிருக்கிறபடியால், பரமாத்மாவுக்கு ஜீவனோடு பேதமாகிலும், ப்ரேரகத்வமாகிலும் ஸித்திப்பதில்லை என்று அபிப்ராயம்.

வா. வ:—ஶாஸ்திரிகளே! ப்ருதக் = பின்னனான என்று விஶதமாக ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையும், ப்ரேரிதாரம் = ப்ரேரகனான என்று ஜீவபரமாத்மாக்களுக்கு ப்ரேர்ய ப்ரேரகபாவமும் தோன்றிக்கொண்டிருக்க—'ப்ருதக்' என்னும் பதத்திற்கு ப்ரமகாலத்தில் பின்னனாகத் தோன்றும் என்றும் 'ப்ரேரிதாரம்' என்னும் பதத்திற்கு ப்ரேரகனென்று தோன்றும் என்றும் நீங்கள் அர்த்தம் சொல்லுவது எப்படி யுக்தமாகும்?

* நனு. 'ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்ட: தத: தேனாம்ருதத்வமேதி' இதி பேதஞானஸ்ய மோக்ஷஹேதுத்வ ஶ்ரவணாத் கதம் ந ஸப்ரபஞ்சதா புருஷார்த்த இதி சேன்ன; மதே: பூர்வம் மமாபி ப்ரேரக ப்ருதக்த்வத்ருஷ்டே: (அத்வைதஸித்தி । ஆகமபாதோத்தார:)

பி. வா:—(பதில் இல்லை).

பி. வா. வ:—ஶாஸ்திரிகளே! அத்வைத ஸித்தியிலிருக்கும் * இவ்வாக்யத்திற்கு அபிப்ராயமென்ன?

பி. வா:—நிர்குணப்ரஹ்மஞானமே மோக்ஷ ஸாதனமாயினும், ஸர்வஜ்ஞத்வாதி குணயுக்தமான ப்ரஹ்மஞானம் எப்படி பாம்பரையாக மோக்ஷஸாதனமோ, அப்படியே, பேதஞானம் ப்ரேரகத்வஞானம் பரம்பரையாய் மோக்ஷஸாதனமாகிறதென்னும் அபிப்ராயத்தோடு 'ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம்' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களின் பேதஞானம் மோக்ஷ ஜனகமென்று சொல்லுகிறதென்றே அபிப்ராயம்.

வா. வ:—ஶாஸ்திரிகளே! பேதஞானம் மோக்ஷத்திற்குக் காரணமென்று இந்த வாக்யம் சொல்லுகிறதென்பது உங்களுக்கு ஸம்மதம். பேதஞானம் பரம்பரையாய் மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லும் பதம் இந்த வாக்யத்தில் இல்லை. உங்கள் அத்வைத மதப்ரகாரம் பொய்யான பேதஞானம் பரம்பரையாகவாவது மோக்ஷத்திற்குக் காரணமாகிறதென்பது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதில் இல்லை).

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மகாப்ரபோ! 'ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம் ச மத்வா' என்னும் வாக்யம் மனிதன், ப்ருதக் = ஜீவ ஜடாத்மக ப்ரபஞ்சத்தைவிட பின்னனான, ப்ரேரிதாரம் = ஸகல ஜகத்திற்கும் ப்ரேரகனான, ஆத்மானம் = பரமாத்மாவைத் தெரிந்து கொண்டு, அந்த பேத ஞானத்தினால் முக்தனாகிறானென்று சொல்லியிருக்கிறபடியால், ஜீவபரமாத்மாக்களின் பேதம் ஸத்யமானதென்று ஸித்திக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் குறித்துக்கொள்ள வேண்டும்.

---

* ஸகுணப்ரஹ்மஞானவத் ப்ரேரகத்வேன ப்ரஹ்மஞானஸ்யாபி பாரம்பர்யா உபகாரகத்வாத். (அத்வைதஸித்தி).

## பிரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம்' என்னும் ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெறிவிப்பதைப்போல் தோன்றினும், அஞ்ஞான காலத்தில்,ப்ருதக் = பின்னனாய்த் தோன்றும்,ப்ரேரிதாரம் = அந்த அஞ்ஞான காலத்தில் ப்ரேரகனென்று தோன்றும், ஆத்மானம் = பரமாத்மாவைத் தெரிந்துகொண்டு என்று அர்த்தம் செய்வதினால், ஜீவன் பரமாத்மாவினால் பின்னனென்றும், ப்ரேர்யனென்றும் ஸித்திப்பதில்லை. மற்றும் ஜீவனால் பின்னனாயும் ப்ரேரகனாயுமிருக்கும் பரமாத்மாவைத் தெரிந்துகொண்டு என்று அர்த்தம் செய்துக்கொண்டபோதிலும் — எப்படி ஸர்வஜ்ஞத்வாதி குணவிஶிஷ்டனான பரமாத்மாவின் ஞானம் பரம்பரையாக மோக்ஷத்திற்கு ஸாதனமோ, அப்படியே ஜீவபரமாத்மாக்களிட பேத ஞானம், ப்ரேர்ய ப்ரேரகபாவ ஞானம் இவைகள் பரம்பரையாக மோக்ஷஸாதனமென்று நாங்கள் சொல்லுகிறபடியால் இவ்வாக்யத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்திப்பதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ப்ருதகாத்மானம்' என்னும் வாக்யத்திற்கு விஶதமாக 'ஆத்மானம் ப்ருதக் ப்ரேரிதாரம் ச மத்வா' பரமாத்மாவை பின்னனென்றும், ப்ரேரகனென்றும் தெரிந்துகொண்டு ஜீவன் மோக்ஷத்தை அடைகிறானென்று பேத ஞானத்திற்கு ஸாக்ஷத்காரணத்வம் தோன்றிக்கொண்டிருக்க—பேதஞானம், ப்ரேரகத்வஞானம், பரம்பரையாய் காரணமென்று சொல்வதற்காகிலும், 'ப்ருதக்' என்னும் பதத்திற்கு அஞ்ஞானகாலத்தில் பின்னனென்று தெரிந்துகொண்டால் என்றும், 'ப்ரேரிதாரம்' என்னும் பதத்திற்கு ப்ரேரகன் என்று தெரிந்துகொண்டால், என்றும் அர்த்தம் செய்வதற்காகிலும், யாதொரு ஆதாரமில்லாததினால் இந்த ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு 'ப்ருதக்' என்னும் பதத்தினால் பேதத்தையும், 'ப்ரேரிதாரம்' என்னும் பதத்தினால் ப்ரேர்ய ப்ரேரக பாவத்தையும் சொல்லி,

பேதத்தை அறிவித்துக்கொண்டே, அந்த பேதஞானத்திற்கு மோக்ஷ ஜனகத்வத்தைச் சொல்லிக்கொண்டே, பேதத்திற்கு ஸத்யத்வத்தையும் அறிவிக்கிறது. இவ்விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேம்.

வா. எ. 21.

## பீஷாஸ்மாத்வாத: பவதே என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—'பீஷாஸ்மாத்வாத: பவதே பீஷோதேதி ஸூர்ய:। பீஷாஸ்மாதக்னிஶ்சேந்த்ரஶ்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம: ॥' (தை. 2-8) என்னும் ஶ்ருதி என்ன சொல்லுகிறது?

வாதி:—வாயு இந்த பரமாத்மாவின் பயத்தால், பவதே = ஶோத்தி செய்கிறுன். ஸூர்யன் அவனிட பயத்தால் உதயமடைகிறுன். அக்கினி, இந்த்ரன், யமன் இவர்கள் பரமாத்மாவின் பயத்தால் தங்கள் தங்களிட வ்யாபாரங்களை செய்கிறுர்களென்று சொல்லிக் கொண்டே, ப்ரஶாஸ்த்ரு ப்ரஶாஸக பாவத்திஞல் இந்த்ராதி தேவதைகளுக்கு பரமாத்மாவிஞல் பேதத்தை அறிவிக்கிறது.

வா. வ:—ஶாஸ்திரிகளே! ஶங்கராசார்யார் இந்த வாக்யத்திற்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறுர்?

பி. வா:—* 'வாதாதய:' என்னும் வாக்யத்திஞல் வாயு, இந்த்ரன் முதலான தேவதைகள் ஸ்வயம் ஸமர்த்தராயிருந்தபோதிலும், வெகு ஆயாஸத்தோடு கூடிய (பஹுஶ்ரம ஸாத்யமான) பவன (ஶோத்தி) முதலான கார்யத்தில் ராஜாவின் கட்டளையிஞல் ஸேவகர்கள் கார்யத்தில் ப்ரவ்ருத்தராவதுபோல், நியமமாக ப்ரவ்ருத்தராவார்கள். இப்பேர்ப்பட்ட ப்ரவ்ருத்தி தனக்குமேல் ஒரு நியாமகஞை(ப்ரஶாஸகஞை = ஶிக்ஷிக்கும்)பின்னஞை யஜமானன்

* வாதாதயோ ஹி மஹார்ஹா: ஸ்வயமீஶ்வரா: ஸந்த: பவஞதி கார்யேஷ்வாயாஸ பஹுலேஷு நியதா: ப்ரவர்தந்தே, தத்யுக்தம் ப்ரஶாஸ்தரி ஸத்யன்யஸ்மின்னியமேன தேஷாம் ப்ரவர்த்தனம் தஸ்மாதஸ்தி பயகாரணம் தேஷாம் ப்ரஶாஸ்த்ரு ப்ராஹ்ம। யதஸ்தே ப்ருத்யா இவ ராஜ்ஞோஸ்மாத் ப்ராஹ்மணோ பயேன ப்ரவர்தந்தே தச்ச பயகாரணமானந்தம் ப்ரஹ்ம. (தை. ஶாம். பா. 2-8).

இருந்தால்தான் பொருந்துகிறபடியால் இவர்களுக்கு நியாமகனுய் எவன் உண்டோ, அவனே பயகாரணனுன பரமாத்மாவென்று அர்த்தம் செய்திருக்கிறுர்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இவ்வாக்யத்திஞல் ப்ரஶாஸ்ய ப்ரஶாஸக பாவத்திஞல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—ப்ரஶாஸ்ய ப்ரஶாஸக பாவத்திஞல் பேதம் ஸித்தமாகிறது. ஆயினும்—

வா. வ:—ஆயினும் என்ன? பேதம் ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—அந்த பேதம் பாரமார்த்திகமல்ல (ஸத்யமானதல்ல) என்று அபிப்ராயம்.

வா. வ:—அந்த பேதம் ஸத்யமானதோ, மித்யையானதோ, அந்த விஷயத்தைக் கோர்ட்டார் நிர்ணயிப்பார். அதை நீர் சொல்வது ஆவஶ்யகமில்லை. இந்த ஶ்ருதி பேதத்தைச் சொல்லுகிறதல்லவா?

பி. வா:—பேதத்தைச் சொல்லுகிறது.

வா. எ. 22.

## அஜோஹ்யேக: என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—'அஜாமேகாம் லோஹிதஶுக்லக்ருஷ்ணும் பஹ்வீ: ப்ரஜா: ஸ்ருஜமாநு: ஸரூபா: । அஜோ ஹ்யேகோ ஜுஷமாணேணுஶேதே ஜஹாத்யேஞம் புக்தபோகாமஜோன்ய:" (ஶ்வேதாஶ்வதரம் 4-5) என்னும் ஶ்ருதியை நீர் ஏன் உதஹரித்தீர்?

வாதி:—ஜீவப்ரஹ்ம பேதவிஷயத்தில் ஆதாரமாக உதஹரித்திருக்கிறேம்.

வா. வ:—அதற்கு அர்த்தமென்ன? அதிஞல் பேதம் எப்படி ஸித்திக்கிறது?

**வாதி:**—அஜ: = உற்பத்திரஹிதனான ஒரு ஜீவன், ஸத்வரஜஸ் தமோகுணாத்மகமான, அநேக ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்கும் ப்ரக்ருதியை அனுபவித்துக்கொண்டே யிருக்கிறான். வேறொரு ஜீவன் புக்தபோகமான (அனுபவித்தான) ப்ரக்ருதியை விட்டவனாய் இருக்கிறானென்று ஜீவஜீவர்களுக்கு பேதத்தைச் சொல்லிக் கொண்டே அநேகரான (பரஸ்பர பின்னரான) ஜீவரால் ஒருவனான பரமாத்மாவுக்கு பேதத்தைத் தெறிவிக்கிறது.

**வா. வ:**—ஶாஸ்த்ரிகளே! இந்த வாக்ய விஷயமாக ஶங்கராசார்யார் ஸூத்ரபாஷ்யத்தில் என்ன சொல்லியிருக்கிறார்?

**பி. வா:**—1-4-10-வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் *இதரர்களுக்கு (த்வைதிகளுக்கு) இஷ்டமான க்ஷேத்ரஜ்ஞ பேதம் இவ் வாக்யத்தினால் தோன்றுகிறதென்று சொல்லியிருக்கிறார்.

**வா. வ:**—ஶாஸ்த்ரிகளே! இவ்வாக்யத்தினால். சொல்லப்படும் பேதத்தை வைதிகர்கள் ஒப்புக்கொள்ளவேண்டுமல்லவா?

**பி. வா:**—இந்த வாக்யத்தினால் பேதம் சொல்லப்பட்ட போதிலும்—அபேதத்தைச் சொல்லும் ஶ்ருதிக்கு விருத்தமாகிற படியால் அந்த பேதம் மித்யா (பொய்) என்று † 'ந ஹீயம் க்ஷேத்ரஜ்ஞ பேத' என்னும் வாக்யத்தினால் ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார். ஆகையால் அந்த பேதம் அங்கீகரிப்பதற்கு அர்ஹமல்ல.

**வா. வ:**—ஶங்கராசார்யர் சொல்வது அப்படியிருக்கட்டும். இந்த ஶ்ருதி ஜீவஜீவர்களுக்கு பேதத்தை அறிவிக்கிறதல்லவா?

**பி. வா:**—பேதத்தை அறிவிக்கிறது.

* சேதமாஶங்கிதவ்யம்மக: க்ஷேத்ரஜ்ஞானுமேஷ அன்யோ ஜஹாதீத்யத: க்ஷேத்ரஜ்ஞ பேத: பாரமார்த்திக: பரேஷாமிஷ்ட: ப்ராப்னோதீதி. (ப்ர. ஸூ. பா. 1-4-10).

† ந ஹீயம க்ஷேத்ரஜ்ஞபேதப்ரதிபிபாதயிஷா, கிந்து பந்த மோக்ஷவ்யவஸ்தா ப்ரதிபிபாதயிஷா த்வேஷா ப்ரஸித்தந்து பேதமனூத்ய பந்த மோக்ஷவ்யவஸ்தா ப்ரதிபாத்யதே பேதஸ்து யாதி நயத்தோ மித்யாஜ்ஞான கல்பிதோ ந பாரமார்திக: 'ஏகோ தேவஸ்ஸர்வபூதேஷு கூட: ஸர்வவ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா' இத்யாதி ஶ்ருதிப்ய: (ப்ர. ஸூ. பா. 1-4-10.)

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. எ. 21:—'பீஷாஸ்மாத் வாத: பவதே பீஷோதேதி ஸூர்ய: பீஷாஸ்மாதக்னிஶ்சேந்த்ரஶ்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம:' (தை. 2-8) என்னும் ஶ்ருதி ப்ரஶாஸ்ய ப்ரஶாஸக பாவத்தினல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறது. ஶங்கராசார்யரும் அப்படியே ஒத்துக்கொண்டிருக்கிறார்.

வா. எ. 22:—அஜாமேகாம் லோஹிதஶுக்லக்ருஷ்ணும் பஹ்வீ: ப்ரஜா: ஸ்ருஜமாணு: ஸரூபா: । அஜோ ஹ்யேகோ ஜுஷமாணோனுஶேதே ஜஹாத்யேனும் புக்தபோகாமஜோன்ய:' என்னும் ஶ்ருதி ஜீவர்களில் பரஸ்பர பேதத்தைச் சொல்லிக் கொண்டே, அநேகரான ஜீவர்களோடு ஒருவனுன பரமாத்மாவுக்கு பேதத்தை அறிவிக்கிறது.

ஶங்கராசார்யரும் தம்மிட ஸூத்ரபாஷ்யத்தில் இந்த ஶ்ருதி ஜீவர்களில் பரஸ்பரபேதத்தைச் சொல்லுகிறதென்று ஒத்துக் கொண்டிருக்கிறார்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—மஹாப்ரபோ! வாதி எக்ஸிபிட்ஸ் 21-22 ஜீவபரமாத்மாக்களுக்கு ப்ரஶாஸ்ய ப்ரஶாஸக பாவத்தினுலும், பஹுத்வ ஏகத்வ தர்மங்களினுலும், ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று வாதி சொல்லுகிறார். எங்கள் ஆசார்யரும் அப்படியே ஒத்துக்கொண்டிருக்கிறார். ஆயினும்—'தத்வமஸி' முதலிய வாக்யங்களுக்கு விரோதம் வருகிறபடியால் இந்த ஶ்ருதிகளால் தெரிவிக்கப்படும் பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) பாரமார்த்திகமல்லவென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் குறித்துக் கொள்ளவேண்டும்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—மஹாப்ரபோ! 'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் அபேதத்தைச் சொல்லாமற்போயினும், இவ்வாக்யத்திற்கு அவைகளால் விரோதம் வருகிறதென்பது அஸங்கதம். வ்யாவஹாரிகமென்று சொல்வது ஸ்வவ்யாஹதமாகிறது என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

வா. எ. 23.

## ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்த: என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! 'தத்யதா ப்ரியயா ஸ்த்ரியா ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் கிஞ்சன வேத நாந்தரமேவமேவாயம் புருஷ: ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் கிஞ்சன வேத நாந்தரமேவ' (ப்ரு. 4-3-21) என்னும் ஶ்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை எப்படிச் சொல்லுகிறது?

வாதி:—காமுகனான புருஷன் ப்ரியளான ஸ்த்ரீயால் ஆலிங்கனம் செய்துகொள்ளப்பட்டவனாய் வெளி பதார்த்தங்களையும், உள்பதார்த்தங்களையும், எப்படித் தெரிந்துகொள்ள மாட்டானோ, அப்படியே ஸுஷுப்தனான புருஷன் (நித்ரிக்கும் மனிதன்) * ஸுஷுப்தி காலத்தில் ப்ராஜ்ஞநாமக பரமாத்மாவினால் ஆலிங்கனம் செய்துகொள்ளப்பட்டவனாய் பாஹ்ய பதார்த்தங்களையும், அந்தர பதார்த்தங்களையும் தெரிந்துகொள்வதில்லை என்று, ஜீவபரமாத்மாக்களுக்கு ஸம்பந்தத்தைச் சொல்லிக்கொண்டே, ஜீவனுக்கும் பரமாத்மாயுக்கும் பேதத்தைச் சொல்லுகிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! உங்கள் ஶங்கராசார்யார் 1-3-42வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் இந்த ஶ்ருதிக்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

ஶி. வா:—'ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்த:' என்னும் ஶ்ருதி ஸுஷுப்தி காலத்தில் ஜீவனால் பரமாத்மாவுக்கு பேதம் சொல்லுகிறதென்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—இந்த வாக்யத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதா? இல்லையா?

---

* ஸுஷுப்தெள உத்க்ராந்தெள ச ஶாரீராத்பேதேன பரமேஶ்வரஸ்ய வ்யபதேஶாத ஸுஷுப்தெள தாவத் அயம் புருஷ: ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் கிஞ்சன வேத நாந்தரம் (ப்ரு. 4-3-21) இதி ஶாரீராத்பேதேன பரமேஶ்வரம் வ்யபதிஶதி । (ப்ர. ஸூ. ஶாம். பா. 1-3-42)

பி. வா:—இந்த வாக்யத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறது.

பி. வா. வ:—மாஸ்த்ரிகளே! 'ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்த:' என்னும் வாக்யத்திற்கு மங்கராசார்யர் இந்த உபநிஷத் பாஷ்யத்தில் என்ன அர்த்தம் செய்திருக்கிறார் நீங்களறிவீரா?

பி. வா:—அறிவேன். * புருஷன் ப்ரியளான ஸ்த்ரீயால் ஸம்பரிஷ்வக்தனாய் (ஆலிங்கிக்கப்பட்டவனாய்) ஏகீபூதனாய், பாஹ்ய வஸ்துக்களையாகட்டும், அந்தர வஸ்துக்களையாகட்டும் எப்படித் தெரிந்துகொள்வதில்லையோ, அப்படியே, ப்ராஜ்ஞ நாமக பரமாத்மாவினால் ஸுஷுப்தி (நித்ரை) காலத்தில், ஸம்பரிஷ்வக்த: = ஏகீபூதனாய் (ஒன்றாய்) ஜீவன் பாஹ்ய வஸ்துக்களையாகட்டும், அந்தர வஸ்துக்களையாகட்டும் தெரிந்துகொள்வதில்லை என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

பி. வா. வ:—இவ்வாக்யத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதா? அல்லது அபேதம் ஸித்தமாகிறதா?

பி. வா:—இவ்வாக்யத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதம் (ஐக்யம்) ஸித்தமாகிறது.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! இந்த ஶ்ருதிக்கு மங்கராசார்யார் செய்த அர்த்தம் கோர்ட்டில் விசாரிப்பதற்குக் கூட மிகவும் அஸஹ்யமாயிருக்கிறது. விசாரிக்காமலிருப்பதற்கு ஸாத்யமில்லாதபடியால் அதை விசாரிப்பதற்குக் கோர்ட்டார் உத்திரவளிக்கவேண்டுமாய்க் கோருகிறோம்.

---

* ஶ்ருண்வத்ராஜ்ஞான ஹேதும் ஏகத்வமேவாஜ்ஞானஹேது: தத் கதமிதி உச்யதே த்ருஷ்டாந்தேன ஹி ப்ரத்யக்ஷீ பவதி விவக்ஷிதோர்த்த இத்யாஹ—'தத்' தத்ர யதா லோகே 'ப்ரியயா' இஷ்டயா ஸ்த்ரியா ஸம் பரிஷ்வக்த: ஸம்யக் பரிஷ்வக்த: காமயந்த்யா காமுக: ஸன் ந பாஹ்யமாத் மன: கிஞ்சன கிஞ்சிதபி வேத மத்தோன்யத்வஸ்த்விதி ந சாந்தரமயமஹ மஸ்மி ஸுகீ து:கீ வேதி அபரிஷ்வக்தஸ்து தயா ப்ரவிபக்தோ ஜானாதி ஸர்வமேவ பாஹ்யமாப்யந்தரம் ச பரிஷ்வங்கோத்தரகாலம் த்வேகத்வா பத் தேர் ந ஜானாதி.........பரேண ஆத்மனா ஸம்பரிஷ்வக்த:.........ஏகீபூத: நிரந்தர: ந பாஹ்யம் கிஞ்சன வஸ்த்வந்தரம் நாப்யாந்தரமாத்மன்யயமஹ மஸ்மி.........ஸுகீ து:கீ சேதி வேத। (ப்ரு. பா. 4-3-21.)

கோர்ட்:—Yes, கோர்ட்டுக்கு வந்தபிறகு விசாரம் செய்யத்தான் வேண்டும். விசாரமாகட்டும்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! காமுகபுருஷன் காமினீஸ்த்ரீயோடு ரதிகாலத்தில் ஸம்பத்தனாகிறானா அல்லது ஒன்றேயாகிறானா? (ஐக்யத்தை யடைகிறானா)?

பி. வா:—ரதிகாலத்தில் ஸ்த்ரீயால் எப்படி ஒன்றேயாவான்? வேறுபட்டேயிருக்கிறான்.

வா. வ:—ஶங்கராசார்யார் 'அபரிஷ்வக்தஸ்து தயா ப்ரவிபக்தோ ஜானாதி பரிஷ்வங்கோத்தரகாலம் த்வேகத்வாபத்தே: ந ஜானாதி' ப்ரியளான ஸ்த்ரீயால் புருஷன் ஏகத்வத்தை யடைகிறானென்று சொன்னது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! புருஷன் ஸ்த்ரீயுடன் ஒன்றாகிறானென்று சொல்வது பொருந்தாமலிருக்க, புருஷன் ஸ்த்ரீயுடன் ஐக்யமாவதுபோல் (ஒன்றாவதைப்போல்) ஜீவன் ப்ராஜ்ஞநாமக பரமாத்மாவுடன் ஸுஷுப்தி காலத்தில் ஒன்றாகிறானென்று சொன்னது எப்படிப் பொருந்தும்? உங்கள் மதத்தின்படிக்கு—அந்த: கரணாவச்சின்ன சைதன்யனான ஜீவன் ஶுத்தமான பரப்ரஹ்மத்தோடு ஐக்யத்தை யடைவது எப்படி? ப்ரஹ்மாத்மைக்ய ஜ்ஞானமில்லாமலே ஸுஷுப்தி காலத்தில் பரமாத்மாவுடன் ஐக்யமானால், ஜ்ஞானத்திற்காக ஶ்ரவண, மனன, த்யானாதிகளை ஜனங்கள் ஏன் செய்யவேண்டும்? ஸுஷுப்தி காலத்தில் பரமாத்மாவுடன் ஐக்யமான பிறகு, பரமாத்மாவிடமிருந்து வேறாவது எப்படிப் பொருந்தும்? ஐக்யமானபிறகு வேறேவருவதாயிருந்தால், அபரோக்ஷ ஜ்ஞானத்தால் ஐக்யமானபிறகு பின்னும் வேறாகலாமல்லவா? இந்த ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் என்ன?

பி. வா:—'மித்யாவாதவிசார சிந்தனமஹோ குர்வந்த்ய த்ருஷ்டாத்மகா ப்ராந்தா ஏவ ந பாரகா த்ருடதியஸ்தூஷ்ணீம் ஶிலாவத் ஸ்திதா:' என்று எங்கள் ஶங்கராசார்யார் சொல்லியிருப்பதுபோல் ஜ்ஞானிகளான நாங்கள் உங்களோடு மித்யா விசாரத்தைச் செய்வதில்லை.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்

'யதா ப்ரியயா ஸ்த்ரியா ஸம்பரிஷ்வக்த:... .... ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்த:' என்னும் வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ப்ராப்த்ரு ப்ராப்ய பாவத்தால் பேதத்தை அறிவிக்கிறது. இவ்விஷயத்தை ஶங்கராசார்யார் ஒத்துக்கொண்டிருக்கிறார். ஆகையால் இந்த ஶ்ருதியால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேணுமாய்க் கோருகிறோம்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

ப்ரி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'யதா ப்ரியயா ஸ்த்ரியா ஸம்பரிஷ்வக்த: ந பாஹ்யம் கிஞ்சன வேத நாந்தரமேவமேவாயம் புருஷ: ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்த:' என்னும் வாக்யம், காமுக புருஷன் காமினீ ஸ்த்ரீயால் ரதிகாலத்தில் எப்படி ஏகீபூதனாகிறானோ (ஒன்றாகிறானோ), அப்படியே ஸுஷுப்தி காலத்தில் ஜீவன் பரமாத்மாவோடு ஒன்றாகிறானென்று ஶங்கராசார்யார் உபநிஷத் பாஷ்யத்தில் வ்யாக்யானம் செய்திருக்கிறார். மற்றும்—1-3-42-வது ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யத்தில் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று வ்யாக்யானம் செய்திருக்கிறார். ஆயினும்—அது ஐக்யத்தைச் சொல்லும் 'தத்வமஸி' முதலிய வாக்யங்களுக்கு விருத்தமாகிறபடியால் அந்த பேதம் வ்யாவஹாரிகமென்று சொல்லவேண்டும். ஆகையால் இந்த ஶ்ருதி ஐக்யத்தையே சொல்லுகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் குறித்துக்கொள்ளவேண்டும்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் முக்ய வ்ருத்தியினாலும், லக்ஷணையினாலும், ஸகண்டார்த்தமாக வைத்துக்கொண்டபோதிலும், அகண்டார்த்தமாக வைத்துக்கொண்டபோதிலும், எந்த விதத்திலும் ஜீவபரமாத்மாக்களின் ஐக்யத்தைப் போதிக்கமாட்டாதென்னும் விஷ

பத்தை முன்னமே விண்ணப்பித்துக்கொண்டிருக்கிறோம். வ்யாவஹாரிகத்தைச் சொல்லும் பௌத்தர்களை ப்ரதிவாதிகள் கண்டித்திருப்பதினால், ப்ரதிவாதிகள் அடிக்கடி வ்யாவஹாரிகமென்று சொல்வது ஸரியல்ல. தவிர அப்படி சொல்லக்கூடாதென்று கோர்ட்டாரால் உத்திரவும் ஆயிருக்கிறது. காமுக புருஷன் காமினீ ஸ்த்ரீயால் ரதிகாலத்தில் ஐக்ய பாவத்தை யடைகிறானென்று (ஒன்றாகிறானென்று) சொல்வது அனுபவவிருத்தமானபடியால் மிகவும் ஹாஸ்யாஸ்பதமாயிருக்கிறது. ஆகையால் இந்த வாக்யம் ஐக்யத்தைப் போதிக்காதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேணுமாய்க் கோருகிறோம்.

---

வா. எ. 24.

## நித்யோ நித்யானும் என்னும் ஶ்ருதி விசாரணை.

## வாதி விசாரணை.

*வா. வ:*—ஆசார்யரே! 'நித்யோ நித்யானாம் சேதனஶ்சேதனானாம் ஏகோ பஹூனாம் யோ விததாதி காமான்' (ஶ்வே. 6-13 கட. 2-5-13) 'ஏகோ வஶீ ஸர்வபூதாந்தராத்மா ஏகம் ரூபம் பஹுதா ய: கரோதி। தமாத்மஸ்தம் யேனுபஶ்யந்தி தீராஸ்தேஷாம் ஸுகம் ஶாஶ்வதம் நேதரேஷாம்' (கட. 2-5-12) என்னும் வாக்யங்களை எந்த விஷயத்தில் உதஹரித்திருக்கிறீர்?

*வாதி:*—ஜீவப்ரஹ்மாக்களின் பேத விஷயத்தில் உதஹரித்திருக்கிறோம்.

*வா. வ:*—இதின் அபிப்ராயமென்ன? இதனால் பேதம் எப்படி ஸித்திக்கிறது?

*வாதி:*—பரமாத்மா நித்யபதார்த்தங்களுக்கு நித்யத்வத்தைக் கொடுப்பவன், சதுர்முகாதி சேதனர்களுக்கு சேதனத்வத்தையும் ஞானத்தையும் கொடுப்பவன் ஒருவனே. அநேக ஜனங்களுக்கு அவரவரால் அபேக்ஷிக்கப்படும் பதார்த்தங்களை ஶ்ருஷ்டிப்பவன், என்று ப்ரஹ்மாதிகளுக்கு (சதுர்முகாதிகளுக்கு) சைதன்யப்ரதத்வம், மற்றும் அவர்களால் அபேக்ஷிக்கப்படும் பதார்த்தங்களின் ஶ்ருஷ்டிகர்த்ருத்வம், இவைகளைச் சொல்லியிருக்கிறபடி

யால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறது. மற்றும் 'ஏகோவஶீ......தமாத்மஸ்தம் யேனுபஶ்யந்தி தீராஸ்தேஷாம் ஸுகம் ஶாஶ்வதம் நேதரேஷாம்' என்னும் மந்த்ரம் 'ய ஆத்மனி திஷ்டன்' என்னும் மந்த்ரத்தில் சொல்லியிருப்பதைப்போல் ஜீவனிடத்தில் நியாமகனுயிருக்கும், வஶீ = ஸகல ஜகத்துக்கு ஸ்வாமியான பரமாத்மாவை யார், அனுபஶ்யந்தி = காணுகிறார்களோ அவர்களுக்கு ஶாஶ்வதமான ஸுகமுண்டாகிறது. இதரேஷாம் = யார் பரமாத்மாவை ஜகத்திற்கு ஸ்வாமி என்றும், தனக்கு அந்தர்யாமி என்றும் தெரியாமல், அதற்கு விருத்தமாகத் தெரிந்துகொள்ளுகிறார்களோ (நானே ப்ரஹ்மம், ப்ரஹ்மம் நிர்குணம் என்று தெரிந்துகொள்கிறார்களோ) அவர்களுக்கு ஸுகம் உண்டாகாது. நஸுகம் = து:கமே உண்டாகிறது என்று அர்த்தமாகிறபடியால் இந்த ஶ்ருதி ஜ்ஞாத்ருஜ்ஞேயாதி பாவத்தினுல் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தையே சொல்லுகிறது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

பி. வா. வ:—ஆசார்யரே! 'நித்யோ நித்யானும்' என்னும் வாக்யத்திற்கு நித்ய பதார்த்தங்களுக்கு நித்யத்வத்தைக் கொடுக்கிறவனென்றும், 'சேதனுஞ் சேதனை:' என்னும் வாக்யத்திற்கு ப்ரஹ்மாதிகளுக்கு சைதன்யத்தைக் கொடுக்கிறவனென்றும் நீங்கள் எப்படி அர்த்தம் செய்கிறீர்கள்?

வாதி:—'சக்ஷுஷஶ்சக்ஷு:' என்னும் வாக்கியத்திற்கு 'சக்ஷுஷ: சக்ஷுஷ்ட்வப்ரத:' சக்ஷுஸ்ஸுக்கு தர்ஶனஶக்தியைக் கொடுக்கிறவனென்று, ஶங்கராசார்யார் எப்படி அர்த்தம் செய்திருக்கிறரோ, அப்படியே, சேதன: = சைதன்யப்ரத: என்று அர்த்தம் செய்திருக்கிறேம்.

பி. வா. வ:—'இதரேஷாம்' என்னும் பதத்திற்கு 'நான் ப்ரஹ்மம்' 'ப்ரஹ்மம் நிர்குணம்' என்று தெரிந்துகொண்டவர் என்னும் அர்த்தங்களை எப்படிச் செய்தீர்? அதற்கு ஆதாரமென்ன?

வாதி:—பரமாத்மா, வஶீ = ஸர்வஸ்வாமீ, ஸர்வபூதாந்தராத்மா = ஸர்வபூதங்களில் நியாமகனுயிருப்பவன், புருஷால்

இச்சிக்கப்பட்ட பதார்த்தங்களை ஸ்ருஷ்டிக்கிறவன், தனக்குள்ளிருக்கிறவன் என்று யார் தெரிகிறுரோ அவருக்கு ஸுகமென்று சொல்லி, 'இதரேஷாம்' என்று சொல்லியிருக்கிறபடியால், மேற்சொன்ன விதமாக தெரிந்துகொள்ளாதிருப்பவருக்கும், இதற்கு விருத்தமாக தெரிந்துகொள்ளுபவருக்கும் என்று அர்த்தமாகிறபடியால் 'இதரேஷாம்' என்னும் பதத்திற்கு நானே ப்ரஹ்மமென்றும், ப்ரஹ்மம் நிர்குணமென்றும் தெரிந்துகொண்டவர் என்று அர்த்தம் செய்திருக்கிறேம்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'நித்யோ நித்யானும்' 'ஏகோவபரீ ஸர்வபூதாந்தராத்மா' என்னும் வாக்யங்கள் ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவத்தினல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டும்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கின்றன. இவ்வாக்யம் பேதத்தைச் சொல்லுகிறதென்று சொன்னல் அவ்வாக்யத்திற்கு விரோதம் வருவதினல் இந்த வாக்யங்களினல் தோன்றும் பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) என்று சொல்லவேண்டும். ஆகையால் இவ்வாக்யங்கள் பாரமார்த்திக பேதம் உண்டென்னும் விஷயத்தில் ஆதாரமாவதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டாருக்குத் தெரிவித்துக்கொண்டிருக்கிறேம்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை ப்ரதிபாதிக்கிறது. அதற்கு எந்த பாதகமும் இல்லை. ஆகையால் வேத வாக்யத்தால் ஸித்தமாகும் பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) என்று ப்ரதிவாதி சொல்லக்கூடாதென்னும் விஷயத்தைப் பலதடவை

விண்ணப்பித்துக்கொண்டிருக்கிறோம். மறுபடியும் ப்ரதிவாதிகளப்படிச் சொல்வது ஸரியல்லவென்னும் விஷயத்தை விண்ணப்பித்துக்கொள்ளுகிறோம்.

வா. எ. 25.

## ஜ்ஞா ஜ்ஞௌ என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—'ஜ்ஞா ஜ்ஞௌ த்வா வஜாவீஶாநீஶௌ' (ஶ்வே. 1-9) என்னும் ஶ்ருதிக்கு அர்த்தமென்ன? அதினால் என்ன ஸித்தமாகிறது?

வாதி:—ஜ்ஞ: = ஸர்வஜ்ஞனான பரமாத்மா, அஜ்ஞ: = அஜ்ஞனான ஜீவன், இவரிருவரும், அஜௌ = ஸ்வரூபத: உத்பத்தி இல்லாதவர்கள், ஈஶாநீஶௌ = பரமாத்மா ஈஶன் (ஸ்வாமி) ஸர்வஜ்ஞன், ஜீவன் அனீஶன் (ஸ்வாமியல்லாதவன்) அல்பஜ்ஞன். ஆகையால், த்வௌ = பின்னர்கள் என்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஸ்வாமித்வ ஸ்வாமித்வா பாவத்தினாலும், ஸர்வஜ்ஞத்வ அல்பஜ்ஞத்வத்தினாலும், மற்றும் 'த்வௌ' என்னும் பதத்தினாலும் பேதம் ஸித்தமாகிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! 'த்வௌ' என்னும் பதத்திற்கு இருவரென்னும் அர்த்தமிருக்க — பின்னர்களென்னும் அர்த்தத்தை எப்படிச் சொல்லுகிறீர்?

வாதி:—'த்விஶப்தோ த்வித்வஸங்க்யாயாம் பேதே சாபி ப்ரயுஜ்யதே' என்று த்விஶப்தத்திற்கு பேதரூப அர்த்தமுண்டென்று சொல்லியிருக்கிறபடியால், த்வௌ = பின்னரானவர் என்று அர்த்தம் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—'த்வௌ' என்னும் பதத்திற்கு இருவரென்னும் அர்த்தம் ப்ரஸித்தமாயிருக்க—பின்னரென்னும் அர்த்தத்தையே எடுத்துக்கொள்வதற்கு ஆதாரமென்ன?

வாதி:—'ஜ்ஞா ஜ்ஞௌ' என்னும் த்விவசனத்தினாலேயே இருவர் (த்வித்வ ஸங்க்யையுள்ளவர்) என்னும் அர்த்தம் ஸித்தமாய்க்கொண்டிருக்க, மற்றும் 'த்வௌ' என்று சொல்லியது வ்யர்த்தமாகிறது. ஆகையால் 'த்வௌ' என்னும் பதத்திற்கு பின்ன

ரென்றே அர்த்தம் செய்யவேண்டும். 'த்வௌ' என்னும் பதத்திற்கு த்வித்வ ஸங்க்யையுடையவர்களென்கிற அர்த்தத்தை வைத்துக்கொண்டபோதிலும், த்வித்வ ஸங்க்யா பேதவ்யாப்தமாயிருக்கிறபடியால் (பேதமில்லாமல் பொருந்தாததினால்) அந்த பதங்களினால் பேதம் ஸித்தமாகிறது. 'ஈஶாநீஶௌ' என்னும் பதங்களினாலும், ஈஶத்வாநீஶத்வரூப விருத்த தர்மங்களைச் சொல்லியிருக்கிறபடியாலும் பேதம் ஸித்தமாகிறது.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இவ்வாக்யத்தினால் பேதம் ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—பேதம் ஸித்தமாகிறது. ஆயினும், அந்த பேதம் அவித்யா கல்பிதமானது. வாஸ்தவமானதல்ல. வ்யாவஹாரிகம்.

கோர்ட்:—வ்யாவஹாரிகமென்னும் விசாரம் பின்னால் நடந்திருக்கிறது. அடிக்கடி வ்யாவஹாரிகமென்று சொல்லக்கூடாது. வேறேதாவது ஸமாதானம் உண்டா?

பி. வா:—(பதில் இல்லை).

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! ஈஶத்வாநீஶத்வங்கள், ஸர்வஜ்ஞத்வால்பஜ்ஞத்வங்கள் கல்பிதங்களானபடியால் அவைகளால் பாரமார்த்திக பேதம் ஸித்திக்காது. 'த்வௌ' என்னும் பதத்திற்கு பின்னரென்று அர்த்தம் செய்வது க்லிஷ்டமானதாகையால் இந்த வாக்யத்தினால் ஜீவபரமாத்மாக்களுக்கு வ்யாவஹாரிக பேதமே ஸித்தமாகிறது. ஆகையால் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பாரமார்த்திக பேதம் உண்டென்னும் விஷயத்தில் ஆதாரமாகமாட்டாது.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! ஶ்ருதிகளால் ஸித்தமான ஸர்வஜ்ஞத்வாஸர்வஜ்ஞத்வங்களும், ஈஶத்வாநீஶத்வங்களும் கல்பிதங்களென்னும் விஷயத்தில் ஆதாரமில்லாதபடி

யால், அந்த விருத்த தர்மங்கள் ஸத்யமானதுகளே. அவைகளா லும் 'த்வௌ' என்னும் ஶப்தத்தினாலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறது. 'த்வௌ' என்னும் ஶப்தத்திற்கு பின்ன ரென்னும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ளாமல், த்வித்வ ஸங்க்யை யுடையவரென்று (இருவர் என்று) அர்த்தம் சொன்னபோதிலும் த்வித்வ ஸங்க்யா பேத வ்யாப்தமானதினால் பேதம் ஸித்திக்கிறது. ஶ்ருதியினால் ஸித்தமாயிருக்கும் பேதம் பாதகமில்லாமலிருப்பதி னால் பாரமார்த்திகமானதே. ஆகையால் இந்தவாக்யம் ஜீவபரமாத் மாக்களுக்கு பாரமார்த்திக பேதத்தையே சொல்லுகிறது. ஆகை யால் இந்த வாக்யம் ஜீவபரமாத்மாக்களின் பேதவிஷயத்தில் ஆதார மாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

வா. எ. 29; ப்ர. வா. எ. 17.

## அத யோன்யாம் தேவதாமுபாஸ்தே என்னும் ஶ்ருதி விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'அத யோன்யாம் தேவதாமு பாஸ்தே அன்யோஸாவன்யோஹமஸ்மீதி ந ஸ வேத' (ப்ரு. 1-4-10) என்னும் வாக்யத்திற்கு தாத்பர்யமென்ன? அதினால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—எந்தமனிதன் நான் வேறு, இந்த தேவதை வேறு என்று அன்ய தேவதைகளை உபாஸிக்கிறானோ, அவன் அஜ்ஞானி என்று பேதோபாஸனை செய்பவனை நிந்தித்துக்கொண்டே, பேதத்தை நிஷேதிக்கிறபடியால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேத மில்லை என்று ஸித்தமாய் அவருக்கு ஐக்யம் ஸித்தமாகிறது.

### க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இவ்வாக்யத்திற்கு ஶங்கராசார்யர் தம்முடைய உபநிஷத்பாஷ்யத்தில் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—* 'அத ய: கஶ்சித்' இது முதலிய வாக்யங்களால்—ப்ரஹ்மஜ்ஞானமில்லாத எந்தமனிதன் ஆத்மாவைவிட (பரமாத்மாவைவிட) பின்னரான இந்த்ராதி தேவதைகளை, ஆத்மாவைவிட பின்னரான இந்த்ராதி தேவதைகள் எங்களுக்கு ஸாவகாரரைப் போல் (கடன் கொடுத்திருப்பவனைப்போல்) யஜமானர்கள், பின்னுனை நான் அந்த தேவதைகளுக்கு கடன்காரனைப்போல் ப்ரத்யுபகாரம் செய்யவேண்டியதென்று தெரிந்துகொண்டு 'உப' உபகம்ய=ஸ்துதி நமஸ்கார யாகபல்யுபஹார ப்ரணிதான த்யானுதிகளால் குணபாவத்தை யடைந்து (தாஸபாவத்தை யடைந்து) ஆஸ்தே=இருக்கிறானோ அவன் அஜ்ஞானி என்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார்.

வா. வ:—4-12-வது கீதா ஶ்லோகத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—† 'யதி தவேஶ்வரஸ்ய' இது முதலிய வாக்யங்களால் ஈஶ்வரனை உனக்கு ராகாதிதோஷங்களில்லாமையால், ஸர்வப்ராணிகளிடத்தில் ஸமமாய் அனுக்கிரஹம் செய்யவேணுமென்னும் இச்சையும் பலனைக்கொடுக்கும் ஸாமர்த்யமும் இருக்க, மனிதர்கள் மோக்ஷத்தை யபேக்ஷிப்பவராய் உன்னையே ஏன் பூஜிப்பதில்லை என்றால் அதற்குக்காரணத்தைச் சொல்லு

* அத ய: கஶ்சிதப்ரஹ்மவிதன்யாமாத்மனோ வ்யதிரிக்தாம் யாம் காசித்தேவதாமுபாஸ்தே ஸ்துதி நமஸ்கார யாகபல்யுபஹார ப்ரணிதான த்யானுதினேபாஸ்தே தஸ்யா குணபாவமுபகம்யாஸ்தே அன்யோஸாவனுத்மா மத்த: ப்ருதகன்யோஹமஸ்ம்யதிக்ருதோ மயாஸ்மா ருணிவத் ப்ரதிகர்தவ்ய மித்யேவம் ப்ரத்யய: ஸன்னுபாஸ்தே ந ஸ இத்தம் ப்ரத்யயோ வேத விஜானுதி தத்வம் (ப்ரு. 1-4-10)

† 'யதி தவேஶ்வரஸ்ய ராகாதிதோஷாபாவாத் ஸர்வப்ராணிஷ்வனுஜிக்ருக்ஷாயாம் துல்யாயாம் ஸர்வபலப்ரதான ஸமர்த்தே ச த்வயி ஸதி வாஸுதேவ: ஸர்வமிதி ஜ்ஞானேனைவ முமுக்ஷவ: ஸந்த: கஸ்மாத் த்வாமேவ ஸர்வே ந ப்ரதிபத்யந்த இதி ஶ்ருணு தத்ர காரணம்—காங்க்ஷந்த இதி । காங்க்ஷந்தோபீப்ஸந்த: கர்மணும் ஸித்திம் பலநிஷ்பத்திம் ப்ரார்த்தயந்தோ யஜந்த இஹாஸ்மிம்லோகே தேவதா இந்த்ராக்ன்யாத்யா: "அத யோன்யாம் தேவதாமுபாஸ்தேன்யோ ஸாவன்யோஹமஸ்மீதி ந ஸ வேத யதா பஶுரேவம் ஸ தேவாநும்" இதி ஶ்ருதே: (கீ. பா. 4-12).

கிறேன், கேள். சீக்கிரத்தில் பலனை யடையவேண்டுமென்று ஆசையுள்ள மனிதர்கள் 'அத யோன்யாம் தேவதாமுபாஸ்தேன் யோ ஸாவன்யோஹமஸ்மீதி ந ஸ வேத' என்னும் ஶ்ருதியில் சொல்லியவாறு, பரமாத்மாவினுல் பின்னரான இந்த்ராக்ன் யாதி தேவதைகளைக் குறித்து யாகம் செய்கிறார்கள். அதனுல் அவருக்கு சீக்கிரத்தில் பலனுண்டாகிறது. ஆகையால் என்னைப் பூஜிப்பதில்லை என்று ஸ்ரீ கிருஷ்ணன் சொன்னுரென்று அபிப் ராயம்.

வா. வ:—இந்த கீதா வாக்யத்திறுலும், உபநிஷத் பாஷ்யத் திறுலும், இந்த வாக்யத்திற்கு அபிப்ராயமென்னவென்று ஸித்தமாகிறது.

பி. வா:—ப்ரஹ்மஜ்ஞானமில்லாதவர்கள் அல்ப பலனுக்காக பரமாத்மாவைவிட பின்னரான இந்த்ராதி தேவதைகளை பலி ஹாரணுதி கார்யங்களால் பூஜித்து அல்பபலனையடைகிறார்க ளென்று கர்மங்களைச் செய்யும் மனிதர்களை நிந்தித்திருக்கிறபடி யால், ப்ரஹ்மஜ்ஞானத்தையே ஸம்பாதிக்கவேண்டுமென்று ஸித்த மாகிறது.

வா. வ:—ப்ரஹ்மஜ்ஞானத்தை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லியிருக்கிறபடியால் ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவத்திறுல் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—அய்யா! எத்தனை தடவை கேட்பீர்? 'சோத்யம் வா பரிஹாரோ வா க்ரியதாம் த்வைதபாஷயா.........அத்வைதே நாஸ்தி சோதனு' என்றுப்ராசீன ஆசார்யர்கள் சொல்லியிருப்பது போல் ஸம்பாஷித்தால் த்வைதம் ஸித்தமாகிறது. ஆயினும்— 'வேணுஸங்கர்ஷஜவன்ஹிவத் = மூங்கில்களின் பரஸ்பர ஸம்பந் தத்திறுல் அக்னியுண்டாகிறது. அந்த அக்னி மூங்கில்களைச் சுட்டுத் தானும் நஷ்டமாவதுபோல், ஜ்ஞானம் ஸமஸ்தஜகத்தை யும் நாஶம்செய்து ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவத்தால் உண்டான பேதத்தை நாஶம் செய்து, தானும் (ஜ்ஞானமும்) நாஶமடை கிறது என்னும் நம்மிட ப்ரக்ரியை (எங்கள் மதத்தின் ரீதி) உங்

களுக்குத் தெரிந்திருப்பதாக எங்களுக்குத் தோன்றவில்லை. ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவத்தினால் உண்டாயிருக்கும் பேதமும், அந்த ஞானமும் எல்லாம் பாத்யமே (மித்யையே).

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! மித்யையோ அல்லவோ அவ் விஷயத்தை பின்னால் விசாரிப்போம். ப்ரஹ்மஜ்ஞானம் ஸம்பா திக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறபடியால் பேதம் ஸித்திக் கிறதா? இல்லையா?

பி. வா:—பேதம் ஸித்தமாகிறதாயினும் அந்த பேதம் மித்யை.

வா. வ:—'அன்யாம் தேவதாம்' என்னும் வாக்யத்திற்கு அர்த்தமென்ன?

பி. வா:—பரமாத்மாவைவிட பின்னரான இந்த்ராதி தேவ தைகள் என்று அர்த்தம்.

வா. வ:—இவ்வாக்யத்தினால் யாருக்கு யாரோடு பேதம் சொல்லப்படுகிறது?

பி. வா:—பரமாத்மாவுக்கு இந்த்ராதி தேவதைகளுடன் பேதம் சொல்லப்படுகிறது.

வா. வ:—இவ்வாக்யத்தினால் பரமாத்மாவுக்கும் இந்த்ராதி தேவதைகளுக்கும் பேதம் ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—பேதம் ஸித்திக்கிறது.

வா. வ:—பேதம் ஸித்தமாய்க்கொண்டிருக்க, ஐக்ய விஷயத் தில் இவ்வாக்யத்தை எப்படி உதஹரித்திருக்கிறீர்?

பி. வா:—(பதில் இல்லை).

ப்ரதிவாதி வக்கீல் ப்ரதிவாதியை திருத்தல்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'அன்யாம் தேவதாமுபாஸ்தே ந ஸ வேத' என்னும் வாக்யத்தினால் அன்ய தேவதையை உபா ஸிப்பவன் அஜ்ஞானி என்று நிந்தித்திருக்கிறார் அல்லவா? எவ் விதமாக உபாஸிப்பவனை நிந்தித்திருக்கிறார்?

பி. வா:—'அன்யோஸாவன்யோஹமஸ்மீதி' அவன் (அந்த தேவதை) வேறு, நான் வேறு என்று உபாஸிப்பவர்களை நிந்தித்திருக்கிறூர்.

பி. வா. வ:—இதனுல் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—இந்த்ராதி தேவதைகள் வேறு, நான் வேறு என்னும் பேதஜ்ஞானமுடையவன் அஜ்ஞானி என்று தூஷித்திருக்கிறபடியால் பேதமில்லை என்று ஸித்தமாய், அபேதம் ஸித்தமாகிறது.

ரீ க்ராஸ்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இது என்ன க்ரந்தம்?

பி. வா:—இது எங்கள் ஶங்கர பகவத்பாதாசார்யரிட ப்ரஹ்மஸூத்ரபாஷ்ய வ்யாக்யானமான பாமதி என்னும் க்ரந்தம்.

வா. வ:—இது உங்களுக்கு மான்யமல்லவா?

பி. வா:—பரமமான்யம்.

வா. வ:—* இவ்வாக்யத்திற்கு அபிப்ராயமென்ன?

பி. வா:—நாங்கள் 'அனன்யத்வம்' என்னும் பதத்தினுல் ஐக்யத்தைச் சொல்வதில்லை. பின்னென்னவென்றுல்—பேதத்தை நிஷேதிக்கிறேம். ஆகையால், நீங்கள் ஐக்யபக்ஷத்தையவலம்பித்துச் சொல்லும் தோஷம் எங்களுக்கு வருவதில்லை. அதுவுமல்லாமல்—ஐக்யத்தை நிஷேதிக்கும் நையாயிகர் எங்களுக்கு ஸஹாயம் செய்தவராவரென்று அபிப்ராயம்.

வா. வ:—பேதத்தை நிஷேதித்தால் அபேதம் (ஐக்யம்) ஸித்தமாவதில்லையல்லவா?

பி. வா:—அபேதம் ஸித்திக்காது.

வா. வ:—பேதத்தை நிஷேதித்தால் ஐக்யம் ஸித்திக்காமற் போனபிறகு, பேதத்தை நிஷேதிக்கிறமென்று நீங்கள் சொல்

* ந கலு அனன்யத்வமிதி பேதம் ப்ரூம:। கிந்து பேதம் வ்யாஸேதாம: ததஶ்ச நாபேதாஶ்ரய தோஷ ப்ரஸங்க: கிந்து அபேதவ்யாஸேதத்பிர்வைஶேஷிகாதிபிரஸ்மாஸு ஸஹாயமேவாசரிதம் பவதி. (பா. 2-1-14).

லும் 'அதயோன்யாம்' என்னும் வாக்யத்தினுல் அபேதம் ஸித்திக்கிறதென்று எப்படிச் சொல்லுகிறீர்?

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—இந்த்ராதி தேவதைகள் விஶிஷ்டரா? ஶுத்தரா?

பி. வா:—இந்த்ராதி தேவதைகள் விஶிஷ்டர்களே.

வா. வ:—ஜீவன் விஶிஷ்டனு? ஶுத்தனு?

பி. வா:—ஜீவனும் விஶிஷ்டனே.

வா. வ:— விஶிஷ்டர்களான இந்த்ராதி தேவதைகளுக்கும், விஶிஷ்டரான ஜீவர்களுக்கும் பேதமா அல்லது ஐக்யமா?

பி. வா:—பேதமே, ஐக்யமில்லை.

வா. வ:—விஶிஷ்டரான இந்த்ராதிதேவதைகளுக்கும், விஶிஷ்டரான ஜீவர்களுக்கும் பேதமிருந்த பிறகு, இருக்கும் பேதத்தை (நான் வேறு, இந்த்ராதிகள் வேறு என்று) தெரிந்துகொள்பவர் அஜ்ஞானிகளென்பது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—விஶிஷ்டரான தேவதைகளுக்கும் விஶிஷ்டரான ஜீவர்களுக்கும் வ்யாவஹாரிக பேதமுண்டு. பாரமார்த்திகபேதமில்லை. ஆகையால் விஶிஷ்டர்களுக்கு பாரமார்த்திக பேதத்தைத் தெரிந்துகொள்பவன் அஜ்ஞானி என்று தூஷித்துக்கொண்டே, பாரமார்த்திக பேதத்தை நிஷேதிக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'அன்யோஸாவன்யோஹமஸ்மி' என்னும் வாக்யத்தில் தேவதைகள் என்றால் பாரமார்த்திக பின்னர்கள், நான் அந்த தேவதைகளால் பாரமார்த்திக பின்னன் என்று சொல்லும், 'பாரமார்த்திகான்யோஸௌ' 'பாரமார்த்திகான்யோஹம்' என்னும் பதங்களுண்டோ?

பி. வா:—பாரமார்த்திகமென்னும் பதமில்லை.

வா. வ:—பாரமார்த்திகமென்னும் பதமில்லாமலிருக்க பாரமார்த்திக பின்னனென்னும் அர்த்தத்தை எப்படிச் சொன்னீர்?

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! வீட்டிற்கு வீடென்றும், B. A. பாஸ் ஆனவனை B. A. என்றும் தெரியவேண்டுமல்லவா?

பி. வா:—விசாரமென்ன, வீட்டிற்கு வீடல்லவென்றும், B. A. பாஸானவனை B. A. அல்லவென்றும் தெரியலாமா? தெரியக்கூடாது. வீட்டிற்கு வீடென்றும், B. A. பாஸானவனை B. A. என்றும் தெரியவேண்டும்.

வா. வ:—அன்யமான (வேறான) பொருளை அன்யமென்று (வேறென்று) தெரியவேண்டுமா? அனன்யமென்று (வேறல்லவென்று) தெரியவேண்டுமா?

பி. வா:—அன்யமான பதார்த்தத்தை அன்யமென்றே தெரியவேண்டும்.

வா. வ:—அன்யரான தேவதைகளை அன்யரென்று தெரிந்தவர்கள் ஞானிகளோ? அனன்யரென்று தெரிந்தவர்கள் ஞானிகளோ?

பி. வா:—அன்யரான தேவதைகளை அன்யரென்று தெரிந்தவர்களே ஞானிகளாவார்.

வா. வ:—'அன்யாம் தேவதாமுபாஸ்தே அன்யோ ஸாவன்யோஹமஸ்மீதி ந ஸ வேத' என்னும் வாக்யத்திற்கு என்ன அர்த்தம் சொன்னீர்?

பி. வா:—அன்யனான தேவதையை அன்யனென்று எவன் தெரிந்துகொள்கிறானோ அவன் அஜ்ஞானி என்று சொல்லியிருக்கிறோம்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! அன்யமான பதார்த்தத்தை அன்யமென்று தெரிகிறவன் ஞானி என்று சற்றுநேரத்திற்கு முன்பு சொன்னது ஞாபகப்படுத்திக்கொள்ளும். இப்பொழுது அன்யரான தேவதைகளை அன்யரென்று தெரிந்தவன் அஜ்ஞானி என்று ஶ்ருதி சொல்லுகிறதென்று சொல்லுகிறீர். உங்கள் வார்த்தைகளுக்கு ஶ்ருதி விரோதம் வருகிறதல்லவா?

பி. வா:—'அதயோன்யாம்' என்னும் வாக்யத்திற்கு வ்யாவஹாரிக பேதமுள்ள தேவதையை 'அன்யோஸௌ' அஸௌ =

இந்த தேவதை, அன்ய:= பாரமார்த்திக பேதமுள்ளது என்று யார் உபாஸிக்கிறுரோ என்று அர்த்தம் செய்கிறேம். ஆகையால் பரஸ்பர விரோதம் உண்டாவதில்லை. அத வா—அனவஸ்தா, ஸ்வ வ்யாஹதி(தன் வாக்யங்களில்பரஸ்பரவிரோதம்)முதலானதோஷங் கள் பதார்த்தத்தின், ஸத்தாவை = இருப்பை, நாஶம் செய்கிறதா கையால், எந்த பதார்த்தங்களுக்கும் ஸத்தாவை = இருப்பை ஒப் புக்கொள்ளாம லிருக்கும் அத்வைதிகளுக்கு ஸ்நேஹிதரோ (வேண்டியவைகளே) என்று சொல்லியிருக்கிறபடியால், எங்கள் வார்த்தைகளுக்கு விரோதம் வருவது மேலானதே.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! வேதத்திலில்லாத தாயும், தங்களால் நிஷேதிக்கப்பட்டதாயும் இருக்கும் வ்யாவ ஹாரிகத்தை ப்ரதிவாதி அடிக்கடி சொல்லுகிறுர். * அனவஸ்தா, வ்யாஹதி முதலான தோஷங்கள் வந்தாலும் எங்களுக்கு அந்த தோஷங்கள் வேண்டியவைகளே என்று ப்ரதிவாதிகள் சொல்வது யுக்தமோ அல்லது அயுக்தமோ என்னும் விஷயத்தைக் கோர்ட் டார் விசாரிக்க வேண்டும்.

கோர்ட்:—ஶாஸ்த்ரிகளே! வ்யாவஹாரிகமென்றுல் மித்யை என்றே அர்த்தமென்றும், ப்ரமாணங்கள் வ்யாவஹாரிகத்தைத் தெரிவிப்பதில்லை என்றும் நீங்களே சொல்லி அடிக்கடி வ்யாவ ஹாரிகமென்று நீங்களே சொல்லுவது யுக்தமல்ல. வேறே ஸமா தானமிருந்தால் சொல்லும்.

வா. வ:—அனவஸ்தா வ்யாஹதி முதலான தோஷங்கள் எங்களுக்கு (அத்வைதிகளுக்கு) வேண்டியவைகளே என்று சொன்னபிறகு, 'ஆத்மன ஆகாஶஸ்ஸம்பூத:' 'அஜோநிர்வாயமா காஶ:' இத்யாதி ஶ்ருதிகளுக்குண்டான வ்யாஹத்யாதி தோஷங் களை பரிஹரிப்பதற்காக ப்ரவ்ருத்தமான ப்ரஹ்மமீமாம்ஸாஶாஸ்த் ரமே வ்யர்த்தமாகவேண்டி வருகிறதல்லவா?

பி. வா:—(பதில் இல்லை).

* அநவஸ்தாதயோ தோஷா: ஸத்தாம் நிக்னந்தி வஸ்துன: । அத்வைதி னும் தே ஸுஹ்ருத: ப்ரபஞ்சே தத் ப்ரஸஞ்ஜகா: ॥ (ப்ரஹ்மாநந்தீயம்)

## வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! இந்த ஶ்ருதிக்கு நீங்கள் சொல்லும் அர்த்தமென்ன?

வாதி:—'அத யோன்யாம் தேவதாமுபாஸ்தே அன்யோஸாவன்யோஹமஸ்மீதி ந ஸ வேத' ய: அன்ய:= எந்த அன்யனான ஜீவன், அன்யாம் தேவதாம்= தன்னைவிட பின்னனான பரமாத்மாவை, அன்ய: அஸௌ=அன்யனான பரமாத்மா, அஹம் அஸ்மி= நானிருக்கிறேன் என்று உபாஸிக்கிறானோ, ஸ:=அவன், ஜ்ஞானியல்ல. (பின்னனான ஜீவன், பின்னனான பரமாத்மாவை, பின்னனான பரமாத்மா நானேயிருக்கிறேனென்று உபாஸிக்கிறானோ அவன் அஜ்ஞன்) என்று நாங்கள் அர்த்தம் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—ஆசார்யரே! எவ்விடமோயிருக்கும் பதத்தை எவ்விடமோ சேர்த்துக்கொண்டு அர்த்தத்தைச் செய்தால் தூரான்வயம் (வ்யவஹிதான்வயம்) என்னும் தோஷம் வருவதில்லையோ?

வாதி:—'யேன யஸ்யாபிஸம்பந்தோ தூரஸ்தஸ்யாபி தேன ஸஹ' (பாமதி 3-2-22) என்னும் நியாயத்தால் இருக்கும் ஸ்தலத்தில் அன்வயம் பூர்வத்தில் சொன்ன ப்ரகாரம் பாதிதமாயிருக்கிறபடியாலும், இந்த தூரான்வயம் பாதிதமல்லாததாயிருக்கிறபடியாலும், இந்த தூரான்வயம் தோஷமாகாது.

---

## பிரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—மஹாப்ரபோ! 'அத யோன்யாம் தேவதாமுபாஸ்தே அன்யோ ஸாவன்யோஹமஸ்மீதி ந ஸ வேத'(ப்ரு.1-4-10) என்னும் ஶ்ருதி தேவதைவேறு நான்வேறு என்று தேவதையையுபாஸிப்பவர் அஜ்ஞரென்று பேதத்தைத் தெரிந்துகொண்டவரை நிந்தித்துக்கொண்டிருக்கிறபடியால் இந்த வாக்யத்தினால் பேதம் நிஷேதிக்கப்பட்டு, ஐக்யம் ஸித்தமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று கோருகிறோம்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! இந்தமந்த்ரத்திற்கு உபநிஷத் பாஷ்யத்திலும், 4-12. வது கீதா ஶ்லோக வ்யாக்யானத்திலும், ப்ரஹ்மஞானம் ஸம்பாதித்துக்கொள்ளாமல், க்ஷுத்ர பலன்களை சீக்கிரத்திலடைவதற்கு அபேக்ஷையுள்ளவர்களாய் ஸர்வபலப்ரதனான பரமாத்மாவைவிட்டு, அந்த பரமாத்மாவைவிட பின்னரான இந்த்ராதி தேவதைகளை, கடன்காரன் ஸாவகாரனை (கடன் கொடுத்திருக்கும் பணக்காரனை) பூஜிப்பதுபோல் யஜ்ஞ பலிஹரண பூஜா த்யானாதிகளைச் செய்துகொண்டு, கௌண பாவத்தையடைந்து (நைச்சபாவத்தை யடைந்து) யாரிருக்கிறார்களோ அவர்கள் அஞ்ஞானிகளென்று க்ஷுத்ர பலத்திற்காக கர்மங்களைச் செய்பவரை தூஷித்துக்கொண்டே, ப்ரஹ்மஜ்ஞானம் ஸம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார். ஆகையால் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தை நிந்திக்காததே யல்லாமல், ப்ரஹ்மஜ்ஞானம் ஸம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லியிருக்கிறபடியால் ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவத்தினால் பேதத்தையே ஸித்தப்படுத்துகிறது.

ஶங்கராசார்யரிட வ்யாக்யானத்தை விட்டபோதிலும்—'அன்யாம் தேவதாம்' என்னும் வாக்யத்தினால் ஸ்பஷ்டமாக பரமாத்மாவுக்கும், தேவதைகளுக்கும் பேதத்தைச் சொல்லுகிறபடியால் இவ்வாக்யத்தினால் ஜீவப்ரஹ்மாக்களின் பேதம் ஸித்தமாகிறது.

"அன்யோ ஸாவன்யோஹமஸ்மீதி ந ஸ வேத" என்னும் வாக்யம் தேவதைகள் வேறு நான் வேறு என்று பேதத்துடன் உபாஸிப்பவர்களை தூஷித்துக்கொண்டே, பேதத்தை நிஷேதிக்கிறபடியால், ஐக்யம் ஸித்தமாகிறது என்று ப்ரதிவாதிகள் சொல்வது யுக்தமல்ல. ஏனெனில்:—

(1) பாமத்யாதி க்ரந்தங்களில் 'பேதத்தை நிஷேதித்த மாத்ரத்தில் ஐக்யம் ஸித்திப்பதில்லை' என்று சொல்லியிருக்கிறபடியால் இந்த 'அன்யோஸௌ' என்னும் வாக்யத்தினால் பேதம்

நிஷித்தமாகிறதென்று வைத்துக்கொண்ட போதிலும்— அபேதம் ஸித்திப்பதில்லை.

(2) அத்வைத மதத்தின்படிக்கு—இந்த்ராதி தேவதைகள் விசிஷ்டர்கள். ஜீவர்களும் விசிஷ்டர்கள். இவர்களுக்கு பேதமுண்டு. ஆகையால் B. A. பாஸ். செய்தவரை B. A. என்று தெரிந்துகொள்பவனும், வீட்டை வீடென்று தெரிந்துகொள்பவனும் எப்படி அஜ்ஞானியாவதில்லையோ, அப்படியே தன்னைவிட பின்னரான இந்த்ராதி தேவதைகளை, தன்னைவிட பின்னரென்று தெரிந்துகொள்பவன் அஜ்ஞானியாவது மிகவும் அயுக்தமாகிறது. ஆகையால் 'இவ்வாக்யம் பேதத்தைத் தெரிந்துகொண்டவனை அஜ்ஞானி என்று சொல்லிக்கொண்டே பேதத்தை நிஷேதிக்கிறது' என்பதும் பொருந்துகிறதில்லை.

(3) 'அன்யாம் தேவதாம்' அன்யமான (பின்னமான) தேவதையை பின்னனென்று தெரிந்துகொண்டவன் அஜ்ஞானி என்று இந்தஶ்ருதிக்கு அர்த்தம்சொல்லின், ஸ்வவ்யாஹத மாகிறது. ஆகையால் இந்த ஶ்ருதி பேதஜ்ஞானியை நிந்திக்கிறதென்பது பொருந்துகிறதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

## ப்ரதிவாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! அடிக்கடி சொல்வது என்ன இருக்கிறது! பேதத்தைச் சொல்லும் எல்லா வாக்யங்களும் வ்யாவஹாரிக பேதத்தைச் சொல்லுகின்றன. பேதத்தை நிஷேதிக்கும் எல்லா வாக்யங்களும் பாரமார்த்திக பேதத்தை நிஷேதிக்கின்றன. 'ப்ரஹ்ம ஸத்யம் ஜகன்மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:' என்னும் எங்கள் அத்வைத மதத்தில் எதுவும் பொருந்தக்கூடாது. துர்கடத்வமே எங்கள் மதத்திற்கு பூஷணம். வ்யாஹத்யாதி தோஷங்களுண்டாய், எந்த பதார்த்தமும் பொருந்தாமல் செய்கின்றன. எங்களுக்கும் எந்த பதார்த்தமும் பொருந்தக்கூடாது. ஆகையால் வ்யாஹத்யாதி தோஷங்கள் எங்களுக்கு மித்திரர்களே (எங்களுக்கு வேண்டியவற்றையே

ஸித்தப்படுத்துகின்றன). ஆகையால் இந்த வாதியினுல் சொல்லப் படும் எல்லா தோஷங்களும் துர்கடமான அத்வைத மதத்திற்கு துர்கடத்வத்தையுண்டாக்கி நாங்கள் சொல்வதையே (எந்த பதார்த்தமும் பொருந்தாது என்னும் விஷயத்தையே) ஸாதிக்கிற தென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

வா. எ. 30; ப்ர. வா. எ. 11.

## ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி என்னும் ஶ்ருதி விசாரணை.

*பி. வா வ:*—ஶாஸ்த்ரிகளே! 'ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப் யேதி' (ப்ர. 4-4-6) என்னும் வாக்யத்தை நீங்கள் எதற்காக உதஹரித்திருக்கிறீர்?

*பி. வா:*—ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை ஸாதிப்பதற் காக உதஹரித்திருக்கிறோம்.

*பி. வா. வ:*—அந்த வாக்யத்திற்கு அர்த்தமென்ன?

*பி. வா:*—ப்ரஹ்மைவஸன் = ப்ரஹ்மமாகவே யிருந்து, ப்ரஹ் மாப்யேதி = ப்ரஹ்மத்தை யடைகிறுனென்று அர்த்தம்.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

*வா. வ:*—இந்த வாக்யத்திலிருக்கும் எந்த பாகத்தினுல் ஐக் யம் ஸித்திக்கிறது?

*பி. வா:*—'ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யத்தினுல் ஐக்யம் ஸித்திக்கிறது.

*வா. வ:*—'ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யத்தினுல் ப்ரஹ் மத்தை யடைகிறுனென்று மாத்ரம் அர்த்தமாகிறது. இந்த வாக் யத்திற்கு நீங்களும் அப்படியே அர்த்தம் செய்திருக்கிறீர். அதி னுல் ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தினுல் பேதமே ஸித்திக்கிற தல்லவா? ஶங்கராசார்யரும்—ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தினுல் பேதம் ஸித்திக்கிறதென்று 3-2-27-வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்

யத்தில் "க்வசிஜ்ஜீவ ப்ராஜ்ஞயோர்பேதோ வ்யபதிஶ்யதே.........! 'பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' இதி கந்த்ருகந்தவ்யத்வேன" என்னும் வாக்யங்களால் சொல்லியிருக்கிறாரல்லவா?

பி. வா:—'அப்யேதி' என்னும் பதத்திற்கு அடைகிறானென்னும் முக்யார்த்தத்தை எடுத்துக்கொண்டால் ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தால் பேதம் ஸித்திக்கிறது. ஆயினும்—எங்கள் ஶங்கராசார்யார் மேற்சொன்ன ப்ரகாரம் முக்யார்த்தத்தை எடுத்துக்கொள்ளாமல் * நானே தத்வத: (நிஜமாய்) ஸம்ஸாரியாயிருக்கிறேனென்னும் விபரீத ஜ்ஞானத்தால் எந்த தேஹபரம்பரை வருகிறதோ, அதனுடைய நிவ்ருத்தியாகிறதென்னும் அமுக்யார்த்தத்தை எடுத்துக்கொண்டிருப்பதால் 'அப்யேதி' என்னும் பதம் ப்ராப்யப்ராப்த்ரு பாவத்தைத் தெரிவிக்காததினால் இந்த வாக்யத்தால் ஜீவப்ரஹ்மாக்களிட பேதம் ஸித்தமாவதில்லை.

வா. வ:—'அப்யேதி' என்னும் பதத்திற்கு முக்யார்த்தத்தை விடுவதற்குக் காரணமென்ன?

பி. வா:—'ப்ரஹ்மாப்யேதி' என்னும் பதத்திற்கு ப்ரஹ்மத்தை யடைகிறானென்னும் அர்த்தம் செய்தால், ஜீவனுக்கு ப்ரஹ்மத்துடன் பேதம் ஸித்திக்கும். ஆகையால் அந்த அர்த்தத்தை விட்டிருக்கிறோம்.

வா. வ:—பேதம் ஸித்தமாகட்டும். அதினால் பாதகமென்ன?

பி. வா:—ஐக்யத்தை போதிக்கும் ஶ்ருதிகளால் விரோதம் வருவதே பாதகம்.

வா. வ:—'ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யத்திற்கு ப்ரஹ்மத்தை யடைகிறானென்னும் அர்த்தத்தை விட்டு, ப்ரஹ்மஞானத்தால் தேஹபரம்பரை நின்றுபோகிறதென்னும் அமுக்யமான இரண்டாவது அர்த்தத்தை நீங்கள் சொன்னால், இந்த வாக்யம் ஜீவனுக்கு ப்ரஹ்மத்தோடு ஐக்யத்தைச் சொல்லாததினால் இந்த வாக்யம் ஐக்யவிஷயத்தில் ப்ரமாணமென்று நீங்கள் எப்படிச் சொல்லுகிறீர்?

* தேஹாந்தர ப்ரதி ஸந்தானுபாவமாத்ரேணைவ து ப்ரஹ்மாப்யேதீத்யுச்யதே தஸ்மாத் ப்ரஹ்மாப்யேதீத்யுபசாரமாத்ரமேதத் விபரீதக்ரஹவத் தேஹஸந்ததி விச்சேதமாத்ரம் விஜ்ஞான பலமபேக்ஷ்ய. (ப்ரு. பா. 4-4-6.)

பி. வா:—(பதில் இல்லை).

பி. வா. வ:— 'ப்ரஹ்மைவ ஸன்' என்னும் வாக்யத்தால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:— ஜீவன் ப்ரஹ்மரூபமே என்று ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்தமாகிறது.

வா. வ:—'ப்ரஹ்மைவ ஸன்' என்னும் வாக்யத்திலிருக்கும் 'ப்ரஹ்ம' என்னும் ஶப்தத்திற்கர்த்தமென்ன?

பி. வா:—'அத கஸ்மாதுச்யதே ப்ரஹ்மேதி ப்ரும்ஹதி ப்ரும்ஹயதி ச' இத்யாதி ஶ்ருத்யனுஸாரமாய் ப்ருஹத்வம் (பூர்ணத்வம்) முதலான தர்மவிஶிஷ்டசேதனனென்று அர்த்தம்.

வா. வ:—ஜீவன் ப்ருஹத்வாதி தர்மவிஶிஷ்டனா? அல்லவா?

பி. வா:—அல்ல.

வா. வ:—அல்லாமற்போனால் ப்ரஹ்மஞானி, ப்ரஹ்மைவ ஸன் = ப்ருஹத்வாதி தர்மவிஶிஷ்டனான சேதனனாயிருந்தே என்னும் அர்த்தம் எப்படிப் பொருந்தும்?

பி. வா:—ப்ரஹ்ம ஶப்தத்திற்கு முக்யார்த்தமான பூர்ணத்வாதி விஶிஷ்டசேதன ரூபனல்லாதிருந்தபோதிலும், ப்ரஹ்ம ஶப்தத்திற்கு லக்ஷணாவ்ருத்தியால் ப்ருஹத்வாதி தர்மவிஶிஷ்டசேதனனென்னும் அர்த்தத்தைவிட்டு, ஶுத்தசேதனனென்னும் அர்த்தத்தைஸ்வீகரிப்பதால் ஜீவனானபரஹ்மஞானி, 'ப்ரஹ்மைவ ஸன்' சேதனனாயிருந்தே தேஹ ஸந்ததி நாஶமுடையவனாகிறானென்னும் அர்த்தம் பொருந்துகிறது.

வா. வ:—'ப்ரஹ்மைவ ஸன்' என்னும் வாக்யத்திற்கு சேதனனாயிருந்தே என்று அர்த்தம் சொல்லியிருக்கிறபடியால், ஜீவன் சேதன ரூபனென்று அர்த்தம் ஸித்தித்தாலும், ஜீவர்களுக்கு ப்ரஹ்மத்துடன் ஐக்யமெப்படி ஸித்திக்கும்?

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'அத மர்த்யோம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்னுதே' (ப்ரு. 4-4-7) இந்த மந்த்ரம் எந்த வாக்யத்திற்கு பிறகு இருக்கிறது? என் ப்ரவ்ருத்தமா யிருக்கிறது?

பி. வா:—'ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யத்திற்கு பிறகு இருக்கிறது. அந்த 'ப்ரஹ்மைவஸன்' என்னும் வாக்யத்தினுல் சொல்லப்பட்ட அந்தஅர்த்தத்தை உருதிப்படுத்துவதற்காக ப்ரவ்ருத்தமாயிருக்கிறது.

வா. வ:—அது உங்களுக்கு எப்படித் தெரியும்?

பி. வா:—'ததப்யேஷ ஶ்லோகோ பவதி' தத் = தத்ர 'ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யத்தால் சொல்லப்பட்ட அர்த்தத்தின் விஷயத்தில், ஏஷ: ஶ்லோக: = இந்த முன் சொல்லப்போகும் ஶ்லோகம், பவதி = ப்ரமாணமாகிறதென்று வேதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியே 'தஸ்யைவ த்ருடகாரணாய மந்த்ர உதாஹ்ரியதே ஶ்லோக ஶப்தவாச்யம்' என்னும் ஶங்கரபாஷ்யத்திலும் தெரியவருகிறது.

வா: வ:—அந்த வாக்யத்திற் கர்த்தமென்ன?

பி. வா:—அத = காமம் நிவ்ருத்தியானபிறகு, மனிதன் முக்தனுகிறுன், ப்ரஹ்ம = ப்ரஹ்மத்தை, ஸமஶ்னுதே = அடைகிறுன் என்று அர்த்தம்.

வா. வ:—இப்படி யார் அர்த்தம் செய்திருக்கிறுர்?

பி. வா:—'ப்ரஹ்மணஶ்ச முக்தோபஸ்ருப்யத்வே ப்ரஸித்தம் ஶாஸ்த்ரே......।அத்ர ப்ரஹ்ம ஸமஶ்னுதே இத்யேவமாதெள' (ப்ர. ஸூ. பா. 1-3-2) என்னும் வாக்யத்தில் பிரஹ்மம் முக்தனுல், உபஸ்ருப்யம் (அடையப்படக் கூடியது) என்று சங்கராசார்யர் அர்த்தம் செய்திருக்கிறுர்.

வா. வ:—இந்த வாக்யம் ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தால் ஜீவ பரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறதல்லவா?

பி. வா:—பேதத்தைத் தெரிவிக்கிறது.

வா. வ:—'ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்ய விஷயத்தில் ப்ரமாணமாக வேதத்தால் உதாஹ்ருதமான வாக்யத்தை யனுஸரித்து 'ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யம் பேதத்தையே சொல்லுகிறதென்று சொல்லவேண்டுமல்லவா?

பி. வா:—(பதில் இல்லை).

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த உபநிஷத் பாஷ்யத்தில் ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—'ப்ரஹ்ம = ப்ரஹ்மபாவம் மோக்ஷம், ஸமஶ்நுதே = ப்ரதிபத்யதே' என்று ப்ரஹ்மத்வத்தை யடைகிறான், ப்ரஹ்மமாகிறானென்று அர்த்தம் சொல்லியிருக்கிறார்.

பி. வா. வ:—இவ்வாக்யத்தால் என்னவென்று ஸித்தமாகிறதென்று ஶங்கராசார்யரிட அபிப்ராயம்?

பி. வா:—ஜீவன் ப்ரஹ்மமாகிறான், ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் உண்டென்று அபிப்ராயம்.

வா. வ:—'ப்ரஹ்ம ஸமஶ்நுதே' என்னும் வாக்யத்திற்கர்த்தமென்ன?

பி. வா:—ப்ரஹ்ம = ப்ரஹ்மத்தை, ஸமஶ்நுதே = அடைகிறானென்று அர்த்தம்.

வா. வ:—'ப்ரஹ்ம' என்னும் பதத்திற்கு 'ப்ரஹ்மபாவம்' (ப்ரஹ்மத்வத்தை) என்னும் அர்த்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—'ப்ரஹ்ம' என்னும் பதத்திற்கு ப்ரஹ்மத்வத்தை என்று அர்த்தமாவதில்லை.

வா. வ:—'ப்ரஹ்ம' என்னும் பதத்திற்கு 'ப்ரஹ்மத்வத்தை' என்னுமர்த்தமாகாமற் போனபிறகு 'ப்ரஹ்மத்வத்தை' என்று ஶங்கராசார்யார் அர்த்தம் செய்தது அயுக்தமேயல்லவா?

பி. வா:—(பதில் இல்லை).

## வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! 'ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யத்திற்கு நீங்களென்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—'ப்ரஹ்ம' ஶப்தத்திற்கு ஜீவனென்றும் அர்த்தமிருக்கிறபடியால்ப்ரஹ்மஞானி, ப்ரஹ்மைவஸன் = ஜீவனாயிருந்தே (ஜீவபாவத்தை விடாமலே) ப்ரஹ்மாப்யேதி = ப்ரஹ்மத்தை யடைகிறான் என்று அர்த்தம் சொல்லுகிறோம். ஆகையால் இந்தவாக்

யம் ப்ராப்ய ப்ராபக பாவத்தால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தைப் போதிக்கிறது.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court). மஹாப்ரபோ! 'ப்ரஹ்மைவஸன் ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யம் 'ப்ரஹ்மைவ ஸன்' ப்ரஹ்ம ஶப்தம் ஜீவவாசகமா யிருக்கிறபடியால் ஜீவபாவத்தை விடாமலே, ப்ரஹ்ம = பரமாத்மாவை, அப்யேதி = அடைகிருனென்று ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறது. ஆகையால் இந்த வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களின் பேத விஷயத்திலேயே ஆதாரமானதென்னும் விஷயத்தைக்கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி' என்னும் வாக்யம், ப்ரஹ்மைவஸன் = ஸம்ஸாராவஸ்தையிலும் ப்ரஹ்மமாகவே யிருந்து, ப்ரஹ்ம அப்யேதி = நான் ப்ரஹ்மமல்ல, ஸம்ஸாரி என்னும்ஞானத்தால், எந்ததேஹ பரம்பரை யுண்டாகிறதோ, அந்த தேஹபரம்பரை நிவர்த்தியுள்ளவனுகிருனென்னும் அர்த்தத்தை எங்கள் ஶங்கராசார்யரே செய்திருக்கிறபடியால், ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தால் பேதத்தைத் தெரிவிக்காமலிருப்பதே யல்லாமல், ப்ரஹ்மைவஸன் = ஸம்ஸாராவஸ்தையிலும் ப்ரஹ்மமாகவேயிருந்து, என்று ஜீவனுக்கு ப்ரஹ்மபாவத்தை (ப்ரஹ்மத்வத்தை) சொல்லுகிறபடியால், இந்த வாக்யம் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யவிஷயத்தில் ஆதாரமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டாருக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ப்ரஹ்மஅப்யேதி' ப்ரஹ்மத்தை யடைகிறனென்று ஸ்பஷ்டமாக ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தால் பேதம் தோன்றிக்கொண்டிருக்க— 'அப்யேதி' என்னும் பதத்திற்கு நான் ஸம்ஸாரி என்னும் விபரீதஞானத்தால் உண்டாகும் தேஹஸந்ததி நாஶத்தை யடைகிறனென்னும் அர்த்தத்தை எங்கள் ப்ரதிவாதிகள் எந்த கோஶத்தைப் (Dictionary) பார்த்துச் செய்திருக்கிறரோ அந்த விஷயத்தைக் கோர்ட்டாரே விசாரிக்க வேண்டியது. உலகத்தில் நாங்கள் எவ் விடத்திலும் இந்த அர்த்தத்தைப் பார்த்ததேயில்லை.

மற்றும் 'ப்ரஹ்மைவஸன்' என்னும் வாக்யத்திற்கு ஸம்ஸாராவஸ்தையிலும் ப்ரஹ்மமாகவேயிருந்து என்று ப்ரதிவாதிகள் சொல்லும் அர்த்தம் அத்யந்த அயுக்தமாகிறது. ஏனென்றல்:— 'அத கஸ்மாதுச்யதே ப்ரஹ்மேதி ப்ருஹ்ஹதி ப்ரும்ஹயதி சேதி' என்னும் ஶ்ருதியினுல் ப்ரஹ்மபதத்திற்கு பூர்ணத்வாதிகுணங்களை யுடையவனென்று அர்த்தமாகிறபடியால், ஜீவன் ஸம்ஸாராவஸ்தையில் ப்ருஹத்வாதி குணயுக்தனுகாததினுல், ஜீவன் ஸம்ஸாராவஸ்தையில் ப்ரஹ்மமாகவே யிருந்தானென்று அர்த்தம் செய்வது பொருந்தாது. லக்ஷணவ்ருத்தியால் ப்ரஹ்ம பதத்திற்கு 'சித்' என்னும் அர்த்தத்தை எடுத்துக்கொண்டு சித் (சேதனன்) ஆயிருந்தே என்று அர்த்தம் செய்துக்கொண்டால், ப்ரஹ்மைவஸன் சேதனனுயிருந்தே, ப்ரஹ்மாப்யேதி=தேஹஸந்ததி நாஶமுடையவனுகிறனென்று அர்த்தமாவதினுல் சேதனனுன ஜீவன் தேஹஸந்ததி விச்சேதமு (நாஶமு)ள்ளவனுகிறபடியால் ஜீவேஶ்வரர்களுக்கு ஐக்யம் ஸித்திக்காது.

மற்றும் சித் (ப்ரஹ்மம்) பூர்வத்தில் தெரியாமலிருப்பதால் லக்ஷணவ்ருத்தியால் ப்ரஹ்மபதம் 'சித்' என்னும் போதத்தை யுண்டாக்காது. ஆகையால் ப்ரதிவாதி சொன்ன அர்த்தம் அயுக்தமானது.

ப்ரஹ்மைவஸன்=ஜீவபாவத்தை விடாமலே, ப்ரஹ்ம அப்யேதி=பரமாத்மாவை யடைகிறனென்று ப்ராப்ய ப்ராபகபாவத்

தால் ஜீவேஶ்வரர்களுக்கு பேதத்தையே சொல்லுகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்rார்த்திக்கிறோம்.

ப்ர. எ. 7.

## அயமாத்மா ப்ரஹ்ம என்னும் ஶ்ருதி விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'அயமாத்மா ப்ரஹ்ம' என்னும் ஶ்ருதிக்கு அர்த்தமென்ன? அதினால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—அயமாத்மா = இந்த ஜீவன், ப்ரஹ்ம = பரமாத்மா வென்று அர்த்தம். இதனால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் ஸித்தமாகிறது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'த்யுப்வாத்யாயதனம் ஸ்வஶப்தாத்' என்னும் ஸூத்ரத்திற்கு ஶங்கராசார்யார் என்ன வ்யாக்யானம் செய்திருக்கிறார்?

பி. வா:—'யஸ்மின் த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷம் ஓதம் மன: ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை: தமேவைகம் ஜானத ஆத்மான மன்யாவாசோ விமுஞ்சத அம்ருதஸ்யைஷ ஸேது:' என்னும் ஶ்ருதியில் த்யுலோகம், பூலோகம், முதலானவைகளுக்கு ஆஶ்ரயனொருவன் தோன்றுகிறான்; அந்த த்யுப்வாத்யாயதனன் ப்ரதானமோ, வாயுவோ, ஜீவனோ, சதுர்முகனோ என்று ஸம்ஶயம் உண்டாகவே, த்யுப்வாத்யாயதனத்தில் 'ஆத்மானம்' என்னும் ஶப்தமிருக்கிறபடியால் த்யுப்வாத்யாதனன் பரமாத்மாவே; ஜீவன், வாயு, ஹிரண்யகர்ப்பன், ப்ரக்ருதி இவைகளில் எதுவுமல்ல; ஆத்மஶப்தம் பரமாத்மாவை ஸ்வீகரித்தால்தான் (எடுத்துக்கொண்டால்தான்) பொருந்துகிறது. ஜீவாதிகளை எடுத்துக்கொண்டால் பொருந்துவதில்லை என்று ஸமாதானம் சொல்லப்பட்டிருக்கிறதென்று ஶங்கராசார்யார் முதலான அத்வைதிகள் வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள்.

வா. வ:—இதனால் ஆத்மஶப்தம் எதை போதிக்கிறதென்று ஸித்தமாகிறது?

பி. வா:—ஆத்மஶப்தம் பரமாத்மாவையே போதிக்கிறதென்று ஸித்தமாகிறது.

வா. வ:—'அயமாத்மா' என்னும் வாக்யத்திலிருக்கும் ஆத்மஶப்தமும் பரமாத்மாத்மபோதகமானதால், அந்த ஆத்மஶப்தத்தினால் ஜீவனை எடுத்துக்கொண்டு, ஜீவன், ப்ரஹ்ம = பரமாத்மாவென்னும் அர்த்தத்தைத் எப்படிச் சொன்னீர்?

பி. வா:—யத்யபி ஆத்மஶப்தம் பரமாத்மபோதகமேயாயினும்—'அயமாத்மா' என்னும் வாக்யத்தில் 'அயம்' என்னும் ஶப்தமிருக்கிறபடியால், அந்த 'அயம்' ஶப்தம் ப்ரத்யக்ஷஸித்தமான வஸ்துவைச் சொல்லுகிறது. ஜீவனே ப்ரத்யக்ஷஸித்தமானபடியால் 'அயமாத்மா' என்னும் வாக்யத்திற்கு இந்த ப்ரத்யக்ஷஸித்தமான ஜீவனென்று அர்த்தமாகிறது. ஆகையால் ஆத்மஶப்தத்தால் ஜீவனையே எடுத்துக்கொள்ள வேண்டுமாகையால் அதினால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் ஸித்தமாகிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இது என்ன க்ரந்தம் பாருங்கள்?

பி. வா:—இது எங்கள் ஶங்கராசார்யார் செய்த ஸூத்ரபாஷ்யம்.

வா. வ:—இந்த பாஷ்யத்தில் 'அப்யேதி ப்ரத்யக்ஷாதி ஸன்னிதாபிதஸ்ய தர்மிண இதமாநிர்தேஶ:' என்னும் வாக்யம் ஏன் ப்ரவ்ருத்தமாயிருக்கிறது?

பி. வா:—'ஜன்மாத்யஸ்ய யத:' என்னும் ஸூத்ரத்திலிருக்கும் 'அஸ்ய' என்னும் பதம் ப்ரத்யக்ஷஸித்தமான வஸ்துவையே சொல்லுகிறது. அதீந்த்ரியமான ஸ்வர்க்காதிரூப ஜகத்தை இதம் பதத்தால் எடுத்துக்கொள்வது எப்படி என்னும் ஶங்கையுண்டாகவே—'அஸ்ய' என்னும் ஶப்தம் ப்ரத்யக்ஷத்தாலாகிலும், அனுமானத்தாலாகிலும், ஶப்தத்தாலாகிலும், பிறந்த புத்தியில் விஷயமான வஸ்துவையே சொல்லுகிறபடியால் 'அஸ்ய' என்னும் பதத்தால் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால்ஸித்தமான ஸ்வர்க்காதி ஸமஸ்த ஜகத்தையும் சொல்லுகிறதென்று அபிப்ராயம்.

வா. வ:—'அயம்' என்னும் பதம் ப்ரமாண ஸித்தமான வஸ்துவைத் தெரிவிக்கிறதென்று பாஷ்யத்தின் அபிப்ராயமா? அல்லது ப்ரத்யக்ஷ ஸித்தமானவஸ்துவை தெரிவிக்கிறதென்று அபிப்ராயமா?

பி. வா:—ப்ரமாண ஸித்தமான வஸ்துவையே தெரிவிக்கிறதென்று பாஷ்யத்தின் அபிப்ராயம்.

வா. வ:—ப்ரஹ்மம் ப்ரமாணஸித்தமா? அல்லவா?

பி. வா:—ப்ரமாணத்தால் ஸித்தமானதே.

வா. வ:—'அயம் ஆத்மா' என்னும் வாக்யத்திலிருக்கும் 'அயம்' என்னும் பதத்தால் ப்ரமாண ஸித்தனை பரமாத்மாவையே எடுத்துக்கொள்ளலாமல்லவா?

பி. வா:—எடுத்துக்கொள்ளலாம்.

வா. வ:—'ஆத்மா' என்னும்பதம் முக்யமாக ப்ரஹ்மபோதகமாயிருக்கிறது. 'அயம்' என்னும் பதம் ப்ரமாணஸித்தமாயிருக்கும் பதார்த்தத்தைச் சொல்லுகிறது. அப்படியிருக்க—'அயம்' ப்ரமாணஸித்தமான, ஆத்மா = பரமாத்மா, ப்ரஹ்ம = பூர்ணன் என்று அர்த்தம் செய்வதற்கு பாதகமென்ன இருக்கிறது?

பி. வா:—(பதில் இல்லை

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'அயமாத்மா ப்ரஹ்ம' என்னும் மாண்டூகவாக்யம், அயமாத்மா = இந்த ப்ரத்யக்ஷஸித்தனை ஜீவன், பரமாத்மாவென்று சொல்லுகிறபடியால், ஜீவபரமாத்மாக்களுக்கு இந்த வாக்யத்தால் ஐக்யம் ஸித்தமாகிறது. 'த்யுப்வாத்யாயதனம் ஸ்வஶப்தாத்' என்னும்ஸூத்ரத்தில் சொல்லியுள்ளபடிக்கு, ஆத்மஶப்தம், முக்யமாக பரமாத்மபோதகமென்று ஸித்தித்தபோதிலும்—ஆத்மாவுக்கு 'அயம்' என்னும் விஶேஷணத்தைக் கொடுத்திருப்பதால் அந்த அயம்ஶப்தம் ப்ரத்யக்ஷஸித்தமான என்னும் அர்த்தத்தைச் சொல்லு

கிறதால் ப்ரஹ்மம் ப்ரத்யக்ஷஸித்தமல்ல. ஜீவன் ப்ரத்யக்ஷஸித்தன். ஆகையால் இந்த ப்ரத்யக்ஷஸித்தனான ஜீவனையே ஆத்மா என்னும் பதத்தால் எடுத்துக்கொள்ள வேண்டியிருப்பதால் 'அயமாத்மா' என்னும் வாக்யத்திற்கு இந்த ப்ரத்யக்ஷஸித்தனான ஜீவன், ப்ரஹ்ம = பரமாத்மா என்று சொல்லுகிறபடியால் இந்த வாக்யத்தால் ஜீவ பரமாத்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறது.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

*வா. வ:*—(To the Court) தர்மராஜப்ரபோ! 1-3-1-வது ப்ரஹ்ம ஸூத்ர வ்யாக்யானத்தில் ஆத்மஶப்தம் பரமாத்மாவையே முக்யவ்ருத்தியினால் சொல்லுகிறதென்று ஶங்கராசார்யார் முதலான அத்வைதிகளே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். 'அயம்' என்னும் ஶப்தம் ப்ரமாண ஸித்தமான எல்லா வஸ்துக்களையும் போதிக்கிறதே யொழிய, ப்ரத்யக்ஷஸித்தமான வஸ்துவை மாத்திரம் போதிப்பதில்லை என்று 'ஜன்மாத்யஸ்ய யத:' (ப்ர. ஸூ. 1-1-2.) என்னும் ஸூத்ர வ்யாக்யானத்தில் ஶங்கராசார்யார், வார்த்திககாரர் முதலிய அநேக அத்வைதிகள் சொல்லியிருக்கிறார்கள்.

ஆத்மஶப்தத்தால் ஜீவனையே எடுத்துக்கொள்ள வேண்டுமென்னும் விஷயத்தில் நியாமகமில்லை யாகையால், அயமாத்மா = ப்ரமாண ஸித்தனான பரமாத்மா, ப்ரஹ்ம = பூர்ணன் என்னும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமேயொழிய, ஆத்மஶப்தத்தால் ஜீவனை எடுத்துக்கொண்டு ஜீவ பரமாத்மாக்களுக்கு ஐக்யம் சொல்லக்கூடாது. இந்த வாக்யம் அகண்டார்த்த போதகமானபடியால் ஐக்யத்தை விஷயீகரிக்காமல் 'சித்' என்று மாத்ரம் போதத்தை யுண்டாக்குகிறது. 'ஆத்மா, ப்ரஹ்ம' என்னும் ஶப்தங்களால் போதிக்கப்படும் விஶிஷ்ட சேதனர்களுக்கு ஐக்யம் பொருந்துவதில்லை. 'தத்வமஸி' முதலிய வாக்யங்களைப் போலவே லக்ஷணாவ்ருத்தியால் 'சித்' என்கிற போதமுண்டாவதில்லை. இது முதலிய தோஷங்கள் வருகிறபடியால் 'அயமாத்மா ப்ரஹ்ம' என்னும் வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைப்

போதிப்பதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் குறித்துக் கொள்ளவேண்டுமென்று கோருகிறோம்.

---

ப்ர. எ. 12.

## ஏதஸ்மின்னுதர மந்தரம் குருதே என்னும் ஶ்ருதி விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யதா ஹ்யேவைஷ ஏதஸ்மின்னுதர மந்தரம் குருதே அத தஸ்ய பயம் பவதி' (தை. 2-7.) என்னும் ஶ்ருதிக்கர்த்தமென்ன?

பி. வா:—எந்த காலத்தில் மனிதன், ஏதஸ்மின் = இந்த பரமாத்மாவிடத்தில், அந்தரம் = பேதத்தைக் காணுகிறானோ அவனுக்கு பயமுண்டாகிறதென்று அர்த்தம்.

பி. வா. வ:—இதனால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—பரமாத்மாவிடத்தில் சற்றேனும் பேதத்தை அறிந்தால் பயமுண்டாகிறதென்று பேதஞானிக்கு பயத்தைச் சொல்லுவதால், பரமாத்மாவிடத்தில் ஜீவ பேதமில்லை யென்றாய், ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்தமாகிறது.

---

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ஏதஸ்மின்னுதர மந்தரம் குருதே' என்னும் வாக்யத்தின் பூர்வ வாக்யமேது?

பி. வா:— 'ஏதஸ்மின்னத்ருஶ்யேனாத்ம்யே நிருக்தேநிலயனேபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே அத ஸோபயம் கதோபவதி (தை. 2-16.) என்னும் வாக்யம்.

வா. வ:—இந்த வாக்யத்திற்கு உங்கள் ஶங்கராசார்யார் என்ன வ்யாக்யானம் செய்திருக்கிறார்?

பி. வா:—எந்த மனிதன், அத்ருஶ்யே = காணப்படும் வஸ்துவைவிட பின்னமான, அநிருக்தே = நிர்வசனம் செய்வதற்கு (விவரித்துரைப்பதற்கு) யோக்யமான பதார்த்தத்தால் பின்ன

மான, அநிலயனே = ஆஶ்ரய பின்னமான ப்ரஹ்மத்தில், ப்ரதிஷ்டாம் = ஞானலக்ஷணமான ஸ்திதியை அடைகிறுனே, (ப்ரஹ்மத்தை அறிகிறுனே) அவன் அபயமான ப்ரஹ்மத்தை யடைகிறுனென்று வ்யாக்யானம் செய்திருக்கிறுர்.

வா. வ:—இந்த ஶ்ருதியால் ப்ரஹ்மத்தில் எந்தெந்த பேதங்கள் சொல்லப்பட்டிருக்கிறது?

பி. வா:—த்ருஶ்யமான பதார்த்தங்களிட பேதமும், நிர்வசன யோக்யமான பதார்த்தங்களிட பேதமும், ஆஶ்ரயபேதமும், ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவத்தாலும், ப்ராப்ய ப்ராப்த்ரு பாவத்தாலும் பேதமும் சொல்லப்பட்டிருக்கிறது.

வா. வ:—'ஸத்யம் ஞானமனந்தம் ப்ரஹ்ம' (தை.) என்னும் வாக்யத்திற்கர்த்தமென்ன?

பி. வா:—'ஸத்யம்' என்னும் பதத்திற்கும், 'ஞானம்' என்னும் பதத்திற்கும், 'அனந்தம்' என்னும் பதத்திற்கும், லக்ஷணையினுல் 'சித்' என்று மாத்ரம் அர்த்தமாகிறது.

வா. வ:—'சித்' என்று மாத்ரம் அர்த்தம் சொல்லுவதில் தாத்பர்யமிருந்தால், ஸத்யம், ஞானம், அனந்தம் என்கிற பதங்களில் ஏதாவது ஒரு பதமிருந்தால் போதுமல்லவா? மூன்று பதங்களுக்கு ப்ரயோஜனமென்ன?

பி. வா:—'ஸத்யம்' என்னும் பதத்தால் 'சித்' என்று மாத்ரம் போதம் உண்டாயினும்—அஸத்யத்துடன் பேதம் ஸித்திக்கிறது. 'ஞானம்' என்னும் பதத்தால் அஜ்ஞானபேதமும், 'அனந்தம்' என்னும்பதத்தால் பரிச்சின்னபேதமும் ஸித்திக்கிறதால் ஸத்யம், ஞானம், அனந்தம் என்னும் மூன்று பதங்களும் ஆவஶ்யகமே.

வா. வ:—ஸத்யம், ஞானம், அனந்தம் என்னும் மூன்று பதங்களால் எந்தெந்த பேதம் ஸித்திக்கிறது?

பி. வா:— அஸத்ய பேதமும், அஜ்ஞான பேதமும், பரிச்சின்ன பேதமும் ஸித்திக்கின்றன.

வா. வ:—'ந ஸத்தன்னாஸதுச்யதே' (கீ. 13-12) என்னும் வாக்யத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் சொல்லியிருக்கிறுர்?

பி. வா:—ஸத்வப்ரகாரக புத்திவிஷயனல்ல (ஸத்வமென்னும் புத்திவிஷய பின்னன்) என்றும் அஸத் என்னும் புத்திக்கு விஷயமாகாதவன் என்றும் அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—இதனால் ப்ரஹ்மத்தில் எந்த பேதம் ஸித்தமாகிறது?

பி. வா:— 'அஸத்' என்னும் புத்திவிஷயமான வஸ்துவின் பேதமும் 'ஸத்' என்னும்புத்திக்குவிஷயமானவஸ்துவின் பேதமும் ஸித்திக்கிறது.

வா. வ:—'அன்யத்ர தர்மாத் அன்யத்ராதர்மாத் அன்யத்ராஸ்மாத் க்ருதாக்ருதாத் । அன்யத்ர பூதாச்ச பவ்யாச்ச யத்தத்பஶ்யஸி தத்வத' (காடக) என்னும் வாக்யத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—தர்மத்தின் (காரணத்தின்) பேதத்தோடுகூடிய, அதர்மத்தின் (கார்யத்தின்) பேதத்துடன்கூடிய, பூதபதார்த்தங்களால் (பின்னாயிருக்கும் பதார்த்தங்களைவிட) பின்னனை, முன்னாகும் பதார்த்தங்களால் பின்னனை யாரை நீ தெரிந்துகொண்டிருக்கிறாயோ அவனைச் சொல்லென்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—இந்த மந்த்ரத்தால் எந்தெந்த பேதங்கள் ஸித்தமாயின?

பி. வா:—காரண பதார்த்தங்களால் பேதம், கார்ய பதார்த்தங்களால் பேதம், பின்னமாயிருக்கும் பதார்த்தங்களால் பேதம், முன்னாகும் பதார்த்தங்களால் பேதம், ஞாத்ருஜ்ஞேய பாவத்தால், ஜீவனுடன் பேதம் இவைகள் ஸித்தமாயின.

வா. வ:—இதென்ன க்ரந்தம்?

கோர்ட்:—மிஸ்டர் தாஸ்! எவ்வளவென்று கேட்கிறீர். கோர்ட்டுக்கு வேறு வேலை யில்லையா? போரும், முடியுங்கள்.

வா. வ:—மஹாப்ரபோ! ப்ரதிவாதி பரமாத்மாவிடத்தில் எந்த பேதமுமில்லை என்று சொல்லுகிறார். பரமாத்மாவிடத்தில் பேதமுண்டென்று ப்ரதிவாதிகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட அனேக

ப்ராமாணங்களுண்டென்பதைத் தெரிவிப்பதற்காகக் கேட்கிறோம். வேண்டாமென்றால் நிறுத்திவிடுகிறோம்.

கோர்ட்:—இந்த விசாரம் போதும். வேறு விசாரம் நடக்கட்டும்.

வா. வ:—அப்படியே மஹாப்ரபோ!

ஶாஸ்த்ரிகளே! இந்த வாக்யத்தின் பூர்வவாக்யம், இன்னும் அனேக வாக்யங்கள் ப்ரஹ்மத்தில் அனேக பேதங்கள் உண்டென்று சொல்லிக்கொண்டிருக்க—அவைகளுக்கு விருத்தமாக 'ஏதஸ்மின்னுதர மந்தரம் குருதே' என்னும் வாக்யம் ப்ரஹ்மத்தில் எந்த பேதமும் கிடையாதென்று சொல்லுகிறதென்பது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதில் இல்லை).

---

## வாதி விசாரணை

பி. வா. வ:—ஆசார்யரே! இந்த ஶ்ருதிக்கு தாங்கள் என்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—ப்ரஹ்மத்தில் ஸ்வகத குணக்ரியைகளால் வந்த பேதத்தை 'அந்தரம்' என்னும் பதம் நிஷேதிக்கிறதென்று அர்த்தம் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—விஷ்ணுதாஸாசார்யரே! ஆஹா! ஸ்வகதபேதத்தை நிஷேதிக்கிறதென்னும் இந்த நவீன அர்த்தம் தங்கள் புத்தியில் எப்படித் தோன்றிற்று?

வாதி:—ஶாஸ்த்ரத்தைப் பாராதவருக்கு இந்த அர்த்தம் புதியதாயிருந்தாலும்-நிரந்தரம் த்வைதாத்வைத ஶாஸ்த்ரவிசாரத்தைச் செய்துகொண்டிருப்பவர்களுக்கு இந்த அர்த்தம் புதியதல்ல. 'வ்ருக்ஷஸ்ய ஸ்வகதோ பேத: பத்ரபுஷ்ப பலாதிபி:' வ்ருக்ஷத்தில் பத்ரபுஷ்ப பலாதிகளால் எந்த பேதமுண்டோ (ஸ்வகத பேதமுண்டோ) அப்படியே ப்ரஹ்மத்திலும் ஸ்வகதமான குணாதிகளால் பேதமுண்டோ என்னும் சங்கை உண்டாகவே-'ஏகமேவாத்விதீயம்' என்னும் வாக்யத்திலிருக்கும், "'ஏகம்' என்னும்

பதத்தால் அந்த ஸ்வகதபேதத்தை நிஷேதிக்கிறதென்று அத் வைதிகளே சொல்லியிருக்கிறபடியால் இது புதியதல்ல.

---

## பிரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) My Lord! 'ஏதஸ்மின்னுதர மந்தரம் குருதே அத தஸ்ய பயம் பவதி' என்னும் வாக்யம் பரமாத்மாவிடத்தில் யார் சற்றாகிலும் பேதத்தைக்காணுகிருனே, அவனுக்கு பயமுண்டாகிறது என்று பேதத்தைத் தெரிந்துகொண்டவனை நிந்தித்துக்கொண்டே, பேதத்தை நிஷேதிக்கிறது. ஆகையால் ஜீவப்ராஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேம்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ஏத்ஸ்மின்னுதர மந்த்ரம்' என்னும் வாக்யத்தின் பூர்வோத்தர வாக்யங்களாலும், இதர வாக்யங்களாலும் பரமாத்மாவிடத்தில் அநேக பேதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஶங்கராசார்யரும்—அந்த வாக்யங்கள் அநேக பேதங்களைச் சொல்லுகின்றனவென்று சொல்லியிருக்கிறபடியால், பேதமேயில்லை என்று நிஷேதிப்பதற்கு ஸாத்யமில்லாததால் ஸங்கோசம் செய்யவேண்டியது ஆவஶ்யகமாயிருக்கிறபடியால், 'ஏகமேவாத்விதீயம்' என்னும் ஶ்ருதியிலிருக்கும் 'ஏவ' என்னும் பதத்திற்கு ஸ்வகதபேதராஹிதனென்று எப்படிஅர்த்தம் செய்யவேண்டுமோ, அப்படியே ஸ்வகதபேதத்தை நிஷேதிக்கிறது (குணக்ரியாரூபாதிகளால் பரமாத்மாவுக்கு பேதத்தை நிஷேதிக்கிறது என்று அர்த்தம் செய்யவேண்டும். ஆகையால் இந்த வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைத் தெரிவிப்பதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

ப்ர. வா. எ. 13.

## த்விதீயாத்வை பயம் பவதி என்னும் ஶ்ருதி விசாரணை.

---

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'த்விதீயாத்வை பயம் பவதி' (ப்ரு. 1-4-2) என்னும் ஶ்ருதி ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை எப்படித் தெரிவிக்கிறது?

பி. வா:—இரண்டாவது வஸ்துவால் பயமுண்டாகிறதென்று சொல்லிக்கொண்டே, ப்ரஹ்மாதிரிக்தமான த்விதீய வஸ்துவே இல்லை என்று சொல்லி ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைத் தெரிவிக்கிறது.

### க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—'வ்யாக்ராத் பயம் பவதி' 'ஸர்பாத் பயம் பவதி' என்னும் வாக்யங்களுக்கர்த்தமென்ன?

பி. வா:—புலியால் பயமுண்டாகிறது, ஸர்ப்பத்தால் பயமுண்டாகிறதென்று அர்த்தம்.

வா. வ:—இந்த வாக்யங்களால் புலிகளேயில்லை, ஸர்ப்பங்களேயில்லை என்று ஸித்திக்கிறதா?

பி. வா:—புலிகள், ஸர்ப்பங்கள், ப்ரத்யக்ஷஸித்தமாயிருக்கிறபடியால், புலிகளேயில்லை, ஸர்ப்பங்களேயில்லை என்று ஸித்திக்காது.

வா. வ:—'த்விதீயாத்வை பயம் பவதி' என்னும் வாக்யமும் 'வ்யாக்ராத்பயம் பவதி' என்னும் வாக்யமும் ஒரே விதமானதல்லவா?

பி. வா:—ஒரே விதமானதுதான்.

வா. வ:—'வ்யாக்ராத் பயம் பவதி' என்னும் வாக்யத்தால் புலியில்லை என்று ஸித்திக்காமற்போனால் 'த்விதீயாத்வை பயம் பவதி' என்னும் வாக்யத்தால் த்விதீய வஸ்துவேயில்லையென்று எப்படி ஸித்திக்கும்?

பி. வா:—'த்விதீயாத்வை பயம் பவதி' என்னும் வாக்யத்தால் இரண்டாவது வஸ்துவில்லை என்று ஸித்திக்காமற் போயினும்—'யன்மதன்யன்னாஸ்தி கஸ்மாத் பிபேமி' (ப்ரு. 1-4-4) என்னும் பூர்வ வாக்யத்தில், மதன்யத்=என்னால் பின்னமான வஸ்துவே யில்லாததினால் நான் எந்த பதார்த்தத்தால் பயப்பட வேண்டும், என்று சொல்லியிருக்கிறபடியால் அந்த வாக்யத்தால் த்விதீய வஸ்த்வபாவம் ஸித்திக்கிறதால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த வாக்யத்திற்கு ஶங்கர பாஷ்யத்தைப் பார்த்திருக்கிறீரா?

பி. வா:—பார்த்திருக்கிறோம். * 'யத்யஸ்மாத்' என்னும் வாக்யம்.

வா. வ:—இந்த வாக்யத்திற்கபிப்ராய மென்ன?

பி. வா:—ப்ரதித்வந்த்வீபூதம் = எனக்கு விரோதியான இரண்டாவது வஸ்துவேயில்லை. எனக்கு விநாஶத்திற்குக் காரணமான வஸ்துவேயில்லை யாகையால் நான் எதற்காகப் பயப்பட வேண்டுமென்று அர்த்தம்.

வா. வ:—இந்த பாஷ்யத்தால் த்விதீய வஸ்துவே பயத்திற்குக் காரணமென்று ஸித்திக்கிறதா? விரோதியான த்விதீயவஸ்து பயத்திற்குக் காரணமென்று ஸித்திக்கிறதா?

பி. வா:—விரோதியான த்விதீய வஸ்துவே பயத்திற்குக் காரணமென்று ஸித்தமாகிறது.

வா. வ:—விரோதியான த்விதீயவஸ்து பயத்திற்குக் காரணமாயின்—நீங்கள் சொல்லுவதைப்போல் விரோதியான இரண்டாவது வஸ்து இல்லை என்று ஸித்தமாகிறதென்று சொல்லவேண்டி இருக்க த்விதீய வஸ்துவே யில்லை என்று ஸித்திக்கிறதென்று சொல்வதெப்படிப் பொருந்தும்?

* யத்யஸ்மான்மத்தோன்யதாத்மவ்யதிரேகேண வஸ்த்வந்தரம் ப்ரதித்வந்த்வீபூதம் நாஸ்தி தஸ்மின்னாத்மவிநாஶ ஹேத்வபாவே கஸ்மான்னு பிபேமீதி (ப்ரு. பா. 1-4-2)

பி. வா. வ:—ஆசார்யரே! ஶங்கராசார்யரிட பாஷ்யத்தால் இரண்டாவது வஸ்துவே யில்லை என்று ஸித்திக்காமற்போயி னும்—ஐக்யம் ஶ்ருதி ஸித்தமோ அல்லவோ என்னும் விசாரம் செய்யுங்கால் 'யன்மதன்யன்னாஸ்தி' என்னும் வாக்யத்தால் என்னால் (சதுர்முகனால்) பின்னமான வஸ்துவே இல்லையென்று சதுர்முகர் சொல்லுகிறாரென்று ஸித்திக்கிறதால் இரண்டாவது வஸ்துவேயில்லை என்று சொல்லுவது பொருந்தும்.

வா. வ:—Mr. ஶர்மா! தாங்கள் இக்காலத்திய லௌகிகரா யிருக்கிறீர். பால்யத்திலிருந்து ஹூணை வித்யாப்யாஸத்தால் குருகளான சங்கராசார்யரின் வாக்யத்தில் விஶ்வாஸம் குறைந்திருப்பதால் தாங்களிப்படிச் சொல்லலாம். உங்கள் கக்ஷிக்காரரான கங்காதரஶாஸ்த்ரியார் அப்படிச் சொன்னால் அதற்கு நாங்கள் பதில் சொல்லுகிறோம்.

பி. வா:—எங்கள் அத்வைதமதப்ரகாரம் அகண்டசிதானந்த ப்ரஹ்மஸ்வரூபரான எங்களுக்கு 'ந ஶிஷ்யோ ந குரு:' என்று சொல்லியிருப்பதை யனுஸரித்து — குரு இல்லை, ஶிஷ்யனில்லை யாகையால், ஶங்கராசார்யரின் வாக்யமப்படியிருக்கட்டும், பிறகு விசாரிப்போம். 'யன்மதன்யன்னாஸ்தி' என்னும் வாக்யத்தால் த்விதீய வஸ்துவே யில்லை என்று ஸித்திக்கிறதா? இல்லையா?

வாதி:—த்விதீய வஸ்துவே பயஜனகமானதால், த்விதீய வஸ்துவேயில்லை என்றுசொல்வதில் ஶ்ருதிக்கபிப்ராய மிருந்தால்-'ஸ வை நைவ ரேமே தஸ்மாதேகாகீ ந ரமதே ஸ த்விதீய மைச்சத்' என்னும் உத்தர வாக்யத்தில் அந்தசதுர்முகப்ரஹ்மா (தானொருவரே யிருந்து இரண்டாவது வஸ்துவே யில்லாததால்) ஸுகப்படவில்லை. ஒருவனே யிருந்தால் ஸுகமுண்டாவதில்லை. ஆகையால் உலகத்தில், ஏகாகீ = ஒருவனேயிருக்கும் மனிதன் ஸுகத்தையடையமாட்டான். ஆகையால் அந்த சதுர்முகர் ஸுகத்திற்காக இரண்டாவது வஸ்துவை யபேக்ஷித்தார் என்று ஏன் சொல்லுகிறது? (சொல்லக்கூடாது) ஆகையாலிரண்டாவது வஸ்து ஸுகத்திற்குக் காரணம். விரோதியான இரண்டாவதுவஸ்து பயத்திற்குக் காரணமென்று, ஶ்ருதிக்கபிப்ராயமென்று சொல்ல வேண்டுமல்லவா?

பி. வா:—ஆசார்யரே! குடிகாரர்கள் (அபேயத்தில் நிஷ்டை யுள்ளவர்கள்) ஸுகார்த்தமாக அபேயத்தை (மத்யத்தை) அபே க்ஷிக்கிறார்கள். அவர்கள் அபேக்ஷிப்பதினாலேயே அபேயபானம் ஸுகத்திற்குக் காரணமென்று சொல்லக்கூடுமோ? அதைப் போலவே அவிவேகியான சதுர்முகன் ஸுகத்திற்காக த்விதீய வஸ்துவை யபேக்ஷித்தமாத்திரத்தில் இரண்டாவது வஸ்து ஸுக ஸாதனமாகுமா? எப்பொழுதுமாகாது. த்விதீய வஸ்து து:க ஸாதனமேயாகையால் த்விதீயவஸ்து பயத்திற்குக் காரணமே யல்லாது ஸுகத்திற்குக் காரணமாகாது. ஆகையால் 'யன்மதன் யன்னாஸ்தி' 'த்விதீயாத்வை பயம் பவதி' என்னும் வாக்யங்கள் த்விதீய வஸ்து யில்லை என்று சொல்லுகிறதென்றே சொல்ல வேண்டும்.

வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! 'ஞான மப்ரதிகம் யஸ்ய வைராக்யஞ்ச ஜகத்பதே: | ஐஶ்வர்யஞ்சைவ தர்மஶ்ச ஸஹஸித்தம் சதுஷ்டயம்' (ப்ரு. ஶா. பா. 1-4-2) என்னும் ஸ்ம்ருதியில் ஸ்வபாவஸித்தமான ஞானம், ஐஶ்வர்யம், தர்மம், வைராக்யம், இவைகளால் கூடியவரென்று ஸித்தமாயிருக்கும் சதுர்முகருக்கு அபேயத்தில் நிஷ்டையுள்ள மனிதனை த்ருஷ்டாந்தமாகக்கொடுத்து, அவிவேகி என்று சொல்லுகிறவர் அவிவேகியோ? அல்லது சதுர்முகற் அவிவேகியோ கோர்ட்டார் கவனிக்க வேண்டும்.

கோர்ட்:—இந்த க்ரிமினல் கேஸ் விசாரணை பிறகு விசாரிப் போம். இப்போது ஸிவில் கேஸ் நடக்கட்டும்.

வா. வ:—அப்படியே மஹாப்ரபோ! ஶாஸ்த்ரிகளே! 'யன் மதன்யன்னாஸ்தி கஸ்மாத் பிபேமி' என்னும் விசாரம் யாருடையது?

பி. வா:—சதுர்முகருடையதே.

வா. வ:—இந்த வாக்யத்தாலென்ன ஸித்தமாகிறதென்று உங்களபிப்ராயம்?

பி. வா:—சதுர்முகன் தன்னைவிட வேறான வஸ்துவில்லை, ஏன் பயப்படவேண்டுமென்று விசாரம் செய்திருப்பதால் இரண்

டாம் வஸ்துவே யில்லையென்று ஸித்தமாகிறதென்று எங்கள் அபிப்ராயம்.

வா. வ:—சதுர்முகர் விவேகியோ அல்லது அவிவேகியோ? விவேகியானால், 'ஸ வை நைவ ரேமே.........ஸ த்விதீயமைச்சத்' என்னும் வாக்யம் விவேகி வாக்யமாய் த்விதீயவஸ்துவுக்கு ஸுக காரணத்வமே ஸித்தமாய் பயகாரணத்வம் போகிறது. அவிவேகியானால் 'யன்மதன்யன்னாஸ்தி' த்விதீய வஸ்துவேயில்லை. நானேன் பயப்படவேண்டுமென்னும் சதுர்முகனின் விசாரம் அவிவேகி விசாரமாய் த்விதீயவஸ்துவுக்கு பயகாரணத்வம் போகிறது. இப்படி 'உபயத: பாஶாரஜ்ஜு:' என்னும் நியாயத்தால் த்விதீய வஸ்துவுக்கு பயகாரணத்வம் ஸித்திப்பது எப்படிப் பொருந்தும்? ஶாஸ்த்ரிகளே!

பி. வா:—(பதில் இல்லை).

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'யன்மதன்யன்னாஸ்தி கஸ்மான்னுபிபேமீதி..............த்விதீயாத்வை பயம் பவதி' (ப்ரு. 1-4-2) என்னும் வாக்யம் என்னைவிட வேறான இரண்டாம் வஸ்து விருந்தால்தான் பயமுண்டாகிறது. இரண்டாவது வஸ்துவே யில்லையாகையால் நானேன் பயப்படவேண்டும் என்று த்விதீய வஸ்துவுக்கே பயகாரணத்வத்தைத் தெரிவித்துக் கொண்டே, இரண்டாவது வஸ்துவே யில்லையென்று இந்த ஶ்ருதி சொல்லி, ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! விரோதியான (தனக்குப்பாதகமான) இரண்டாம் வஸ்துவினால் பயமுண்டாகிறது ஸாமான்யத: இரண்டாவது வஸ்துவினாலேயே பயமுண்டாவதில்லை. அப்படி இரண்டாவது வஸ்துவே பயத்திற்குக் காரண

மாயின்—சதுர்முகர் தனக்கு ஸுகத்திற்காக இரண்டாவது வஸ்துவை விரும்பமாட்டார். ஆகையால் விரோதியான இரண்டாவது வஸ்து பயஜனகமானது. ஶங்கராசார்யார் ப்ரதித்வந்த்வி (விரோதி) யான த்விதீய வஸ்துவே பயஜனகமென்று சொல்லியிருக்கிறபடியால் த்விதீய வஸ்துவே பயஜனகமாகாததால் விரோதியான இரண்டாவது வஸ்து யில்லை என்றே சதுர்முகர் விசாரம் செய்தாரென்று 'த்விதீயாத்வை பயம் பவதி' என்னும் வாக்யத்திற்கு அர்த்தமாகிறபடியால் 'த்விதீயாத்வை பயம் பவதி' என்னும் வாக்யம் த்விதீயவஸ்துவே யில்லையென்று சொல்வதில்லை. 'துஷ்யத்விதி' என்னும் நியாயத்தால் த்விதீய வஸ்துவே பயஜனகமென்று வைத்துக்கொண்டபோதிலும்-ஸர்ப்பம் பயஜனகம், புலி பயஜனகம், என்று சொன்னால், புலியேயில்லை, ஸர்ப்பமேயில்லையென்று எப்படிஸித்திக்காதோ, அப்படியே த்விதீயவஸ்து பயஜனகமென்று சொன்னமாத்திரத்தில் த்விதீய வஸ்துவேயில்லை என்று ஸித்திக்கமாட்டாது.

"சதுர்முகர் அவிவேகியானபடியால் ஸுகத்திற்காகத்விதீய வஸ்துவை இச்சித்தார். வாஸ்தவத்தில்—த்வியதீயவஸ்துவே பயஜனக" மென்று சொல்வது அத்யந்தஅயுக்தம். ஏனென்றால்-'ஞானமப்ரதிகம் யஸ்ய' என்னும் ஶ்ருதியால் ஸ்வபாவஸித்தமான ஞான, வைராக்ய, ஐஶ்வர்ய தர்மங்களால் யுக்தரென்று சொல்லிக்கொள்ளப்படும் சதுர்முகரையே அவிவேகியென்று சொல்பவரின் விவேகமே (புத்தியே) லோகவிலக்ஷணமென்று நான் கோர்ட்டாருக்குத் தெரிவிக்கவேண்டியதில்லை. கோர்ட்டாருக்குத் தெரிந்த விஷயமே. யாராவது அவிவேகியாகட்டும்; சதுர்முகர் விவேகியாயின் 'ஸ வை நைவரேமே......ஸ த்விதீயமைச்சத்' ஒருவனே ஸுகத்தையடையாமல் ஸுகத்திற்காக இரண்டாவதுவஸ்துவை யபேக்ஷித்தபடியால் ஒருவனேயிருந்தால் ஸுகமடைவதில்லை. இரண்டாம் வஸ்துவிருந்தால்தான் ஸுகமாகிறது என்று ஸித்தமாய் இரண்டாம் வஸ்துவுக்கு பயகாரணத்வ முண்டாவதில்லை. சதுர்முகர் அவிவேகியாயின் — இரண்டாம் வஸ்து விருந்தால் தான் பயமுண்டாகிறது. த்விதீய வஸ்துவே இல்லாமலிருக்க எதனால் பயப்படவேண்டுமென்கிற விசாரம் அவிவேகி விசாரமான

தால் த்விதீய வஸ்துவில்லையென்று ஸித்திப்பதில்லை. ஆகையால் இவ்வாக்யம் த்விதீயவஸ்து பயத்திற்குக் காரணமென்றும், த்விதீய வஸ்துவே இல்லை என்றும் சொல்லிக்கொண்டே ஜீவப்ரஹ்மாக்க ளுக்கு ஐக்யத்தைச்சொல்லுகிறதென்பது அத்யந்தஅயுக்தமென் னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

---

ப்ர. வா. எ. 15.

## யோஸாவஸௌ புருஷ: என்னும் ஶ்ருதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யோஸாவஸௌ புருஷ: ஸோஹ மஸ்மி' (ஈஶா. 16) என்னும் வாக்யத்திற்கர்த்தமென்ன? இத ளுல் அபேதம் எப்படி ஸித்தமாகிறது.

பி. வா:—ய: புருஷ: = எந்த புருஷன், அஸௌ = ஆதித்ய மண்டலத்தில் இருக்கிறானே, ஸ: = அந்த புருஷன், அஹமஸ்மி = நானிருக்கிறேன் என்று ஆதித்யமண்டலத்திலிருக்கும் பரமாத்மா நானே (ஜீவனே) என்று அர்த்தமிருப்பதால் பரமாத்மா ஜீவனே என்று ஸித்தமாகிறது.

வா. வ:—'பேதவ்யபதேஶாச்சான்ய:' (ப்ர. ஸூ. 1-1-22) என்னும் ஸூத்ரபாஷ்யத்தில் ஶங்கராசார்யார் என்ன சொல்லி யிருக்கிறார்?

பி. வா:—'ய ஆதித்யே திஷ்டன் ஆதித்யாதந்தரோயம்' (ப்ரு. 3-7-9) என்னும் வாக்யம் ஆதித்யனுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவினால் பேதம் சொல்லுகிறபடியால் 'ய ஏஷோந்தரா தித்யே' (சாம்.) என்னும் வாக்யம் ஆதித்யன் அந்தர்யாமியான பர மாத்மாவினால் பின்னன் என்று சொல்லுகிறதென்று சொல்லி யிருக்கிறார்.

வா. வ:—'ய ஆதித்யே திஷ்டன்' என்னும் ஶ்ருதி ஆதித்ய னுக்கு பரமாத்மாவினால் பேதத்தைச் சொல்லுகிறதென்னும் விஷ யத்தை யார்யார் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள்?

பி. வா:—ஸூத்ரகாரரான பாதராயணரும், எங்கள் ஶங்க ராசார்யரும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள்.

வா. வ:—இருவரும் உமக்கு ஆப்தரேயல்லவா?

பி. வா:—ஶிவஶிவா! இப்படிக் கேட்கலாமா? இப்படிக் கோர்ட்டில் கேட்கக்கூடாது. நாங்கள் காதாலும் கேழ்க்கக் கூடாது. 'ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி:' பரமாப்தர்கள், பரம ஆப்தர்கள்.

வா. வ:—'பேதவ்யபதேஶாச்ச' என்று சொல்லிய ஸூத்ர காரர், ஶங்கராசார்யார், இவரிருவருக்கும் ஸம்மதமானபேதத்தை நீங்கள் அங்கீகரிக்க வேண்டியதேயல்லவா?

பி. வா:—பேதத்தை அங்கீகரிக்கிறோம்.

வா. வ:—'ய ஆத்மனி திஷ்டன்' என்னும் ப்ருஹதாரண்யக வாக்யமென்ன சொல்லுகிறதென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—ஜீவனுக்கும், ஜீவாந்தர்யாமியான பரமாத்மாவுக்கும் பேதம் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன்' என்னும் 3-7 15-வது ப்ருஹதாரண்யக வாக்யமென்ன சொல்லுகிறதென்று சொல்லிருயிக்கிறார்?

பி. வா:—ஸர்வப்ராணிகளுக்கும் பரமாத்மாவுக்கும், பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—'ய: ப்ராணே திஷ்டன்' என்னும் வாக்யமென்ன சொல்லுகிறதென்று சொல்லியிருக்கிறார்?

கோர்ட்:—எத்தனை வாக்யங்களை விசாரிக்கிறீர்? போதும், முடியுங்கள்.

வா. வ:—மஹாப்ரபோ! பேதத்தைச் சொல்லும் வாக்யங்களனேகமுள. போதுமென்று உத்திரவாயின் விட்டுவிடுகிறோம்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யோஸாவஸௌ புருஷ: ஸோஹமஸ்மி' என்னும் வாக்யம் ஆதித்யாந்தர்கத பரமாத்மாவென்று சொன்னபிறகு மேற்சொன்ன ஆதித்யனுக்கு பரமாத்மாவுடன் பேதம் ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—ஸித்திக்கிறது.

வா. வ:—'ய ஆத்மனி' என்னும் வாக்யம் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதத்தைச் சொல்லுகிறதல்லவா?

பி. வா:—பேதத்தைச் சொல்லுகிறது.

வா. வ:—'ரூபம்......தத்தே பஶ்யாமி' என்னும் பூர்வவாக்யம் த்ரஷ்ட்ரு த்ரஷ்டவ்ய பாவத்தால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் சொல்லுகிறதல்லவா?

பி. வா:—பேதத்தைச் சொல்லுகிறது.

வா. வ:—அப்படியாயின்—'புருஷ: ஸோஹமஸ்மி' என்னும் வாக்யம் ஆதித்யாந்தர்கதனை பரமாத்மாவுக்கு ஜீவனுடன் அபேதம் (ஐக்யம்) சொல்லுகிறதென்பது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—'ய ஆத்மனி திஷ்டன் ய ஆதித்யே திஷ்டன்' இத்யாதி வாக்யங்கள் வ்யாவஹாரிக பேதத்தைச் சொல்லுகின்றன. பாரமார்த்திக பேதத்தைச் சொல்லாததினால் ஐக்யம் பொருந்துகிறது. ஆகையால் விரோதம் வருகிறதில்லை.

கோர்ட்:— அடிக்கடி வ்யாவஹாரிக மென்றும் பாரமார்த்திகமென்றும் சொல்லவேண்டாம். வேறு ஸமாதானமிருந்தால் சொல்லும்.

பி. வா:—(பதில் இல்லை).

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ஆதித்யாந்தர்கதனும், அந்தர்யாமியுமான பரமாத்மா விஶிஷ்டனா? ஶுத்தனா?

பி. வா:—விஶிஷ்டனே.

வா. வ:— 'அஹம்' பதத்தினால் போத்யனானவன் விஶிஷ்டனா, ஶுத்தனா?

பி. வா:—விஶிஷ்டனே.

வா. வ:—அத்வைத மதத்தில் விஶிஷ்டத்திற்கு விஶிஷ்டத்தோடு ஐக்யம் பொருந்துகிறதா? இல்லையா?

பி. வா:—விஶிஷ்டத்திற்கு விஶிஷ்டத்தோடு ஐக்யம் பொருந்துகிறதில்லை,

வா. வ:— ஆதித்யாந்தர்யாமியான விஶிஷ்டனான பாமாத்மாவால் 'அஹம்' பதத்தால் போத்யனான, அந்த:கரண விஶிஷ்டனான ஜீவனுக்கு ஐக்யம் பொருந்துகிறதா? இல்லையா?

பி. வா:— அந்தர்யாமியான விஶிஷ்டனான பரமாத்மாவுக்கு விஶிஷ்டனான ஜீவனால் ஐக்யம் பொருந்துவதில்லை.

வா. வ:—'யோஸாவஸௌ புருஷ: ஸோஹமஸ்மி' என்னும் வாக்யம் விஶிஷ்டனான பரமாத்மாவுக்கு விஶிஷ்டனான ஜீவனுடன் ஐக்யத்தைச் சொல்லுகிறதென்று எப்படிச் சொன்னீர்?

பி. வா:— விஶிஷ்டர்களுக்கு ஐக்யம் பொருந்தாவிடினும்— லக்ஷணாவ்ருத்தியினால் போத்யமான அந்தர்யாமியான ஶுத்த சித்துக்கு ஶுத்த ஜீவ சித்துடன் ஐக்யத்தைப் போதிக்கிறது.

வா. வ:—லக்ஷணா வ்ருத்தியினால் ஶுத்த சித்தினுடைய போதமே (அறிவே) உண்டாவதில்லை. லக்ஷணாவ்ருத்தியால் ஶுத்த சித்தினுடைய அறிவு உண்டாயினும்—சித் சித் என்று சொல்ல வேண்டிய ஆவஶ்யகமில்லை. ஞாதஜ்ஞாபகத்வம் வருகிறது. இதர ப்ரமாணங்களின் அனுகூலதையுமில்லை. வேறு ப்ரமாணங்களுக்கு அனுகூலமான வேறு அர்த்தத்தைச் சொல்வதற்கும் வருகிறது. இவைகளே முதலான, தத்வமஸ்யாதி வாக்யவிசாரங்களில் சொல்லிய தோஷங்கள் வருகின்றன. அதற்கென்ன பரிஹாரம் சொல்லுகிறீர்?

பி. வா:—(பதில் இல்லை).

## வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! இந்த வாக்யத்திற்கு நீங்களென்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—'யோஸாவஸௌ புருஷ: ஸோஹமஸ்மி' அஹம் = நான், ய: = எந்த, அஸௌ = ஆதித்யாந்தர்கதனான ஆதித்ய நியாமகனான பரமாத்மா, (உண்டோ) 'ஸ:' ததாயத்த: = தததீனனாய், அஸ்மி = இருக்கிறேன். (எப்படி ஆதித்யாதிகள் பரமாத்மாதீனராயிருக்கிறார்களோ, அப்படியே நான் பரமாத்மாதீனனாயிருக்கிறேன்) என்று அர்த்தம்.

பி. வா. வ:—ஆசார்யரே! 'ஸ:' என்னும் பதத்திற்கு பரமாத்மா என்று அர்த்தமாய்க்கொண்டிருக்க—ஸ: = பரமாத்மா யத்த: என்னும் அர்த்தத்தை எப்படி செய்தீர்?

வாதி:—* 'ஏதஸ்யைவ ஸர்வே ரூபமபவன்' (ப்ரு. 1-5-21) என்னும் ஶ்ருதிக்கு 2-4-17—19-வது ப்ரஹ்மஸூத்ர பாஷ்யங்களில் பூர்வ பக்ஷத்திற்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறார்? ஸித்தாந்தத்திற்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—'ஏதஸ்யைவ ஸர்வே ரூபமபவன்' என்னும் ஶ்ருதியில் இந்த்ரியத்திற்கு ப்ராணரூபத்வம் (ப்ராணாபேதம்) சொல்லியிருக்கிறபடியால், ஸர்வே = ஸமஸ்தமான இந்த்ரியங்கள் (ப்ராணங்கள்) முக்யப்ராணனின் ஸ்வரூபம் (முக்யப்ராணனால் அபின்னம்) என்று பூர்வபக்ஷம் செய்துகொண்டு—முக்ய ப்ராணனுக்கு இந்த்ரியங்களால் பேதத்தை யனேக ஶ்ருதிகள்சொல்லுகின்றன. அவைகளில் பரஸ்பர விருத்த தர்மங்களிருக்கின்றன. ஆகையால் 'ஏதஸ்யைவ ஸர்வே ரூபமபவன்' என்னும் ஶ்ருதி இந்த்ரியங்களுக்கு ப்ராணங்களோடு அபேதத்தைச் சொல்லுவதைப்போல் தோன்றினும் — அந்த அபேதம் பாதிதமாகையால் ஸமஸ்த இந்த்ரியங்கள் ப்ராணாதீனமாயின, என்று அர்த்தம் சொல்ல வேண்டுமென்று அர்த்தம் செய்திருக்கிறார்.

---

* ப்ராணஸ்யைவ வ்ருத்தய ஏகாதஶேந்த்ரியாணி ந தத்வாந்தராணீதி ப்ராப்தம் (பூர்வபக்ஷ:) ஏவம் ப்ராப்த உச்யதே (ஸித்தாந்த:) முக்யாத் ப்ராணாத் தத்வாந்தராணீந்த்ரியாணி, தத்ர தத்ர பேதேன வ்யபதேஶாத் ம்ருத்யுப்ராப்தாப்ராப்தத்வ லக்ஷணவிருத்ததர்மஸம்ஸர்க ஶ்ருதே:। அர்த்தக்ரியா பேதாச்ச......யாபி ச ப்ராணரூபதாமிந்த்ரியாணாமபிததாதி ஶ்ருதி:, தத்ராபி பௌர்வாபர்யாலோசனயாம் பேத ஏவ ப்ரதீயத இத்யுக்தம் பாஷ்யக்ருதா। தஸ்மாத் பஹுஶ்ருதி விரோதாத் பூர்வாபரவிரோதாச்ச ப்ராணரூபதாபிதானமிந்த்ரியாணாம் ப்ராணாயத்ததயா பாக்தம் கமயிதவ்யம். (ப்ர. ஸூ. பாமதி. 2-4-17)

யதுக்தம் 'த ஏதஸ்யைவ ஸர்வே ரூபமபவன்' (ப்ரு. 1-5-21) இதி ஶ்ருதே: ப்ராண ஏவேந்த்ரியாணீதி, தத்யுக்தம்। தத்ராபி பௌர்வாபர்யாலோசனாத்பேத ப்ரதீதே:।... .....தஸ்மாத்ததவிரோதேன வாகாதிஷு பரிஸ்பந்தலாபஸ்ய ப்ராணாயத்தத்வம் தத்ரூபபவனம் வாகாதீனாமிதி மந்தவ்யம் ந தாதாத்ம்யம் (ப்ர. ஸூ. ஶங்கரபாஷ்யம் 2-4-19)

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ஶங்கராசார்யரே முதலானவர்கள் இந்த்ரியங்களுக்கு முக்ய ப்ராணுபேதத்தைச் சொல்லும் ஶ்ருதிக்கு முக்யப்ராணுதீனங்களென்று எப்படி அர்த்தம் செய்தார்கள்?

பி. வா:—இந்த்ரியாதிகளுக்கு முக்யப்ராணனுல் அபேதம் சொல்லுவதைப்போல் தோன்றும் ஶ்ருதிக்கு அபேதத்தில் தாத்பர்யமென்று சொன்னுல் பேதத்தைச் சொல்லும் அனேகஶ்ருதிகளுக்கு விரோதமும், பூர்வாபர விரோதமும் வருகிறது. விருத்த தர்மங்களிருக்கின்றன. ஆகையால் அபேதம் பொருந்துகிறதில்லை. ஆகையால் இந்த்ரியங்களுக்கு ப்ராணுதீனதவத்தைச் சொல்லியிருக்கிறுர்.

வா. வ:—'காமோஸ்மி' என்னும் கீதா வாக்யத்திற்கு ஶங்கராசார்யார் சாந்தோக்ய பாஷ்யத்தில் என்ன அர்த்தம் சொல்லியிருக்கிறுர்?

பி. வா:—காமத்திற்கு ஸ்வாமியென்று அர்த்தம் சொல்லியிருக்கிறுர்.

வா. வ:—காமோஸ்மி = காமரூபனுயிருக்கிறேன். (காமாபின்னனுயிருக்கிறேன்) என்று அர்த்தமாவதைவிட்டு இப்படி ஏன் அர்த்தம் செய்தார்?

பி. வா:—காமம் பரதந்த்ரம், ஜன்யம், ஈஶ்வரன், ஸ்வதந்த்ரன், அஜன்யன் இப்படிஇருவருக்கும் பரஸ்பர விருத்த தர்மங்களிருக்கிறபடியால், ஐக்யம் பொருந்தாததினுல், 'காமோஸ்மி' என்னும் பதத்தினுல் கிருஷ்ணனுக்கு காமாபேதம் தோன்றினும், காமத்திற்கு ஸ்வாமி என்றே அர்த்தம் செய்திருக்கிறுர்.

வா. வ:—'அஸன்னேவ ஸ பவதி' என்னும் வாக்யத்திற்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறுர்?

பி. வா:—அஸத் ஸமன் என்று அர்த்தம் செய்திருக்கிறுர்.

வா. வ:—அந்த பதங்களுக்கு முக்யார்த்தமென்ன ஆகிறது?

பி. வா:—அஸத்தாகிறுன் என்று அர்த்தமாகிறது.

வா. வ:—அந்த அர்த்தத்தை விட்டு வேறு அர்த்தத்தை ஏன் செய்திருக்கிறுர்?

பி. வா:—அஸத்தாகிறுன் என்கிற அந்த அர்த்தம் பாதித மாகிறபடியால் அஸத்ஸமனென்று அர்த்தம் செய்திருக்கிறுர்.

வா. வ:—அஹம் = நான், ஸ: = ஆதித்யாந்தர்கத பரமாத்மனே, அஸ்மி = இருக்கிறேனென்னும் அர்த்தம் பாதிதமோ? அபாதிதமோ?

பி. வா:—ஆதித்யாந்தர்கதனுன பரமாத்மா நானேயிருக்கிறேனென்னும் அர்த்தம் பாதிதமே.

வா. வ:—இந்த்ரியங்கள் முக்யப்ராணரூபமாயினரென்னும் அர்த்தம் பாதிதமானதால் இந்த்ரியங்கள் முக்யப்ராணுதீனமாயினவென்றும், 'காமோஸ்மி' என்னும் பதத்திற்கு காமரூபனென்னும் அர்த்தம் பாதிதமானதால் காமத்திற்கு ஸ்வாமி என்றும், 'அஸத்' என்னும் பதத்திற்கு அஸத்ஸமஃ என்றும், ஶங்கராசார்யர், பாமதீகாரர் முதலான அத்வைதிகள் எப்படி அர்த்தம் செய்திருக்கிறுர்களோ, அப்படியே, அஹம் = நான் பரமாத்மா என்னும்அர்த்தம் பாதிதமானதினுல், ஸ: = பரமாத்மாதீனனுய், அஸ்மி = இருக்கிறேனென்று அர்த்தம் செய்யவேண்டியதல்லவா?

பி. வா:—அப்படியும் அர்த்தம் செய்யலாம்.

வா. வ:—அதினுல் அபேதம் (ஐக்யம்) ஸித்திக்காதல்லவா?

பி. வா:—ஸித்திக்காது.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'யோஸாவஸௌ புருஷ: ஸோஹமஸ்மி' என்னும் ஈஶாவாஸ்ய வாக்யம் ஆதித்யாந்தர்கதனுன பரமாத்மா நானே (ஜீவனே) என்று சொல்லுகிறபடியால் இந்த வாக்யத்தால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் ஸித்தமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'பேதவ்யப தேஶாச்ச' என்னும் ஸூத்ர வ்யாக்யானத்தில் 'ய ஆதித்யே திஷ்டன்' என்னும் வாக்யம் ஆதித்யனுக்கும், அவனுள்ளி ருக்கும் பரமாத்மாவுக்கும் பேதத்தைச் சொல்லுகிறதென்று ஸூத்ரகாரர் சொல்லியிருக்கிறாரென்று ஶங்கராசார்யார் எப்படி வ்யாக்யானம் செய்திருக்கிறாரோ, அப்படியே இந்த வாக்யம் பரமாத்மாவுக்கு ஆதித்யாந்தர்கதத்வத்தைச் சொல்லிக் கொண்டே, ஆதித்யனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதத்தைச் சொல்லுகிறது.

'அஹம்' பதார்த்தம் விஶிஷ்டமாயிருப்பதினாலும் 'ஸ:' என்னும் பதத்திற்கு விஶிஷ்டமானதென்று அர்த்தமிருப்பதினாலும், 'அஹம்' என்னும் பதத்தாலும், 'ஸ:' என்னும் பதத்தாலும் போத்யரான ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் பொருந்துவதில்லை. லக்ஷணவ்ருத்தியால் 'அஹம்' பதபோத்யமான சித்துக்கு 'ஸ:' என்னும் பதத்தால் போத்யமான சித்துடன் ஐக்யத்தைச் சொல்லுகிறது என்று சொல்லின்—'தத்வமஸி' என்னும் வாக்ய விசாரகாலத்தில் சொல்லப்பட்ட எல்லா தோஷங்களும் இந்த வாக்யத்திற்கு வருகிறது. ஶங்கராசார்யரே 'காமோஸ்மி' என்னும் கீதாவாக்யத்தில் காமத்திற்கு கிருஷ்ணனோடு அபேதம் தோன்றினும், அது பாதிதமானதினால் கிருஷ்ணன் காமஸ்வாமி (காமம் கிருஷ்ணாதீனம்) என்று அர்த்தம் செய்திருக்கிறார். மற்றும் — 'ஏதஸ்யைவ ஸர்வே ரூபமபவன்' என்னும் ஶ்ருதியில் இந்த்ரியங்களுக்கு ப்ராணாபேதம் (ஐக்யம்) தோன்றினும் — ஐக்யத்தில் தாத்பர்யமுண்டென்று சொல்லின்—பேதத்தைச் சொல்லும் அனேக ஶ்ருதிகளின் விரோதமும் பூர்வாபர விரோதமும் வருகிறது. விருத்த தர்மங்களுமிருக்கின்றன. இப்படியிருப்பதால் இந்த்ரியங்களுக்கு ப்ராணாபேதத்தைச் சொல்லக்கூடாது. இந்த்ரியங்கள் ப்ராணாதீனமென்று சொல்லவேண்டுமென்று சொல்லியிருக்கிறார். இவ்விதமாகவே ஐக்யம் தோன்றும் 'அஸன்னேவ ஸ பவதி' 'அஹம் ப்ரஹ்ம, த்வம் ப்ரஹ்ம' இத்யாத்யனேக ஸ்தலங்க

ளில் அபேதம் பாதிதமாகிறபடியால் பேதபரமாக அர்த்தம் செய்திருக்கிறார். ஆகையால் 'அஹம்—ஸ:—அஸ்மி' என்னும் வாக்யத்திற்கும், பேதங்களுக்கு அனுகுணமான, நான் அவனிட அதீனனாயிருக்கிறேன் என்கிற இது முதலிய அனேக அர்த்தங்களைச் செய்வதற்கு வருகிறபடியால் இந்த வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்ய விஷயத்தில் ஆதாரமாவதில்லை. மற்றும் ஆதித்யாதி ஜீவர்களுக்கு பரமாத்மாவுடன் பேதத்தையே சொல்லுகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று கோருகிறோம்.

ப்ர. வா. எ. 16.

## யஸ்மின் ஸர்வாணி என்னும் ஶ்ருதி விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யஸ்மின் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத் விஜானத: । தத்ர கோ மோஹ: க: ஶோக: ஏகத்வமனுபஶ்யத:' (ஈஶ. 7). இந்த மந்த்ரத்திற்கர்த்தமென்ன? இதனாலென்ன ஸித்திக்கிறது?

பி. வா:—யஸ்மின் = எந்த காலத்தில், விஜானத: = பரமாத்மாவைத் தெரிந்துகொள்பவனுக்கு, ஸர்வாணி பூதானி = சதுர்முகப்ரஹ்மா முதலான ஸமஸ்தப்ராணிகளும், ஆத்மைவாபூத் = ஆத்மாவேயாகிறார்களோ அந்த காலத்தில், ஏகத்வமனுபஶ்யத: = அந்த ஏகத்வஜ்ஞானிக்கு ஶோகமேது? மோஹமேது? அவித்யா நாஶமாகிறபடியால் அவித்யா கல்பிதமான ஶோகம் மோஹம், நஷ்டமாகிறதென்று அர்த்தம். இதனால் ஸர்வப்ராணிகளும் ப்ரஹ்மமேயாகிறார்களென்று ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறது.

பி. வா. வ:—இதற்கு பூர்வமந்த்ரத்தைச் சொல்லுங்கள்?

பி. வா:—'யஸ்து ஸர்வாணி பூதான்யாத்மன்யேவானுபஶ்யதி । ஸர்வபூதேஷு சாத்மானம் ததோ ந விஜுகுப்ஸதே' (ஈஶா. 6)

பி. வா. வ:—இதற்கர்த்தமென்ன? இதனாலென்ன ஸித்திக்கிறது?

பி. வா:—எந்தகாலத்தில் ஸன்யாஸியானவன் எல்லாப்ராணிக ளையும், ஆத்மன்யேவானுபஶ்யதி = ஆத்மாவைவிட வேறாக பார்க்கமாட்டானோ; ஸர்வபூதேஷு ஆத்மானம் பஶ்யதி = ஸர்வ ப்ராணிகளிலும் நானே ஆத்மாவென்று பார்க்கிறானோ, அத:= அத்தகைய ஞானமிருப்பதால், ந விஜுகுப்ஸதே = ஜுகுப் ஸையை யடைவதில்லை (தயை செய்வதில்லை. தன்னைவிட கனிஷ்ட னை ஆத்மா யிருந்தாலல்லவோ தயை செய்வது. ஸகலமும் தானேயானதினால் தயைசெய்வதற்குக் காரணமில்லாததால்தயை செய்வதில்லை) என்று அர்த்தம். இதனால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ் டன் ஸர்வேப்யோ பூதேப்யோந்தர: யம் ஸர்வாணி பூதானி நவிதுர் யஸ்ய ஸர்வாணி பூதானி ஶரீரம் ய: ஸர்வாணி பூதான்யந்தரோ யமயதி ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:' என்னும் வாக்ய மெந்த க்ரந்தத்திலிருக்கிறது?

பி. வா:—இந்த வாக்யம் ப்ருஹதாரண்யகோபனிஷத்தின், 3-வது அத்யாயம், 7-வது ப்ராஹ்மணம், 15-வது மந்த்ரத்திலிருக் கிறது.

வா. வ:—இதற்கர்த்தமென்ன? ஸூத்ரகாரரான பாதராய ணரும், அதற்கு பாஷ்யம் செய்த ஶங்கராசார்யாரும் இதனா லென்ன ஸித்திக்கிறதென்று சொல்லியிருக்கிறார்கள்?

பி. வா:—அந்தர்யாமியான பரமாத்மா எல்லா ப்ராணிகளி லிருந்து நியமிக்கிறானென்று அர்த்தம். இந்த வாக்யத்தில் நியம்ய நியாமகபாவமும், ஆதாராதேய பாவமும் சொல்லியிருக்கிறபடி யால் எல்லா ப்ராணிகளோடு பரமாத்மாவுக்கு பேதம் ஸித்த மாகிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:— 'ய ஆத்மனி திஷ்டன், ய ஆதித்யே திஷ்டன், ய: ப்ராணே திஷ்டன்,' இத்யாதி 20 மந்த்ரங்களுக்கு என்ன அர்த் தம் செய்திருக்கிறார்?

பி. வா:—ஆதித்யன், ப்ராணம் முதலிய எல்லா சேதனு சேதனுத்மக ப்ரபஞ்சத்திலிருந்து, அவைகளை நியமிக்கிரு னென்று, சேதனுசேதனுத்மக ப்ரபஞ்சத்திற்கு பரமாத்மா வுடன் பேதத்தைச் சொல்லுகிறதென்று அர்த்தம் செய்திருக் கிருர்.

வா. வ:—'ஸஹோவாச..........ப்ரோதஸ்சேதி' (3-8-7) .........'ஏதஸ்மின்னுகல்வக்ஷரே கார்க்யாகாஸ ஓதஸ்ச ப்ரோதஸ் சேதி' (ப்ரு. 3-8-11) என்னும் மந்த்ரங்களுக்கு அபிப்ராய மென்ன? இவைகளாலென்ன ஸித்தமாகிறது?

பி. வா:—பூதமான = பின்னுண்டாயிருக்கும், முன்னுண்டா கும் எந்த ஸகல ஜகத்தும் ஆகாயத்தில் ஆஸ்ரயித்திருக்கிற தென்று சொல்லுகிருர்களோ அந்த ஸகல ஜகத்துக்கும் ஆதரா மான ஆகாஸம் யாரை ஆஸ்ரயித்திருக்கிறதென்று கேட்டதற்கு சந்திர ஸூர்யாத்யாதாரனுன அக்ஷரநாமக பரமாத்மாவை ஆஸ் ரயித்திருக்கிறது. (ஜகத்துடன்கூடிய ஆகாஸம் பரமாத்மாவிடத்தி லிருக்கிறது) என்று பதிலளிக்கப்பட்டிருக்கிறதென்று அபிப்ரா யம். இதனுல் ஆதாராதேய பாவம் ஸித்தமாகிறது.

வா. வ:—ஸாஸ்த்ரிகளே! ஆதாராதேய பாவத்தால் பேதம் ஸித்திக்கிறதா? அல்லது அபேதம் ஸித்திக்கிறதா?

பி. வா:—ஆதாராதேய பாவத்தால் பேதம் ஸித்திக்கிறது. பரந்து—

வா. வ:—பரந்து என்ன? பேதம்ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—அந்த பேதம் பாரமார்த்திகமல்ல. வ்யாவஹாரிக மென்று அபிப்ராயம்.

வா. வ:—வ்யாவஹாரிக பாரமார்த்திக விசாரமப்படியிருக் கட்டும், பேதம் ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—பேதம் ஸித்திக்கிறது.

வா. வ:—ஸாஸ்த்ரிகளே! 6-29-வது கீதாஸ்லோகத்தைச் சொல்லி அதற்கு அர்த்தம் சொல்லும்?

பி. வா:—'ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்ஶன: ||' பரமாத்மா ஸர்வபூதங்களிலும் (சதுர்முகரே முதலான ஸகல ஜீவர்களுக்கு நியாமகனாய்) யிருக்கும் என்னைக் காணுகிறானோ, ஸர்வபூதங்களையும், ஆத்மனி = பரமாத்மாவிடத்தில் காணுகிறானோ, பரமாத்மாதாரமாகக் காணுகிறானோ அவன் ஸமதர்ஶி என்று அர்த்தம்.

வா. வ:—இந்த வாக்யம் ஆதாராதேய பாவாதிகளால் ஜீவர்களுக்கு பரமாத்மாவால் பேதத்தைச் சொல்லுகிறதல்லவா?

பி. வா:—பேதத்தைச் சொல்லுகிறது.

வா. வ:—'யஸ்து ஸர்வாணி பூதானி ஆத்மன்யேவானுபஶ்யதி' என்னும் மந்த்ரத்திற்கு பதஶ: அர்த்தத்தைச் சொல்லுங்கள்?

பி. வா:—ய: = யார், ஸர்வாணி பூதானி = ஸகல ப்ராணிகளையும், ஆத்மனி ஏவ = பரமாத்மாவிடத்திலேயே, பஶ்யதி = காணுகிறானோ என்று அர்த்தம்.

வா. வ:—இதனால் ப்ராணிகளுக்கும் பரமாத்மாவுக்கும் ஆதாராதேய பாவம் தோன்றுகிறதா? இல்லையா?

பி. வா:—ஆதாராதேயபாவம் தோன்றுகிறது.

வா. வ:—ஆதாராதேய பாவத்தால் பேதம் தோன்றுகிறதா? இல்லையா?

பி. வா:—பேதம் தோன்றுகிறது.

வா. வ:—'ஆத்மனி—ஏவ—பஶ்யதி' என்னும் பதங்களுக்கு ஆத்மாவிடத்திலேயே காணுகிறானென்று அர்த்தமாய் பேதம் ஸித்தமாய்க்கொண்டிருக்க, ஆத்மனி ஏவ பஶ்யதி = ஆத்மாவைவிட பின்னனாகக் காணுவதில்லை என்னும் அர்த்தத்தைமுன் எப்படிச் சொன்னீர்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யர் இந்த உபநிஷத் பாஷ்யத்தில் 'ஆத்மன்யேவானுபஶ்யதி ஆத்மவ்யதிரிக்தானி ந பஶ்யதீத்யர்த்த:' என்று வ்யாக்யானம் செய்திருக்கிறார். ஆகையால் நாங்களும் அப்படியே அர்த்தம் சொல்லியிருக்கிறோம்.

வா. வ:—'ஆத்மனி ஏவ பஶ்யதி' என்னும் மந்த்ரத்திற்கு ஆத்மபின்னமாய்க் காணுவதில்லை (ஆத்மரூபமாகவே காண்கிருன்) என்று அர்த்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—'யஸ்து ஸர்வாணி பூதாணி ஆத்மேத்யேவானு பஶ்யதி' என்றிருந்தால்தான் ஸர்வ ப்ராணிகளையும் ஆத்மா வென்றே காணுகிருன், ஆத்மபின்னமாகக் காணுவதில்லை என்று அர்த்தமாகும். 'ஆத்மனி ஏவ பஶ்யதி'—ஆத்மாவிடத்திலேயே காணுகிருன், (ஆத்மாதாரமாகவே காணுகிருன்) ஆத்மாவைவிட பின்னமான ஆதாரத்தில் காணுவதில்லை என்று அர்த்தமாகிற தென்று எங்களுக்குத் தோன்றுகிறது. மஹானுபாவரான ஶங்கரா சார்யர் இப்பேர்ப்பட்ட அர்த்தத்தை எப்படிசெய்திருக்கிருரென்பதற்குக் காரணத்தையும், ஆதாரத்தையும் கோர்ட்டாரே நிர்ணயிக்க வேண்டும்.

வா. வ:—'ஸர்வபூதேஷு சாத்மானம்' என்னும் மந்த்ரத்திற்கு பதம்பதமாக அர்த்தத்தைச் சொல்லும்?

பி. வா:—ஸர்வபூதங்களிலும், ஆத்மாவை (பரமாத்மாவை) காணுகிருனென்று அர்த்தம்.

வா. வ:—இப்படி அர்த்தமிருக்கிறபடியால் ஆதாராதேய பாவத்தால் ஸமஸ்த ப்ராணிகளுக்கு பரமாத்மாவுடன் பேதம் தோன்றுகிறதல்லவா?

பி. வா:—பேதம் தோன்றுகிறது.

வா. வ:—'ஸர்வபூதேஷு சாத்மானம்' என்னும் வாக்யத்திற்கு ப்ராணிகளுக்கும் பரமாத்மாவுக்கும் ஆதாராதேயபாவம் தோன்றிக்கொண்டிருக்க ஸர்வ பூதங்களுக்கு நானே ஆத்மா வென்று அறிந்துகொள்ளுகிருனென்னும் அர்த்தத்தை எப்படிச் சொன்னீர்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யர் அப்படி அர்த்தம் செய்திருக்கிருராகையால் நாங்களப்படிச் சொன்னேம்.

வா. வ:—அந்த அர்த்தம் யுக்தமா? அயுக்தமா?

பி. வா:—ஶங்கராசார்யர் செய்த அர்த்தம் அயுக்தமென்ப தற்கு எங்களுக்கு ஸாமர்த்யமுண்டா? கோர்ட்டாரே நிர்ணயிக்க வேண்டும்.

வா. வ:—'யஸ்மின் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத் விஜானத:। தத்ர கோ மோஹ: க: ஶோக: ஏகத்வமனுபஶ்யத: ||' என்னும் 7-வது மந்த்ரத்திற்கர்த்தமென்ன?

பி. வா:—யஸ்மின் = யாரிடத்தில், விஜானத:= பரமார்த்த ஜ்ஞானிக்கு, ஸர்வாணி பூதானி = ஸமஸ்த ப்ராணிகளும் ஆத்மை வாபூத் = ஆத்மாவாகவே ஆயினவோ, (பரமாத்ம ஸ்வரூபமாகவே ஆயினவோ) தத்ர = ஆத்மாவிடத்தில், ஏகத்வமனுபஶ்யத:= ஏகத்வத்தைக் காணும் மனிதனுக்கு ஶோகமேது, மோஹமேது என்று அர்த்தம்.

வா. வ:—'ஆத்மைவாபூத்' என்னும் க்ரியா பதத்திற்கு கர்த்தா யாது?

பி. வா:—ஸர்வபூதங்களே.

வா. வ:—'அபூத்' என்று ஏகவசனாந்தமிருக்கிறது. 'ஸர் வாணி பூதானி' என்பது பஹுவசனாந்தமிருக்கிறது. இவை களுக்கு கர்த்ருக்ரியாபாவம் எப்படிப் பொருந்தும்?

பி. வா:—ஆம். இந்த ஶங்கை நீங்கள் புதியதாகச் செய்த தல்ல. தஶஶ்லோகி என்னும் க்ரந்தத்தின் 7-வது ஶ்லோகத்தின் வ்யாக்யானமான * ஸித்தாந்த பிந்து என்னும் க்ரந்தத்தில் இந்த ஶங்கை செய்துகொண்டிருக்கிறார்.

வா. வ:—நாங்கள் புதியதாகச் செய்ததேயாகட்டும், அல்லது அத்வைதிகள் செய்ததேயாகட்டும், கர்த்ருக்ரியாபாவமெப்படிப் பொருந்துகிறதென்னும் ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லும்.

பி வா:—ஸமாதானம் யோசனைசெய்து சொல்லுகிறோம். இப்போதொன்றும் தோன்றவில்லை.

---

* யதி த்வாத்மைவ விஶேஷ்யோத்ர ஸ்வீக்ரியதே அத ஏவ யஸ்மின்.........விஜானத இத்யத்ர அபூதித்யேகவசனாந்தமிதி ஆலோச்யதே ||

வா. வ:—அத்வைத மதப்ரகாரம் ஸர்வபூதங்கள் எப்பொழுதும் பரமாத்மாவின் ஸ்வரூபமேயாயிருக்கும்போது ஞானமுண்டானபிறகு ஸர்வபூதங்கள் பரமாத்ம ஸ்வரூபமாகிறதென்பது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—'ஆத்மைவாபூத்' என்னும் வாக்யத்திற்கு ஆத்ம ஸ்வரூபமானதென்னும் அர்த்தம் முக்ய வ்ருத்தியால் ஆயினும்—அது பொருந்துவதில்லை. பாதிதமாகிறது. ஆகையால் அமுக்ய வ்ருத்தியால் (Secondary Meaning), ஆத்மைவாபூத் = ஆத்ம ஸ்வரூபமல்லவென்னும் அஜ்ஞான நிவ்ருத்தியாயிற்று, என்னும் அர்த்தத்தைச் செய்கிறோம்.

வா. வ:—இது ஶ்ருதிக்கு முக்யார்த்தமா? அல்லது கௌணார்த்தமா?

பி. வா:—முக்யார்த்தமல்ல.

வா. வ:—முக்யார்த்தம் விட்டபிறகு இந்த கௌணார்த்தத்தையே செய்யவேண்டுமென்னும் விஷயத்தில் நியாமகமென்ன? வேறே முக்யார்த்தமாகிலும், கௌணார்த்தமாகிலும் ஏன்செய்யக் கூடாது?

பி. வா:—(பதில் இல்லை)

வா. வ:—ஸர்வாணி பூதானிஆத்மைவாபூத் = ஸமஸ்த பூதங்களும் ஆத்மாவே ஆயினவோ என்று இவ்வளவுமட்டுமிருந்தால் போதுமாயிருக்க, 'யஸ்மின்' என்னும் பதம் சொல்லியது வ்யர்த்தமாகிறது. தவிர—யஸ்மின் = எந்த ஆத்மாவிடத்தில் ஆத்மாவேயாயின என்னும் அர்த்தம் அஸங்கதமாகிறதல்லவா?

பி. வா:—'யஸ்மின்' என்னும் பதத்திற்கு ஆத்மாவில் என்று அர்த்தம் செய்வதில்லை. எந்த காலத்தில் என்று அர்த்தம் செய்கிறோம்.

வா. வ:—'யஸ்மின்' என்னும் பதத்திற்கு 'ஆத்மனி' என்று பூர்வத்தில் அர்த்தம் செய்தது அயுக்தமல்லவா? அப்படி ஏன் அர்த்தம் செய்தீர்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யர் செய்த அர்த்தத்தை நாம் சொன்னோம்.

வா. வ:—அந்த அர்த்தம் யுக்தமா? அயுக்தமா?

பி. வா:—இந்த விஷயத்தில் நாங்களொன்றையும் சொல்லமாட்டோம்.

வா. வ:—உங்கள் அத்வைதமதத்தில் காலம் மித்யையா (அஜ்ஞான கல்பிதமா) அல்லது ஸத்யமா?

பி. வா:—அஜ்ஞான கல்பிதமே (மித்யையே).

வா. வ:—ஞானம் பிறந்த பிறகு காலமிருக்கிறதா? இல்லையா?

பி. வா:—இருப்பதில்லை.

வா. வ:—ஞானிக்கு காலம் இல்லாமற்போன பிறகு எந்த காலத்தில் ஆத்மாவே ஆகிறதோ என்னும் அர்த்தத்தை எப்படிச் சொன்னீர்?

பி. வா:—ஐயா! அத்வைத நிஷ்டரானவர்கள் ஒன்றும் பேசக்கூடாது. அவர்கள் கேட்பதுமில்லை, பதிலளிப்பதுமில்லை. எல்லாம் த்வைதாவஸ்தையிலேயே (அஜ்ஞானாவஸ்தையிலேயே) அஜ்ஞானிகளான அத்வைதிகளே த்வைதமுண்டென்று ப்ரமித்து வ்யவஹரிக்கின்றார்கள். வாஸ்தவத்தில், ப்ரஹ்மத்தில் நிஷ்டரான அத்வைதிகள் உத்தரப்ரத்யுத்தரம் முதலான எந்தவ்யவஹாரங்களையும் செய்வதில்லை. அப்படிச் செய்வது பொருந்துவதுமில்லை.

வா. வ:—ப்ரதிவாதிகளை கேள்விகேட்டு அவாளிட மதத்தை கண்டனம்செய்தும், அவர்களிட கேள்விகளுக்குப் பதில்சொல்லி தம் மதத்தை ஸ்தாபித்துக்கொண்டும், க்ரந்தங்களைச் செய்தும், பாடங்களைச் சொல்லியுமிருக்கும் அத்வைதிகள் ஞானிகளா? அஜ்ஞானிகளா?

பி. வா:—ப்ரஶ்னத்திற் கவகாஶமேது! ஞானாவஸ்தையில் ஒன்றுமில்லை. 'மித்யாவாத விசார சிந்தனமஹோ குர்வந்த்யத்ருஷ்டாத்மகா: । ப்ராந்தா ஏவ ந பாரகா த்ருடதிய: தூஷ்ணீம் ஶிலாவத் ஸ்திதா:' (ப்ரௌடானுபூதி 13) என்று ஶங்கராசார்யர் சொல்லியிருக்கிறபடியால், வாதி ப்ரதிவாதி பாவத்தால் விசாரம் செய்பவரும், க்ரந்தங்களைச் செய்பவரும், பாடங்களைச்சொல்பவரும் அஜ்ஞானிகளே (ப்ராந்தர்களே)

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! கோபிக்கவேண்டாம். மத தத்வங்களை விசாரிக்கிறோம். வாதவிவாதம் செய்பவரும், க்ரந்தத்தை இயற்றுபவரும், பாடங்களைச் சொல்பவரும் அஜ்ஞானிகளேயாயின்—அனேக க்ரந்தங்களை இயற்றி, வாதம் செய்துகொண்டிருந்த உங்கள் ஶங்கராசார்யர் அஜ்ஞானியும் ப்ராந்தருமாகவேண்டியதாகிறதல்லவா?

பி. வா:—நாங்களிந்த விஷயத்திற்குப் பதில் சொல்லமாட்டோம். வாதவிவாதாதிகளைச் செய்பவர் அஜ்ஞானிகளும் ப்ராந்தருமென்றுமாத்ரம் நாங்கள் சொல்லுவோம்.

வா. வ:—காலம் மித்யையான பிறகு, யஸ்மின் = எந்த காலத்தில் என்று சொன்னது பொருந்தாதல்லவா?

பி. வா:—அதிகமாய் கேழ்ப்பதேன், எங்கள் மதத்தில் எதுவும் பொருந்தாது. எல்லாம் துர்கடமானவைகளே (பொருந்தாதவைகளே). ஆகையால் அடிக்கடி இப்படிப்பட்ட கேழ்விகளைக் கேழ்க்கவேண்டாம். எங்களிட மதம் மாயாகல்பிதமானதால் ஸகலதுர்கடத்வமும் (பொருந்தாமலிருப்பதும்) பூஷணங்களே.

## வாதி விசாரணை.

பி. வா. வ.—ஆசார்யரே! இந்த ஈஶாவாஸ்யத்தின் 6-வது மந்த்ரத்திற்கு நீங்களென்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—'யஸ்து ஸர்வாணி பூதானி ஆத்மன்யேவானுபஶ்யதி। ஸர்வபூதேஷு சாத்மானம் ந ததோ விஜுகுப்ஸதே॥' (ஈஶா 6.) எவன் சதுர்முகாதி ஸகலப்ராணிகள், ஆத்மனி = ஆத்மாவிடத்தில் உளர் (ஆத்மாதாரமா யிருக்கிறார்கள்) என்றும், 'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன்' இத்யாதி ஶ்ருதிகளில் சொல்லியவாறு பரமாத்மா ஸர்வபூதங்களிலும் நியாமகனு யிருக்கிறனென்றும் தெரிந்துகொள்ளுகிறனே அவன், 'பரமாத்மா ஸர்வத்ர நியாமகனுயிருக்கிறன்' என்னும் ஞானமுள்ளவனுதலால், தன்னை ரக்ஷித்துக்கொள்ள வேண்டுமென்று அபேக்ஷிப்பதில்லை. 'யோ லோகத்ரயமாவிஶ்ய விபர்த்யவ்யய ஈஶ்வர:' என்றுசொல்லியவாறு பரமாத்மாவே, த்வேஷிகள், நேசர்கள் முதலான எல்லோ

ரிடத்திலும் நியாமகனுயிருக்கிறான், அவனே ரக்ஷிக்கிறவனென்னும் ஞானமிருப்பதினால் தன்னை ரக்ஷித்துக்கொள்ளுவதற்கு அபேக்ஷிப்பதில்லை) என்று அர்த்தம் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—இதனாலென்ன ஸித்தமாகிறது?

வாதி:—ஆதாராதேய பாவத்தாலும், ஜ்ஞாத்ருஜ்ஞேயபாவத்தாலும், ஜீவ பரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! 7-வது மந்த்ரத்திற்கு என்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—யஸ்மின் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத் விஜானத: । தத்ர கோ மோஹ: கஶ்ஶோக: ஏகத்வமனுபஶ்யத: । (ஈ. ஶா. 7) இந்தமந்த்ரம் பூர்வோக்தமான அர்த்தத்தையே சொல்லி, வேறு பலனையும் சொல்லுகிறது. யஸ்மின் = எந்தபரமாத்மாவில் ஸகல பூதங்களிருக்கின்றனவோ, தத்ர = அந்த பூதங்களில் அந்த பரமாத்மா, அபூத் = இருக்கிறான் என்று எவன் தெரிந்துகொள்ளுகிறானோ, மற்றும்-'யதேகமவ்யக்தமனந்த ரூபம்' என்னும்ஶ்ருதியில் அனந்த ரூபங்களுக்கு ஏகத்வம் சொல்லப்பட்டிருப்பது போல் அந்தஸர்வப்ராணிகளிலுமிருக்கும் பரமாத்மாஒருவனே = ஸ்வகதபேத ரஹிதன் (ஸ்தான பேதத்தால் பரமாத்மாவுக்கு பேதமில்லை) என்று அந்த பரமாத்மாவிடத்தில் ஏகத்வத்தை யார் தெரிந்து கொள்ளுகிறானோ, அவனுக்கு ஶோகமில்லை, மோஹமில்லை, முக்தனாகிறானென்று ஸர்வப்ராணிகளிலும் நியாமகனாயிருக்கும் பரமாத்மாவுக்கு ஏகத்வத்தை (ஸ்வகதபேத ராஹித்யத்தை = நியாமகரூபங்களுக்கு பரஸ்பரபேதமில்லை என்று) தெரிந்துகொள்பவன் மோக்ஷத்தை யடைகிறானென்று சொல்லிக்கொண்டே ஆதாராதேயபாவம், ஜ்ஞாத்ருஜ்ஞேயபாவம், முதலியவைகளால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறதென்று சொல்லுகிறோம்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! "யஸ்து ஸர்வாணி பூதானி ஆத்மன்யேவானுபஶ்யதி । ஸர்வபூதேஷு சாத்மானம் ந ததோ விஜுகுப்ஸதே" (ஈஶா. 6) என்னும் மந்த்ரம்—யார் ஸமஸ்த ப்ராணிகள், ஆத்மன்யேவானுபஶ்யதி = ஆத்மாவேயாயினவென்று தெரிந்து கொள்ளுகிறானோ, ஸர்வபூதேஷு சாத்மானம் = ஸர்வபூதங்களுக்கும் தானே ஆத்மாவென்று தெரிந்துகொள்ளுகிறானோ, அவனுக்கு ஆத்மாவைவிட பின்னமான பதார்த்தமேயில்லையாதலால் அவன் யார் விஷயத்திலும் க்ருபை செய்வதில்லை என்று(ஸமஸ்தப்ராணிகளும் பரமாத்மாவேயாயினர் என்று) ஐக்யத்தைச் சொல்லுகிறது.

மற்றும்—'யஸ்மின் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத் விஜானத: । தத்ர கோ மோஹ: கஶ்ஶோக: ஏகத்வமனுபஶ்யத:' என்கிற 7-வது மந்த்ரம் ஞானிக்கு எந்த பரமாத்மாவில் ஸமஸ்த பூதங்கள் ஆத்மாவேயாயினவோ அந்த ஏகத்வத்தைத் தெரிந்து கொண்டவனுக்கு மோஹமேது ஶோகமேது, ஶோகம், மோஹம் முதலானவைகளெல்லாம், அஜ்ஞான கார்யங்களாதலால், அஜ்ஞானம் போனபிறகு அவைகளெப்படி உண்டாகுமென்று சொல்லிக்கொண்டே, எல்லாவற்றிற்கும் பரமாத்மாவுடன் ஐக்யத்தைச் சொல்லுகிறது என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன் ஸர்வேப்யோ பூதேப்யோ அந்தர:' 'ய ஆத்மனி திஷ்டன்' 'ஏதஸ்மின் கல்வக்ஷரே கார்கி ஆகாஶ ஓதஶ்ச ப்ரோதஶ்ச' (ஶ்ருதிகள்) 'ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி' (கீ.) இத்யாதி அனேக ப்ரமாணங்கள்— பரமாத்மா ஸர்வ பூதங்களில் நியாமகனாயிருக்கிறான். ஸமஸ்த பூதங்களும் பரமாத்மாவின் ஆதாரத்திலிருக்கின்றனவென்று ஆதாராதேய பாவத்தாலும், ஜ்ஞாத்ரு ஜ்ஞேயபாவத்தாலும், ஜீவேஶ்வரர்களுக்கு

பேதம் சொல்லுகின்றன. ஶங்கராசார்யரும் அப்படியே ஒப்புக்கொண்டிருக்கிறார். அப்படியே 'யஸ்து ஸர்வாணி பூதானி ஆத்மன்யேவானுபஶ்யதி । ஸர்வபூதேஷு சாத்மானம்' என்னும் 6-வது மந்த்ரமும்—எவன் ஸமஸ்த பூதங்களை பரமாத்மாவில் (பரமாத்மாதாரமாகவே) பார்க்கிறானோ, மற்றும்—ஸமஸ்பூதங்களிலும் நியாமகனாயிருக்கும் பரமாத்மாவைப் பார்க்கிறானோ, அவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்காக அபேக்ஷிக்கமாட்டான் என்று ஆதாராதேய பாவத்தாலும், ஞாத்ரு ஜ்ஞேய பாவத்தாலும் பேதத்தைத் தெரிவிக்கிறது.

ஸமஸ்தபூதங்கள் ஆத்மாவேயாயினவோ வென்பது 'ஸர்வாணி பூதானி ஆத்மன்யேவானுபஶ்யதி' என்னும் வாக்யத்திற்கர்த்தமாவதில்லை. 'ஆத்மனி' என்று ஸப்தம்யந்த (ஏழாம் வேற்றுமை) பதமிருப்பதால் ஆத்மாவில் என்றே அர்த்தமாகிறது. 'ஆத்மைத்யேவ பஶ்யதி' என்று ப்ரதமாந்தமாயிருந்தால் ஆத்மாவே என்று பார்க்கிறானே என்று அர்த்தமாகலாம். அப்படி இல்லாததால் ஸமஸ்தபூதங்கள் ஆத்மாவே என்று சொல்வது யுக்தமாகாது. ஸர்வபூதங்களிலும் ஆத்மாவைப் பார்க்கிறனென்று சொல்லும் 'ஸர்வபூதேஷு சாத்மானம்' என்னும் வாக்யத்திற்கு ஸர்வபூதங்களுக்கு தானே ஆத்மாவென்று, மிஸ்டர் H. H. சர்மா (ப்ரதிவாதி வக்கில்) சொல்லியது யுக்தமல்ல. 'அபூத்' என்பது ஏகவசனாந்தக்ரியாபதம். 'ஸர்வாணி பூதானி' என்பது பஹுவசனாந்தமாகையால் 'அபூத்' என்னும் க்ரியாவாசக பதத்திற்கு 'ஸர்வாணி பூதானி' என்பது கர்த்ருவாசகமாவதில்லை.

அத்வைத மதப்ரகாரம் ஸர்வபூதங்களெப்பொழுதும் பரமாத்மாவின் ஸ்வரூபமாயிருக்கிறபடியால், ஞானிக்கு, பூதங்கள் பரமாத்ம ஸ்வரூபமாயினவென்னும் அர்த்தம் பொருந்துவதில்லை.

'பூதானி ஆத்மைவாபூத்' என்னும் வாக்யத்திற்கு பூதங்கள் ஆத்ம ஸ்வரூபங்களல்ல என்னும் அஜ்ஞானமும், ப்ரமமும் நிவ்ருத்தியாயினவென்று அர்த்தம் செய்வது யுக்தமாகாது.

அத்வைதமதத்தில் ப்ரமமும், அஜ்ஞானமும் பொருந்தாததினால் அஜ்ஞானமும் ப்ரமமும், நிவ்ருத்தியாயினவென்பது பொருந்துகிறதில்லை.

ஸர்வபூதங்களும் ஆத்மாவேயாயினவென்று (ஆத்மாதிரிக்தமாக இல்லாதவைகளாயின) என்று மாத்திரம் சொன்னால் போதுமாயிருக்க—'யஸ்மின்' 'ஆத்மனி' என்னும் பதங்களைச் சொல்லியது வ்யர்த்தமாகிறது. மற்றும் 'ஸர்வபூதங்களும் பரமாத்மாவில் பரமாத்மாவாயின' என்னுமர்த்தம் அஸங்கதமாகிறது.

யஸ்மின் = காலே என்று அர்த்தம் செய்துகொண்டாலும், அத்வைத மதப்ரகாரம் காலம் முதலானவைகளெல்லாம் மித்யா, அஜ்ஞான கல்பிதமானதால், ஞானத்தால் அஜ்ஞானம் நிவ்ருத்தியான ஞானிக்கு காலமில்லாததினால் எந்த காலத்திலென்று சொல்வது பொருந்துவதில்லை. ஆகையால் எந்த பரமாத்மாவில் ஸகலபூதங்கள் 'ஆத்மைவாபூத்' ஆத்மாவேயாயினவோ என்று ப்ரதிவாதி சொல்லுமர்த்தம் பொருந்துவதில்லை. ஆகையால் 'யஸ்மின் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத் விஜானத: | தத்ர கோ மோஹ: கஶ்ஶோக: ஏகத்வமனுபஶ்யத:' என்னும் 7-வது மந்த்ரத்திற்கு பூர்வத்தில் சொன்ன அநேக ஶ்ருதிகள், கீதா இவைகளின் ஆதாரங்களை யனுஸரித்து எந்த பரமாத்மாவில், ஸர்வாணி பூதானி = ஸமஸ்த பூதங்களிருக்கின்றனவோ, தத்ர = அந்த பூதங்களில், ஆத்மா நியாமகனாயிருக்கிறானென்று தெரிந்துகொள்பவனுக்கும்; மற்றும்—அந்த அந்தர்யாமியான பரமாத்மாவுக்கு 'யதேகமவ்யக்த மனந்தரூபம்' என்னும் ஶ்ருதியில் ஸர்வபதார்த்தங்களில் நியாமகனாயிருக்கும் அனேக ரூபங்கள், ஏகம் = ஒன்றே (ஸ்வகதபேதாஹிதம்) என்று சொல்லியவாறு அந்த ஸமஸ்த ப்ராணிகளிலிருக்கும் அந்தர்யாமியான பரமாத்மாவின் ரூபங்களுக்கு ஏகத்வத்தை (பரஸ்பர பரமாத்மாவின் ரூபங்களுக்கு பேதாபாவத்தை) எவன் தெரிந்துகொள்கிறானோ அவனுக்கும் ஶோகமில்லை, மோஹமில்லை, அவன் முக்தனாகிறான் என்னும் அர்த்தமேஸரியானதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

ப்ர. வா. எ. 16—A.

## ஸுகராஹஸ்ய ஸ்ருதி விசாரணை.

பி. வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! எங்களுக்கு ஸுப்ரஹ்மண்ய ஶாஸ்த்ரி என்னும் மற்றொரு ஸாக்ஷியுண்டு. அவரை விசாரிப்பதற்கு ப்ரார்த்திக்கிறோம்.

கோர்ட்:—Yes, விசாரியும்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ஜீவப்ரஹ்ம ஐக்ய விஷயத்தி லுள்ள ஆதாரங்களைச் சொல்லும்?

பி. வா. ஸா:—(1) தத்வமஸி (2) அஹம் ப்ரஹ்மாஸ்மி (3) அயமாத்மா ப்ரஹ்ம (4) ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம, இந்த மஹா வாக்யங்களே.

கோர்ட்:—Mr. ஶர்மா! மேற்சொன்ன வாக்யங்களின் விசாரம் நடந்திருக்கிறது. மறுபடியும் விசாரிப்பது அவஶ்யமில்லை.

பி. வா. வ:—மஹாப்ரபோ! எங்கள் ஶாஸ்த்ரிகள் வேரனேகாதாரங்களின் பேரில் மேற்சொன்ன வாக்யங்களின் அர்த்தத்தை விஶதப்படுத்துவார். ப்ரபுக்களின் சித்தத்திற்குசிதமென்று தோன்றின் க்ரஹிக்கலாமாதலால் விசாரம் நடப்பதற்கு உத்திரவளிக்க வேண்டுமென்று கோருகிறோம்.

கோர்ட்:—Yes, விசாரியும்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'தத்வமஸி' முதலிய மஹா வாக்யங்கள் அத்வைதத்தை (ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யத்தை) எப்படித் தெரிவிக்கின்றன?

பி. வா. ஸா:—ப்ரஸித்தமான விஷயத்தை நாங்கள் சொல்வதென்ன இருக்கிறது! யாஜுஷீய ஸுகராஹஸ்யோபனிஷத்தில் இவ்வாக்யங்கள் ஜீவப்ராஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகின்றனவென்று ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

பி. வா. வ:—அந்த வாக்யங்கள் யாது? அவைகளின் அபிப்ராயமென்ன?

பி. வா. ஸா:—அத மஹா வாக்யானி சத்வாரி யதா—(1) ஓம் ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம (2) ஓம் அஹம் ப்ரஹ்மாஸ்மி (3) ஓம் தத்வமஸி (4) ஓம் அயமாத்மா ப்ரஹ்ம ।

தத்வமஸீத்யபேத வாசகமிதம் யே ஜபந்தி தே ஶிவஸாயுஜ்யமுக்திபாஜோ பவந்தி......

வாச்யம் லக்ஷ்யமிதி த்விதார்த்த ஸரணீ வாச்யஸ்ய ஹி த்வம்பதே
வாச்யம் பௌதிகமிந்த்ரியாதிரபி யல்லக்ஷ்யம் த்வமர்த்தஶ்ச ஸ: ।
வாச்யம் தத்பதமீஶதாக்ருதமதிர் லக்ஷ்யந்து ஸச்சித்ஸுகா
னந்தம் ப்ரஹ்ம ததர்த்த ஏஷ ச தயோரைக்யம் த்வஸீதம் பதம்॥
(ஶுகரஹஸ்யோபநிஷத் 10.)

இத்யாதி வாக்யங்களிலிருக்கும் 'தத்' பதத்திற்கு லக்ஷ்யார்த்தத்தையும் 'த்வம்' பதத்திற்கு லக்ஷ்யார்த்தத்தையும் எடுத்துக்கொண்டு, அந்த 'த்வம்' 'தத்' பதங்களுக்கு ஐக்யத்தை 'அஸி' என்னும் பதம் போதிக்கிறது. இவ்விதமாகவே—

"யேனேக்ஷதே ஶ்ருணோதீதம் ஜிக்ரதி வ்யாகரோதி
ஸ்வாத்வஸ்வாது விஜாநாதி தத் ப்ரஜ்ஞானமுதீரிதம் ॥
சதுர்முகேந்த்ர தேவேஷு மனுஷ்யாஶ்வகவாதிஷு ।
சைதன்யமேகம் ப்ரஹ்மாத: ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம மய்யபி ॥
......... ......... .........
புத்தே: ஸாக்ஷிதயா ஸ்தித்வா ஸ்புரன்னஹமிதீர்யதே ।
.........பராத்மாத்ர ப்ரஹ்மஶப்தேன வர்ணித: ।
அஸ்மீத்யைக்ய பராமர்ஶஸ்தேன ப்ரஹ்ம பவாம்யஹம் ।
......... ......... .........
ஸ்வப்ரகாஶாபரோக்ஷத்வமயமித்யுக்திதோ மதம் ।
அஹங்காராதி தேஹாந்தம் ப்ரத்யகாத்மேதி கீயதே ॥
......... ......... .........
ப்ரஹ்மஶப்தேன தத் ப்ரஹ்ம ஸ்வப்ரகாஶாத்ம ரூபகம் ॥"

இத்யாதிவாக்யங்களால் 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' அஹம் ப்ரஹ்மாஸ்மி' 'அயமாத்மா ப்ரஹ்ம' இத்யாதி வாக்யங்களும் ஜீவப்ரஹ்

மாக்களுக்கு ஐக்யத்தை போதிக்கின்றனவென்று விஶதமாக ஶுகரஹஸ்யோபனிஷத் சொல்லிக்கொண்டிருக்க—'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் ஜீவ ப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதென்னும் விஷயத்தில் விவாதமென்ன இருக்கிறது.

மற்றும்—"அத ஹைனம் பைங்கல: பப்ரச்ச யாஜ்ஞவல்க்யம் மஹாவாக்ய விவரணமனுப்ரூஹீதி । ஸ ஹோவாச யாஜ்ஞவல்க்யஸ்தத்வமஸி த்வம் ததஸி த்வம் ப்ரஹ்மாஸ்யஹம் ப்ரஹ்மாஸ்மீத்யனுஸந்தானம் குர்யாத் । தத்ர பாரோக்ஷ்யஶபல: ஸர்வஜ்ஞத்வாதி லக்ஷணோ மாயோபாதி: ஸச்சிதானந்தலக்ஷணோ ஜகத்யோனி: தத்பதவாச்யோ பவதி ஏவாந்த:கரண ஸம்பின்ன போதோ..... த்வம் பதவாச்யோ பவதி......தத் த்வம் பதலக்ஷ்யம் ப்ரத்யகபின்னம் ப்ரஹ்ம" (பைங்கிலோபனிஷத்து 3.) என்னும் பைங்கிலவாக்யம் 'தத்வமஸி' முதலான வாக்யங்கள் ஜீவ ப்ரஹ்மாக்களின் ஐக்யத்தைச் சொல்லுகின்றனவென்று அபிப்ராயம்.

இவ்வுபனிஷத்தும், அத்யாத்ம ராமாயணமும்—'தத்வமஸி' முதலிய வாக்யங்கள், ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகின்றனவென்று ஸ்பஷ்டமாகச் சொல்லுகின்றன. ஆகையால் 'தத்வமஸி' முதலிய மஹா வாக்யங்களால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறது.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! இந்த ஆதாரத்தை கேஸ் ஆரம்பத்திலேயே கோர்ட்டில் தாகல் செய்யவில்லையாதலால் இந்த ஆதாரத்தைக் கோர்ட்டார் விசாரிப்பதற்கு யனுமதிக்கக் கூடாது என்று கோருகிறோம்.

பி. வா. வ:—My Lord! சில ரிகார்டுகளை முதலில் ஹாஜர்செய்யாமலிருந்தாலும், ஸர்க்காருக்குச் சம்பந்தமான ரிகார்டுகளாயிருக்குமாயின்—எப்போது தாகல் செய்தாலும், எப்படி அங்கீகரிக்கிறார்களோ அப்படியே, இந்த ஆதாரமும் எங்கள் (வைதிக) ஸர்க்கார் ஸம்பந்தமாயிருப்பதால் (வேதஸம்பந்தமா யிருப்பதினால்) இவைகளை அங்கீகரிக்க வேண்டியதாய்க் கோருகிறோம்.

வா. வ:—மாஹாப்ரபோ! இவ்வளவு ஸ்பஷ்டமாக ஐக்யத்தைச் சொல்லும் இந்த ரிகார்டுகள் (வாக்யங்கள்) ப்ராசீனமல்ல.

(வேதவாக்யங்களல்ல).வேதவாக்யங்களாயிருக்குமாயின்—கௌடபாதாசார்யார், ஶங்காராசார்யார் முதலான அத்வைதிகளில் யாராகிலும், எங்காகிலும் உதஹரிக்காமலிருப்பார்களா! இதுவரையில் எந்த அத்வைதிகளும் தம் க்ரந்தங்களிலெங்கும் உதஹரிக்காமலிருப்பதினால், இந்த வாக்யங்கள் இப்பால் புதியதாய் போர்ஜரி (கல்பனை) செய்யப்பட்டதென்று ஏற்படுகிறபடியால் கோர்ட்டார் விசாரத்திற்கு எடுத்துக்கொள்ளக் கூடாதென்று ப்ரார்த்திக்கிறேம்.

கோர்ட்:—Mr. சர்மா! கௌடபாதாசார்யார், ஶங்காராசார்யார் முதலான அத்வைத பண்டிதர்களில் யாராவது இந்த ஸூக ரஹஸ்யம் முதலிய உபநிஷத்துகளை இதுவரைக்கும் தமது எந்த க்ரந்தத்திலாவது உதஹரித்திருக்கிறார்களா?

பி. வா. வ:—எங்கள் ஶாஸ்த்ரிகளை விசாரித்துச் சொல்லுகிறேன். ஶாஸ்த்ரிகளே! இதுவரையில் நீங்கள் சொன்ன உபநிஷத் வாக்யங்களை எந்த க்ரந்தத்திலாவது ஶங்கராசார்ய ப்ரப்ருதிகள் உதஹரித்திருக்கிறார்களா?

பி. வா. ஸா:—இதுவரையில் எந்த க்ரந்தத்திலும் யாராலும் உதஹரிக்கப்பட்டதாய்க் காணப்படவில்லை.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! இந்த ஸூக ரஹஸ்யம் முதலான உபநிஷத் வாக்யங்கள் எந்த க்ரந்தத்திலும் உதஹரிக்கப்படவில்லையென்று ஶாஸ்த்ரியார் சொல்லுகிறார்.

கோர்ட்:—இந்த ஆதாரத்தை (உபநிஷத்தை) ஶங்காராசார்யரோ முதலான அத்வைதிகளில் யாரும் எவ்விடத்திலும் உதஹரித்ததில்லை, ஆகையால் ஆதுனிகர்களால்(இப்பால் வந்த புதிய பண்டிதர்களால்)போர்ஜரி செய்யப்பட்டதென்று(கல்பிக்கப்பட்டதென்று) தெரியவருகிறபடியால் இவ்வுபனிஷத்து விசாரணைக்கு யோக்யமல்லாததால் கோர்ட்டாரால் நிராகரிக்கப்படுகிறது.

## இரண்டாம் பாகம்.

### ஸூத்ர விசாரணை.

### வாதி விசாரணை.

வா. வ:—ஆசார்யரே! ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லும் ப்ரஹ்மஸூத்ரங்கள் எவை?

வாதி:—* ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தை ஸூத்ரகாரர் எந்த ஸூத்ரத்திலும் சொல்லவில்லை. ஸர்வத்ர பேதத்தையே சொல்லியிருக்கிறார். ஆகையால் ஸூத்ரகாரருக்கு ஜீவ பரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்வதிஷ்டமல்ல என்னும் ஶங்கையுண்டானதற்கு அல்லது--† ஸூத்ரங்களில் ஐக்யம் சொல்லப் படவில்லை என்னும் ப்ரமையுண்டானதற்கு—‡ 'ப்ரதிபாத்யந்து' என்னும் வாக்யத்தால் ஶாஸ்த்ரத்திற்குத் தாத்பர்ய விஷயமான ஜீவப்ரஹ்மாக்களின் ஐக்யம் "ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா தூபதேஶோ வாமதேவவத்" (ப்ர. ஸூ. 1-1-30.) இது முதலிய ஸூத்ரங்களால் ஸூத்ரகாரர் சொல்லியிருக்கிறாரென்று ஶங்கராசார்யர் ஸமாதானம் சொல்லியிருக்கிறார். ஶங்கராசார்யரிட 'இத்யாதிஞ' என்னும் வாக்யத்திலிருக்கும் ஆதிபதத்தால்—"ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்தி ச" (ப்ர. ஸூ. 4-1-3) என்னும்ஸூத்ரத்தைக்ரஹிக்க வேண்டுமென்று $ ஆனந்தகிரியவரும் ¶ ரத்னப்ரபாகாரரும் சொல்லியிருக்கிறார்கள். அவர்களும் ஆதிபதத்தைச் சொல்லி

---

* நநு ஜீவப்ரஹ்மணோரைக்யம் ந க்வாபி ஸூத்ரகாரோ முகதோ வததி கிந்து ஸர்வத்ர பேதமேவாதோ நைக்யமிஷ்டம், தத்ராஹ—ப்ரதிபாத்யம்த்விதி ॥ (ப்ர. ஸூ. ஆனந்தகிரீயம் 1-3-19)

† ஸூத்ரேஷ்வபேதோ நோக்த இதி ப்ராந்திம் நிரஸ்யதி—ப்ரதிபாத்யமிதி (ரத்னப்ரபா 1-3-19).

‡ ப்ரதிபாத்யந்து ஶாஸ்த்ரார்த்தமாத்மைகத்வமேவ தர்ஶயதி — 'ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா தூபதேஶோ வாமதேவவத்' (ப்ர. ஸூ. 1-1-30) இத்யாதிஞ (ஶாம். ஸூ. பா. 1-3-19).

$ ஆதிபதமாத்மேதி தூபகச்சந்தீத்யாதி ஸங்க்ராஹார்த்தம் (ஆனந்தகிரீயம்-1-3-19).

¶ ஆத்மேதி தூபகச்சந்தீத்யாதி ஸூத்ராண்யாதி பதார்த்த: (ரத்னப்ரபா 1-3-19).

யிருப்பதால் நாலாமத்யாயத்தில் 'ஆத்மேதி' என்னும் ஸூத்ரத்திற்கு முன்னிருக்கும் ஒன்றிரண்டு ஸூத்ரங்களை எடுத்துக்கொள்ளலாம். இப்படி 564 ப்ரஹ்மஸூத்ரங்களில் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யஞ்சொல்லுகிறதென்று அத்வைதிகளால் சொல்லப்பட்ட மூன்று, நான்கு ஸூத்ரங்கள் தவிர, மற்ற 560 ஸூத்ரங்களும் பேதத்தைச் சொல்லுகின்றனவென்று ஒத்துக்கொண்டிருப்பதாக ஸித்தமாகிறபடியால் 560 ஸூத்ரங்களும் பேதத்தையே ப்ரதிபாதிக்கின்றன. அபேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லும் அந்த மூன்று நான்கு ஸூத்ரங்களை பிறகு விசாரிக்கலாம்.

## ப்ரதிவாதி விசாரணை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த வாதி சொல்லும் வாக்யங்கள் பாஷ்ய, ஆனந்தகிரி, ரத்னப்ரபா வாக்யங்களேயல்லவா?

பி. வா:—இவைகள் பாஷ்ய, ஆனந்தகிரி, ரத்னப்ரபா வாக்யங்களே.

வா. வ:—இந்த வாக்யங்களுக்கு ஆசார்யர் சொன்ன அர்த்தந்தானா அல்லது வேறு அர்த்தமுண்டோ?

பி. வா:—அதே அர்த்தம். ஆகிலும் ரத்னப்ரபா, ஆனந்தகிரி வாக்யங்களிலிருக்கும் ஆதிபதத்தால் மற்றும் சில ஸூத்ரங்களை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கின்றன.

வா. வ:—அந்த ஆதி பதத்தால் 'ஆத்மேதி' (4-1-3) என்னும் ஸூத்ரத்திற்கு உத்தர ஸூத்ரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமா? பூர்வ ஸூத்ரத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமா?

பி. வா:—'ஆத்மேதீத்யாதிஷு' என்னும் வாக்யத்திலிருக்கும் ஆதி பதத்தால் உத்தர ஸூத்ரங்களைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். பூர்வ ஸூத்ரங்களை எடுத்துக்கொள்ளக் கூடாது.

வா. வ:—ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லும் ஸூத்ரங்களெவ்வளவு என்று இந்த பாஷ்யாதிகளால் ஸித்தமாகிறது?

பி. வா:—'ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா' 'ஆத்மேதி தூபகச்சந்தி' என்றுமிரண்டு ஸூத்ரங்கள் ஐக்யப்ரதிபாதகமானவை என்று ஸ்பஷ்டமாய் ஸித்தமாகிறது. இதர ஸூத்ரங்களெவ்வளவென்னும் விஷயத்தை விசாரகாலத்தில் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—ஆசார்யரே! மற்றஸூத்ரங்களை பிறகு விசாரிப்போம். இந்த மூன்று நான்கு ஸூத்ரங்கள் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கின்றனவென்று ஶங்கராசார்யார் சொன்னதை நீங்கள் ஒத்துக்கொண்டீரல்லவா?

வாதி:—நாராயணா! நாராயணா! நாங்கள் ஒத்துக்கொள்ளவில்லையே. ஒத்துக் கொள்ளாமலிருக்கும்போது, ஒத்துக்கொண்டீரல்லவா என்று கேட்பது ஸரியல்ல.

பி. வா. வ:—நீங்களே ஶங்கராசார்யரிட வாக்யத்தை உதாஹரித்து மூன்று நான்கு ஸூத்ரங்கள் தவிர மற்ற ஸூத்ரங்கள் பேதத்தைச் சொல்லுகின்றனவென்று சொல்லிய பிறகு, அந்த 3, 4 ஸூத்ரங்கள் அபேதத்தைச் சொல்லுகின்றனவென்று நீங்கள் ஒத்துக்கொண்டாற்போலாக வில்லையோ?

வாதி:—ஶங்கராசார்யரே முதலான அத்வைதிகள் மூன்று, நான்கு ஸூத்ரங்கள் தவிர, மற்ற ஸூத்ரங்களுக்கு பேதபோதகத்வத்தை ஒத்துக்கொண்டிருக்கிறுரென்று சொன்னேமே யொழிய, நாங்கள் அம்மூன்று நான்கு ஸூத்ரங்கள் அபேதபோதகமென்று ஒத்துக் கொண்டதாகச் சொல்லவில்லையே.

பி. வா. வ:—அந்தவிசாரமப்படியிருக்கட்டும். அந்தமூன்று, நான்கு ஸூத்ரங்கள் அபேதத்தை எப்படி ப்ரதிபாதிக்கின்றன?

வாதி:—அந்த ஸூத்ரங்களும் பேதத்தையே ப்ரதிபாதிக்கின்றனவென்று சொல்லும் எங்களை, அபேதத்தை எப்படி ப்ரதிபாதிக்கின்றனவென்று கேட்பது ஸரியாகுமா? ஐக்யத்தை ப்ரதிபாதிக்கின்றனவென்று சொல்லும் ப்ரதிவாதிகளைக் கேழ்க்க வேண்டும்.

ப்ர. வா. எ. ஸூத்ரம் 1.

## ஶாஸ்த்ர த்ருஷ்ட்யா என்னும் ஸூத்ர விசாரணை.

---

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! "ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா தூப தேஶோ வாமதேவவத்" (ப்ர. ஸூ. 1-1-30) என்னும் ஸூத்ரத்திற் கர்த்தமென்ன?

பி. வா:—"ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா தூபதேஶோவாமதேவவத்" என்னும் ஸூத்ரம் எப்படி, வாமதேவவத் = வாமதேவன், நான் மனு, ஸூர்யன், கக்ஷீவான், என்னும் ருஷி என்று ஸர்வதாதாத்ம்ய (ஸர்வாபேத) த்ருஷ்டியாலாகட்டும்; ப்ரஹ்மாபேத த்ருஷ்டியாலாகட்டும், 'அஹம் மனுரபவம் ஸூர்யஶ்சாஹம் கக்ஷீவான் (ருக்வேதம்) என்றெப்படிச் சொன்னரோ, அப்படியே 'ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா' நானே பரப்ரஹ்மம் என்னும் ஶாஸ்த்ராநுஸாரியான த்ருஷ்டியால் 'மாமேவவிஜாநீஹி' ப்ராணஶப்தத்தால் போத்யனுன பரமாத்மாவை, மாமேவ = என்னையாகவே (நானே என்று) தெரிந்துகொள் என்று இந்த்ரனிட உபதேஶமென்று அர்த்தமிருக்கிறபடியால் இந்த்ரனும் (ஜீவனும்) பரமாத்மாவும் ஒன்றே என்று ஸித்தமாகிறது.

---

### க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா' என்னும் பதத்திற்கு என்ன அர்த்தம் சொன்னீர்?

பி. வா:—நானே ப்ரஹ்ம என்னும் ஶாஸ்த்ராநுஸாரமான த்ருஷ்டியால் என்று அர்த்தம் சொல்லியிருக்கிறோம்.

வா. வ:—நானே ப்ரஹ்மம் என்னும் ஶாஸ்த்ரம் யாது?

பி. வா:—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் ஶாஸ்த்ரம்.

வா. வ:—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யம் உங்கள் மதப்ரகாரம் 'சித்' என்னும் அகண்டார்த்த போதத்தைப் பிறப்பிக்கிறதல்லவா? அதிலுல் நானே ப்ரஹ்மம் என்னும் ஞானமெப்படி யுண்டாகும்?

பி. வா:—'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யத்திற்கு முக்ய தாத்பர்யமென்றும், அமுக்ய தாத்பர்யமென்றும், இரண்டு தாத்பர்யங்களுண்டு. முக்ய தாத்பர்யத்தால் 'சித்' என்று போதமுண்டாயினும், அமுக்ய வ்ருத்தியால் 'நான் ப்ரஹ்மம்' என்னும் போதமுண்டாகிறது.

வா. வ:—ஐக்யத்தைச் சொல்லும் விஷயத்தில் முக்யதாத்பர்யமில்லையல்லவா?

பி. வா:—இல்லை.

வா. வ:—அமுக்ய தாத்பர்யத்தாலாவது—அஹம்பத போத்யனான விஶிஷ்டனான ஜீவனுக்கு, ப்ரஹ்மபதத்தால் போத்யனான விஶிஷ்டனான பரமாத்மாவுடன் ஐக்யத்தை எப்படி போதிக்கும்?

கோர்ட்:—மிஸ்டர் தாஸ்! 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்ய விசாரகாலத்தில் இந்த விசாரங்களாயிருக்கின்றன. அடிக்கடி அதே விசாரம் வேண்டாம்.

வா. வ:—மஹாப்ரபோ! அடிக்கடி 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யங்களை ப்ரதிவாதி சொல்லுகிறார். அதற்கு பதிலளிக்காமலிருப்பதற்கு ஸாத்யமில்லை. கோர்ட்டாரோ வேண்டாமென்று உத்திரவிடுகிறார். ஆயினும்—'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யங்களின் விசாரமெல்லாவற்றையும் இவ்விஷயத்தில் கோர்ட்டார் நோட் செய்துகொள்ள வேண்டும். ப்ரதிவாதிக்கும் இனி இவ்விஷயத்தைச் சொல்லக்கூடாதென்று உத்திரவு செய்யவேண்டுமாய்க் கோருகிறேன்.

கோர்ட்:—ஶாஸ்த்ரிகளே! 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யங்களை அடிக்கடி உதாஹரிக்க வேண்டாம். வேறேதாவது விசாரமிருந்தால் சொல்லும்.

பி. வா:—(பதில் இல்லை.)

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ம்ருதப்ரவீத்' 'ஆபோ ப்ருவன்' இத்யாதி வாக்யங்களுக்கு ஸூத்ரகாரரென்ன அர்த்தம் செய்திருக்கிறாரென்று ஶங்கராசார்யர் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—ம்ருத் = ம்ருதபிமானி தேவதை (ம்ருதந்தர்யாமி தேவதை) அப்ரவீத் = பேசிற்று. ஆப: = ஜலாபிமானி தேவதை (ஜலாந்தர்யாமிதேவதை) பேசிற்றென்று அர்த்தம் சொல்லியிருக்கிறார்.

வா. வ:—ம்ருத், ஜலம் முதலான பதங்களுக்கு அந்தர்யாமி என்னும் அர்த்தம் முக்யமா? அமுக்யமா?

பி. வா:—முக்யமே.

வா. வ:—'ய ஆத்மனி திஷ்டன்' 'யோ வாயௌ திஷ்டன்' 'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன்' இத்யாதி வாக்யங்களுக்கு 'அந்தர்யாம்யதிதைவாதிஷு தத்தர்ம வ்யபதேசாத்' என்னும் ஸூத்ரத்தில் ஸூத்ரகாரரான பாதராயணரென்ன அர்த்தம் செய்திருக்கிறாரென்று சங்கராசார்யர் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—வாயு, ஸூர்யன், அக்னி, இந்த்ரன் முதலான ஸர்வ ப்ராணிகளிலும் பரமாத்மா அந்தர்யாமியாய் அவர்களைவிட பின்னனாயிருந்து, நியமிக்கிறானென்று அர்த்தம் செய்திருக்கிறாரென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—'ப்ராணஸ்ததானுகமாத்' என்னும் ஸூத்ரத்திலென்ன சொல்லியிருக்கிறார்?

பி. வா:—'ப்ராஞோஸ்மி ப்ரஜ்ஞாத்மா' என்னும் வாக்யத்தில் அவரவர் ஞாபகமான லிங்கங்கள் (அடையாளங்கள்) இருப்பதால் ப்ராணசப்தத்தால் வாயு சொல்லப்படுகிறானோ, இந்த்ரனோ, ஜீவனோ, ப்ரஹ்மமோ, என்னும் ஸந்தேகமும், இந்த்ரன் சொல்லப்படுகிறான் என்னும் பூர்வபக்ஷமுமுண்டாகவே—ப்ராண சப்த போத்யன் பரமாத்மாவே (பரப்ரஹ்மமே), இந்த்ராதிகளல்லவென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—இதினலிந்த்ராதிகளுக்கும், ப்ராணசப்த போத்யனை பரமாத்மாவுக்கும் பேதம் ஸித்திக்கிறதா? இல்லையா?

பி. வா:—ப்ராணசப்த போத்யன் இந்த்ரனல்ல, பரமாத்மாவே என்று சொல்லியிருப்பதால் ஸ்பஷ்டமாக பேதம் ஸித்தமாகிறது.

வா. வ:—'மாமேவ விஜாநீஹி' என்னும் வாக்யம் யாருடையது?

பி. வா:—இந்த்ரனின் வாக்யம்.

வா. வ:—இதற்கர்த்தமென்ன?

பி. வா:—ப்ராணன் (ப்ராணஶப்த போத்யனான பரமாத்மா) மாமேவ = நானே என்று தெரிந்துகொள். (ப்ராணஶப்த போத்யனான பரமாத்மாவே நானென்று தெரிந்துக்கொள்) என்று அர்த்தம்.

வா. வ:—'ப்ராணஸ்ததாநுகமாத்' என்னும் ஸூத்ரத்தில் ப்ராணனிந்த்ரனல்ல, பரமாத்மாவேயென்று, பரமாத்மாவுக்கும், இந்த்ரனுக்கும் பேதம் சொல்லப்பட்டிருக்கிறதல்லவா?

பி. வா:—இந்த்ரனுக்கும், ப்ராணஶப்த போத்யனான பரமாத்மாவுக்கும் பேதம் சொல்லப்பட்டிருக்கிறது.

வா. வ:—'மாமேவ விஜாநீஹி' என்று நானே ப்ராணன் (பரமாத்மா) என்னும் அர்த்தம் பொருந்துகிறதா இல்லையா?

பி. வா:—நானே ப்ராணன் (பரமாத்மா) என்னும் அர்த்தம் பொருந்தாது.

வா. வ:—'மாம்' என்னும் பதத்திற்கு மதந்தர்யாமி (என்னந்தர்யாமி) என்னும் அர்த்தம் முக்யமா? அமுக்யமா?

பி. வா:—முக்யமே.

வா. வ:—'மாமேவ விஜாநீஹி' என்னும் வாக்யத்திற்கு, ப்ராணம் = ப்ராணஶப்த போத்யனான பரமாத்மாவை, மாம் மதந்தர்யாமிணம் = என்னந்தர்யாமியா யிருக்கிறவனென்று தெரிந்துகொள்ளென்னும் அர்த்தம் முக்யார்த்தமாகிறதல்லவா?

பி. வா:—முக்யார்த்த மாகிறது.

வா. வ:—'ய ஆத்மனி திஷ்டன்', 'யோ வாயௌ திஷ்டன்', 'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன்' என்னும் வாக்யங்களில்—பரமாத்மா ஸர்வாந்தர்யாமியாயிருக்கிறானென்று சொல்லியிருப்பதால், அந்தர்யாமித்ருஷ்டி ஶாஸ்த்ரத்ருஷ்டி (ஶாஸ்த்ராநுஸாரி த்ருஷ்டி) யாகிறதல்லவா?

பி. வா:—மதந்தர்யாமி (என்னந்தர்யாமி) த்ருஷ்டியும் ஶாஸ்த்ராநுஸாரி த்ருஷ்டியாகிறது.

வா. வ:—நானே ப்ரஹ்மம் என்னும் த்ருஷ்டி, ஶாஸ்த்ராநுஸாரித்ருஷ்டியாவதில்லை. என்னந்தர்யாமி பரமாத்மா என்னும் த்ருஷ்டி ஶாஸ்த்ரத்ருஷ்டியாகிறது. மற்றும் இந்த்ரன், ப்ராணன் (பரமாத்மா) இவர்களுக்கு பேதத்தைச் சொல்லும் 'ப்ராணஸ்ததாநுகமாத்' என்னும் ஸூத்ரத்திற்கு அநுகூலமுமாய்க்கொண்டிருக்க — ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா = என் அந்தர்யாமியான ப்ராணன் என்னும் ஶாஸ்த்ரத்ருஷ்டியால் 'மாமேவ விஜாநீஹி' ப்ராணனை என்னந்தர்யாமியென்று தெரிந்து கொள்ளென்னும் அர்த்தத்தை ஏன் செய்யக்கூடாது?

பி. வா:—(பதில் இல்லை.)

கோர்ட்.—ஆசார்யரே! 'ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா' என்னும் பதத்திற்கு 'அந்தர்யாமித்ருஷ்ட்யா' என்னும் அர்த்தத்தைச் சொன்ன மாத்திரத்தில் ஸூத்ரத்திலிருக்கும் மற்ற எல்லா பதங்களுக்கும் அர்த்தம் பொருந்த வேண்டுமல்லவா?

வாதி:—எல்லா பதங்களுக்கும் பொருந்தவேண்டும்.

கோர்ட்:—Mr. H. H. சர்மா! 'வாமதேவ:' என்னும் பதத்திற்கெப்படி அர்த்தம் பொருந்துவிக்கிறீரோ கேளும்?

பி. வா. வ:—ஆசார்யரே! வாமதேவர் எப்படி தனக்கு ஸர்வதாதாத்ம்யத்ருஷ்டி (ஸர்வாபேத த்ருஷ்டி) யாலாகட்டும், ப்ரஹ்மாபேத த்ருஷ்டியாலாகட்டும், '**அஹம் மனுரபவம் ஸூர்யஶ்ச**' நான் மனு, நானே ஸூர்யன் என்று சொல்லியிருக்கிறாரோ, அப்படியே இந்த்ரன் அபேதத்ருஷ்டியால் சொல்லியிருக்கிறான் என்று '**வாமதேவவத்**' என்னும் பதம் சொல்லுகிறது. அந்த பதம் சொல்லும் அர்த்தம் நீங்கள் சொல்லும் அர்த்தத்திற்கு விருத்தமாகிறதல்லவா?

வா. வ:—(To the Court):—மஹாப்ரபோ! 'வாமதேவவத்' என்னும் த்ருஷ்டாந்தத்தால் ஸூசிதமான 'அஹம் மனுரபவம் ஸூர்யஶ்ச' (ருக்வேதம்) என்னும் மந்த்ரத்தின் உத்திர வாக்யங்களை விசாரம் செய்ததேயாயின்—வாமதேவ ருஷிக்கு 'நானே

ப்ரஹ்ம' என்னும் அபேதஞானமிருக்க வில்லை. அபேதஞான மிருந்ததென்று சொல்வது பொருந்தாது. இவ்வளவேயன்றி, அதற்கு விருத்தமாக பேதஞானமே யிருந்ததென்று ஸித்தமா கிறது. ஸாவகாஶமாய் விசாரம் நடப்பதற்கு உத்திரவளிக்க வேண்டும். ப்ரபுக்களும் அதை கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்தனை.

கோர்ட்:—Yes. அப்படியேயாகட்டும். Mr. H. H. சர்மா! ஸாவகாஶமாகவும், விவரமாகவும் விசாரம் நடக்கட்டும்.

பி. வா. வ:—ஆசார்யரே! வாமதேவருஷிக்கு ஐக்யஞான மிருக்கவில்லை. மற்றும் அபேதஞானம் பொருந்துவதுமில்லை. பேதஞானமே யிருந்ததென்று நீங்களெந்த ஆதாரத்தைக்கொண்டு சொல்லுகிறீர்?

வாதி:—ஶாஸ்த்ரிகளுடன் விசாரம் செய்கிறேன். அதினுல் எல்லாம் தங்களுக்குத் தெரியவரும்.

வாதி:—ஶாஸ்த்ரிகளே! இதென்ன க்ரந்தம்?

பி. வா:—இது எங்கள் வித்யாரண்யர் செய்த ருக்வேத பாஷ்யம்.

வாதி:—* இந்த 'கர்பே நுஸன்' 'நகாஸமாமபஜோஷம்' என்னும் இரண்டு மந்த்ரங்களுக்கும் வித்யாரண்யரென்ன அர்த் தம் சொல்லியிருக்கிருர்?

* கர்பே நு ஸன்னன்வேஷாமவேத மஹம் தேவானும் ஜனிமானி விஶ்வா ஶதம் மா புர அயாஸீரக்ஷன்னதஶ்யேனோ ஜவஸா நிரதீயம் ॥ (ருக். 6-16-1)

கர்பே நு கர்ப ஏவ ஸன் வித்யமானோஹம் வாமதேவ: ஏஷாமிந்த்ரா தீனும் தேவானும் விஶ்வா விஶ்வானி ஸர்வாணி ஜனிமானி ஜன்மானி அன்வவேதம் ஆனுபூர்வேணுஜ்ஞாஸிஷம். பரமாத்மன: ஸகாஶாத் ஸர்வே தேவா ஜாதா இத்யவேதிஷ மித்யர்த்த: ॥ (6-16-1)

நகாஸமாமபஜோஷம் ஐபாரா பீமா ஸத்வக்ஷஸா வீர்யேண ஶர்மா புரந்திரஜஹாதராதிருதவா தாம் அதரச்ரு ஶூவான; ॥ (ருக். 6-16-2)

பி. வா:—* வாமதேவ ரிஷி சொல்லுகிறார்—நான் கர்பத்திலிருந்தபோதே தேவதைகள் பரமாத்மாவினால் பிறந்தனவென்னும் விஷயத்தைத் தெரிந்துகொண்டிருக்கிறேன். ஸர்வப்ரேரகனான பரமாத்மா கர்ப்பத்தி லிருக்கும் என்னிட ஶத்ருக்களை ஸம்ஹரித்தார். பரிபூர்ணனான பரமாத்மா கற்பத்திற்கு துக்கத்தைக் கொடுக்கும் வாயுவினின்றும் விடுவித்தாரென்று அர்த்தம்.

வாதி:—தேவதைகளைப் படைப்பவனென்று சொல்லியிருப்பதால் தேவதைகளுக்கு பரமாத்மாவுடன் பேதமும்; ஈர்மா = ஸர்வஸ்ய ப்ரேரக: = எல்லோருக்கும் ப்ரேரகன் என்று சொல்லியிருப்பதால் ப்ரேர்யப்ரேரக பாவத்தால் எல்லாவற்றிற்கும் பரமாத்மாவுடன் பேதமும்; பரமாத்மா என்னிட ஶத்ருக்களை நாஶம் செய்தாரென்று நான் தெரிந்துகொண்டிருக்கிறேனென்று சொல்லியிருப்பதால் ஞாத்ருஜ்ஞேய பாவத்தால் வாமதேவருக்கும் பரமாத்மாவுக்கும் பேதமும் ஸித்தமாகிறதல்லவா? மற்றும் வாமதேவருக்கு பேதஞானமே யிருந்ததென்று ஸித்தமாகிறதல்லவா?

பி. வா:—பேதம் ஸித்தமாகிறது. வாமதேவருக்கு பேதஞான முண்டென்றும் ஸித்தமாகிறது. ஆனால்—

வாதி:—ஆனால் என்ன?

பி. வா:—பேத முண்டென்று ஸித்தமாயினும் — அந்த பேதம் மித்யா (வ்யாவஹாரிகம்) மற்றும் வாமதேவருக்குண்டான அந்த பேத ஞானம் ப்ரமம்.

வாதி:—ஶாஸ்த்ரிகளே! வாமதேவரிஷிக்கு, நானே ப்ரஹ்மமென்னும் ஐக்யஸாக்ஷாத்கார மிருந்ததோ? இல்லையோ? இருந்

* ஸ கர்ப: மாம் வாமதேவம் ஜோஷம் பர்யாப்தம் நகனைவாபஜபார அபஜஹார கர்பே அபி வஸதோ மே மோஹோ மாபூதித்யர்த்த: । அஹம் து ஈம் இதம் கர்பஸ்தம் துக்கம் த்வக்ஷஸா தீக்ஷ்ணேன வீர்யேண ஞானஸாமர்த்யேன அப்யாஸ அப்யபவம் ஈர்மா ஸர்வஸ்ய ப்ரேரக: புரந்தி: புராம் தாரக: பரமாத்மா அராதீ: கர்பஸம்ஸ்திதான் ஶத்ரூன் ஜஹாத் அத்யஜத் ஜகான உதாபி ச ஶுஶுவான: வர்த்தமான: பரிபூர்ண: பரமாத்மா வாதான் கர்பக்லேஶகரான் வாயூன் அதாரீத் ॥ (ருக். பா. 6-16-2).

ததேயாயின் தேவதைகள் பரமாத்மாவினால் பிறந்தனவென்று தெரிந்துகொள்வதும், 'அஹம்பூமி மததாம் ஆர்யாய' இத்யாதி வாக்யங்களால் சொல்லப்பட்ட ஆர்யர்களுக்காக பூமியை நான் கொடுத்தேன் என்பது இவைகளே முதலான பேதஞான கார்யமான வ்யாபாரம் அவருக்கெப்படிப் பொருந்தும்? ஐக்ய ஸாக்ஷாத்கார மில்லாவிடின்—'அஹம் மனுரபவம் ஸூர்யஶ்ச' என்னும் ஸர்வாத்ம்ய ஞானமெப்படி யுண்டாகும்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யர் ஐக்ய ஸாக்ஷாத்காரமிருந்தாலும் எப்படி க்ரந்த நிர்மாணநிரூபமான பேதஞான கார்யங்களைச் செய்திருக்கிறாரோ அப்படியே ஐக்ய ஸாக்ஷாத்கார மிருந்தாலும் பேதஞான கார்யத்தை வாமதேவர் செய்யக்கூடும்.

வாதி:—ஶாஸ்த்ரிகளே! விவாத விஷயத்தில் அவரவர் ஆசார்யர்களை உதாஹரிக்கக்கூடாது. ஒருவரிட ஆசார்யரிடத்தில் மற்றொருவருக்கு விஶ்வாஸமிருப்பதில்லை என்று முன்னமே சொல்லியிருக்கிறோம். ஆகையால் உங்கள் ஶங்கராசார்யருக்கு ஐக்ய ஸாக்ஷாத்காரமுண்டோ? இல்லையோ? இருந்தால் உங்கள் மதப்ரகாரம் அஜ்ஞான கார்யங்களான, க்ரந்தரசனம், பாடம் சொல்வது, இவைகளே முதலானவை எப்படிப் பொருந்தும்? ஐக்யஸாக்ஷாத்கார மில்லையாயின் — அஜ்ஞானியானபடியால், ப்ராக்தரிட வாக்யங்களில் விஶ்வாஸ முண்டாவதெப்படி? என்னும் ஆக்ஷேப முண்டாகிறது. ஆகையால் ஶங்கராசார்யர் பேச்சை எடுக்கவேண்டாம். வேறேதாவது ஸமாதானமிருந்தால் சொல்லும்?

பி. வா:—(பதில் இல்லை.)

வாதி:—ஶாஸ்த்ரிகளே! 'ஜீவமுக்யப்ராணலிங்கர்நிதி சேன்னோபாஸாத்ரைவித்யாதாஶ்ரிதத்வாதிஹ தத்யோகாத்' என்னும் ஸூத்ரத்தில் என்னவென்று பூர்வபக்ஷம் செய்துகொண்டு ஸமாதானம் சொல்லப்பட்டிருக்கிறதென்று ஶங்கராசார்யார் சொல்லியிருக்கிறார்?

பி. வா:—'ப்ராஜ்ஞோஸ்மி ப்ராஜ்ஞாத்மா' இது முதலிய வாக்யங்களால் ஜீவலிங்கங்களும், முக்யப்ராண லிங்கங்களும், பரமாத்

மாவின் லிங்கங்களும் (அடையாளங்கள்) இருப்பதினால், இந்த வாக்யத்தில் ஜீவன், முக்ய ப்ராணன், பரமாத்மா இம்மூவரும் சொல்லப்படுகிறார்கள் என்று பூர்வபக்ஷ முண்டாகவே—ப்ராண ஶப்தபோத்யன் பரமாத்மாவே, ஜீவனல்ல, முக்யப்ராணனுமல்லவென்று ஸித்தாந்தம் செய்திருக்கிறாரென்று ஶங்கராசார்யர் சொல்லியிருக்கிறார்.

வா. வ:—இதனால் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் ஸித்தமாகிறதல்லவா?

பி. வா:—பேதம் ஸித்தமாகிறது.

வா. வ:—'ப்ராணஸ்ததானுகமாத்' என்னும் முதல் ஸூத்ரத்திலும் 'ஜீவ முக்ய ப்ராணலிங்காத்' என்னும் கடைசி ஸூத்ரத்திலும், ஜீவபரமாத்மாக்களுக்கு பேதமுண்டென்று ஸித்தாந்தம் செய்து, மத்ய ஸூத்ரத்தில் அநேக ப்ரமாணங்களுக்கு விருத்தமாக இந்த்ரனுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்யம் சொல்வதெப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதில் இல்லை.)

## வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! இந்த 'ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா' என்னும் ஸூத்ரத்திற்கு நீங்கள் என்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—'ப்ராணஸ்ததானுகமாத்' என்னும் ஸூத்ரத்தில் ப்ராண ஶப்த வாச்யன் இந்த்ரனோ, பரமாத்மனோ என்னும் ஸம்ஶயமும்; இந்த்ரனே என்னும் பூர்வபக்ஷமு முண்டாகவே—ப்ராணஶப்தவாச்யன் பரமாத்மாவேயல்லாது இந்த்ரனல்லவென்று ஸித்தாந்தம் செய்திருக்கிறார். அதற்குமேல் இந்த்ரனும், பரமாத்மாவும் வேறாயின் இந்த்ரன் 'நானே ப்ராணன்' என்றெப்படிச் சொன்னானென்னும் ஆக்ஷேபமுண்டாகவே—பரமாத்மா வேறு நான் வேறு என்னும் பேதஞானமுள்ள வாமதேவர் எப்படி மன்வந்தர்யாமியும், ஸூர்யாந்தர்யாமியும், தன்னந்தர்யாமியும், ஒருவனே என்று 'ய ஆத்மனி திஷ்டன்' இத்யாதி ஶாஸ்த்ரங்களா

னுண்டான அந்தர்யாமி த்ருஷ்டியால், அல்லது 'ஶாஸ்திரிஶாஸ்த்ரம் ஶாஸ்த்ரஸ்ய ஶாஸகஸ்ய அந்தர்யாமிண: த்ருஷ்ட்யா' என்று அபேதம் தோன்றும்படி உபதேஶித்தாரோ அப்படியே இந்த்ரன் தன்னந்தர்யாமியான பரமாத்ம த்ருஷ்டியால், நானே ப்ராணன் = என்னந்தர்யாமி ப்ராணன் என்று உபதேஶம் செய்தாரென்று அர்த்தம் சொல்லுகிறோம்.

பி. வா. வ:—நானே ப்ராணனென்று ஸ்பஷ்டமாக, முக்ய வ்ருத்தியால் அபேதம் தோன்றிக்கொண்டிருக்க — ஏனிப்படி கௌணார்த்தம் செய்கிறீர்?

வாதி:—அத்வைதமதத்தை யனுஸரித்தும், விஶிஷ்டனை இந்த்ரனுக்கு, விஶிஷ்டனை, ப்ராணஶப்த போத்யனை பரமாத்மாவுடன் ஐக்யம் பொருந்துவதில்லை. விஶிஷ்டனை வாமதேவருக்கும், விஶிஷ்டனை ஸூர்யாதி தேவதைகளோடு ஐக்யம் பொருந்துவதில்லை. ஆகையால் லக்ஷணாவ்ருத்தியால் 'ஶுத்தசித்' என்னும் அர்த்தத்தை எடுத்துக்கொண்டு ஐக்யம் சொல்ல வேண்டும். அதற்கு 'தத்வமஸி' முதலிய வாக்ய விசாரகாலத்தில் சொல்லிய அனேகதோஷங்களுண்டாகின்றன. ஆகையால் ஐக்யம் பொருந்தாததால் எல்லா ஶப்தங்களுக்கும் அந்தர்யாமியான வஸ்து முக்யார்த்தமானதினால் ப்ராணன், இந்த்ரன் என்றால் ப்ராணன் இந்த்ராந்தர்யாமி என்னும் பேதரூபமான அர்த்தத்தையே செய்யவேண்டும்.

பி. வா. வ:—க்ராஸ் இல்லை.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ஶாஸ்த்ர த்ருஷ்ட்யா தூபதேஶோ வாமதேவவத்' என்னும் வேதார்த்த நிர்ணயகமான ஸூத்ரம் வாமதேவரிஷி எப்படி ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா = ஶாஸ்த்ரானுஸாரியான 'நானே ப்ரஹ்மம், ஸூர்யன், மனு' என்னும் ஐக்யத்ருஷ்டியால் 'அஹம் மனுரபவம் ஸூர்யஶ்ச' என்று சொன்னரோ, அப்படியே இந்த்ரன் நானே ப்ரஹ்மமென்னும் ஶாஸ்த்ரானுஸாரியான த்ருஷ்டியால் 'மாமேவ விஜானீயாம்'

நானே ப்ராணஶப்த போத்யனை பரமாத்மாவென்று, உபதேசித் தாரென்று சொல்லியிருக்கிறாரென்று சொல்லுகிறபடியால், இந்த்ராதி ஜீவர்களுக்கு ப்ரஹ்மத்தோடு ஐக்யம் ஸித்திக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

---

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'அஹம் மனுரபவம் ஸூர்யஶ்ச' என்னும் வாக்யத்திற்கு முன்னிருக்கும் ருக்வேத வாக்யங்களில்—நான் கர்ப்பத்திலிருக்கும்போதே தேவதைகள் பரமாத்மாவினால் பிறந்தனரென்னும் விஷயத்தைத் தெரிந்து கொண்டிருக்கிறேன், எல்லோருக்கும் ப்ரேரகனை பரமாத்மா கர்ப்பத்திலிருக்கும் என் ஶத்ருக்களை ஸம்ஹரித்தார். பரிபூர்ணனை பரமாத்மா கர்ப்பத்திற்கு க்லேஶகரமான வாயுவினின்றும் என்னை விமோசித்தாரென்று வாமதேவர் சொன்னதாகச் சொல்லியிருக்கிறபடியால் வாமதேவருக்கு பேதஞான முண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் வாமதேவருக்கு 'நான் ப்ரஹ்மம்' என்னும் ஐக்யஞான மிருக்கவில்லை என்று ஸித்தமாகிறது. தவிர—வாமதேவருக்கு ஐக்யஞான மிருக்குமாயின்—'அஹம் பூமிமததாமார்யாய' நான் ஆர்யருக்கு பூமியைக் கொடுத்தேனென்னும் இது முதலான பேதஞான கார்யமெப்படிப் பொருந்தும்? ஶங்கராசார்யருக்கு ப்ரஹ்மாத்மைக்ய ஸாக்ஷாத்காரம் (ஐக்யஞானம்) இருந்தாலும்-ஶாஸ்த்ர நிர்மாணம், வாதம், உபதேசம், அமருகராஜ ஶரீரப்ரவேஶம் முதலான கார்யங்களெப்படி பொருந்திற்றோ, அப்படியே இதுவும் பொருந்துகிறது என்று ப்ரதிவாதிகள் சொல்வது இருவருக்கும் ஸம்மதமல்லாததால் (ஶங்கராசார்யர் ஞானி என்பதை வாதிகள் ஒப்புக்கொள்ளாததால்) யுக்தமல்ல.

மற்றும்—அத்வைதமதரீத்யா விஶிஷ்டரான மன்வாதிகளோடு விஶிஷ்டருன வாமதேவருக்கு ஐக்யம் பொருந்துவதில்லை. லக்ஷணவ்ருத்தியால் மன்வாதிபதங்களுக்கு ஶுத்தசித்தை எடுத்

துக்கொண்டு சித் சித்துக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதென்று சொன்னால், 'தத்வமஸி' வாக்யத்தில் சொன்ன அனேக தோஷங்கள் வருகின்றன. ஆகையால் 'வாமதேவவத்' என்னும் த்ருஷ்டாந்த வாக்யத்திற்கு வாமதேவரெப்படி ஐக்யத்ருஷ்டியால் நான் மனு, நான் ஸூர்யன், என்று தெரிந்துகொண்டார் என்னும் அர்த்தம் பொருந்தாததினால், இந்த த்ருஷ்டாந்த பலத்தால் இந்திரன் ஐக்யத்ருஷ்டியால் நானே ப்ராணன் (பரமாத்மா) என்று தெரிந்துகொண்டாரென்று அர்த்தம் செய்வது அயுக்தமாகிறது.

மற்றும் 'ப்ராணஸ்ததானுகமாத்' என்னும் முக்யமான ப்ரதம ஸூத்ரத்தில் ப்ராணஶப்தபோத்யன் பரமாத்மாவே யல்லாமல் இந்த்ரனல்லவென்று ஸ்பஷ்டமாக பேதத்தைச் சொல்லியிருப்பதாலும், 'ஜீவமுக்ய ப்ராணலிங்காத்' என்னும் உபஸம்ஹார ஸூத்ரத்தில் பேதத்தைச் சொல்லியிருப்பதாலும், மத்யத்திலிருக்கும் 'ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா' என்னும் குண ஸூத்ரத்திற்கு (ப்ரதம ஸூத்ரத்தின் அர்த்தத்தை ஸாதிப்பதற்காக ப்ரவ்ருத்தமான ஸூத்ரத்திற்கு)முக்யமும்ப்ரதமமுமான(உபக்ரமத்தில் சொல்லியிருக்கும்) ஸூத்ரத்தில் சொல்லியிருக்கும் அர்த்தத்திற்கும், உபஸம்ஹாரத்திலிருக்கும் ஜீவமுக்ய ப்ராணலிங்காத் என்னும் ஸூத்ரத்திற்குச் சொன்ன அர்த்தத்திற்கும் அனுகுணமான அர்த்தத்தைச் சொல்லவேண்டுமேயல்லாது, அதற்கு விருத்தமாக அபேதத்தைச் சொல்லுகிறதென்பது அத்யந்த அயுக்தம்.

மற்றும், நானே ப்ரஹ்மமென்று சொல்லும் ஶாஸ்த்ரங்களே (வேதாதிகளே) இல்லாததால் 'ஶாஸ்ரத்ருஷ்ட்யா' என்னும் பதத்திற்கு ஶாஸ்த்ரானுஸாரியான 'அஹம்ப்ரஹ்ம' நானேப்ரஹ்மமென்னும் த்ருஷ்டியால் என்னும் அர்த்தம் அயுக்தமாகிறபடியால்—'ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்' 'ய ஆத்மனி திஷ்டன்' 'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன்' இத்யாதி வேதவாக்யங்களும் 'ஶாரீரஶ்சோபயேபி ஹி பேதேனைனமதீயதே' 'பேதவ்யதேஶாச்சான்ய:' (ஶாம். பா. 1-1-21) இத்யாதி ஸூத்ரங்களும் பரமாத்மா—இந்த்ரன், வாயு முதலான ஸமஸ்த சேதனங்களில் அந்தர்யாமியா யிருக்கிறானென்று சொல்லுகின்றன. ஶங்கா

சார்யரும் அப்படியே சொல்லுகின்றனவென்று ஒத்துக்கொண்டிருக்கிறார்.

ஆகையால், 'மாஸ்த்ரத்ருஷ்ட்யா தூபதேமோ வாமதேவவத்' என்னும் ஸூத்ரத்திற்கு—வாமதேவர், பரமாத்மா எல்லாருக்கும் (சர்மா = ப்ரேரக:) ப்ரேரகன் (அந்தர்யாமி) என்னும் த்ருஷ்டியால் அஹம் மனு: என்றெப்படிச் சொல்லியிருக்கிறாரோ, அப்படியே 'யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன்' 'ய ஆத்மனி திஷ்டன்' இவை முதலிய மாஸ்த்ரங்களால் ஸித்திக்கும் பரமாத்மா என்னுடைய (இந்த்ரனுடைய) அந்தர்யாமி என்னும் த்ருஷ்டியால் நானே ப்ராணன் (ப்ராணநாமக பரமாத்மா என்னந்தர்யாமி) என்று சொல்லியிருக்கிறார் என்னும் அர்த்தமே யுக்தமானதென்னும் விஷயத்தை கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்று ப்ரார்த்தனை

பி. வா. எ. ஸூத்ரம் 2.

## ஆத்மேதி தூபகச்சந்தி என்னும் ஸூத்ர விசாரணை.

பி. வா. வ:—மாஸ்த்ரிகளே! 'ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்தி ச' (ப்ர. ஸூ. 4-1-3) என்னும் ஸூத்திரம் எப்படி ஐக்யத்தைச் சொல்லுகிறது?

பி. வா:—பரமாத்மா, ஆத்மேத்யேவ = நானே என்று (ஜீவனே என்று) உபகச்சந்தி = தெரிந்துகொள்ளுகிறார்கள். பரமாத்மாவே ஜீவனென்று 'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் க்ராஹயந்தி = உபதேசிக்கின்றனவென்று சொல்லிக்கொண்டே ஜீவ பரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறது.

வா. வ:—மாஸ்த்ரிகளே! 'உபகச்சந்தி' 'க்ராஹயந்தி' என்னும் பதங்களால் போதிதமான ஞானரூபக்ரியைக்குக் கர்த்தா யார்? கர்மா யார்?

பி. வா:—பரமாத்மா கர்மா, ஜீவன் கர்த்தா.

வா. வ:—ஞானகர்மா, ஞான கர்த்தாக்களுக்கு பேதமுண்டல்லவா?

பி. வா:—ஜ்ஞேயனுக்கும் (ஞானகர்மாவுக்கும்) ஞாத்ருக்கும் (ஞானகர்த்தாவுக்கும்) பேதமுண்டு.

வா. வ:—இந்த ஸூத்ரங்களில் ஜீவபரமாத்மாக்களுக்கு ஞாத்ருஜ்ஞேய பாவத்தைச் சொல்வதால் பேதம் ஸித்தமாகிற தல்லவா?

பி. வா:—பேதமும் ஸித்தமாகிறது. 'பரமேச்வர: ஆத்மேதி' பரமேச்வரன் ஆத்மா (நானே) என்று தெரிந்துகொள்கிறார்களென்று சொல்லிக்கொண்டிருப்பதால் அபேதமும் ஸித்தமாகிறது.

வா. வ:—ஆத்மேதி = ஆத்மாவென்று, உபகச்சந்தி = தெரிந்துகொள்கிறார்கள். ஆத்மேதி = ஆத்மாவென்று க்ரஹிக்க (தெரிந்து கொள்ள)ச் செய்கிறார்களென்று மாத்திரமே அர்த்தமாய்க்கொண்டிருக்க—பரமாத்மாவே ஜீவன் என்னும் அர்த்தத்தை நீர் எப்படிச் சொல்லுகிறீர்?

பி. வா:—அவ்வாக்யத்தில் 'பரமேச்வர:' என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டிருப்பதினால், பரமேச்வர: = பரமாத்மா, ஆத்மா = நானே (ஜீவனே) என்று தெரிந்துகொள்கிறார்களென்று அர்த்தமாகிறபடியால் ஐக்யம் ஸித்திக்கிறது.

வா. வ:—ப்ரதிவாதிகள் சொல்லியவாறு—564 ஸூத்ரங்களில் 560 ஸூத்ரங்களும் பேதத்தையே சொல்லுகின்றன. இந்த 'ஆத்மேதி' என்னும் ஸூத்ரமும் ஞாத்ருஜ்ஞேய பாவத்தால் பேதத்தையே தெரிவிக்கிறது. அத்யாஹாரம் செய்துகொள்ள வேண்டியிருந்தாலும், (வேறு பதத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டியிருந்தாலும்) இதர ப்ரமாணங்களுக்கு விரோதமில்லாமல் 'பரமேச்வரதாஸ:' என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு பரமேச்வரதாஸன், ஆத்மா = நானென்று தெரிந்துகொள்கிறார்களென்று செய்யும் அபாதிதமான அர்த்தமும் பொருந்துகிறது. இந்த ஸூத்ரத்தில் அபேதத்தைச் சொல்லும் பதமுமில்லை. மற்றும் இந்த ஸூத்ரத்தில் இதர ப்ரமாணங்களுக்கும், 564 ஸூத்ரங்களுக்கும் விருத்தமாய்,

'பரமேஶ்வர:' என்னும் பதத்தையே அத்யாஹாரம் செய்து கொள்ளவேண்டுமென்பதற்கு யாதொரு ஞாபகமும் (குறியும்) இல்லை. இப்படியிருக்க— 'பரமேஶ்வர:' என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு, இந்த ஸூத்ரத்திற்கு அபேத ரூப அர்த்தத்தைச் சொல்வது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதில் இல்லை.)

வா. வ:—'த்யுப்வாத்யாயதனம் ஸ்வஶப்தாத்' என்னும் 1-3-1-ம், ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கு ஶங்கராசார்யர் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—'யஸ்மின் த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷம் ஓதம் ................ தமேவைகம் ஜானத ஆத்மானம்' என்னும் ஶ்ருதியில் ஆத்ம ஶப்தமிருப்பதால் த்யு, பூ முதலானவைகளுக்கு ஆஶ்ரயனானவன் (த்யுப்வாத்யாயதனன்) பரமாத்மாவே. ஜீவன், வாயு, ப்ரதானம் முதலானவைகளல்ல. அவைகளில் ஆத்மஶப்தம் பொருந்துவதில்லை என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—இதினால் ஆத்ம ஶப்தம் பரமாத்மாவையே சொல்லுகிறதென்று ஸித்திக்கிறதா? அல்லது ஜீவனைச் சொல்லுகிறதென்று ஸித்திக்கிறதா?

பி. வா:—'ஆத்ம' ஶப்தம் பரமாத்மாவையே சொல்லுகிறதென்று ஸித்தமாகிறது.

வா. வ:—'பரமேஶ்வர:' என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டாலும் — பரமேஶ்வர: ஆத்மா = பரமாத்மா ஜகத்கர்த்தா (ப்ரஹ்மம்) என்று ஸித்திக்குமேயொழிய, பரமேஶ்வரன், ஆத்மா = நானே (ஜீவனே) என்றெப்படி ஸித்தமாகும்?

பி. வா:—'ஆத்ம' ஶப்தம் முக்யமாக பரமாத்மாவையே சொன்னபோதிலும்,— அமுக்யமாக ஜீவனைச் சொல்லுகிறதாகையால் பரமேஶ்வரன், ஆத்மா = நானே (ஜீவனே) என்று அர்த்தம் ஆகலாம்.

வா. வ:—'ஆத்ம' ஶப்தத்திற்கு முக்யார்த்தத்தை விட்டு, இதர அனேக ஶ்ருதிகள், கீதாவாக்யங்கள், ஸூத்ரங்கள்

இவைகளுக்கும், 'ஆத்மேதி' என்னும் ஸூத்ரத்திற்கும் விருத்தமாக, கௌணார்த்தத்தை (அமுக்யார்த்தத்தை) எடுத்துக் கொள்வது எப்படி யுக்தமாகும்? மற்றும்—அபேதத்தை ஸித்தப் படுத்துவதற்காக, ஸூத்ரத்திலில்லாத 'பரமேஶ்வர:' என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொள்ளவேண்டியதாகவும், 'ஆத்ம' ஶப்தத்திற்கு முக்யார்த்தம் பொருந்தாமல், அமுக்யார்த்தத்தைச் சொல்லவேண்டியதாயுமிருக்கும் துர்பலமான ஸூத்ரத்தை, 564 ஸூத்ரங்களில் தேடியெடுத்துச் சொல்லியது யுக்தமாகுமா?

பி. வா:—(பதில் இல்லை.)

## வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! இந்த ஸூத்ரத்திற்கு நீங்களென்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—'ஆத்மா' என்னும் பதத்தை ஆவ்ருத்தி செய்து கொண்டு, (மற்றொரு தடவை சொல்லிக்கொண்டு) 560 ஸூத்ரங்களுக்கும், ஞாத்ருஜ்ஞேய பாவத்தால் பேதத்தைச் சொல்லும் இந்த 'ஆத்மேதி' என்னும் ஸூத்ரத்திற்கும், பேதப்ரதிபாதகமான அனேக வேதங்களுக்கும் அனுகூலமாக, இச்சூத்ரத்திற்கு, ஆத்மா = பரமாத்மா, ஆத்மா = 'யச்சாப்னோதி யதாதத்தே யச்சாத்தி விஷயானிஹ । யச்சாஸ்ய ஸந்ததோபாவஸ்தஸ்மாதாத்மேதி பண்யதே ॥' என்னும் ப்ரமாணத்தில் சொல்லியவாறு, ஜகத்கர்த்தா என்றும், ஜகத்ஸ்வாமீ என்றும் தெரிந்துகொள்கிறார்கள். மற்றும் உபதேஶிக்கிறார்களென்னும் இத்யாத்யர்த்தங்களைச் சொல்லுகிறோம்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! எல்லா ஸூத்ரங்களும் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தையே ப்ரதிபாதிக்கின்றன. எந்த ஸூத்ரமும் அபேதத்தை ப்ரதிபாதிப்பதில்லை என்னும்

ஆக்ஷேபம் உண்டானதற்கு—ஶங்கராசார்யரே முதலான அத்வைதிகள் 'ஶாஸ்த்ர த்ருஷ்ட்யா' 'ஆத்மேதி தூபகச்சந்தி' முதலிய மூன்று நான்கு ஸூத்ரங்கள் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறதென்று ஸமாதானம் சொல்லியிருக்கிறார்கள். விசாரிக்குங்கால் அந்த மூன்று நான்கு ஸூத்ரங்களும் அபேதத்தைச் சொல்வதில்லை. ஆகையால், எல்லா ப்ரஹ்ம ஸூத்ரங்களும் ஜீவேஶ்வரர்களுக்கு பேதத்தையே சொல்லுகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேணுமாய்க் கோருகிறோம்.

## பிரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 560 ஸூத்ரங்கள் பேதத்தைச் சொல்லுகின்றன. அபேதத்தைச் சொல்வதில்லை என்று அத்வைதிகள் சொல்லுகிறார்களென்று மிஸ்டர் மாதவதாஸ் சொல்வது யுக்தமே. ஆயினும்,—'ஆத்மேதி' முதலிய மூன்று நான்கு ஸூத்ரங்களும் அபேதத்தைச் சொல்வதில்லை என்று அவர் சொல்லுவது யுக்தமல்ல. ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்தி ச' என்னும் ஸூத்ரம்—பரமேஶ்வரன், ஆத்மா = நான் (ஜீவன்) என்று தெரிந்துகொள்ளுகிறார்கள் என்று சொல்லுகிறது. மற்றும்—'தத்வமஸி' முதலிய வாக்யங்கள் பரமேஶ்வரனே, ஆத்மா (ஜீவன்) என்று போதிக்கின்றன. ஆகையால் இந்த ஸூத்ரம் ஜீவப்ரஹ்மாக்களுடைய அபேத விஷயத்தில் ஆதாரமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! ஆத்மா இதி = ஆத்மாவென்று, உபகச்சந்தி = தெரிந்துகொள்ளுகிறார்கள். ஆத்மா இதி க்ராஹயந்தி = ஆத்மாவென்று உபதேஶிக்கிறார்கள் என்று ஞான ரூபக்ரியையில், ஜீவபரமாத்மாக்களுக்கு கர்த்ரு கர்மபாவத்தைச் சொல்லியிருக்கிறபடியால் பேதம் ஸித்தமாகி

றது. 560 ஸூத்ரங்களும் பேதத்தைச் சொல்லுகின்றன. அனேக ஶ்ருதிகளும் பேதத்தைச் சொல்லுகின்றன. இந்த ஸூத்ரத்தில் ஐக்யத்தைச்சொல்லும் பதமுமில்லை, அபேதத்தைச்சொல்வதற்கு இதர ஶ்ருதிகளின் ஆதாரமுமில்லை. இப்படியிருந்தும்—'பரமேஶ்வர:' என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு பரமேஶ்வரன், ஆத்மா = ஜீவனே என்று தெரிந்துகொள்ளுகிறார்கள், மற்றும் போதிக்கிறார்கள் என்று சொல்லுகிறதென்று சொல்வது அயுக்தமாகிறது. 'த்யுப்வாத்யயாதனம் ஸ்வஶப்தாத்' என்னும் ஸூத்ரத்தில் ஸூத்ரகாரரான பாதராயணர் 'ஆத்ம' ஶப்தம் பரமாத்மாவையே போதிக்கிறது, ஜீவாதிகளை போதிப்பதில்லை என்று நிர்மாணித்திருக்கிறார். அந்த நிர்மானத்தை ஶங்கராசார்யரே முதலான அத்வைதிகள் ஒத்துக்கொண்டு மிருக்கிறார்கள். 'பரமேஶ்வர:' என்னும் பதத்தைச் சேர்த்துக்கொண்டபோதிலும், பரமேஶ்வரன், ஆத்மா = ஜகத்கர்த்தா இது முதலிய முக்ய வ்ருத்தியாலுண்டாகும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமேயல்லாது, அமுக்ய வ்ருத்தியால் பரமேஶ்வரன் ஜீவனென்னும் அர்த்தத்தை எடுத்துக்கொள்ளக்கூடாது.

அத்யாஹாரம் செய்துகொள்ளாமல் 'ஆத்ம' ஶப்தத்தை ஆவ்ருத்தி செய்துகொண்டு, ஆத்மா = பரமாத்மா, ஆத்மா = ஜகஜ்ஜன்மாதி கர்த்தா என்னும் அர்த்தத்தைச் செய்யவேண்டும். 'ஆத்ம' ஶப்தத்திற்கு அமுக்யார்த்தத்தைக்கொண்டு, அத்யாஹாரமாக்கிக்கொண்டாலும், 'பரமேஶ்வரதாஸ:' என்னும் பதத்தை அத்யாஹாரமாக்கிக்கொண்டு, ஆத்மா = ஜீவன், பரமேஶ்வரதாஸனென்று தெரிந்துகொள்ளுகிறார்கள். மற்றும் ஜீவன், பரமேஶ்வரதாஸனென்று உபதேஶிக்கிறார்கள் என்று இதர ப்ரமாணங்களுக்கும், 560 ஸூத்ரங்களுக்கும் ஞாத்ருஜ்ஞேய பாவத்தால் பேதத்தைச் சொல்லும் இந்த 'ஆத்மேதி' என்னும் ஸூத்ரத்திற்கும் அனுகூலமாயிருக்கும் அர்த்தத்தைச் சொல்வதே யோக்யமானதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்rார்த்திக்கிறோம்.

ப்ர. வா. எ. ஸூத்ரம் 3.

## அவிபாகேன என்னும் ஸூத்ர விசாரணை.

**பி. வா. வ:**—ஶாஸ்த்ரிகளே! 'அவிபாகேன த்ருஷ்டத்வாத்' (ப்ர. ஸூ. 4-4-4) இந்த ஸூத்ரமென்ன சொல்லுகிறது?

**பி. வா:**—'பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேன ரூபேணாபி நிஷ்பத்யதே..........ஸ தத்ர பர்யேதி ஜக்ஷன் க்ரீடன் ரமமாண: ஸ்த்ரீபிர்வா யானைர்வா' (சாம். 8-12-3) என்னும் ஶ்ருதி ஜீவன் பரமாத்மாவையடைந்து தன் ஸ்வரூபத்தால் அபிவ்யக்தனாகிறான் (காணப்படுகிறான்) என்று கர்த்ருகர்ம பாவத்தை சொல்வதாலும், மற்றும்—'ஸ தத்ர பர்யேதி' என்று அதிகரணாதிகரணவ்ய பாவத்தினால், பேதத்தைச் சொல்வதால் மோக்ஷத்தில் ஜீவன் பரமாத்மாவினால் பின்னனாயிருக்கவேண்டுமென்கிற பூர்வ பக்ஷம் உண்டானதற்கு, முக்தனான ஜீவன் பரமாத்மாவினால், அவிபாகேன = அவிபக்தனாகவே (வேறாகாமலே) யிருக்கிறான். 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' முதலிய வாக்யங்கள் — பரமாத்மாவை ஜீவனுடன் அவிபக்தனாகவே தெரிவிக்கின்றன. "யதோதகம் ஶுத்தே ஶுத்தமாஸிக்தம் தாத்ருகேவ பவதி। ஏவம் முனேர்விஜானத ஆத்மா பவதி கௌதம" (கட. 2-4-15) இது முதலிய வாக்யங்கள் பரமாத்மா முக்தஜீவனால், அபின்னனென்று தெரிவிக்கின்றன. ஜீவபரமாத்ம விஷயத்தில் நதீஸமுத்ர த்ருஷ்டாந்தத்தைக் கொடுத்திருக்கிறபடியால், ஐக்யம் ஸித்தமாகிறது. ஆகையால் முக்தஜீவன் பரமாத்மாவினால் அபின்னனாகவே யிருக்கிறானென்று ஸமாதானம் சொல்லியிருப்பதினால், இந்த ஸூத்ரம் ஜீவபரமாத்மாக்களின் ஐக்யத்தைச் சொல்லுவதற்கு ஆதாரமாகிறது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

**வா. வ:**—ஶாஸ்த்ரிகளே! 'கடபடௌ ஸம்யுக்தௌ, கடபடௌ விபக்தௌ' என்னும் இந்த வாக்யங்களுக் கர்த்தமென்ன?

**பி. வா:**—கடபடங்கள் ஸம்யோக விஶிஷ்டமாயிருக்கின்றன (கூடியிருக்கின்றன.) கடபடங்கள் விபாகங்களோடு கூடியிருக்கின்றன (வேருபட்டிருக்கின்றன) என்று அர்த்தம்.

வா. வ:—ஸம்யுக்தமான (சேர்ந்திருக்கும்) கடபடங்கள் பின்னமானவைகளா? அபின்னமானவைகளா?

பி. வா:—ஸம்யுக்தமான கடபடங்கள் பின்னமானவை களே. அபின்னங்களல்ல.

வா. வ:—ஸம்யுக்தமான கடபடங்கள் விபக்தமா? அவி பக்தமா?

பி. வா:—ஸம்யுக்தமான கடபடங்கள் அவிபக்தமே. விபக்த மாகாது.

வா. வ:—ஸம்யுக்தமான கடபடங்கள் அவிபக்தமாயின் அபின்னமாக வேண்டுமல்லவா?

பி. வா:—ஐயா! விபாகமென்றால் சேராமலிருப்பது, அவி பாகமென்றால் சேர்ந்திருப்பது (கூடியிருப்பது) அபின்னமென்றால் ஒன்றேயா யிருப்பது (ஐக்யம்) இப்படி விபாக ஶப்தார்த்தம் வேறு, அவிபாக ஶப்தார்த்தம் வேறு, பேத ஶப்தார்த்தம் வேறாக யிருப்பதால் அவிபக்தமென்றால் அபின்னமென்றுவதில்லை.

வா. வ:—'அவிபாகோ வசனாத்' (ப்ர. ஸூ. 4-2-16) இந்த ஸூத்ரத்திலிருக்கும் 'அவிபாக:' என்னும் பதத்திற்கு அபேத மென்று அர்த்தமா?

பி. வா:—'அவிபாக:' என்னும் பதத்திற்கு அபேதமென்று அர்த்தமல்ல. விபாகம் செய்யாமலிருப்பது (பிரிக்கப்படாமலிருப் பது) என்று அர்த்தம்.

வா. வ:—'அவிபாகேன த்ருஷ்டத்வாத்' என்னும் ஸூத் ரத்திலிருக்கும் 'அவிபாக:' என்னும் பதத்திற்கு என்ன அர்த் தம்?

பி. வா:—'அவிபாகோ வசனாத்' என்னும் ஸூத்ரத்திலிருக் கும் 'அவிபாக:' என்னும் பதத்திற்கென்ன அர்த்தம் செய்திருக் கிறீரோ அதேயர்த்தந்தான். விசாரமென்ன.

வா. வ:—அவிபாகேன த்ருஷ்டத்வாத்' என்னும் ஸூத்ரத் திற்கு அர்த்தமென்ன?

பி. வா:—முக்தஞன ஜீவன், அவிபாகேன = பரமாத்மாவி ஞல் விபக்தஞகாமலே யிருக்கிருன், (ஸம்யுக்தஞகவே = கூடியே யிருக்கிருன்) என்று அர்த்தம்.

வா. வ:—இந்த ஸூத்ரத்தால் 'த்வாஸுபர்ணு ஸயுஜா' என்னும் ஶ்ருதியில் சொன்னதுபோல், ஜீவன் பரமாத்மாவிஞல் ஸர்வதா கூடியிருக்கிருன் என்று ஸித்திக்கிறதா? அல்லது ஐக்யம் (அபேதம்) ஸித்திக்கிறதா?

பி. வா:—'அவிபாகேன த்ருஷ்டத்வாத்' என்னும் ஸூத்ரத்திலிருக்கும் 'அவிபாக:' என்னும் பதத்தால் ஜீவன் பரமாத்மாவிஞல் அவிபக்தன், பாகரஹிதனென்று ஸித்திக்கிறது. ஶங்கராசார்யரும் — 'அவிபக்த ஏவ பரேணத்மனு முக்தோவதிஷ்டதே' 'அவிபாகேனைவ பரமாத்மானம் தர்ஶயதி' 'அவிபாகமேவ தர்ஶயதி' என்று அவிபாகத்தையே (கூடியிருப்பதையே) சொல்லியிருக்கிருர். ஆயினும்—'கர்த்ருகர்ம நிர்தேஶாத் பேதேனைவாவஸ்தானம்' என்னும் பூர்வ பக்ஷத்திலும்; பேதநிர்தேஶஸ்து அபேதேன உபசர்யதே' என்னும் ஸித்தாந்த வாக்யத்தின் கடைசியிலும் அபேத பேத ஶப்தங்களை யுபயோகித்துக்கொண்டிருப்பதால் இந்த ஸூத்ரத்தால் அபேதம் ஸித்தமாகிறது என்று ஶங்கராசார்யரின் அபிப்ராயம்.

வா. வ:—வாதக்ரஸ்த விஷயத்தில் தங்கள் தங்கள் மத ப்ரவர்த்தக ஆசார்யரின் பெயர்களைச்சொல்லக்கூடாது.'அவிபாகேன' என்னும் ஶப்தத்தால் 'த்வாஸுபர்ணு ஸயுஜா' என்னும் ஶ்ருதியில் சொல்லியுள்ளவாறு முக்தியில் ஜீவ பரமாத்மாக்கள் கூடியிருக்கிருர்களென்று ஸித்திக்கிறதா? அபேதம் ஸித்திக்கிறதா?

பி. வா:—'அவிபாக:' என்னும் பதத்தால், பரமாத்மாவுடன் கூடிக்கொண்டிருக்காதவனல்ல (பரமாத்மாவுடன் கூடிக்கொண்டிருக்கிறவன்) என்று ஸித்திக்கிறது. அபேதம் ஸித்திப்பதில்லை.

பி. வா. வ:—ஆசார்யரே! 'அவிபாகேன' என்னும் ஸூத்ரம் ஐக்யத்தைச் சொல்லாமற்போயினும்,—'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' 'யதோதகம் ஶுத்தே ஶுத்தமாஸிக்தம் தாத்ருகேவ பவதி। ஏவம் முனேர்விஜானத ஆத்மா பவதி கௌதம'

(கட. 2-4-15) இவ்வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறபடியால் அதையனுஸரித்து ஐக்யத்தை ஏன் சொல்லக்கூடாது?

வாதி:—மிஸ்டர் ஶர்மா! 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யங்களின் விசாரம் முன் நடந்து, அந்த வாக்யங்கள் அபேதத்தைத் தெரிவிப்பதில்லை என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. 'யதோதகம்' என்னும் வாக்யமும் அபேதத்தைச் சொல்லுவதில்லை. பேதத்தையே சொல்லுகிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! 'யதோதகம்' என்னும் வாக்யத்திற்கு அர்த்தமென்ன? அது பேதத்தை எப்படி போதிக்கிறது? ஐக்யத்தை ஏன் போதிக்காது?

வாதி:—ஶுத்தமான ஜலத்தில் போட்ட ஶுத்தமான ஜலம், தாத்ருகேவ பவதி = பூர்வத்திலிருக்கும் ஜலத்தைப்போலாகிறதே யல்லாது, அந்த ஜலமே எப்படி ஆவதில்லையோ, அப்படியே—ஞானியும் 'ஏவம் பவதி' பரமாத்மாவைப்போல் ஆகிறானே யல்லாது, பரமாத்மாவே ஆவதில்லை என்று (தாத்ருகேவ பவதி = அவனைப் போலாகிறான், அவனேயாவதில்லை என்று) பேதத்தைச் சொல்லி, அபேதத்தைக் கண்டிக்கிறது. அந்த ஶ்ருதிக்கு ஐக்யத்தைச் சொல்லும் அபிப்ராயமிருந்தால்—'ததேவ பவதி' அதுவேயாகிறதென்று சொல்லியிருக்கவேண்டும். 'தாத்ருகேவ' அதைப்போலவே என்று சொல்லியிருப்பது பொருந்தாது.

பி. வா. வ.—ஆசார்யரே! 'தாத்ருகேவ பவதி' என்னும் வாக்யத்திற்கு நீங்கள் சொன்னபடியே அதைப்போலாகிறானென்று அர்த்தமாயினும்—ஜலத்தில் ஜலத்தை விட்டால், முதலிலிருந்த ஜலமும் பிறகு போட்ட ஜலமும் ஒன்றேயாவதினால் 'தாத்ருகேவ' என்னும் பதத்திற்கு அதுவேயாகிறது (முதலிலிருந்த ஜலத்துடன் ஒன்றாகிறது) என்று அர்த்தம் செய்யவேண்டியிருக்கிறபடியால் ஜீவன், தாத்ருகேவ பவதி = ப்ரஹ்மமே யாகிறானென்று அர்த்தம் செய்யவேண்டுமல்லவா?

வாதி:—ஜலத்தில் ஜலத்தை விட்டால் அது முன்னிருந்த ஜலமேயாவதில்லையாகையால் 'தாத்ருகேவ' என்னும் பதத்திற்கு அதுவேயாகிறதென்று அர்த்தம் செய்யக்கூடாது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! உங்கள் ஊரேது?

பி. வா:—எங்கள் ஊர் இராஜமஹேந்திரவரம்.

வா. வ:—உங்களூரில் நதி யுண்டோ? எந்த நதி?

பி. வா:—உண்டு, கோதாவரி நதி.

வா. வ:—உங்களூரில் கிணறுண்டோ?

பி. வா:—உண்டு.

வா. வ:—கிணற்று ஜலம் குடிக்கிறீரா? நதி ஜலம் குடிக்கிறீரா?

பி. வா:—ஐயா! 'த்ருஷிதோ ஜான்ஹவீ தீரே கூபம் கனதி துர்மதி:' என்னும் நியாயத்தைப்போல் எங்களை முட்டாளென்று தெரிந்துகொண்டீரா! நாங்கள் கோதாவரியில் பாயும் ஜலத்தை விட்டு கிணற்றின் ஜலத்தையாவது, தெருவில் பாயும் ஜலத்தையாவது குடிப்போமா?

வா. வ:—கிணற்று ஜலத்திற்கும், தெருவில் பாயும் ஜலத்திற்கும், கோதாவரி நதியில் பாயும் ஜலத்திற்கும் பேதமுண்டோ?

பி. வா:—மாதவ தாஸரே! இப்படிக் கேழ்க்கக்கூடாது. கழுதை, குதிரை, நாய், பசு இவைகள் எல்லாம் ஒன்றேயாகுமா? தெருவில் பாயும் ஜலம், கோதாவரி ஜலம் ஒன்றேயாகுமா? ஆகமாட்டாது.

வா. வ:—பின்னமான (வேரான) பதார்த்தம் மற்றொரு (வேரான) பதார்த்தத்தோடு ஒன்றாகுமா?

பி. வா:—'ந ஹி அன்ய: அன்யதாம் யாதி' என்று எங்கள் ஆசார்யர் சொல்லியிருப்பதால் ஒரு பதார்த்தம் மற்றொரு பதார்த்தமாவதில்லை. பின்னமான பதார்த்தம் என்றைக்கும் பின்னமே. ஒன்று ஆவதில்லை.

வா. வ:—இதென்ன க்ரந்தம்?

பி. வா:—இது எங்கள் பாஷ்ய வ்யாக்யானமான பாமதி க்ரந்தம், இன்னும் எங்கள் அபேயதீக்ஷிதர் செய்த கல்பதருபரிமளம்.

வா. வ:—* இந்த வாக்யங்களுக்கு அபிப்ராயமென்ன?

பி. வா:—நதி ஸமுத்ரத்தோடு ஒன்றுவதில்லை. ஸமுத்ரத்துடன் நதிக்கு பேதமுண்டு. நதிக்கு ஸமுத்ரத்துடன் அபேதமில்லாமற் போயினும்—ஸமுத்ரத்தில் சேர்ந்தபிறகு நதீரூபமான அவயவி நசித்து, நதியின் நாமரூபங்கள் நாசமாகின்றபடியால் ஜீவன் பரமாத்மாவையடைந்து ஒன்றாகிறானென்னும் விஷயத்தில் ஶ்ருதியில் இந்த நதீஸமுத்ர த்ருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று தாத்பர்யம்.

வா. வ:—இந்த க்ரந்தங்களுக்கு நதீஸமுத்ரங்களுக்கு ஐக்யமுண்டாகிறதென்று தாத்பர்யமா? ஐக்ய முண்டாவதில்லை என்று தாத்பர்யமா?

பி. வா:—நதிக்கு ஸமுத்ரத்தோடு ஐக்ய முண்டாவதில்லை என்று தாத்பர்யம்.

வா. வ:—நான்கு படி ஜலமிருக்கும் ஒரு பாண்டத்தில் மற்றும் இரண்டு படி ஜலத்தைக் கலந்தால் முன்னிருந்த 4 படி ஜலமும், பிறகு கலந்த 2 படி ஜலமும் ஒன்றேயாகிறதா? அல்லது வெவ்வேறாக யிருக்கிறதா?

---

* நோ ஜாது கட: படோ பவதி । நனூக்தம் யதா நதீ ஸமுத்ரோ பவதீதி । கா புனர்நத்யபிமதா ஆயுஷ்மத:? கிம் பாத: பரமாணவ உதைஷாம் ஸம்ஸ்தானபேத அஹோஸ்வித்ததாரப்தோவயவீ । தத்ர ஸம்ஸ்தான பேதஸ்ய வா அவயவினோ வா ஸமுத்ரநிவேஶே விநாஶாத் கஸ்ய ஸமுத்ரேணைகதா । நதீபாத: பரமாணூனாந்து ஸமுத்ரபாத: பராமாணுப்ய: பூர்வாவஸ்திதேப்யோ பேத ஏவ நாபேத: । ஏவம் ஸமுத்ராதபி தேஷாம் பேத ஏவ ॥ (ப்ர. ஸூ. பாமதி. 1-4-22).

ததா ச நத்யா அவயவ ஸன்னிவேஶ விசேஷரூபேண அவயவிரூபேண ஸ்வாரம்பக பரமாணுரூபேண வா ஸமுத்ராபேதப்ராப்த்யபாவேபி ஸமுத்ரப்ராப்தௌ நத்யவயவிநாஶாத்ததீய நாமரூபப்ரஹாணமஸ்தீத்யேதாவதம்ஶேன ஶ்ருதௌ நதீஸமுத்ரத்ருஷ்டாந்த: ॥ (கல்பதருபரிமளம் 1-4-22).

பி. வா:—முன்னிருக்கும் ஜலத்தைவிட அதிகமாகிறபடியால் அவ்விரண்டும் வெவ்வேறாகவே யிருக்கவேண்டும். ஒன்றாவதில்லை.

வா. வ:—'யதோதகம் ஶுத்தே ஶுத்தமாஸிக்தம் தாத்ருகேவ பவதி' என்னும் வாக்யத்திற் கர்த்தமென்ன?

பி. வா:—ஶுத்தமான ஜலத்தில், ஶுத்தமான ஜலத்தைச் சேர்த்தால், 'தாத்ருகேவ' முன்னிருந்த ஜலத்தைப்போலவே ஆகிறதென்று சொல்லவேண்டும்.

வா. வ:—ஜலத்தில் சேர்த்த ஜலம் முன்னிருந்த ஜலத்தைப் போலாகிறது. முன்னிருந்த ஜலமே யாவதில்லை என்று சொன்ன பிறகு, இந்த த்ருஷ்டாந்தத்தால் ஜீவன் 'தாத்ருகேவ பவதி' பரமாத்மாவைப்போல் ஆகிறானென்று சொல்லவேண்டுமா? அல்லது அவனே (பரமாத்மாவே) யாகிறானென்று சொல்லவேண்டுமா?

பி. வா:—(பதில் இல்லை.)

---

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court):—மஹாப்ரபோ! 'பரம்ஜ்யோதிரூபஸம்பத்ய ஸ்வேன ரூபேணாபிநிஷ்பத்ய ............ஸ தத்ர பர்யேதி ஜக்ஷன் க்ரீடன் ரமமாண: ஸ்த்ரீபிர்வா யானைர்வா' (சாம். 8-12-3) என்னும் ஶ்ருதி ஜீவன் பரமாத்மாவை யடைந்து தன் ஸ்வரூபத்தால் அபிவ்யக்தனாகிறானென்று கர்த்ரு கர்ம பாவத்தினாலும், 'ஸ தத்ர பர்யேதி' என்று அதிகரண அதிகர்த்தவ்ய பாவத்தினாலும், பேதத்தைச் சொல்வதினால், மோக்ஷத்தில் ஜீவன் பரமாத்மாவைவிட பின்னனாகவே யிருக்கிறானென்று பூர்வபக்ஷமுண்டானதற்கு— அபேதத்தைச் சொல்லும் 'அவிபாகேன' என்னும் பதத்தால் கூடியிருக்கும் 'அவிபாகேன த்ருஷ்டத்வாத்' என்னும் ஸூத்ரம் முக்தியில் ஜீவன் பரமாத்மாவினால் அவிபக்தனாகவே (அபின்னனாகவே) யிருக்கிறான் என்று சொல்லுகிறது. 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' 'யதோதகம் ஶுத்தே ஶுத்தமாஸிக்தம் தாத்ருகேவ பவதி। ஏவம் முனேர் விஜானத ஆத்மா பவதி கௌதம' என்னும் ஶ்ருதிகள் மோக்ஷதசையில் ஜீவனுக்கு

பரமாத்மாவோடு ஐக்யத்தைத் தெரிவிக்கின்றன. மற்றும், நதிகள் ஸமுத்ரத்தை யடைவதுபோல், ஜீவன் முக்தியில் பரமாத்மாவை யடைகிறனென்று த்ருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டிருப்பதால், ஜீவனுக்கு முக்தியில் பரமாத்மாவுடன் ஐக்யம் தோன்றுகிறது என்று ஸமாதானம் சொல்லப்பட்டிருப்பதினால், ஜீவன் பரமாத்மாவோடு அபின்னனென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேணுமாய்க் கோருகிறோம்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court):—மஹாப்ரபோ! 'அவிபாகேன த்ருஷ்டத்வாத்' என்னும் ஸூத்ரத்தில் அபேத போதகமான பதமேயில்லாததால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் சொல்வதில்லை.

'அவிபாகோ வசனாத்' என்னும் ஸூத்ரத்தில் 'அவிபாக:' என்னும் பதம் விபாகமில்லை என்று எப்படி சொல்லுகிறதோ, அப்படியே இந்த ஸூத்ரத்தில் 'அவிபாகேன' என்னும் பதம் பரமாத்மாவினால் விபாகமில்லாமல் (பரமாத்மாவோடு கூடியே) யிருக்கிறனென்று சொல்லுகிறதேயல்லாது 'அவிபாகேன' என்னும் பதத்தால் ஐக்யம் சொல்வதில்லை. ஒன்றாகச் சேர்ந்திருக்கும் கடபடங்கள் பின்னமாயிருந்தாலும் 'அவிபக்தௌ' (பிறிக்கப்படவில்லை) என்று சொல்லுகிறார்கள். சகோதரர்கள் வெவ்வேறா யிருந்தாலும் அவிபக்தரென்று சொல்லப்படுகிறபடியால் 'விபாக' ஶப்தம் பேதபோதகமாகாது. 'அவிபாக' ஶப்தம் அபேதபோதகமுமாகாது.

'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் வாக்யங்கள் ஐக்யத்தைப் போதிப்பதில்லை என்று முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. 'யதோதகம் ஶுத்தே ஶுத்தமாஸிக்தம் தாத்ருகேவ பவதி' என்னும் வாக்யம், ஜலத்தில் கலந்த ஜலம் 'தாத்ருகேவ பவதி' முன்னிருந்த ஜலத்தைப்போலாகிறதே யல்லாது முன்னிருந்த ஜலமே யாவதில்லை. அதுபோலவே—ஜீவன் பரமாத்மாவைப்போல் ஆகிறனே யல்லாது பரமாத்மாவே யாவதில்லை

என்று ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதே யல்லாது ஐக்யத்தைச் சொல்வதில்லை.

தெருக்களில் பாயும் ஜலம் நதியில் சேருவதால் நதிஜல மதிக மாகிறதால், எப்படித் தெருவின் ஜலமும், நதிஜலமும் ஒன்றே யாவதில்லையோ, அப்படியே நதிஜலமும், ஸமுத்திரத்தில் முன்னிருந்த ஜலத்துடன் ஐக்யமாவதில்லை. முன் வேறாயிருந்த ஜலம், பிறகு வேறாயிருக்கும் ஜலத்தோடு 'ந ஹி பின்னமபின்னதாம் யாதி' என்னும் நியாயத்தால் ஐக்யமடைவதில்லை. நதி ஸமுத்ரத்தை யடைவதுபோல் ஜீவன் பரமாத்மாவை யடைகிறானென்று த்ருஷ்டாந்தம் கொடுத்திருப்பது ஐக்ய விஷயத்திலல்லவென்று அத்வைதிகளி லக்ரகண்யரான அப்பய தீக்ஷிதரே சொல்லியிருக்கிறபடியால் நதீ ஸமுத்ர த்ருஷ்டாந்தத்தால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் பொருந்தாததால் இந்த ஸூத்ரம் ஜீவ பரமாத்மாக்களின் ஐக்ய விஷயத்தில் ஸாதகமாவதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும் என்று ப்ரார்த்தனை.

## வாதி விசாரணை

பி. வா. வ:—ஆசார்யரே! ஜீவப்ரஹ்ம பேத விஷயத்தில் ஆதாரமான ஸூத்ரங்கள் யாது?

வாதி:—நாங்கள் சொல்வதென்ன? 2-3 ஸூத்ரங்கள் தவிர மற்ற எல்லா ஸூத்ரங்களும் பேதத்தைச் சொல்லுகின்றனவென்று அத்வைதிகளே சொல்லியிருக்கிறார்கள். அந்த 2-3 ஸூத்ரங்களும் ஐக்யத்தைச் சொல்வதில்லை. பேதத்தையே சொல்லுகின்றன.

கோர்ட்:—ஆசார்யரே! அத்வைதிகள் சொல்லட்டும், சொல்லாமற் போகட்டும். பேதப்ரதிபாதகமான ஸூத்ரங்கள் உங்களுக்குத் தெரிந்திருந்தால் சொல்லும், இல்லாவிடில் தெரியாதென்று சொல்லும். அதிகம் பேசவேண்டாம்.

வா. வ:—ஆசார்யரே! கோர்ட்டார் உத்திரவுப்படி பேதப்ரதிபாதங்களான ஸூத்ரங்களைச் சொல்லும்?

வாதி:—அப்படியே சொல்லுகிறேம். ஐயா! எல்லா ஸூத்ரங்களும் பேதத்தை ப்ரதிபாதிக்கின்றனவென்று சொல்லியவாறு-முதல் ஸூத்ரம் முதற்கொண்டு எல்லா ஸூத்ரங்களும் எப்படி பேதத்தையே சொல்லுகின்றனவென்னும் விஷயத்தைச் சொல்லுகிறேம். ஸாவகாஶமாய் கவனிக்க வேண்டும்.

'ஓம் அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா ஓம்' என்னும் ஸூத்ரம்-வைராக்ய ஶமதமாதிகளை யடைந்த பிறகு, மோக்ஷரூப பலனிருப்பதால், ப்ரஹ்மஞானத்திற்காக ஸாதனமான வேதாந்தார்த்த நிர்ணயகமான ஜிஜ்ஞாஸாவை (பராமர்ஶத்தை = ஞானத்தை) ஸம்பாதிக்க வேண்டுமென்று ஞாத்ருஜ்ஞேய பாவத்தால், ப்ரஹ்ம ஶப்தத்தால் பூர்ணத்வத்தைச் சொல்லுகிறபடியால், பூர்ணத்வால்பத்வ ரூபதர்மங்களினாலும் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதத்தைத்தெரிவிக்கிறது.

'ஓம் ஜன்மாத்யஸ்ய யத: ஓம்' என்னும் ஸூத்ரம்—ஸகல ஜகஜ்ஜன்மாதி காரணத்வத்தை ப்ரஹ்மத்திற்குச் சொல்லிக்கொண்டே ஜகஜ்ஜன்மாதிகாரணத்வ ரஹிதனை ஜீவனால் பேதத்தைச் சொல்லுகிறது.

'ஓம் ஶாஸ்த்ரயோனித்வாத்' என்னும் ஸூத்ரம்—பரமாத்மாவுக்கு ஶாஸ்த்ர கர்த்ருத்வத்தைச் சொல்லிக்கொண்டே ஸர்வஜ்ஞத்வம், ஸர்வஶக்திமத்வம், இவைகளை போதித்துக்கொண்டே, ஸர்வஜ்ஞத்வாதி ரஹிதனை ஜீவனால் பேதத்தைச் சொல்லுகிறது.

'ஓம் தத்து ஸமன்வயாத்' என்னும் ஸூத்ரம்—பரமாத்மாவிடத்தில் ஜகத்காரணத்வாதி ப்ரதிபாதகங்களான வாக்யங்களை ஸமன்வயம் செய்துகொண்டே தத்ரஹிதனை ஜீவனால் பேதத்தைத் தெரிவிக்கிறது.

'ஓம் ஈக்ஷதேர்ந ஶப்தம்' என்னும் ஸூத்ரம் பரமாத்மாவுக்கே காரணத்வம் சொல்லிக்கொண்டே ஜீவப்ரதானாதிகளோடு ப்ரஹ்மத்திற்கு பேதத்தைச் சொல்லுகிறது.

'ஓம் ஆனந்தமயோப்யாஸாத்' 'ஓம் அந்தஸ்தத்தர்மோபதேஶாத்' 'ஓம் பேதவ்யபதேஶாத்' 'ஓம் பேதவ்யபதேஶாச்

சான்ய:' 'ஓம் அனுபபத்தேஸ்து ந ஶாரீர:' 'ஓம் ஶாரீரஶ்சோப யேபி ஹி பேதேனைனமதீயதே' 'ஓம் அதிகந்து பேதநிர்தேஶாத்' இவைகளே முதலான ஸூத்ரங்கள் ஜீவனுக்கும் பரமாத்மாவுக் கும் பேதத்தைச் சொல்லுகின்றன. இந்த ஸூத்ரங்கள் ஜீவபர மாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று ஶங்கராசார் யரும் தம் பாஷ்யத்தில் வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

வா. வ:—இன்னும் பேதத்தைச் சொல்லும் ஸூத்ரங்க ளுண்டோ?

கோர்ட்:—இப்போதிது போரும். முன் விசாரம் நடக்கலாம்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த ஸூத்ரங்கள் ஜீவபரமாத் மாக்களின் பேதத்தைச் சொல்லுகின்றனவா? இல்லையா?

பி. வா:—பேதத்தைச் சொல்லுகின்றன. ஆயினும் அந்த பேதம் மித்யா (பொய்.)

வா. வ:—வேதார்த்தங்களை நிர்ணயிப்பதற்காக ப்ரவ்ருத்த மான ஸூத்ரங்களில் சொல்லப்பட்ட பேதம், பாதகமில்லாமலே மித்யை என்று சொல்லுவதாயின், வேதார்த்தங்கள் நிர்ணயமாவ தெப்படி?

பி. வா:—'தத்வமஸி' முதலிய வாக்யங்களே பாதகங்களா யிருப்பதால் அந்த பேதம் மித்யையாகிறது.

கோர்ட்:—அவைகளின் விசாரம் பின்னால் நடந்திருக்கி றது. வேறேதாவது ஸமாதானமிருந்தால் சொல்லும்?

பி. வா:—(பதில் இல்லை.)

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 564 ஸூத்ரங்க ளில் 3-4 ஸூத்ரங்கள் தவிர மற்ற 560 ஸூத்ரங்களும் ஜீவ ப்ரஹ்ம மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறதென்று ப்ரதிவாதிகளே (அத்வைதிகளே) ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த 3-4 ஸூத் ரங்களும் ஐக்யத்தைச் சொல்வதில்லை என்று முன்னமே சொல் லப்பட்டிருக்கிறது. 'அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா, ஜன்மாத்

யஸ்ய யத:, ஶாஸ்த்ரயோனித்வாத், பேதவ்யபதேஶாத், பேதவ்யபதேஶாச்சான்ய:, அனுபபத்தேஸ்து ந ஶாரீர:, ஶாரீரஶ்சோபயேபி ஹி பேதேனைனமதீயதே, அதிகந்து பேதநிர்தேஶாத் இது முதலிய எல்லா ஸூத்ரங்களும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறபடியால் இந்த எல்லா ப்ரஹ்ம ஸூத்ரங்களும் ஜீவப்ரஹ்மாக்களின் பேத விஷயத்தில் ஆதாரமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! எவ்வளவு வேதங்கள், எத்தனை ஸூத்ரங்கள் பேதத்தைச் சொல்லிக்கொண்டிருந்தபோதிலும்—அந்த பேதம், ஐக்யத்தைச் சொல்லும் 'தத்வமஸி' முதலிய வாக்யங்களுக்கு விருத்தமாகிறபடியால் மித்யா (வ்யாவஹாரிகம்) மோக்ஷத்தையடையும் வரையில் அஜ்ஞான தசையிலிருப்பது என்று, 'யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்' என்று சொல்லியிருப்பதைப்போல் மோக்ஷதசையில் எந்த பேதமும் இல்லை என்பதைக் கோர்ட்டாருக்குத் தெரிவித்துக்கொண்டிருக்கிறோம்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்

வா. வ.:— (To the Court) மஹாப்ரபோ! 'தத்வமஸி' முதலிய 4-6-வாக்யங்கள் தவிர மற்ற 100-க்கு 99 பங்கு (99%) வேதவாக்யங்களும், 3-4 ஸூத்ரங்களைத் தவிர மற்ற வேதார்த்த நிர்ணயகமான 100-க்கு 99 பங்கு (99%) ஸூத்ரங்களும், 2-3 கீதாவாக்யங்களைத் தவிர 100-க்கு 99 பங்கு (99%) கீதாவாக்யங்களும் பேதத்தையே போதிக்கிறபடியாலும், ஶங்கராசார்யரும் பேதத்தையே போதிக்கின்றனவென்று ஒத்துக்கொண்டிருக்கிறபடியாலும் இவைகளால் பாதகம் வருகிறபடியால், அந்த 4-6 வேதவாக்யங்கள், 3-4 ஸூத்ரங்கள், 2-3 கீதாவாக்யங்கள் இவைகளுக்கும் பேதானுகுணமாகவே அர்த்தம் செய்வது நியாயமாகிறது. அந்த 4-6 வேத வாக்யங்களும், 3-4 ஸூத்ரங்களும், 2-3 கீதாவாக்யங்களும் முன் சொல்லியவாறு ஐக்யத்தைச்

சொல்லாமல், பேதத்தையே தெரிவிக்கின்றனவென்ற பிறகு, ஸமஸ்த வேதங்கள், ப்ரஹ்ம ஸூத்ரங்கள், கீதா, இவைகள் நிர்விவாதமாக பேதத்தையே தெரிவிக்கின்றனவென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டும்.

மற்றும்—ப்ரதிவாதிகள் பேதம் வ்யாவஹாரிகம், மோக்ஷதசையில் எந்த பேதமுமில்லை என்று சொல்வது அத்யந்த அயுக்தம். ஏனெனில்:—ஸூத்ரகாரர் வேதார்த்தங்களை நிர்ணயிப்பதற்காக ஸூத்ரங்களை இயற்றி ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே வேதங்கள் சொல்லுகின்றனவென்று நிர்ணயித்து, உபஸம்ஹாரத்தில் (முடிக்குங்காலத்தில்) 'அநாவ்ருத்திஶ்ஶப்தாதநாவ்ருத்திஶ்ஶப்தாத்' என்னும் கடைசி ஸூத்ரத்தால் 'ஸர்வான் காமானாப்த்வா அம்ருதஸ்ஸமபவத்' என்னும் ஶ்ருதி ஜீவன் மோக்ஷத்தை யடைந்து வைகுண்டாதி ஸ்தானங்களில் நாநாவித போகங்களை யனுபவித்துக்கொண்டே, ஸுகமடைந்தவனாகிருன் மறுபடியும் ஸம்ஸாரத்திற்கு வருவதில்லை என்று மோக்ஷதசையிலும் பேதத்தைச் சொல்லியிருப்பதாலும், இந்த ஸூத்ரத்திற்கு ஶங்கராசார்யரும் அப்படியே அர்த்தம் செய்திருப்பதாலும் ஸர்வ வேதார்த்த நிர்ணயகமான ஸமஸ்த ஸூத்ரங்களும் 'ஜக்ஷன், க்ரீடன், ரமமாண:' இத்யாதி வேதங்கள் மோக்ஷதசையில் அனேக ஸுகங்களை யனுபவிக்கிருனென்று ஜீவப்ராஹ்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகின்றனவென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமாய்க் கோருகிறோம்.

## மூன்றும் பாகம்.
## கீதா வாக்யங்களின் விசாரணை.
### பி. வா. எ. கீதா. 1.
### க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி என்னும் வாக்ய விசாரணை.

**பி. வா. வ:**—ஶாஸ்த்ரிகளே! க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' (கீ. 13- 2) என்னும் கீதாஶ்லோகத்திற் கர்த்தமென்ன? இதனால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—ஓ அர்ஜுனு! என்னை (க்ருஷ்ணனை) க்ஷேத்ரஜ்ஞ:= ஜீவன் என்று தெரிந்துகொள்ளென்று அர்த்தம். இதனுல் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்யம் ஸித்தமாகிறது.

பி. வா. வ:—'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்திற்கு மேற்சொன்ன அர்த்தத்தை யார் செய்திருக்கிருர்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யர் செய்திருக்கிருர்.

---

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! "ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வாம்ருதமஶ்நுதே । அநாதிமத் பரம் ப்ரஹ்ம ந ஸத் தந்நாஸதுச்யதே" (கீதா. 13-12) என்னும் ஶ்லோகத்திற்கு அர்த்தமென்ன?

பி. வா:—மனிதர்கள் யாருடைய ஞானத்திஞல் மோக்ஷத்தை யடைகிருர்களோ, அந்த ஜ்ஞேயனுன க்ஷேத்ரஜ்ஞனைச் சொல்லு கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து, அந்த க்ஷேத்ரஜ்ஞன் பர ப்ரஹ்மம் என்று சொல்லியிருக்கிருர் என்று அர்த்தம்.

வா. வ:—இந்த அர்த்தத்தை யார் எப்படிச் செய்திருக் கிருர்?

பி. வா:—"க்ஷேத்ரஜ்ஞோ வக்ஷ்யமாண விஶேஷண: யஸ்ய ஸ்வரூபஸ்ய க்ஷேத்ரஜ்ஞஸ்ய பரிஜ்ஞாநாத் அம்ருதத்வம் பவதி தம் 'ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி' இத்யாதிநா ஸவிஶேஷணம் ஸ்வயமேவ வக்ஷ்யதி பகவான்" என்னும் வாக்யத்தால் மஹிமா விஶிஷ்டனுன எந்த க்ஷேத்ரஜ்ஞனின் ஞானத்தால் மோக்ஷத்தை யடைகிருஞே, அத்தகைய மஹிமாவிஶிஷ்டனுன க்ஷேத்ரஜ்ஞனை 'ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி' என்னும் ஶ்லோகத்தால் பகவானே (கிருஷ்ணனே) சொல்லுகிருனென்று ஶங்கராசார்யர் அர்த்தம் செய்திருக்கிருர்.

வா. வ:—'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்திலிருக்கும் 'க்ஷேத்ரஜ்ஞம்' என்னும் பதத்திற்கு அர்த்தமென்னவென்று ஸித்தமாகிறது?

பி. வா:—'க்ஷேத்ரஜ்ஞும்' என்னும் பதத்திற்கு பரப்ரஹ்மமென்கிற அர்த்தம் ஸித்தமாகிறது.

வா. வ:—'க்ஷேத்ரஜ்ஞும் சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்தால் எந்த அர்த்தம் ஸித்தமாகிறது?

பி. வா:—மாம் = என்னை (கிருஷ்ணனை) க்ஷேத்ரஜ்ஞும் = பரப்ரஹ்மமென்று தெரிந்துகொள் என்னும் அர்த்தம் ஸித்தமாகிறது.

வா. வ:—பத்தாவது அத்யாயத்தில் * இருக்கும் இந்த ஶ்லோகங்களுக்கு அபிப்ராயம் என்ன?

பி. வா:—பவான் = நீயே (ஸ்ரீ கிருஷ்ணனே) பரப்ரஹ்மம், உத்தம தேஜோரூபன், உத்தம பவித்ரன், என்று ருஷிகள், தேவதைகள், நாரதர், அஸிதர், தேவலர் இவர்கள் சொல்லியிருக்கிறார்கள். நீயும் நீயே பரப்ரஹ்மம் என்று சொல்லுகிறாய். இவ்வெல்லாம் நிஜமானதென்று தெரிந்து கொள்ளுகிறேனென்று அபிப்ராயம்.

வா. வ:—இதனால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—ஸ்ரீகிருஷ்ணன் தானே பரப்ரஹ்மமென்று சொல்லுகிறானென்று ஸித்தமாகிறது.

வா. வ:—இப்படியிருக்க—'க்ஷேத்ரஜ்ஞும்' என்னும் ஶ்லோகத்திற்கு, என்னை (கிருஷ்ணனை) க்ஷேத்ரஜ்ஞும் = ஜீவன் என்று தெரிந்துகொள் என்று சொல்லும் அர்த்தம் எப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதில் இல்லை.)

* பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான் ।
புருஷம் ஶாஶ்வதம் திவ்யம் ஆதிதேவமஜம் விபும் ॥ (12)
ஆஹுஸ்த்வாம் ருஷயஸ்ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ்ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ (13)
ஸர்வ மேதத் ருதம் மன்யே யன்மாம் வதஸி கேஶவ ॥

ப்ரதிவாதி வக்கீல் ப்ரதிவாதியைத் திருத்தல்.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்திற்கு பூர்வ ஶ்லோகம் யாது? அதின் அர்த்த மென்ன?

பி. வா:—'இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே! ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித:' என்பதே பூர்வஶ்லோகம். இதற்கு ஓ அர்ஜுனா! இந்த காணப் படும் கரசரணாதிகளோடு கூடியிருக்கும் 7-அடி அளவுள்ள சரீரம் க்ஷேத்ரமென்று சொல்லப்படுகிறது. இந்த க்ஷேத்ரத்தை (சரீரத்தை) எவன் தெரிந்துகொள்ளுகிறானோ அவனை க்ஷேத்ரஜ்ஞ னென்று க்ஷேத்ரஜ்ஞர்கள் சொல்லுகிறார்கள் என்று அர்த்தம்.

பி. வா. வ:—இந்த அர்த்தத்தை யார் செய்திருக்கிறார்?

பி. வா:—எங்கள் ஶங்கராசார்யர் செய்திருக்கிறார்.

பி. வா. வ:—இந்த ஶ்லோகத்தால் 'க்ஷேத்ரஜ்ஞன்' என்றால் யாரென்று ஸித்தமாகிறது?

பி. வா:—இந்த ஶரீரத்தைத் தெரிந்துகொண்ட ஜீவனே க்ஷேத்ரஜ்ஞன் என்று ஸித்தமாகிறது.

பி. வா. வ:—இந்த பூர்வஶ்லோகத்தை யனுஸரித்து 'க்ஷேத் ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்திற்கு என்ன அர்த்தம் ஸித்தமாகிறது?

பி. வா:—மாம் = என்னை (கிருஷ்ணனை) க்ஷேத்ரஜ்ஞம் = ஜீவ னென்று தெரிந்துகொள்ளென்று, ஜீவனுக்கு கிருஷ்ணனோடு அபேதம் ஸித்தமாகிறது.

ரீ க்ராஸ்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்திற்கு முன்னிருக்கும் (உத்தரபாகத்திலிருக் கும்) ஶ்லோகங்கள் யாது? அதுகளின் அபிப்ராயமென்ன?

பி. வா:—'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத! க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோர் ஞானம் யத்தத் ஞானம் மதம்

மம॥ தத் க்ஷேத்ரம் யச்ச யாத்ருக் ச யத்விகாரி யதஶ்ச யத்। ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச தத் ஸமாஸேந மே ஶ்ருணு ॥ (கீ. 13-3 என்னும் ஶ்லோகங்களுக்கு—என்னை (கிருஷ்ணனை) எல்லா க்ஷேத்ரங்களிலிருக்கும் க்ஷேத்ரஜ்ஞனென்று தெரிந்துகொள். க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞருடைய எந்த ஞானமுண்டோ அந்த ஞானம் எனக்கு ஸம்மதமானது. ஆகையால் 'தத் க்ஷேத்ரம்' (13-3) 'இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே' ॥ (13-1) என்னும் ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட க்ஷேத்ரம் யாது? எப்பேர்ப்பட்டது? எதின் விகாரமானது? 'யத:' யாரால் 'யத்' கார்யம் (பிறந்திருக்கிறதோ) அப்படிப்பட்ட க்ஷேத்ரஜ்ஞன் யார்? இந்தக்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன், இவ்விரண்டையும் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லி, 'மஹா பூதான்யஹங்கார:' இத்யாதி 5-6 ஶ்லோகங்களால் விகாரஸஹிதமான மஹாபூதாதி தத்வங்களை க்ஷேத்ரமென்று சொல்லி, 'அமானித்வம்' முதலிய 8, 9, 10, 11 வது ஶ்லோகங்களால் க்ஷேத்ரஜ்ஞனுன பரமாத்மாவின் ஞானத்திற்கு ஸாதனமான அமானித்வா (அபிமானராஹித்யா)திகளைச் சொல்லி, 'ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யத் ஞாத்வாம்ருதமஶ்நுதே। அநாதிமத் பரம் ப்ராஹ்ம ந ஸத்தந்நாஸதுச்யதே' (கீ. 13-12) என்னும் ஶ்லோகத்தால் க்ஷேத்ரஜ்ஞன் பரப்ரஹ்மமென்று சொல்லி, அதின் குணங்களை மேல் நிரூபித்து இருக்கிறார் என்று அபிப்ராயம்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த கீதாஶ்லோகங்களால் 'இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே' என்னும் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட க்ஷேத்ரமென்னும் பதார்த்தம் ஏதென்று சொன்னதாக ஸித்தமாகிறது?

பி. வா:—க்ஷேத்ரமென்றால் விகாரஸஹிதமான மஹாபூதாதி ஸமஸ்த தத்வங்கள் என்று சொன்னதாக ஸித்தமாகிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! விகாரஸஹிதமான மஹாபூதாதி ஸமஸ்த தத்வங்களை ஜீவன் தெரிந்துகொள்ளுகிறானே?

பி. வா:—அல்பஜ்ஞனுன ஜீவன் ஸமஸ்த தத்வங்களை எப்படித் தெரிந்துகொள்வான்? அப்படிப்பட்ட கேழ்விகளுக்கு அவகாஶமே யில்லை. (ஜீவன் தெரிந்துகொள்ள மாட்டான்).

வா. வ:—'ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: |' என்னும் ஶ்லோகத்தில், ஏதத் = ஶரீரமென்று சொல்லிக்கொள்ளப்படும் விகாரத்தோடுகூடிய மஹாபூதாதி ஸமஸ்த தத்வங்களை (க்ஷேத்ரத்தை)த் தெரிந்தவன் க்ஷேத்ரஜ்ஞனென்று சொல்லிக் கொள்ளப்படுகிறானென்று சொல்லப்பட்ட க்ஷேத்ரஜ்ஞன், ஜீவனாவதில்லையல்லவா?

பி. வா:—அந்த க்ஷேத்ரத்தைத் தெரிந்து கொண்டவன் ஜீவனாவதில்லை.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ஜீவன் தன் ஶரீரத்தின் உள்ளும் வெளியிலுமிருக்கும் எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளுகிறானா?

பி. வா:—அய்யா! இப்படிக் கேட்டால் நானென்ன சொல்வது? எல்லாருக்கும் அநுபவமான விஷயமே. ஜீவன், தன் ஶரீரத்திலிருக்கும் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டால் ஏன் ரோகியாகிறான்? வைத்யனிடம் ஏன் போகிறான்? ரோகியாய் வைத்யனிடம் போகிறபடியால் ஜீவன் தன் ஶரீரத்திலிருக்கும் எல்லாவற்றையும் அறியமாட்டான்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே' என்னும் ஶ்லோகத்திலிருக்கும் க்ஷேத்ர பதத்திற்கு விகாரத்தோடுகூடிய ஸகல தத்வங்களென்று ஸ்ரீ கிருஷ்ணனே உத்தர ஶ்லோகத்தில் சொல்லியிருக்கிறபடியால், அந்த ஸகல தத்வங்களின் ஞானம் ஜீவனுக்கில்லை. க்ஷேத்ர பதத்தால் காசராதிகளோடு கூடிய இந்த தேஹத்தை எடுத்துக்கொண்டாலும், இதின் ஞானமும் ஜீவனுக்கில்லை. அப்படியிருக்க—க்ஷேத்ரமென்று (ஶரீரமென்று) சொல்லிக்கொள்ளப்படும் விகாரஸஹிதமான மஹாபூதாதி தத்வங்களையாகிலும், இந்த காசராதிகளோடு கூடிய ஶரீரத்தையாகிலும் அறிந்தவர் யார் ஆவார்?

பி. வா:—ஸர்வஜ்ஞமான ப்ரஹ்மமே க்ஷேத்ரஜ்ஞனாக வேண்டும்.

வா. வ:—'ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத் வித: |' என்னும் ஶ்லோகத்தில் சொல்லிக்கொள்ளப்படும் க்ஷேத்ரஜ்ஞன் பரமாத்மாவே, ஜீவனல்ல. 'அனாதிமத் பரம்

ப்ரஹ்ம' என்னும் ஶ்லோகத்தில் இந்த க்ஷேத்ரஜ்ஞனையே பர ப்ரஹ்மமென்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லியிருக்கிறார். ஶங்கராசார்யரும் இந்தக்ஷேத்ரஜ்ஞனையே பரப்ரஹ்மமென்று சொல்லியிருக்கிறார். இப்படியிருப்பதால் 'க்ஷேத்ரஜ்ஞம்சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்திற்கென்னவென்று அர்த்தம் ஸித்தித்தது?

பி. வா:—மாம் = என்னை (ஸ்ரீ கிருஷ்ணனை) க்ஷேத்ரஜ்ஞம் = பரமாத்மாவென்று (பரப்ரஹ்மமென்று) தெரிந்துகொள்ளென்னும் அர்த்தம் ஸித்தமாகிறது.

வா. வ:—இப்படியிருக்க — ஶரீரரூபமான க்ஷேத்ரத்தைத் தெரிந்த க்ஷேத்ரஜ்ஞன் ஜீவனே. அப்படிப்பட்ட ஜீவனே (க்ஷேத்ரஜ்ஞனே) நான் (ஸ்ரீ கிருஷ்ணன்) என்று தெரிந்துகொள்ளென்கிற அர்த்தத்தை எப்படி சொன்னீர்?

பி. வா:—(பதில் இல்லை.)

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ!

இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: ॥ (13-1)

க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத। (13-2)

என்னும் கீதா ஶ்லோகங்களில்—எல்லோருக்கும் காணப்படும் கைகால்களுடன் கூடிய ஶரீரம் (தேஹம்) க்ஷேத்ரமென்று சொல்லிக்கொள்ளப்படுகிறது. அந்த க்ஷேத்ரமென்னும் பெயரையுடைய ஶரீரத்தைத் தெரிந்துகொண்டிருக்கும் ஜீவன் க்ஷேத்ரஜ்ஞன் என்று சொல்லிக்கொள்ளப்படுகிறான். அப்படிப்பட்ட க்ஷேத்ரஜ்ஞனை ஜீவனை, மாம் வித்தி = நானென்று (ஸ்ரீ கிருஷ்ணனென்று) தெரிந்துகொள்ளென்று, ஜீவனுக்கு ஸ்ரீ கிருஷ்ணனால் ஐக்யத்தைச் சொல்லுகிறபடியால் இந்த கீதாஶ்லோகம் ஜீவ பரமாத்மாக்களின் ஐக்ய விஷயத்தில் ஆதாரமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே' என்னும் ஶ்லோகத்தில் சொல்லிய ஶரீரமென்னும் க்ஷேத்ரத்தையே 'தத் க்ஷேத்ரம் யச்ச யாத்ருக் ச யத்விகாரி.........தத்ஸமாஸேன மே ஶ்ருணு' என்னும் ஶ்லோகத்தால், அந்த க்ஷேத்ரம் ஏது? எப்பேர்ப்பட்டது? அதின் விகாரங்கள் யாது? என்னும் விஷயத்தைச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லி—

"மஹாபூதான்யஹங்காரः புத்திரவ்யக்த மேவ ச ।
இந்த்ரியாணி தஶைகஞ்ச பஞ்ச சேந்த்ரிய கோசராः ॥ 5 ॥
இச்சா த்வேஷः ஸுகம் துக்கம் ஸங்காதஶ்சேதனா த்ருதிः।
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகார முதாஹ்ருதம் ॥ 6 ॥"

இந்த ஶ்லோகங்களால் பஞ்ச மஹாபூதாதி ஸமஸ்த ப்ரபஞ்சம் க்ஷேத்ரமென்று சொல்லியிருக்கிறபடியால், இந்த காணப்படும் சராசராதிகளோடு கூடிய ஏழடியுள்ள தேஹமே க்ஷேத்ரமாகமாட்டாது. அப்படிப்பட்ட பஞ்ச மஹாபூதாதி ஸமஸ்த ஜகத்ரூபமான க்ஷேத்ரத்தை ஜீவன் தெரியமாட்டான். ஏழடியுள்ள தன்னிட ஶரீரத்தையே தெரிந்துகொள்ளாமல் கோயுண்டான போது டாக்டர் வீட்டிற்குத்திரியும் ஜீவன் இந்த ஸமஸ்தப்ரபஞ்சத்தை எப்படித் தெரிந்துகொள்வான்! (தெரிந்துகொள்ளமாட்டான்). மற்றும்—'ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வாம்ருதமஶ்னுதே' என்னும் வாக்யத்தால் ஜ்ஞேயனை க்ஷேத்ரஜ்ஞனைச் சொல்லுகிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து—'அனாதிமத் பரம் ப்ரஹ்ம' (கீதா. 13-12) என்று க்ஷேத்ரஜ்ஞன் பரப்ரஹ்மமே என்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லியிருக்கிறார். ஶங்கராசார்யர் இந்த ஶ்லோகத்திற்கு க்ஷேத்ரஜ்ஞன் பரப்ரஹ்மமென்று வ்யாக்யானம் செய்திருக்கிறாரென்ற பிறகு—எல்லா ஜகத்தே க்ஷேத்ராத்மக ஶரீரமென்றும், அந்தஸகலஜகதாத்மகமான க்ஷேத்ரத்தை அறிந்திருப்பது பரப்ரஹ்மமென்றும் இந்த கீதா ஶ்லோகங்களினாலும், ஶங்கராசார்யரின் வ்யாக்யானத்தாலும், ஸித்திக்கிறபடியால், 'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்னும் ஶ்லோகத்திற்கு

க்ஷேத்ரஜ்ஞனான பரப்ரஹ்மம் நானே என்று தெரிந்துகொள் ளென்று அர்த்தமாகிறது.

மற்றும்— இந்த அர்த்தம் 'பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான்..............ஆஹுஸ்த்வாம் ருஷயஸ்ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா । அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே । ஸர்வமேதத்ருதம் மன்யே யன்மாம் வதஸி கேஶவ'' ॥ (கீ. 10-12, 13) இத்யாதி ஶ்லோகங்களால் பரப்ரஹ்மமே ஸ்ரீ கிருஷ்ணனென்று, நாரதர், ருஷிகள் முதலானவர்கள் சொல்லுகிறார்கள். நீயும் (கிருஷ்ணனும்) சொல்லுகிறாய். இவைகளெல்லாம் ஸத்யமே என்று தெரிந்துகொள்ளுகிறேன் என்று சொல்லியிருக்கிறபடியால், ஸ்ரீ கிருஷ்ணனே பரப்ரஹ்மமென்று இந்த ஶ்லோகங்களுக்கு அர்த்தம் செய்வது யுக்தமாகிறது. ஆகையால் இந்த ஶ்லோகம் க்ஷேத்ரஜ்ஞனான பரப்ரஹ்மமே ஸ்ரீ கிருஷ்ணனென்று சொல்லுகிறதேயல்லாது, ஜீவன் ஸ்ரீ கிருஷ்ணனென்று சொல்வதில்லை.

மற்றும்—அத்வைத மதப்ரகாரம்—ஸ்ரீ கிருஷ்ணன் ஸகுணன், மாயிகன், பொய்யானவன், விஶிஷ்டன் ஆனபடியால் அந்த விஶிஷ்டனை, பொய்யான ஸ்ரீ கிருஷ்ணனுக்கு, பொய்யான, அல்பஜ்ஞத்வாதி குணவிஶிஷ்டனான ஜீவனால் ஐக்யம் பொருந்தாததினால் இந்த வாக்யம் ஜீவனுக்கு பரமாத்மாவுடன் (ஸ்ரீ கிருஷ்ணனுடன்) ஐக்யத்தைப் போதிப்பதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று கோருகிறோம்.

பி. வா. எ. கீதா. 2.

## மமைவாம்ஶ: என்னும் வாக்ய விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ஜீவபரமாத்மாக்களின் ஐக்ய விஷயத்தில் ஆதாரமான வேறு கீதா வாக்யமுண்டோ?

பி. வா:—உண்டு. 'மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதன: ॥' (கீ. 15-7) என்னும் ஶ்லோகத்தில் ஜீவன் என் அம்ஶமென்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லியிருக்கிறபடியால் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திக்கிறது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இதென்ன க்ரந்தம்?

பி. வா:—இது எங்கள் ஶங்கராசார்யரின் ஸூத்ரபாஷ்யமும், அதற்கு வ்யாக்யானமான பாமதி என்னும் க்ரந்தமும்.

வா. வ:—* இவ்வாக்யங்களுக்கு அர்த்தமென்ன?

பி. வா:—பரமாத்மா நிரம்ஶன். (அகண்டனுனபடியால் அம்ஶரஹிதன்). ஜீவன் பரமாத்மாவின் முக்யாம்ஶனல்ல. அம்ஶ இவ = அம்ஶத்தைப்போல் இருப்பவன். அம்ஶமெப்படி அம்ஶியினதீனமோ அப்படியே ஜீவன் பரமாத்மனின் அதீனனென்று அர்த்தம்.

வா. வ:—அம்ஶத்தைப்போல் என்பதினுல் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்யம் ஸித்திக்கிறதா? இல்லையா?

பி. வா:—அம்ஶ இவ = அம்ஶத்தைப்போல் என்பதினுல் ஐக்யம் ஸித்திக்காது.

வா:—வா.—இதென்ன க்ரந்தம்?

பி. வா:—இது எங்கள் ஶங்கராசார்யரின் கீதா பாஷ்யம்.

வா. வ:—† இவ்வாக்கியத்திற் கர்த்தமென்ன?

பி. வா:—ஸூத்ரபாஷ்யத்தில் சொல்லியவாறே ஜீவன் பரமாத்மாவின் அம்ஶ ஸத்ருஶன். அம்ஶனல்ல என்று அர்த்தம்.

* 'ஜீவ ஈஶ்வரஸ்யாம்ஶோ பவிதுமர்ஹதி, யதாக்னேர்விஸ்புலிங்க: அம்ஶ இவாம்ஶோ ந ஹி நிரவயவஸ்ய முக்யோம்ஶ: ஸம்பவதி கஸ்மாத புனர்நிரவயவத்வாத் ஸ ஏவ ந பவதி நானுவ்யபதேஶாத் 'ஸோன்வேஷ்டவ்ய: ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய:' (சாம். 8-7-1) 'ஏதமேவ விதித்வா முனிர்பவதி' 'ய ஆத்மனி திஷ்டன்னாத்மானமந்தரோ யமயதி' (ப்ர. ஸூ. ஶாம். பா. 2-3-43).

ப்ரஹ்மாம்ஶ இவ தத்தந்த்ரதயா ந த்வம்ஶ இதி தாத்பர்யார்த்த: (பா. 46).

† 'நனு நிரவயவஸ்ய பரமாத்மன: குதோ அவயவ ஏகதேஶோம்ஶ இதி ஸாவயவத்வே ச விநாஶப்ரஸங்கோ அவயவ விபாகாத் நைஷ தோஷோ அவித்யாக்ருதோபாதி பரிச்சின்ன ஏகதேஶோம்ஶ இவ.' (கீதா. பா. 15-7).

## வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! ‘மமைவாம்ஶ:’ என்னும் வாக்யத்திற்கு நீங்கள் சொல்லும் அர்த்தம் என்ன?

வாதி:—ஶங்கராசார்யர் சொல்லியவாரே அம்ஶ இவ=பரமாத்மாவின் அம்ஶத்தைப்போல், எல்லா விஷயங்களிலும் பரமாத்மாவைவிட வெகு அல்பபரிமாணமுடையவனென்று அர்த்தம்.

பி. வா. வ:—லோகத்தில் இவ்விதமான ப்ரயோகமுண்டோ?

வாதி:—ப்ரயோகமுண்டு.

பி. வா. வ:—அப்படி ப்ரயோகமிருக்குமாயின் சொல்லும்?

வாதி:—நாகாயுதபலோ பீம:=பீமன் பதிநாயிரம் யானைகளின் பலமுடையவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பதிநாயிரம் யானைகளின் பலம் வேறு, பீமனின் பலம் வேறு. பதிநாயிரம் யானைகளின் பலமே பீமனிடத்தில் வருவதில்லையாதலால், பீமனின் பலம் பதிநாயிரம் யானைகளின் பலத்திற்கு ஸமானமானதென்று சொல்லப்படுகிறது. இந்த காலத்திய ஜனங்களும் ஒரு யந்த்ரத்தைப் பார்த்து இந்த யந்த்ரம் (Ten Horse Power) பத்து குதிரைகளின் பலமுள்ளது என்று சொல்லுகிறார்கள். குதிரைகளின் பலம் யந்த்ரத்தில் வாராததால் அந்த யந்த்ரம் பத்து குதிரைகளின் பலத்திற்கு ஸமானமானதென்று எப்படி அபிப்ராயமோ, அப்படியே ஜீவன் பரமாத்மாவின் அம்ஶமென்றால், பரமாத்மாவின் அம்ஶத்திற்கு ஸமானன், அத்யல்பனென்று அபிப்ராயம். ஜீவன் பரமாத்மாவின் ஒரு அம்ஶமே=அவனிட பாகமே (துண்டே) என்று அபிப்ராயமல்ல என்று சொல்லுகிறோம். பதிநாயிரம் ரூபாய்களுள்ள சைத்ரன் லக்ஷ ரூபாயுள்ள தேவதத்தனின் பத்தாவது அம்ஶமுள்ள ஸாவகாரன் என்றால்—தேவதத்தனின் லக்ஷரூபாய்களில் பதிநாயிரம் ரூபாய் சைத்ரனிடத்தில் உண்டென்று அபிப்ராயமல்ல. லக்ஷரூபாய்கள் தேவதத்தனிடத்தி லிருப்பவைகளே. பத்தாவது அம்ஶமளவு (அம்ஶத்திற்கு ஸமானமான) வேரு பதிநாயிரம் ரூபாய்கள் தேவதத்தனிடமுண்டென்று எப்படி அபிப்ராயமாகிறதோ, அப்படியே ஜீவன் பரமாத்மாவின் அம்ஶமென்றால், பரமாத்மாவின் அம்ஶத்

திற்கு, ஸத்ருஶன் அத்யல்பனென்று அபிப்ராயம். ஜீவன் பரமாத்மாவின் பாகமே (துண்டே) என்று அபிப்ராயமல்லாததினால், இந்த வாக்யத்தால் ஜீவப்ரஹ்மாக்களுக்கு ஐக்யம் ஸித்திப்பதில்லை.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூதஸ்ஸநாதன:' (கீதா. 15-7) என்னும் ஶ்லோகத்தில் ஜீவன் ஸ்ரீக்ருஷ்ணனின் அம்ஶமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஜீவன் பரமாத்மா என்னும் விஷயத்தில் இந்த கீதா ஶ்லோகம் ஆதாரமாகிறதென்பதைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்ரார்த்தனை.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! அத்வைத மதத்தின்படிக்கு ப்ரமாத்மா அகண்டன் (நிரவயவன் = நிரம்ஶன்) ஆகையால் ஜீவன் பரமாத்மாவின் அம்ஶனென்பது பொருந்தாது. ஆகையால் ஜீவன் பரமாத்மாவின் அம்ஶஸத்ருஶன். அம்ஶங்கள் எப்படி அம்ஶியின் அதீனமாயிருக்கின்றனவோ, அப்படியே ஜீவன் பரமாத்மாவின் அதீனனென்று அபிப்ராயமென்று ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யத்தில் அத்வைதிகளே சொல்லியிருக்கிறபடியால், ஜீவன் பரமாத்மாவின் அம்ஶமாவதில்லை. ஆகையால் நாகாயுத பலோபீம:= பீமனின் பலம் பதினாயிரம் யானைகளின் பலமென்று சொன்னால், பதினாயிரம் யானைகளின் பலமும், பீமனின் பலமும் ஒன்றேயாவதில்லை. ஆகையால், எப்படி பீமனின் பலம் பதினாயிரம் யானைகளின் பலத்திற்கு ஸமானமான பலமென்று தாத்பர்யமோ; யந்திரம் 10 குதிரைகளின் பலமுள்ளது, (Ten Horse Power) என்றால் யந்திரத்தின் ஶக்தி 10 குதிரைகளின் ஶக்திக்கு ஸமானமானதென்று அபிப்ராயமோ; இவன் இந்த ஸாவகாரனின் 10-வது அம்ஶமுள்ள ஸாவகாரனென்றால், அந்த ஸாவகாரனிடமிருக்கும் பணத்தில் பத்தில் ஒருபங்கு பணமே இவ

னிடமிருக்கிறதென்று தோன்றுமல், அந்த ஸாவகாரனின் பணத்தின் 10-வது பங்கவ்வளவு பணம் இந்த ஸாவகாரனிடமிருக்கிறதென்று எப்படி அபிப்ராயமோ அப்படியே, ஜீவன் பரமாத்மாவின் அம்ஸமென்றால்—பரமாத்மாவின் அம்ஸஸத்ருஸன் என்று அபிப்ராயமாகிறபடியால் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யத்தைப் போதிப்பதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் ஸமுகத்தில் விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன்.

பி. வா. எ. ஜீதா. 3.

## பஹூநாம் ஜன்மநாமந்தே என்னும் வாக்ய விசாரணை.

பி. வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'பஹூநாம் ஜன்மநாமந்தே ஞானவான் மாம் ப்ரபத்யதே । வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்னும் 7-19வது கீதா ஶ்லோகத்திற்கு அர்த்தமென்ன? இதனால் என்ன ஸித்தமாகிறது?

பி. வா:—அனேக ஜன்மங்களில் ஸாதனம் செய்தபிறகு, ஞானவான் = பரிபக்குவ ஞானமுடையவனாய் வாஸுதேவன், ஸர்வ: = ஸர்வரூபன் (ஸர்வாத்மகன்) என்று ப்ரத்யக்ஷமாகக் காண்கிறானென்று அர்த்தம். இதனால் வாஸுதேவனே ஸர்வரூபனென்று, வாஸுதேவனுக்கு ஜீவஜடாத்மக ப்ரபஞ்சத்தால் அபேதம் ஸித்தமாகிறது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே நமோஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ । அனந்தவீர்யாமித விக்ரமஸ்த்வம் ஸர்வம் ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ:' என்னும் 11-40வது கீதா ஶ்லோகத்திற்கபிப்ராயமென்ன?

பி. வா:—முன்னிருப்பவனுக்கு நமஸ்காரம். பின்னிருப்பவனுக்கு நமஸ்காரம். ஓ ஸர்வனே! ஸகல திசைகளிலிருக்கும் உனக்கு நமஸ்காரம். நீ எல்லாவற்றையும் வ்யாபித்திருப்பதால் 'ஸர்வன்' என்று சொல்லப்படுகிறாய் என்று அபிப்ராயம்.

வா. வ:—இதனால் 'ஸர்வ:' என்னும் பதத்திற்கு என்ன அர்த்தம் செய்யப்பட்டதென்று ஸித்தமாகிறது?

பி. வா:—எல்லாவற்றிலும் வ்யாபித்திருப்பதால் நீ ஸர்வனென்று சொல்லப்படுகிறாய், என்று சொல்லியிருப்பதால் ஸர்வ:=ஸர்வ வ்யாப்தன் என்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறதென்றே ஸித்தமாகிறது.

வா. வ:—இந்த 2-5-1-வது ப்ருஹதாரண்யக மந்த்ர பாஷ்யத்தில் 'ஸர்வம்' என்னும் பதத்திற்கு சங்கராசார்யர் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—ஸர்வம்=ஸர்வாப்தி ஸாதனம் என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—'வாஸுதேவ: ஸர்வமிதி' என்னும் ச்லோகத்திலிருக்கும் 'ஸர்வ:' என்னும் பதத்திற்கு ஸர்வவ்யாப்தன் அல்லது ஸர்வப்ராப்தி ஸாதனன் என்று அர்த்தம் செய்யலாமல்லவா?

பி. வா:—ஸர்வ:=ஸர்வவ்யாப்தன், ஸர்வாப்தி ஸாதனன் என்று அர்த்தம் செய்யலாம்.

வா. வ:—சாஸ்த்ரிகளே! இதென்ன கிரந்தம்?

பி. வா:—இது நம்மிட சங்கர பகவத்பாதரின் சாந்தோக்ய பாஷ்யம், மற்றும் அதற்கு ஆனந்தகிரி டீகா.

வா. வ:—இந்த * வாக்யங்களுக்கு தாத்பர்யமென்ன?

* ஸர்வகாம: ஸர்வே காமா தோஷரஹிதா அஸ்யேதி ஸர்வகாம: । "தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி" இதி ஸ்ம்ருதே: । நனு காமோஸ்மீதி வசனஇஹ பஹுவ்ரீஹிர்ந ஸம்பவதி ஸர்வகாம இதி ந காமஸ்ய கர்தவ்யத்வாச்சப்தாதிவத் பாரார்த்ய ப்ரஸங்காச்ச தேவஸ்ய தஸ்மாத்ய தேஹ ஸர்வகாம இதி பஹுவ்ரீஹிஸ்ததா காமோஸ்மீதி ஸ்ம்ருத்யர்த்தோ வாச்ய: ॥ (சாம். சாம். பா. 3-14-2.)

உதாஹ்ருதாம் ஸ்ம்ருதிமாசீரித்யோக்தமாக்ஷிபதி—நன்விதி । காமஸாமானதிகரண்யே பாதகோபலம்பாத் பஹுவ்ரீஹிரேவேதி பரிஹரதி—ந காமஸ்யேதி । தஸ்ய கார்யத்வாத்தத்தைக்யே ப்ராஹ்மணோநதித்வம் பாத்யதே சேதன சேஷத்வாச்ச காமஸ்ய ததைக்யே ப்ராஹ்மண: ஸ்வாதந்த்ர்யம் ஹீயதே । ததா ச கர்மதாரயா ஸம்பவாத் பஹுவ்ரீஹிரேவேத்யர்த்த: ।

பி. வா:—'ஸர்வகாம: ஸர்வரஸ:' (சாம். 3-14-4) என்னும் மந்த்ரத்திலிருக்கும் 'ஸர்வகாம:' என்னும் பதத்திற்கு 'ஸர்வே காமா: யஸ்ய' என்று பஹுவ்ரீஹி ஸமாஸம் செய்துகொண்டு, காமத்திற்கு பரமாத்மாவுடன் பேதத்தைச் சொல்லவேண்டுமா? 'ஸர்வஶ்சாஸௌ காமஶ்ச ஸர்வகாம:' என்று கர்மதாரயஸமாஸம் செய்துகொண்டு காமத்திற்கும், பரமாத்மாவுக்கும் ஐக்யத்தைச் சொல்லவேண்டுமா என்னும் ஸம்ஶயமும், 'பூதேஷு காமோஸ்மி பாதர்ஷப' (கீ. 7-11) என்னும் கீதா ஶ்லோகத்தில் பரமாத்மாவுக்கு காமரூபத்வம் (காமதாதாத்ம்யம்) சொல்லப்பட்டிருப்பதால் அதை யனுஸரித்து 'ஸர்வஶ்சாஸௌ காமஶ்ச' என்று கர்மதாரயஸமாஸம் செய்துகொண்டு காமத்திற்கு பரமாத்மாவுடன் அபேதத்தைச் சொல்லவேண்டும் என்னும் பூர்வபக்ஷமும் உண்டானதற்கு—காமம் பரதந்த்ரம், ஜன்யம் ஆகையால் அந்த பாதந்த்ரமும், ஜன்யமுமான காமம் பரமாத்மாவின் ஸ்வரூபமேயானல், பரமாத்மாவுக்கு பாரதந்த்ர்யம், அநித்வம், இவைகளை ஒப்புக்கொள்ளவேண்டிவருவதினல், 'ஸர்வே காமா: யஸ்ய' என்று பஹுவ்ரீஹிஸமாஸம் செய்துகொண்டு காமத்திற்கும், பரமாத்மாவுக்கும் பேதத்தையே சொல்லவேண்டும். ஐக்யம் சொல்லக்கூடாது. காமத்திற்கு பரமாத்மாவுடன் அபேதம் சொல்வதைப்போல் தோன்றும் 'காமோஸ்மி' என்னும் கீதா வாக்யத்திற்கும், காமம் ஈஶ்வரபாதந்த்ரம் = ஈஶ்வராதீனம் என்று சொல்லவேண்டுமேயொழிய பரமாத்மா காமஸ்வரூபனென்று சொல்லக்கூடாதென்று ஶங்கராசார்யர் சொல்லியிருக்கிறர்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! ஶங்கராசார்யர் சொல்லியவாறு ஒரு காமத்தை மாத்ரம் பரமாத்மரூபமென்று சொன்னல், பரமாத்மாவின் ஸ்வாதந்த்ரத்வம், அநித்வம் போய்க்கொண்

---

கதம் தர்ஹி காமோஸ்மீதி தாதாத்ம்யஸ்ம்ருதிரித்யாஶங்க்யாஹ தஸ்மாதிதி। காமேஶ்வரயோ: ஸாமாநாதிகரண்யாஸம்பவாத் ப்ருக்ருத ஶ்ருதௌ பஹுவ்ரீஹிர்யதேஷ்டஸ்ததா ஸ்ம்ருதாவபி ப்ராஹ்மபாரதந்த்ர்ய மாத்ரம் காமஸ்ய விவக்ஷிதம், ஶ்ருத்யனுஸாரேண ஸ்ம்ருதேர்நேதவ்யத்வாதித்யர்த்த: (ஆனந்தகிரி).

டிருக்க—'வாஸுதேவஸ்ஸர்வமிதி' என்னும் ஶ்லோகத்திற்கு ஶ்வானகராதி (நாய், கழுதை முதலிய) ஜீவரூபங்களும் மலமூத்ராதி து்ஷ்ட ஜடஸ்வரூபமும், பரமாத்மாவேயானால், பரமாத்மாவுக்கு அனேக தோஷங்கள் வருகின்றன அல்லவா?

பி. வா:—ஆம் வருகின்றன.

வா. வ:—தோஷம் வருமலிருப்பதற்கு 'வாஸுதேவஸ்ஸர்வமிதி' என்னும் ஶ்லோகத்திற்கு எப்படி அர்த்தம் செய்யவேண்டும்?

பி. வா:—கேழ்ப்பதென்ன? எங்கள் ஶங்கராசார்யர் 'காமேஸ்மி' என்னும் ஶ்லோகத்திற்குச் செய்தமாதிரி வாஸுதேவன், ஸர்வ: = ஸர்வஸ்வாமி (ஸர்வநியாமகன்) என்று அர்த்தம் செய்யவேண்டும்.

வா. வ:—நியம்ய நியாமகர்களுக்கு பேதமா? அல்லது ஐக்யமா?

பி. வா:—நியம்ய நியாமகர்களுக்கு பேதமே.

வா. வ:—வாஸுதேவன் ஸர்வ பதார்த்தங்களுக்கும் நியாமகனாயின், நியம்ய நியாமகபாவத்தால் பேதம் ஸித்தமாகிறதல்லவா?

பி. வா:—நியம்ய நியாமகபாவத்தால் பேதம் ஸித்தமாகிறது. ஆயினும்—

வா. வ:—அடிக்கடி ஆயினும் என்று என்ன சொல்லுகிறீர்?

பி. வா:—நியம்ய நியாமகபாவம் ஸத்யமானால் அதனால் பேதம் ஸித்திக்கும். நியம்ய நியாமகபாவம் பொய்யானபடியால் அதனால் ஸித்திக்கும் பேதம் பொய்யென்று தாத்பர்யம்.

வா. வ:—கீதா ப்ரமாணமேயல்லவா?

பி. வா:—கீதா ப்ரமாணமே.

வா. வ:—ப்ரமாணமென்னும் பதத்திற்கு ஸத்யமான பதார்த்த விஷயகமான ஞானத்தையுண்டாக்குவதென்று அர்த்தமிருக்கிறபடியால், கீதையில் சொன்ன நியம்யநியாமக பாவமும் நிஜமேயாகவேண்டுமல்லவா? அப்படியிருக்க—பேதம் பொய்யென்று நீங்களெப்படிச் சொன்னீர்?

பி. வா:—நியம்ய நியாமக பாவம் வ்யாவஹாரிக ஸத்ய மானது. பாரமார்த்திக ஸத்யமல்ல. அந்த வ்யாவஹாரிக ஸத்ய மான நியம்ய நியாமக பாவத்தால் வ்யாவஹாரிக பேதம் ஸித்த மாகிறதேயல்லாது பாரமார்த்திக பேதம் ஸித்தமாகிறதில்லை.

கோர்ட்: — ஶாஸ்த்ரிகளே! வ்யாவஹாரிக ஸத்யத்தைச் சொல்வதை இதுவரையில் நீங்களே கண்டித்து மருபடியும் நீங்களே வ்யாவஹாரிக ஸத்யமென்று எப்படிச் சொல்லுகிறீர்? வேறேதாகிலும் ஸமாதானமிருந்தால் சொல்லும்?

பி. வா:—(பதில் இல்லை.)

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா:—(To the Court) மஹாப்ரபோ! வாஸுதேவஸ் ஸர்வமிதி' வாஸுதேவன் ஸர்வரூபன் (ஜீவஜடாத்மக ப்ரபஞ்ச ரூபன்) என்று தெரிந்தவன் துர்லபன் என்று சொல்வதினுல் வாஸுதேவநாமக பரமாத்மாவுக்கு ஜீவஜடாத்மக ப்ரபஞ்சத் தால் அபேதம் ஸித்திக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டா ருக்குத் தெரிவித்துக்கொண்டிருக்கிறோம்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! "ஸர்வகாம: ஸர்வ ரஸ:' என்னும் சாந்தோக்ய ஶ்ருதி வ்யாக்யானத்தில் 'காமோஸ்மி' என்னும் பதத்திற்கு காம ஸ்வாமி (காமத்திற்கு ஸ்வாமி) என்று ஶங்கராசார்யர் சொல்லியிருப்பதை ப்ரதிவாதி விசாரணை காலத் தில் சொல்லியுள்ளபடிக்கு 'வாஸுதேவஸ்ஸர்வம் என்னும் ஶ்லோகத்திலிருக்கும் 'ஸர்வம்' என்னும் பதத்திற்கும் ஸர்வ ஸ்வாமி, நியாமகன் ஸர்வாப்திஸாதனனென்ருவது, அல்லது 'ஸர் வம் ஸமாப்னோஷி ததோஸிஸர்வ: = எல்லாவற்றிலும் நிறைந்திருப் பதால், நீ ஸர்வன் என்று சொல்லிக்கொள்ளப்படுகிருய்' என்று கீதையில் சொல்லியுள்ளவாரு, ஸர்வவ்யாப்தனென்று அர்த்தம் செய்யவேண்டுமேயொழிய, ஸர்வரூபனென்று அர்த்தம் செய்யக்

கூடாது. ஆகையால் இவ்வாக்யம் ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவத்தாலும், நியம்ய நியாமக பாவத்தாலும், பேதத்தைத் தெரிவிக்கிறதே யல்லாது அபேதத்தைத் தெரிவிப்பதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் நோட்செய்துகொள்ளவேண்டும்.

ப்ர. வா. எ. கோ. 4.

## வித்யா விநய ஸம்பன்னே என்னும் வாக்ய விசாரணை.

*பி. வா. வ:*—ஶாஸ்த்ரிகளே! ஜீவேஶ்வரர்களுக்கு ஐக்யத்தைச் சொல்லும் வேறேதாவது கீதா ஆதாரமுண்டோ?

*பி. வா:*—உண்டு. 'வித்யா விநய ஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி । ஶுனி சைவ ஶ்வபாகே ச பண்டிதாஸ்ஸமதர்ஶின:' (கீ. 5-18) வித்யாவினயாதிகளால் கூடிய ப்ராஹ்மணன், பசு, யானை, நாய், பறையன் இவர்களை பண்டிதர்கள் ஸமமாகப் பார்க்கிறார்கள், (ஒன்றாக பாவிக்கிறார்கள்) என்று எல்லாவற்றிற்கும் ஐக்யத்தைச் சொல்லிக்கொண்டே ஜீவப்ராஹ்மாக்களுக்கு ஐக்யத்தைச் சொல்லுகிறது.

## க்ராஸ் எக்ஸாமினேஷன்.

*வா. வ:*—ஶாஸ்த்ரிகளே! இந்த ஶ்லோகத்தில் அபேதத்தைச் சொல்லும் பதம் ஏது?

*பி. வா:*—ஸமதர்ஶின: என்னும் பதமே.

*வா. வ:*—அதற்கு விக்ரஹம் செய்து அர்த்தத்தைச் சொல்லும்?

*பி. வா:*—ஸமம் பஶ்யந்தீதி ஸமதர்ஶின: ஸமனே (ஸமமான வஸ்துவை) காணுகிறவர்கள் என்று அர்த்தம்.

*வா. வ:*—ப்ராஹ்மணே—கவி—ஶுனி—ஶ்வபாகே — என்னும் பதங்களுக்கர்த்தமென்ன?

*பி. வா:*—ப்ராஹ்மணனிடத்தில்—பசுவில்—நாயில்—சண்டாளனிடத்தில் என்று அர்த்தம்.

வா. வ:—ஸாஸ்த்ரிகளே! பூரா ஶ்லோகத்திற்கும் அர்த்த மென்ன ஆகிறது?

பி. வா:—ப்ராஹ்மணாதிகளில் ஸமமான வஸ்துவைக்காணு கிறவர்கள் பண்டிதரென்று அர்த்தம்.

வா. வ:—ஸாஸ்த்ரிகளே! இந்த ஶ்லோகத்தில் ஆதாராதேய பாவம், ஞாத்ருஞேயபாவம், சொல்லப்படுவதால் பேதம் ஸித்திக்கிறதேயல்லாது அபேத ப்ரஸக்தியே காணப்படுகிற தில்லையல்லவா?

பி. வா:—நிஜமான ஆதாராதேய பாவமாகிலும், ஞாத்ரு ஞேயபாவமாகிலும், இந்த கீதா ஶ்லோகம் சொன்னால் அந்த வாஸ்தவமான ஆதாராதேய பாவத்தால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகலாம். பொய்யான ஆதாராதேய பாவத்தால் பேதமெப்படி ஸித்தமாகும்? (ஸித்திக்காது).

வா. வ:—கீதா ப்ரமாணமேயல்லவா?

பி. வா:—கீதா ப்ரமாணம்தான், ஸந்தேஹமென்ன?

வா. வ:—ப்ரமாணமான கீதையில் சொல்லப்பட்ட, ஆதாரா தேயபாவத்தையும், ஞாத்ருஞேயபாவத்தையும் பொய்யென்று சொன்னால் கீதா அப்ரமாணமாகவேண்டி வருமல்லவா?

பி. வா:—எங்கள் மதத்தில் 'ந ஶாஸ்தா, ந ஶாஸ்த்ரம், ந வேதா, ந யஜ்ஞா:' 'வேதா அவேதா:' என்று சொல்லியிருக்கிறபடி யால், ப்ரஹ்மாதிரிக்தமான ஸமஸ்தமும் மித்யையானபடியால் ப்ரஹ்மாதிரிக்தமான, ஆதாராதேயபாவம், ஞாத்ருஞேயபாவம், கீதா, இவ்வெல்லாம் பொய்யான பிறகு கீதைக்கு ப்ராமாண்ய மேது? (கீதா அப்ரமாணமே).

வா. வ:—கீதா அப்ரமாணமாயின்—அபேத விஷயத்தில் ப்ரமாணமென்று அதை எப்படி உதாஹரித்தீர்?

பி. வா:—'தூஷ்ணீம் ஶிலாவத் ஸ்திதா:' என்னும் ஶங்கரா சார்யரின் வாக்யங்களை நாங்கள் அநுஸரிக்கிறோம்.

வாதி விசாரணை.

பி. வா. வ:—ஆசார்யரே! இந்த ச்லோகத்திற்கு நீங்களென்ன அர்த்தம் சொல்லுகிறீர்?

வாதி:—வித்யாதி குணங்களால் கூடியிருக்கும் ப்ராஹ்மணன், பசு, யானை, நாய், சண்டாளன் இவர்களிடத்தில் ஸமமாயிருக்கும் ப்ரஹ்மத்தை யார் காணுகிறார்களோ அவர்களே பண்டிதர்கள் என்று அர்த்தம்.

பி. வா. வ:—ஆசார்யரே! ஆஹா! தங்களிட பாண்டித்யம் மிகவும் விலக்ஷணமாகத் தோன்றுகிறது. 'ஸமதர்சின:' என்னும் பதத்திற்கு ஸமனான பரமாத்மனை காணுகிறவர் என்னும் அர்த்தத்தை எந்த கோசத்திலிருந்தெடுக்கப்பட்டது? இந்த அர்த்தம் உங்களால் கல்பிக்கப்பட்டதா? அல்லது புராதனர் (ப்ராசீனர்) யாராவது செய்திருக்கிறாரா?

வாதி:—Mr. H. H. Sarma! நாங்கள் கல்பிக்கவில்லை. கீதா கர்த்தாவான ஸ்ரீ கிருஷ்ணனே, தான் சொல்லிய 'ஸமதர்சின:' என்னும் வாக்யத்திலிருக்கும் 'ஸம' என்னும் பதத்திற்கு 'இஹைவ தைர்ஜித: ஸர்க:' என்னும் உத்தர ச்லோகத்திலேயே நாங்கள் சொன்னப்ரகாரம் வ்யாக்யானம் செய்திருக்கிறான்.

பி. வா. வ:—ஆசார்யரே! இஹைவ தைர்ஜித: ஸர்க: ஏஷாம் ஸாம்யே ஸ்திதம் மன: । நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ॥ (கீ. 5-19) என்னும் ச்லோகத்திற்குத் தாத்பர்யம் என்ன?

வாதி:—யாருக்கு ஸாம்யத்தில மனதுண்டோ (யார் ப்ராஹ்மணாதிகளில் ஸமமான வஸ்துவைத் தெரிந்துகொண்டிருக்கிறார்களோ) அவர்கள் இந்த ஜன்மத்திலேயே ஸர்கத்தை (ஜனனத்தை) வெல்லுகிறார்கள். (இனி அவர்கள் ஜனனத்தையடைவதில்லை) என்று சொல்லவே—'தமேவம் வித்வானம்ருத இஹ பவதி' என்னும் ச்ருதி ப்ரஹ்ம ஞானத்தாலேயே ஸர்கத்தை (ஜன்மத்தை) ஜயிக்கிறான், (மோக்ஷத்தை யடைகிறான்) என்று சொல்லுகிறது. ஸமவஸ்துவின் ஞானத்தால் ஜனனத்தை ஜயிக்கும் ரூபமான மோக்ஷமெப்படி யுண்டாகும்? என்று ஸந்தேஹம் உண்டான

தற்கு ஸமாதானத்திற்காக—'நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம' என்னும் வாக்யம் ப்ரவ்ருத்தமாயிருக்கிறது. அதற்கு—நிர்தோஷமான ப்ரஹ்மமே ஸமமென்று சொல்லிக்கொள்ளப்படுகிறது. ஆகையால் (ஸமமும் ப்ரஹ்மமும் ஒன்றேயானதினால்) தே = ஸம ஞானிகள், ப்ரஹ்மணி ஸ்திதா: = ப்ரஹ்ம ஞானிகளே யாகையால் ஸம ஞானிக்கு மோக்ஷமாகிறதென்றாலும், ப்ரஹ்ம ஞானிக்கு மோக்ஷமாகிறதென்றாலும் ஒன்றேயாகையால், அந்த ஶ்ருதி விரோதம் வருவதில்லை என்று தாத்பர்யம்.

பி. வா. வ:—இந்த ஶ்லோகங்களால் என்ன ஸித்தமாகிறது?

வாதி:—ப்ராஹ்மணாதிகளுக்கு (ஜீவர்களுக்கு) பரமாத்மாவுடன் ஆதாராதேய பாவத்தாலும், ஞாத்ருஜ்ஞேய பாவத்தாலும் பேதம் ஸித்திக்கிறது.

## பிரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'வித்யாவினய ஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ! ஶுனி சைவ ஶ்வபாகே ச பண்டிதாஸ்ஸமதர்ஶின: ॥' என்னும் ஶ்லோகம், ப்ராஹ்மணன், நாய், முதலிய எல்லாவற்றையும் ஸமமாக (ஒன்றாக) பண்டிதர்கள் பார்க்கிறார்கள் என்று சொல்லியிருக்கிறபடியால், எல்லாவற்றிற்கும் ஐக்யம் ஸித்திக்கிறதாகையால் இவ்வாக்யம் ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்ய விஷயத்தில் ஆதாரமாகிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court):—மஹாப்ரபோ! 'ஸமதர்ஶின:' என்னும் ஸமஸ்த பதத்திலிருக்கும் 'ஸம' பதத்திற்கு 'நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ராஹ்மணி தே ஸ்திதா:' ॥ (கீதா. 5-19) என்னும் ஶ்லோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணனே நிர்தோஷமான ப்ரஹ்மம், 'ஸம' என்னும் ஶப்தத்தால் சொல்லிக்

கொள்ளப்படுகிறது என்று அர்த்தம் செய்திருக்கிறார். 'ஸமதர்ஶின:' என்னும் பதத்தை யார் உபயோகித்திருக்கிறாரோ, அவருடைய வ்யாக்யானமே உத்தர ஶ்லோகத்திலிருப்பதால், அந்த அர்த்தத்தையே அவஶ்யமாக அங்கீகரிக்கவேண்டியிருப்பதால் 'ஸமதர்ஶின:' என்னும் பதத்திற்கு நிர்தோஷமான ப்ரஹ்மத்தைக் காணுகிறவரென்னும் அர்த்தத்தையே அங்கீகரிக்கவேண்டும். ஆகையால்—

இந்த 'ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ஶுனி சைவ ஶ்வபாகே ச பண்டிதா: ஸமதர்ஶின:' என்னும் கீதா ஶ்லோகம் ப்ராஹ்மணாதிகளில் ஸம ஶப்தத்தால் போத்யமான, நிர்தோஷமான பரப்ரஹ்மத்தைக் காணுகிறவர் பண்டிதரென்று ஜீவபரமாத்மாக்களுக்கு ஆதாராதேய பாவத்தாலும், ஞாத்ருஜ்ஞேயபாவத்தாலும், பேதத்தைத் தெரிவிக்கிறது. இந்த ஶ்லோகத்தில் அபேதத்தைத் தெரிவிக்கும் பதமே இல்லாததால் இந்த வாக்யம் அபேத விஷயத்தில் ஆதாரமாவதில்லை என்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## பிரதிவாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! இந்த கீதா ஶ்லோகம், ப்ராஹ்மணன், பசு, யானை, முதலியவைகள் ஆதாரங்கள்; பரமாத்மா அதேயன், ஜீவர்கள் ஞாத்ரு, பரமாத்மா ஞேயன் என்று நிஜமாகச் சொன்னால் நிஜமான ஞாத்ருஜ்ஞேய பாவத்தாலும், ஆதாராதேய பாவத்தாலும், பேதம் ஸித்திக்கும். ஞாத்ருஞேயபாவம் மித்யையானதினால், இந்த பொய்யான ஞாத்ருஞேய பாவத்தால் நிஜமான பேதம் ஸித்திக்காது. கீதா வாக்யங்களால் அபேதம் ஸித்திக்காமற் போயினும் — அபேதம் ஸ்வப்ரகாஶமான ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமாகையினால் அதுவும் ப்ரஹ்மத்தைப் போலவே ஸ்வத: (தானாகவே) ஸித்தமாகிறது. ஆகையால் அந்த ஐக்ய விஷயத்தில் ப்ரமாணம் அனுவஶ்யகமானதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

*வா. வ:*—(To the Court) மஹாப்ரபோ! H. H. ஶர்மா அவர்கள் இது வரையிலும் சொல்லாத புது விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். அதற்குப்பதில் சொல்வதற்கு உத்திரவளிக்க வேண்டும்.

*கோர்ட்:*—அவர் சொன்ன புதிய விஷயத்திற்கு பதில் சொல்லும். அதிக வார்த்தைகள் வேண்டாம்.

*வா. வ:*—அப்படியே மஹாப்ரபோ! ஞாத்ருஞேயபாவம் முதலிய ப்ரபஞ்சம் மித்யையாகாது. ஸத்யமானதே என்று முன்னமே தீர்மானமாயிருக்கிறபடியால், ஞாத்ருஞேயபாவம், ஆதாராதேயபாவம், மித்யை என்பது பொருந்துவதில்லை. ஆகையால் ஸத்யமான ஞாத்ருஞேய பாவத்தால் ஸத்யமான பேதம் ஸித்திக்கின்றது. ஐக்யம் ஸ்வப்ரகாஶமான ப்ரஹ்ம ஸ்வரூபமாதலால் ஸ்வதஏவ ஸித்திக்கிறதென்பது அத்யந்த அயுக்தம். அத்வைத மதத்தில் ஸ்வப்ரகாஶமென்றால் இதராவேத்யம் (இதரர்களால் அறியப்படாதது) என்றிருப்பதால், ப்ரஹ்மம் எப்படி ஸ்வப்ராகாஶமோ = இதரர்களாலறிவதற்கு அயோக்யமோ (அஜ்ஞேயமோ) அப்படியே ப்ரஹ்மஸ்வரூபமென்று அத்வைதிகள் சொல்லும் ஐக்யம் (அபேதம்) அஜ்ஞேயமே. எப்படி ஸ்வப்ரகாஶமான, அஜ்ஞேயமான ப்ரஹ்மத்தைத் தெரிவிப்பதற்காக யத்னம் செய்யாமல் “தூஷ்ணீம் பபூவ ! சித்ரம் வடதரோர் மூலே ஶிஷ்யா வ்ருத்தா குருர்யுவா ! உபதேஶோ குரோர்மௌனம் ஶிஷ்யா: ப்ரச்சின்ன ஸம்ஶயா:” என்று ப்ராசீனத்வைத ஶிகாமணிகள் மௌனத்தை யவலம்பித்ததுபோல், அஜ்ஞேயமான, ப்ரஹ்மரூபமான ஐக்யத்தை ஸித்தப்படுத்துவதைவிட்டு, நம் ப்ரதிவாதிகள் சும்மா யிருந்திருப்பார்களேயாகில்—நமக்கு இவ்வளவு ஶ்ரமமாயிராது. கோர்ட்டாருக்கும் வேலை குறைந்திருக்கும். ஐக்யம் இதராவேத்யம் (ப்ரமாணத்தால் அவேத்யம்) என்று சொல்வதும், ப்ரமாணங்கள் ஐக்யத்தை ஸாதிப்பதற்காக ப்ரவ்ருத்தமாகிறதென்பதும் வ்யாஹதமாகிறது என்பதைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமாய்க் கோருகிறோம்.

வா. வ:—ஆசார்யரே! ஜீவேஶ்வர பேத விஷயத்தில் கீதா ஶ்லோகங்களைச் சொல்லும்?

வா தி:—கீதையின் 700 ஶ்லோகங்களும் ஸாக்ஷாத்தாகவும், பரம்பரையாகவும் பேதத்தையே சொல்லுகின்றன. வெவ்வேருக எவ்வளவென்று சொல்வது?

வா. வ:—உதாஹரணத்திற்காக 5-6 ஶ்லோகங்களைச் சொல்லும்?

வா தி:—"ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுன திஷ்டதி। ப்ராமயன் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா" (கீதா. 18-16) என்னும் ஶ்லோகம், ஈஶ்வர:=ஜகத்தை நியமிக்கும் ஸ்வபாவமுடைய நாராயணன், மாயயா=தன்னிச்சையால், அல்லது 'மாயா வயுனம் ஞானம்' என்று நிகண்டுவில் சொல்லியிருப்பதையனுஸரித்து, ஞானத்தால், யந்த்ராரூடாநி=ஸம்ஸார சக்ரத்தின் பேரில் ஏறிக்கொண்டிருக்கும் ஸர்வப்ராணிகளையும், சுற்றுவித்துக்கொண்டே (வ்யாபாரங்களைச் செய்வித்துக்கொண்டே) எல்லா ப்ராணிகளின் ஹ்ருதயதேஶத்தி லிருக்கிருனென்று ஜீவபாமாத்மாக்களுக்கு நியம்ய நியாமக பாவத்தால் பேதத்தைத் தெரிவிக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ஸ்ம்ருதேஶ்ச' (1-2-6) என்னும் ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கு ஶங்கராசார்யார் என்ன அர்த்தம் சொல்லியிருக்கிருர்?

பி. வா—"ஸ்ம்ருதிஶ்ச ஶாரீர பரமாத்மனேர் பேதம் தர்ஶயதி—'ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுன திஷ்டதி। ப்ராமயன் ஸர்வபூதாநி யந்த்ரா ரூடாநி மாயயா' ॥ (கீதா. 18-61.) இத்யாத்ய:" (ப்ர. ஸூ. பா. 1-2-6) என்னும் வாக்யத்தால் 'ஈஶ்வர: ஸர்வபூதாநாம்' என்னும் ஸ்ம்ருதி ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறதென்று 'ஸ்ம்ருதேஶ்ச' என்னும் ஸூத்ரத்திற்கு அர்த்தம் சொல்லியிருக்கிருர்.

வா. வ:—'இத்யாத்யா' என்னும் ஆகிபதத்தால் எந்த வாக்யங்களை உதாஹரித்திருக்கிறார்?

பி. வா:—'தமேவ ஶரணம் கச்ச ஸர்வபாவேன பாரத' இது முதலான ஶ்லோகங்களை யுதாஹரித்திருக்கிறார்.

வா. வ:—'ஈஶ்வர: ஸர்வபூதாநாம்' 'தமேவ ஶரணம் கச்ச' இது முதலிய கீதா ஶ்லோகங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கின்றன வென்னும் விஷயத்தை யார்யார் சொல்லியிருப்பதாக ஏற்படுகிறது?

பி. வா:—ஜீவபரமாத்மாக்களின் பேதம் ஶங்கராசார்யரும் ஸூத்ரகாரரான பாதராயணரும் சொல்லியிருப்பதாக ஏற்படுகிறது.

வா. வ:—ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், பாதராயணருக்கும், ஶங்கராசார்யருக்கும் ஸம்மதமான ஜீவப்ரஹ்மாக்களின் பேதத்தை, அவர்களிடத்தில் பக்தியுள்ள நீங்கள் ஒத்துக்கொள்ள வேண்டியதேயல்லவா?

பி. வா:—ஸ்ரீ கிருஷ்ணனுக்காகட்டும், பாதராயணருக்காகட்டும், ஶங்கராசார்யருக்காகட்டும், பாரமார்த்திக பேதத்தைச் சொல்வதில் தாத்பர்யமில்லை. வ்யாவஹாரிகமான (பொய்யான) பேதத்தைச் சொல்லியிருக்கிறார்.

கோர்ட்:—ஶாஸ்த்ரிகளே! ப்ரமாணங்கள் தம்தம் விஷயங்களை பாரமார்த்திகமென்றே தெரிவிக்கின்றன, வ்யாவஹாரிகமென்று தெரிவிப்பதில்லை என்று பௌத்தரைக்குறித்து நீங்களே கண்டித்து—அடிக்கடி ப்ரமாணஸித்தமான பேதத்தை வ்யாவஹாரிகமென்று சொல்வது ஸ்வவ்யாஹதமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. வேறு ஸமாதானமிருந்தால் சொல்லும்?

பி. வா:—(பதில் இல்லை.)

வா. வ:—ஆசார்யரே! ஜீவப்ரஹ்மாக்களின் பேதத்தைச் சொல்லும் வேறுசில ஶ்லோகங்களைச் சொல்லி அவைகளின் தாத்பர்யங்களைச் சொல்லும்?

வாதி:—த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச!

க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்தோக்ஷர உச்யதே || 16 ||
உத்தம: புருஷஸ்வத்னய: பரமாத்மேத்யுதாஹ்ருத: |
யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்ய ஈஶ்வர: || 17 ||
யஸ்மாத் க்ஷரமதீதோஹமக்ஷராதபி சோத்தம: |
அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: || 18 ||
யோமாமேவமஸம்மூடோ ஜானாதி புருஷோத்தமம் |
ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வபாவேன பாரத || 19 ||
இதி குஹ்யதமம் ஶாஸ்த்ரம் இதமுக்தம் மயா னக |
ஏதத்புத்வா புத்திமான் ஸ்யாத் க்ருதக்ருதஶ்ச பாரத
|| 20 || அத்யாயம்-15 ||.

இந்த ஶலோகங்களில் — க்ஷரபூதம் (க்ஷரப்ராணி) என்றும், அக்ஷரபூதம் (அக்ஷரப்ராணி) என்றுமிருவகை புருஷர்களுண்டு. சதுர்முகப்ரஹ்மா முதலான ஸமஸ்தப்ராணிகள் க்ஷரபுருஷர்கள். (ஶரீரநாஶமுடையவர்கள்) அக்ஷர: = தேஹநாஶமில்லாத மஹா லக்ஷ்மி அக்ஷர புருஷரென்று சொல்லிக்கொள்ளப்படுகிறாள். உத்தம புருஷன் இந்த க்ஷராக்ஷர புருஷர்களைவிட பின்னானவன். அவனே பரமாத்மாவென்று ஶ்ருத்யாதிகளில் சொல்லிக் கொள்ளப்படுகிறான். எவன் பூர்புவஸ்ஸுவராதி லோகங்களிலும், ஸமஸ்த பதார்த்தங்களிலுமிருந்து அவைகளை தரித்துக் கொண்டும், ரக்ஷித்துக்கொண்டு மிருக்கிறானோ அவன், ஈஶ்வர: = விலக்ஷண ஸாமர்த்தியமுள்ள நாராயணன். லோகங்கள் நாஶமடைந்தாலும், தான் நாஶமடைவதில்லை. க்ஷரபுருஷனை மீறியிருப்பதாலும், அக்ஷரபுருஷனைவிட உத்தமனாயிருப்பதாலும், பௌருஷேய க்ரந்தங்களிலும் (புராணாதிகளிலும்) வேதங்களிலும் புருஷோத்தமனென்று ப்ரஸித்தனாயிருக்கிறான். எவன் என்னை க்ஷராக்ஷரபுருஷரைவிட உத்தமனானபடியால் புருஷோத்தமனென்று பெயருடையவன். மோருக்கு வழியில்லாத மனிதனுக்கு க்ஷீரஸாகரபட்டனென்னும் பெயரிருப்பதுபோல், வ்யர்த்தமான இதரர்களால் ஸங்கேதம் செய்யப்பட்டிருக்கும் பெயர் அல்ல. ஸகல புருஷரைவிட உத்தமனானதினால் புருஷோத்தமனென்று அன்வர்த்தகமான பெயருடையவனென்றும், புருஷோத்தமத்வம் மித்யையல்ல (பொய்யல்ல) ஸத்யமானதே என்று எவன் தெரிந்து

கொள்ளுகிருரே, அவன் ஸம்ஸாரஸமுத்ரத்தைத் தாண்டுகிறவன். எப்படி பி. எல். ப்யாஸ் செய்து பணம் ஸம்பாதிக்காத மனிதன், அதின் பலனை யடையாதிருப்பானோ, பி. எல். ப்யாஸ் செய்யாதவனைப்போலவே யாகிருனோ; பணம் ஸம்பாதித்துக்கொள்பவன், அதின் பலனை யடைந்துகொண்டிருப்பதினுல் பி. எல். ப்யாஸ் செய்தவனென்று எப்படி சொல்லப்படுகிருனே, அப்படியே ஸமஸ்த வேதாத்யயனம் செய்தாலும் வேதப்ரதிபாத்யனுன பரமாத்மாவினுல் பின்னமான எல்லாவற்றையும் தெரிந்துகொண்டிருந்தாலும், பரமாத்மாவைத் தெரியாமலிருந்தால் அக்ருதார்த்தனுவான்; பரமாத்மாவைத் தெரிந்துகொண்டால், வேதாத்யயனம் செய்தது, வேதப்ரதிபாத்யனுன பரமாத்மாவினுல் பின்னமான எல்லாவற்றையும் தெரிந்துகொள்வது ஸார்த்தகமாகிறதென்று 'வேதஸ்ய்ருதம் ஸ்ருதம் பவதி (சாம். 6.) என்னும் வாக்யத்திற்கு ஶங்கராசார்யர் சொன்ன அபிப்ராயத்தைப் போலவே, ஸர்வவித் = ஸமஸ்த ஞானத்தின் பலனை யடைந்தவனுகிருன். ஸமஸ்த பித்ருக்களிலிருந்து ரக்ஷிப்பதினுல் என்னை 'பித்ரு' என்று பூஜிக்கிருர்கள். ஸ்ரீமாதாக்களிலிருந்து காப்பாற்றுவதினுல் மாத்ருபாவத்தால் என்னை பூஜிக்கிருர்கள். இப்படியே குரு பாவத்தாலும், ஸகி பாவத்தாலும், என்னை பூஜிக்கிருர்கள். இது பரமரஹஸ்யமான தத்வம். நீ பாபரஹிதனுனபடியால் இதை உனக்கு நான் உபதேசிக்கிறேன். இதை ஸரியாகத் தெரிந்துகொண்டு, புத்திமான் = அபரோக்ஷ ஞானியாய் க்ருதக்ருத்யன் (முக்தன்) ஆகிருனென்று, (க்ஷராக்ஷரப்ராணிகளில் ஜீவனுல் பரமாத்மாவுக்கு பேதத்தைச் சொல்லி, அந்த பேத ஞானம் மோக்ஷஸாதனமென்று) சொல்லியிருக்கிறபடியால், இந்த கீதா வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதமுண்டென்னும் விஷயத்தில் ஆதாரமாகின்றன.

பி. வா. வ:—ஸாஸ்த்ரிகளே! இந்த ஆசார்யர் சொன்ன அர்த்தம் ஸரியானதுதானு?

பி. வா:—ஶங்கராசார்யர் 'த்வமஸி ஸமஸ்த விஜ்ஞா ஜாதம்' என்று பூர்வபக்ஷத்திற்கு சித்தாந்தமாகச் சொல்லி அர்த்தம் செய்திருக்கிறபடியால் 'க்ஷர: ஸர்வாணி பூதானி' என்னும் வாக்

யத்திலிருக்கும் பூத ஶப்தத்திற்கு ப்ரஹ்மாதி சேதனர்கள் (ஜீவர்கள்) என்று அர்த்தம் செய்வது அயுக்தமாகிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! 'ஈஶ்வர: ஸர்வபூதாநாம்' என்னும் வாக்யத்திலிருக்கும் 'பூத' ஶப்தத்திற்கு ஶங்கராசார்யர் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—'ஈஶ்வர: = ஈஶநஶீலோ நாராயண: ஸர்வபூதாநாம் = ஸர்வப்ராணிநாம்.' என்று 'பூத' ஶப்தத்திற்கு ப்ராணி (ஜீவன்) என்று அர்த்தம் செய்திருக்கிறார்.

வா. வ:—2-3-44 ம் ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் 'பூத' ஶப்தத்திற்கு என்ன அர்த்தம் செய்திருக்கிறார்?

பி. வா:—'பூதஶப்தேன ஜீவப்ரதாநாநி ஸ்தாவரஜங்கமாணி நிர்திஶதி; அஹிம்ஸன் ஸர்வா பூதான் யன்யத்ர தீர்த்தேப்ய: இதி ப்ரயோகாத்' என்னும் வாக்யத்தால் 'பூத' ஶப்தம் ஜீவனைப் போதிக்கிறதென்று சொல்லியிருக்கிறார்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! பூதஶப்தம் ஜீவனைப் போதிக்கிறதென்னும் விஷயம் ஶங்கராசார்யருக்கும் ஸம்மதமேயல்லவா?

பி. வா:—பூத ஶப்தம் ஜீவபோதகமென்பது ஸம்மதமே.

வா. வ:—கீதையிலும், இதர ஸ்தலங்களிலும் பூத ஶப்தம் ஜீவனை போதித்துக்கொண்டிருக்க இவ்விடத்தில் பூத ஶப்தத்தால் ஜீவனை எடுத்துக்கொள்வதெப்படி அயுக்தமாகும்?

பி. வா:—(பதில் இல்லை.)

வா. வ:—பிபர்தி என்று தார்யதாரக பாவத்தாலும், ஜாநாதி என்று ஞாத்ருஜ்ஞேய பாவத்தாலும் ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேதம் ஸித்தமாகிறதா? இல்லையா?

பி. வா:—பேதம் ஸித்தமாகிறது. ஆயினும் அந்த பேதம் மித்யா.

வா. வ:—ஆசார்யரே! 'ஈஶ்வரோஹமஹம் போகீ' என்னும் 16-14 வது கீதா ஶ்லோகம் என்ன சொல்லுகிறது?

வாதி:—ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைச் சொல்லுகிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! தங்களுக்கு மனது ஸ்வாதீனத்தி லிருக்கிறதா?

வாதி:—உண்டு! நீங்களிப்படிக் கேட்பதற்குக் காரண மென்ன?

பி. வா. வ:—இவ்வாக்யம் ஸர்வமேவாஹம் = நான் ஸர்வா னென்று ஸ்பஷ்டமாக ஜீவேஸ்வரர்களுக்கு அபேதத்தைச் சொல் லிக்கொண்டிருக்க பேதத்தைச் சொல்லுகிறதென்று சொல்லு கிறீரே. அதற்காக இப்படிக் கேட்டோம்.

வாதி:—Mr. சர்மா! பூர்வோத்தர வாக்யங்களை விசாரித்தால் இவ்வாக்யம் பேதத்தையே சொல்லுகிறதென்பது ஸ்பஷ்ட மாகும்.

பி. வா. வ:—பூர்வோத்தர வாக்யங்கள் யாது? அதினால் இவ்வாக்யம் ஜீவேஸ்வரர்களின் பேதத்தை எப்படிச் சொல்லு கிறது?

வாதி:—"த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மின் தைவ ஆஸுர ஏவ ச। தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா। தைவோ விஸ்தரஸ: ப்ரோக்த: ஆஸுரம் பார்த்த மே ஸ்ருணு।" உலகத்தில் தைவஸ்ருஷ்டி என்றும் ஆஸுரஸ்ருஷ்டி என்றும் ஸ்ருஷ்டி இருவகைப்படும். தைவீஸம்பத்து மோக்ஷத் திற்காக ஆகிறது. ஆஸுரஸம்பத்து அத்யந்த பந்தத்திற்காக (தமஸ்ஸுக்காக) ஆகிறது. தைவீஸம்பத்து சொல்லப்பட்டிருக் கிறது. ஆஸுரஸம்பத்தைச் சொல்லுகிறேன், என்று ஆரம் பித்து, 'அஸத்யமப்ரதிஷ்டந்தே ஜகதாஹுரநீஸ்வரம்' ஜகத்து அஸத்யமென்று சொல்பவர், ஆஸுரஸ்வபாவமுடையவர்க ளென்று சொல்லி, ஸர்வமேவாஹம் = நான் ஸர்வனென்று தெரிந்துகொண்டவனை, ஆஸுரஸ்வபாவமுடையவ னென்று சொல்லி, 'ஆஸுரீம் யோனிமாபன்னா மூடா ஜன்மனி ஜன்மனி। மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ॥' (கீதா. 16-20). என்னும் ஸ்லோகத்தால் எப்பொழுதும் என்னை (கிருஷ் ணனை) யடையாமலே கடைசியில் அதோகதியை குறித்துச் செல்லுகிறானென்று, ஸர்வாபேத ஞானியை நிந்திப்பதால் ஜீவேஸ்வரர்களுக்கு பேதம் ஸித்தமாகிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! 'ஈஶ்வரோஹம்' என்னும் வாக்யத்திலிருக்கும் 'ஈஶ்வர:' என்னும் பதத்திற்கு பரமாத்மா என்று ஏன் அர்த்தம் செய்யவேண்டும்? நான் ஸமர்த்தனென்று ஏன் அர்த்தம் செய்யக்கூடாது?

வாதி:—'ஈஶ்வர: ஸர்வபூதானாம்' என்னும் உத்தரவாக்யத்திலிருக்கும் 'ஈஶ்வர:' என்னும் பதத்திற்கு 'ஈஶனஶீல: நாராயண:' என்னும் அர்த்தமுண்டு. ஶங்கராசார்யரும் அப்படியே அர்த்தம் செய்திருக்கிறார். மற்றும்—'யோலோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர:' என்னும் பின்ஶ்லோகத்திலிருக்கும் 'ஈஶ்வர:' என்னும் பதத்திற்கு பரமாத்மா என்றே (நாராயணன் என்றே) அர்த்தமுண்டு. ஶங்கராசார்யரும் அப்படியே அர்த்தம் செய்திருக்கிறார். ஆகையால் 'ஈஶ்வரோஹம்' என்னும் வாக்யத்திற்கு நானே கடவுளென்று தெரிந்துகொண்டவன் அஸுரனென்றே அர்த்தமாகிறது.

பி. வா. வ:—ஆசார்யரே! நானே கடவுளென்று தெரிந்துகொண்டவன் அஸுரனே யாகட்டும். அத்வைதிகளுக்கென்ன பாதகம்? அத்வைதிகள் நானே ஈஶ்வரனென்று சொல்வதில்லையல்லவா?

வாதி:—ஶங்கராசார்யர் 4-1-3வது ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தில் ஶிஷ்யன் அஜ்ஞானம் யாருக்கென்று கேழ்க்கவே, கேழ்வி கேழ்க்கும் உனக்கே அஜ்ஞானமென்று சொன்னதற்கு, அவன் 'அஹமீஶ்வர:' நானே ஈஶ்வரனுயிருக்க எனக்கு அஜ்ஞானமேதென்று கேழ்க்க, 'நாஸ்தி கஸ்யசிதப்ரபோத:' நான் ஈஶ்வரனென்று நீ தெரிந்துகொண்டிருந்தால் அஜ்ஞானமில்லவேயில்லை என்று 'ஈஶ்வரோஹம்' என்னும் ஜ்ஞானமே ப்ரஹ்மாத்மைக்ய ஜ்ஞானமென்று சொல்லியிருக்கிறபடியால் அத்வைதிகள் 'ஈஶ்வரோஹம்' என்று சொல்லுகிறார்களென்று ஸித்தமாகிறது. அதையே ஸ்ரீ கிருஷ்ணனும் 'ஈஶ்வரோஹம்' என்று சொல்பவர்கள் தைத்யர்கள், அவர்களுக்கு அதோகதியே யுண்டாகிறதென்று சொல்லியிருக்கிறார். ஆகையால் 'ஈஶ்வரோஹம்' என்னும் ஶ்லோகம் ஜீவேஶ்வரர்களுக்கு ஐக்யத்தைச்சொல்லும் அத்வைதிகளை தூஷித்துக்கொண்டே பேதத்தையே தெரிவிக்கிறது.

## வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ஈச்வர: ஸர்வ பூதானாம் ஹ்ருத்தேசேர்ஜுன திஷ்டதி । ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ॥ தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேன பாரத' இத்யாதி கீதா ச்லோகங்கள் நியம்ய நியாமக பாவாதிகளால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறதென்று 'ஸ்ம்ருதேச்ச' என்னும் ஸூத்ரத்தில் ஸூத்ரக்காரர் சொல்லியிருக்கிறாரென்று சங்கராசார்யர் வ்யாக்யானம் செய்திருக்கிற படியால் ஸூத்ரகர்த்தரான பாதராயணர், வ்யாக்யான கர்த்தரான சங்கராசார்யர், இவர்களுக்கு ஜீவபரமாத்மாக்களின் பேதத்தை ஸ்ரீக்ருஷ்ணன் இந்த கீதாவாக்யங்களால் சொல்லியிருக்கிறாரென்னும் விஷயம் ஸம்மதமானதென்று தெரியவருகிற படியால் ஜீவபரமாத்மாக்களின் பேதவிஷயத்தில், மேற்படி கீதா வாக்யங்கள் ஆதாரங்களாகின்றன. கீதா 15-வது அத்யாயம், 16, 17, 18, 19, 20, ச்லோகங்கள்— பிரமாண கலெக்டில் சொல்லியிருக்கிறபடிக்கு சதுர்முகாதி க்ஷரசேதனர்களாலும், அக்ஷரளான மஹாலக்ஷ்மியாலும், 'உத்தம: புருஷ: ஸ்த்வன்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:' என்று பரமாத்மாவுக்கு பேதத்தை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கின்றன. மற்றும், ப்ரவேச்ய ப்ரவேசக பாவத்தாலும், ரக்ஷ்ய ரக்ஷக பாவத்தாலும், ஞாத்ருஜ்ஞேய பாவத்தாலும், ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தையே தெரிவிக்கின்றதாகையால் இந்த வாக்யங்களும் ஜீவபரமாத்மாக்களின் பேத விஷயத்தில் ஆதாரமாகின்றன.

'ஈச்வரோஹமஹம் போகி' என்னும் ச்லோகம் ஜீவேச்வரர்களுக்கு அபேதத்தைத் தெரிந்துகொள்பவன் தைத்ய ஸ்வபாவமுடையவன்; அவனுக்கு ஈச்வர ப்ராப்தியாகாமல், அதோகதியேயாகிறதென்று தூஷித்திருப்பதால், இந்த வாக்யமும் ஜீவேச்வரர்களின் பேதவிஷயத்திலேயே ஆதாரமாகிறது. இவ்விதமாகவே எல்லா கீதா வாக்யங்களும் ஜீவேச்வரர்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கிறதென்னும் விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டுமாய்க் கோருகிறோம்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! 'ஈஶ்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தேஶேऽர்ஜுன திஷ்டதி' 'தமேவ ஶரணம் கச்ச ஸர்வ பாவேன பாரத' இத்யாதி கீதா ஶ்லோகங்கள் பேதத்தைச் சொல்லுகின்றனவென்று ஸூத்ரகாரர் 'ஸ்ம்ருதேஶ்ச' என்னும் ஸூத்ரத்தில் சொல்லியிருக்கிறார். 'ஈஶ்வர:' இது முதலிய ஶ்லோகங்கள் பேதத்தைச் சொல்லுகின்றனவென்று ஸூத்ரகாரர் சொல்லியிருக்கிறாரென்று ஶங்கராசார்யரும் வ்யாக்யானம் செய்திருக்கிறார். ஆயினும்— ஸ்ரீகிருஷ்ணனுக்காகிலும், பாதராயணருக்காகிலும், ஶங்கராசார்யருக்காகிலும், அந்த பேதம் பொய்யென்று (மித்யா = வ்யாவஹாரிகம் என்று) அபிப்ராயமேயொழிய பாரமார்த்திகமென்னும் அபிப்ராயமில்லை.

'க்ஷரஸ்ஸர்வாணி பூதானி' என்னும் ஶ்லோகத்திலிருக்கும் பூதஶப்தம் ஜடவாசகமானதினால், பூதபின்னனென்று சொன்னால் ஜீவபேதம் ஸித்திப்பதில்லை. ப்ரவேஶ்ய ப்ரவேஶக பாவத்தைச் சொல்லும் கீதா வாக்யம்—'தத்ஸ்ருஷ்ட்வா ததேவானுப்ராவிஶத்' (தை.) என்னும் வாக்யத்தைப்போலவே கல்பிதமான(பொய்யான) ப்ரவேஶத்தைச் சொல்லுகிறது. இந்த பொய்யான ப்ரவேஶத்தால் நிஜமான பேதம் ஸித்திப்பதில்லை. பொய்யான (வ்யாவஹாரிகமான) பேதம் ஸித்திக்கிறது. இவ்விதமாகவே—ரக்ஷ்ய ரக்ஷகபாவம், ஞாத்ருஜ்ஞேயபாவம், முதலான எல்லா தர்மங்களும் பொய்யானதினால், அவைகளால் வ்யாவஹாரிக பேதமே ஸித்திக்கிறது. பாரமார்த்திக பேதம் ஸித்திப்பதில்லை. ஆகையால் இந்த கீதா வாக்யங்கள் பாரமார்த்திக பேத விஷயத்தில் ஆதாரமாவதில்லை.

'ஈஶ்வரோऽஹம்' என்னும் பதங்களுக்கு நான் ஈஶ்வரன் = ஸமர்த்தன் என்று மாத்திரம் அர்த்தமாய்க்கொண்டிருக்க— நானே ப்ரஹ்மம் என்று அத்வைதிகள் சொல்லும் அபேதத்தை நிஷேதிக்கிறதென்பதற்கு ஆதாரமில்லை. அத்வைதிகள் நானே ஈஶ்வரனென்று தெரிந்துகொள்ளுகிறார்கள் என்னும் விஷயத்தில் ஆதாரமில்லை. ஆகையால் அத்வைதிகள் சொல்லும்

அபேதத்தை நிஷேதித்துக்கொண்டே, அதற்கு விருத்தமாக த்வைதத்தையே (பேதத்தையே) இந்த ச்லோகம் தெரிவிக்கிறதென்பதும் ஸரியல்ல. இந்த விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! ஸ்ரீ க்ருஷ்ணனே 'ஈச்வரஸ்ஸர்வபூதானாம்' (கீ. 18-61) இத்யாதி ச்லோகங்களில் பூதசப்தத்தை ஜீவர்களில் (சேதனர்களில்) ப்ரயோகம் செய்திருக்கிறான். 'அஹிம்ஸன் பூதானி' இத்யாத்யனேக வாக்யங்களில் பூதசப்தம் சேதனர்களில் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. சங்காசார்யரும் — பூதானாம் = ப்ராணிநாம் என்று அர்த்தம் செய்திருக்கிறார். மற்றும்—2-3-44-வது ஸூத்ர பாஷ்யத்தில் பூதசப்தம் சேதனர்களில் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறதென்று சங்காசார்யர் சொல்லியிருக்கிறார். ஆகையால் பூதசப்தம் சேதன (ஜீவ) வாசகமாகிறது. ஆகையால் 'உத்தம: புருஷ: ஸ்த்வன்ய:' என்று ஜீவர்களுக்கும் பரமாத்மாவுக்கும் ஸ்பஷ்டமாக பேதம் ஸித்திக்கிறது. ப்ரவேஷ்ட்ரு ப்ரவேச்ய பாவாதிகளால் பேதம் தோன்றுகிறது. 'தத்ஸ்ருஷ்ட்வா ததேவானுப்ராவிசத்' இத்யாதி ச்ருதிகளில் சொல்லப்பட்ட ப்ரவேஷ்ட்ருப்ரவேச்யபாவம் முதலானவைகளெல்லாம் மித்யை என்பதற்கு ஆதாரங்களொதுவுமில்லை. காரணமில்லாமல் மித்யை என்றால் ப்ரஹ்மமும் மித்யை என்று சொல்லலாம். ப்ரஹ்மம் அஜ்ஞேயம் ப்ரமாணவேத்யம் (அப்ராமாணிகம்) என்றுசொல்லும் அத்வைதிகள்—'ப்ரஹ்மம் மித்யையே (பொய்யே) ஆகட்டும். அது எங்களுக்கிஷ்டமே. எங்கள் ப்ரஹ்மம் சசவிஷாணத்தைப்போல் அப்ராமாணிகமே என்று ஒத்துக்கொள்ளுவார்களோ என்னமோ! அப்படி அவர்கள் ஒத்துக்கொள்ளுவார்களேயாயின் அவர்களுக்கு நாங்கள் சொல்வதென்ன இருக்கிறது. ஆகையால் வேதம் கீதா இவைகளால் சொல்லப்பட்ட ப்ரவேஷ்ட்ரு ப்ரவேச்ய பாவாதிகள் ஸத்யமானதினால் அவைகளால் தெரியவரும்

பேதம் ஸத்யமானதினுல், இந்த வாக்யங்கள் ஜீவபரமாத்மாக்க ளுக்கு பேதத்தையே தெரிவிக்கின்றது.

கீதா 16-வது அத்யாயாரம்பத்திலேயே ஜீவஸ்ருஷ்டி—தைவ ஸ்ருஷ்டி என்றும் ஆஸுர ஸ்ருஷ்டி என்றும் இரண்டு விதங்க ளுண்டு. தைவீஸம்பத்து மோக்ஷத்திற்குக் காரணமாகிறது. ஆஸுரஸம்பத்து நிபந்தனத்திற்காக (அந்தந்தமஸ்ஸுக்காக) ஆகிறதென்று சொல்லி, தைத்திய ஸ்வபாவமுடையவர் ஜகத்து அஸத்யம், நானே கடவுள் (ஈஶ்வரோஹம்) என்று சொல்லிக் கொண்டே, ஜனங்களுக்கும் இவ்விதமாகவே உபதேசித்து அவர் களைக்கெடுத்து, இப்படியே, ஜன்ம ஜன்மாந்திரத்திலும் ஆஸுர யோனியில் பிறந்து கடைசியில் என்னை (ஸ்ரீகிருஷ்ணனை) யடையா மலே அதோகதியை அடைகிறார்களென்று சொல்லியிருப்பதால் இவ்வாக்யம் 'ஈஶ்வரோஹம்' என்று தெரிந்துகொண்டவர்களை நிந்திக்கிறது என்று ஸித்தமாகிறது.

4-1-3-வது ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யத்தில்—ஶங்கராசார்யரைக் குறித்து அஞானம் யாருக்கென்று ஶிஷ்யன் கேட்டதற்கு, கேட்பவர்களுக்கே யென்று அவர் சொன்னார். அதற்கு ஶிஷ்யன் 'ஈஶ்வரோஹம்' நானே கடவுளென்று பதில் சொல்லவே அப்படியாயின்—அஞானம் யாருக்குமில்லை என்று ஶங்காராசார் யர் சொல்லியிருக்கிறார். ஆகையால் 'ஈஶ்வரோஹம்' என்னும் தத்வஞானமே அத்வைதிகளுக்கு அபிமதமானதென்று ஸித்தமா கிறது. ஆகையால் இந்த ஶ்லோகம் அத்வைதிகள் சொல்லும் 'ஈஶ்வரோஹம்' என்னும் அபேத ஞானத்தைத் தூஷித்துக் கொண்டே பேதத்தையே தெரிவிக்கிறதென்னும் விஷயத்தி லேயே ஆதாரமாகிறது.

இப்படி ஜீவேஶ்வரர்களின் பேதம் ஶ்ருதி, ஸூத்ர, கீதா, இவைகளால் ஸித்தமாகிறது. ஜீவேஶ்வரர்களின் அபேதவிஷயத் தில் பூர்வத்தில் சொல்லியுள்ளபடிக்கு ஶ்ருதி, ஸூத்ர, கீதா, இவைகளின் ஆதாரமில்லை. இதுவுமல்லாமல் ஐக்யவிஷயத்தில் ப்ரமாணமுண்டென்று அத்வைதிகள் சொல்வதும் அயுக்தமா கிறது. ஏனெனில்:—அவர்கள் அபேதம் (ஐக்யம்) ப்ரஹ்மஸ்வரூப மென்று சொல்லுகிறார்கள். ப்ரஹ்மம் அஜ்ஞேயம் = ப்ரமாணங்க

ளால் தெரிந்துகொள்வதற்கு அஶக்யமென்றும் சொல்லுகிறார்கள். ஆகையால் ப்ரஹ்மஸ்வரூபமென்று அத்வைதிகள் சொல்லும் ஐக்யம் (அபேதம்) அஜ்ஞேயம். ப்ரமாணங்களால் அவேத்யம் (தெரியவராதது) ஆகையால் ஐக்ய விஷயத்தில் ப்ரமாணங்களைச் சொல்லுகிறோமென்று அத்வைதிகள் சொல்வது தம் மதத்துக்கே அத்யந்த விருத்தமாகிறது.

ஆகையால் கீதையில் சொல்லியவாறு—தாங்கள் (அத்வைதிகள்) ஜீவேஶ்வரர்களின் ஐக்யத்தைத் தெரிந்துகொண்டு அதோகதியை யடைவதே யல்லாமல், ஸாத்விக ஜனங்களையும், 'ஈஶ்வரோஹம்' என்று உபாஸனை செய்யுங்களென்று உபதேஶித்துக் கொண்டே, அவர்களையும் அதோகதியடையும்படிச் செய்கிறார்கள். ஆகையால் கோர்ட்டார், 'அனன்ய ப்ரோக்தே = ஜீவேஶ்வராபேதஜ்ஞானிநா அத்வைதிநா ப்ரோக்தே கதிரத்ர நாஸ்தி' அத்வைதிகளால் உபதேஶமடைந்தவர்களுக்கு கதியில்லை என்று சொல்லியிருக்கிறபடியால், ஜீவேஶ்வரர்களின் ஐக்யம் அப்ராமாணிகமானது அவ்விதமாக ஜனங்களுக்கு உபதேஶம் செய்யக் கூடாதென்றும், 'ப்ரோக்தான்யேனைவ ஸுஜ்ஞாநாய ப்ரேஷ்ட' ஜீவேஶ்வர பேதஜ்ஞானியால் (த்வைதியால்) சொல்லப்பட்டால்தான் ஸமிசீன ஜ்ஞானமாகிறது என்று காடக வாக்யத்தில் சொல்லியிருக்கிறபடியால் ஜீவேஶ்வரர்களின் பேதத்தையே உபதேஶிக்கத் தக்கது. ஜீவேஶ்வரர்களின் பேதத்தைத் தெரிந்துகொண்டு ஸஜ்ஜனர்கள் மோக்ஷாதி புருஷார்த்தங்களை யடையவேண்டியதென்று கோர்ட்டார் தீர்மானம் கொடுக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

மூன்றாவது இஷ்யூ முற்றிற்று